அமைந்திருக்கும். அதுமட்டுமல்ல, வெட்கம், மானம் இவைகள் பற்றிக் கவலைப்படாத நிர்வாணத் தன்மையுடைய ஆசைகளாகவே அமைந்து கிடக்கும்.

இத்தகையோர் எதையும் ஆராயார்; யாரைப் பற்றியும் கவலைப்படார். அவர்களுக்குத் தெரிந்ததெல்லாம் தேவை ஒன்று மட்டும்தான்! அத்தேவைகளைக் கூட அடையும் வாயில்களைப் பற்றியும் அவ்வாயில்களை அணுகும் முறையைப்பற்றியும் ஆராயார்: அறிந்து முயற்சிகளை மேற்கொள்ளமாட்டார். ஏன்? வாயில்கள் திறந்திருந்தாலும் கூட அவ்வழி அணுகார். நெறியல்லா நெறிகளையே மேற்கொள்வார். அதனால்தான். "மனம் போன போக்கில் போகவேண்டாம்" என்றனர். இன்று மனம் அழைத்துச் செல்லாமல்கூட தசை உணர்ச்சிகள் அழைத்துச் செல்லும் வழியில் செல்வோர் எண்ணிக்கை மிகுதி.

ஆதலால் உழைத்தால்மட்டும் போதாது. உழைத்தல் ஒருவகை அறிவியல்கலை; அருமைப் பாடுடைய கலை. மனம், புத்தி, சித்தம் இவற்றின் ஆற்றல் மிக்க தொழிற்பாடு களை மானிட உயிர், உழைப்புக்குத் துணையாகக்கொண்டு அவ்வழியிலும் காலம், நியதி என்பனவற்றை அனுசரித்தும் உழைப்பவர்கள் வாழ்க்கை பாழ்படுவதில்லை. இத்தகு உழைப்பாளிகள் நன்கு வளர்வர். அவர்கள் ஒப்பற்ற சமுதாயத்தைக் காண்பர். சமுதாயத்தின் உறவு நெறிகளைச் செழிப்பாக வளர்த்துப் பாதுகாக்கும் காவலராகவும் விளங்குவர். இத்தகைய முறையான உழைப்பும் ஒருவகையில் தவமே! வழிபாட்டில் எண்ணும் சொல்லும் மந்திரங்களால் மட்டும் பயன் விளைவதில்லை. மந்திரங்களை எண்ணும் பொழுது மனம், புத்தி, சித்தம், உயிர் இவற்றின் உணர்வு நிலைத் தொழிற்பாடுகளே பயனளிப்பது. ஆதலால், உயிர் உய்யும் நெறி உழைத்தலேயாம். உழைப்பினால் வரும் உணர்வுகளே பண்பாடுகளாக வருகின்றன.

உழைத்தலின் மூலம் வரும் உணர்வுகளினால் பயன் விளைதலுக்கும் அதனை உரியவர் அனுபவித்தலுக்கும் நியதி-ஊழ் என்பது வழக்கு. ஊழ்த்தல்-ஊழ். ஊழ் என்பது புறத்தேயிருந்து வருவது அல்ல. அல்லது கடவுளோ யாரோ ஒருவர்மீது திணிப்பதும் அல்ல. அவரவர் ஊழுக்கு அவரவரே பொறுப்பு. "தீதும் நன்றும் பிறர் தர வாரா"; "அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்," என்ற உரைகளை அறிக. உழுது விதைத்தவன் அறுவடையின் பயனை அடைய வேண்டாமா? இத்தகைய உரிமையின்பாற்பட்டதே ஊழ்த் தத்துவம். நல்லவைகளை எல்லாம் கண்டு மகிழ்கிறவர்கள் துன்பங்களைக் கண்டு அல்லற்படுவதேன்? ஆனால், இன்பமும் துன்பமும் தொல்லைப்படுத்தும் நோக்குடையன அல்ல; மருத்துவ முறையேயாகும். ஆனால் மக்கள் இன்பத்தைப் பரிசுகளாக நினைந்து மகிழ்தலையும் துன்பங்களைத் தண்டனைகளாக நினைந்து வருந்துதலையும் காண்கிறோம். இன்னும் சிலர் ஊழ் மாற்றமுடியாதது என்கின்றனர். கீழே விழுந்தவன் எழுந்திருக்க முடியாதா? எழுந்திருக்கக் கூடாதா? இது என்ன நியாயம்? கீழே விழுந்தவன் எழுந்திருக்க முடியும்; எழுந்திருக்க வேண்டும்; இதுதான் வாழ்க்கையின் குறிக்கோள். ஆனால் ஒன்று கீழே விழுந்ததால் பட்டஅடி—வலி இருக்கத்தான் செய்யும் சிலமணிகள், சில நாட்களுக்கு! அதற்கும் மருத்துவம் செய்வர். அதுபோல் சென்ற காலத்தின் நிகழ்வுகளின் பாதிப்புகள் இருக்கத்தான் செய்யும். அதுவும்கூட உணர்வில் குணத்தில்தான். ஊழ் உயிரைச் சார்ந்தது. வறுமைக்குக் காரணம் ஊழல்ல. அறிவறிந்த ஆள்வினையின்மைக்கு காரணம் ஊழல்ல. ஆதலால், உழைப்பு, உழைப்பின் பயன் என்ற வட்டம் ஓயாது இயங்குவது; இயங்கவேண்டும். இந்த வட்டத்தைக் கோணலின்றிப் பயன் தரத்தக்க வகையில் இயக்கும் நல்லுணர்வுகள் தேவை!

*உய்யும் நெறி உழைத்தலே!*
*உய்யும் நெறி உணர்வு சிறத்தலே!*
*உய்யும் நெறி ஊழின் வலிமை மடக்குதலே!*

"மக்கள் சிந்தனை" 15–9–80

# வேறுபாடற்ற வாழ்க்கையே சமய வாழ்க்கை

அறிவு, உணர்வு, உழைப்பாற்றல் மானிட சாதி அனைத்துக்கும் ஒப்ப அமைந்து விடுவதில்லை. சில வேறுபாடுகள், ஏற்றத்தாழ்வுகள் இருத்தல் இயற்கை. உண்ணும் பொருள்களில் சுவை வேறுபாடுகள் இல்லையா? சுவை வேறுபாடுகளை மனிதன் மதி நுட்பத்துடன் கையாண்டு கூட்டுகின்றவாறு கூட்டியும் சமைக்கின்றவாறு சமைத்தும், சுவைக்கின்றவாறு சுவைத்தும் மகிழக் கற்றுக் கொள்ளவில்லையா? சுவை வேறுபாடு கருதியும் பொருந்தாச் சுவை கருதியும் எப்பொருளை மனிதகுலம் இழக்கத் துணிகிறது! அது போலத்தான் இயற்கையில் அமைந்த மனிதகுல வேறுபாடுகளையும் கருதவேண்டும்.

எல்லாருக்கும் ஒரு மாதிரியான உயிரணுக்கள், கரணங்கள், பொறிகள், புலன்கள் அமைந்து விடுவதில்லையே! இதில் பரம்பரை, அளவுக்கு மேலாக ஆதிக்கம் செலுத்தத்தான் செய்கிறது. அதனால் பரம்பரைத் தன்மை மாற்றமுடியாதது என்பது கருத்தன்று. பரம்பரைத் தன்மையை மாற்ற வளரும் சூழ்நிலை வாய்ப்புள்ளதாக அமையவேண்டும். நடைமுறையில் பரம்பரைகளின் தகுதி நிலைகளுக்கு ஏற்பத்தான் சூழ்நிலைகளும் அமைகின்றன. இஃது இன்றைய நடைமுறையில் இயற்கை-சிக்கல். ஏன், தாழ்த்தப்பட்டவர்களின் குழந்தைகள், இளைஞர்களின் வாழ்க்கையிலுள்ள பரம்பரைத் தன்மையை மாற்ற அரசு

முயற்சி செய்தது; முயற்சி செய்துகொண்டிருக்கிறது. ஆனால் பயன் மிகுதியல்ல. ஏன்? தாழ்த்தப்பட்ட வகுப்பு மாணவர் களுக்கு என்று தனி விடுதிகள்தான் அமைத்தன. இம் முறையில் பரம்பரையாக வரும் குண ஆதிக்கங்களை உடைத்தெறியும் வாய்ப்புக் குறைவு. இதற்குப் பதிலாக இந்த மாணவர்களை வசதியும், வாய்ப்பும் உடைய வளர்ந்த சமுதாயத்தின் இளைஞர்கள் தங்கிப் படிக்கும் விடுதி களிலேயே தங்கிப் படிக்க அனுமதித்திருந்தால் வளர்ச்சியின் விகிதம் கூடுதலாகி இருக்கும். ஆதலால், பரம்பரை காரண மாகவோ, சூழ்நிலையின் காரணமாகவோ இருக்கும் இயற்கையிலமைந்த வேறுபாடுகளைப் பெரிதாக்கி வளர்த்து இலாபம் ஆக்க நினைப்பது சமுதாயக் குற்றம். வளர்ச்சி, பரிணாம நிலையில் அமைவது. இந்தப் பரிணாம வளர்ச்சிக்கு ஒவ்வொருவரும் துணையாக அமைந்து உதவி செய்தல் கடமை. இந்தக் கடமையிலிருந்து வழுவுகிறவர்கள் இயற்கை நியதிகள் இறைநெறிகளை மதிக்காது பிழை செய்கின்றனர்.

எந்த ஒரு தனி மனிதனின் அல்லது இனத்தின் அறிவாற்றலும் உழைப்புத் திறனும் அவர்களுடைய சொந்த முயற்சியால் மட்டுமே பெற்றதல்ல. அதனால் அவை அவர்களுக்கு மட்டுமே உரிமையுடையனவும் அல்ல. மனிதகுல நிகழ்வுகள்தாம் அறிவாற்றலுக்கும் ஆள்வினைத் திறனுக்கும் ஊற்றுக் கண். ஆதலால் அறிவும் ஆற்றலும் மனித குலத்துக்குப் பொது. அறிவு, ஆற்றல் துணைகொண்டு படைப்பனவும் பொதுவேயாம். மனிதனை அறிவுடைய வனாக, ஆற்றலுடையவனாக வளர்த்தது மனிதகுல வரலாறு. இது உண்மை.

இந்த வரலாற்றுண்மையைத் தான் சமயம், உயிர் பல பிறப்புக்களால் வளர்ந்து வருகிறது என்கிறது. ஒவ்வொரு பிறப்பிலும் உயிர், சமுதாயத்தில் வாழ்ந்து தானே வளர்ந்து வருகிறது! உயிர்களை வளர்க்க எண்ணும் கடவுளும்கூட

உயிரைச் சமுதாய வாழ்க்கையில் ஈடுபடுத்தித் தானே வளர்க்க வேண்டியிருக்கிறது! ஆதலால், வளர்ந்த அறிவை, உழைப்புத் திறனைக் காட்டி எந்தத் தனித்தகுதியும் இலாபமும் அடைய யாருக்கும் உரிமை இல்லை. "சிறப் பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்" என்பது அறிக. அறிவறிந்த ஆள்வினை பெறாதார் உழைப்பை, உழைப்பின் படைப்பை யாரொருவர் எடுத்துக்கொண்டாலும் அது திருட்டே. இலாபம் என்பதும் ஒருவகைத் திருட்டேயாம். ஆதலால், சமுதாயத்தின் வேறுபாடுகளை ஒருமையாக மாற்றுவதே சமயம். வேறுபாடுகள் தெரியாமல், அறிந்து கொள்ளாமல் வாழ்வதே சமய வாழ்க்கை.

— "மக்கள் சிந்தனை" —1–10–80

## சமயத்தின் குறிக்கோள் அன்பை வளர்ப்பதே!

'அன்பு'—வாழ்க்கையின் உயிர்நிலை. அன்பு வாழ்க்கையில் ஈட்டக்கூடிய துய்க்கக்கூடிய பொருள். உலகியல் வாழ்க்கையை உறவுகளால் செழிக்கச் செய்வது அன்பு. இறையிடம் இன்ப அன்பினையும், இறைவனின் உலகத்தையும் வழங்குவதும் அன்பேயாம்.

அன்புடையாராதல் அரிது. இன்று அன்பின் போலித் தோற்றங்களை அன்பு என்று நம்பி ஏமாறுகின்றனர் பலர். அன்புடையராய் வாழ்பவர்களுக்கே உயிர் உண்டு. அன்பில்லாதவர்கள் உண்டு, உடுத்துத் திரியும் பிணம் என்பார் திருவள்ளுவர்.

"அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு" (குறள் 80)

அன்பு உயிரைச் சார்ந்த உணர்வு; ஒழுக்கம். அன்புக்கு வேறு புறமான குறிக்கோள் இல்லை. அன்புக்குக் குறிக்கோள்,

அன்பே! வேறுவேறு குறிக்கோளுடன் அன்புடையராகப் பழகுதல் உண்மை அன்பன்று. அஃதொரு வாணிகம். அன்பு ஏன்? எதனால்? என்ற காரண வினாக்களுக்கு விடைகூற இயலாது. அப்படிக் காரணம் கூற முடியுமானால் அந்த ஒரே காரணம் அன்பாக இருத்தல் என்ற உயிரியற்கைதான்.

அன்பு, உயிரின் இயற்கைக் குணம். அன்பு வாழ்க்கை உயிரியல் வளர்ச்சியில் வளர்ந்து வருகிறது. ஓரறிவுயிர் முதல் ஐயறிவுயிர்களிடத்தும் அன்பு உண்டு. ஆனால், அது வளச்சியில்லாத அன்பு; நிலையில்லாத அன்பு; மறக்கக்கூடிய அன்பு. இல்லை! அன்பை உறவை மறந்து மோதிக் கொள்ளக்கூடிய அளவுக்குக் கீழிறங்கக்கூடியது. மானிடச் சாதியினர் ஆறறிவினர். வளர்ந்த அன்பினராய் இருத்தல் மனிதர் கடமை. ஆனால், இன்று அப்படி இருக்கிறதா? மனிதன் ஆறாவது அறிவைப் பயன்படுத்துவதே இல்லை. இன்று மானிடச் சாதியில் பகுத்தறிவுச் செயற்பாடே இல்லை. தொகுப்பறிவுதான் இருக்கிறது. வேண்டும் என்று பழகும் காலத்தில் தமக்குச் சாதகமான நன்மைகளையே தொகுத்துப் பார்க்கின்றார்கள். வெறுப்பு வந்தவுடன் நன்மைகளையெல்லாம் மறந்துவிட்டுத் தீமைகளையே-தவறு களையே தொகுத்துப் பழிசுமத்துகிறார்கள். நேற்று அன்பு, உறவு! இன்று பகை, பழிதூற்றல்! இது மானிட இயல் இல்லை; விலங்கியல் வாழ்க்கை! மிகமிக அற்பமானவைக்கும் கூட இன்றைய மானிடச் சாதி அடித்துக்கொண்டு சாகிறது. இன்று வீட்டு வாழ்க்கையிலிருந்து வீதி வாழ்க்கை வரை அன்பு வழியதாக அமையவில்லை. ஒவ்வொருவரும் உலகம் அவர்களுக்காகவே என்று கருதுகின்றனர். ஒவ்வொருவரும் பிறிதொருவரும்-சமுதாயத்திற்குக் கடமைப்பட்டிருப்பதாக நினைப்பதே இல்லை. அதுமட்டுமன்று; கடமைகளின் வழியது உரிமை என்ற அடிப்படை நியதியையே மறந்து விடுகின்றனர். இச்சூழ்நிலையில் அன்புடையார் போலப் பலர் நடிக்கின்றனர். ஆனால் உண்மையான அன்பு யாரிடமும் இல்லை.

அன்பு உயிரியல்பான உணர்வு; ஒழுக்கம். அன்பு உயிரிடத்தில் பொங்கிவழிந்து மற்ற உயிரினங்களுக்குப் பாய்ந்து வளப்படுத்துவது. இத்தகைய தூய இயற்கையான அன்பை, வாழ்விக்கும் அன்பை-ஊற்றுக் கண்ணைத் தன்னல நயப்புக்களால் ஆணவச் செருக்குக்களால் தூர்த்து விட்டனர் பலர். அதனால், வீட்டிலும் பே...! நாட்டிலும் போர்! உலக அரங்கிலும் போர்! ஏன் இந்த அவலநிலை? அன்பு, தன்னயப்புணர்வுகளால், விருப்பு வெறுப்புக்களால் எளிதில் திரிபடையக் கூடியது. இன்று மானிடச் சாதியின் வாழ்க்கை திரிபடைந்து கிடக்கிறது. அன்புக்கு உறவும் இல்லை; பகையும் இல்லை! அன்பு வளரும் நிலையில் கூடுதல், குறைவு அளவுப் பரிமாணங்கள் இருக்கும். ஆனால், அன்பு உலகத்தில் வேறுபாடு இல்லை; வெறுப்பு இல்லை; பகை இல்லை; குற்றம் இல்லை; குறை இல்லை; சிறிய வட்டங்களைக் கடந்து நிலையாக இருப்பதுதான் அன்பு.

அன்புடையராதல் எளிது. அன்புடையராய் விளங்க, உயிர் வாழ்க்கையின் குறிக்கோள், பயன் என்ன? என்று கண்டுகொள்ள வேண்டும். வாழ்க்கையின் குறிக்கோள் குற்றங்களும் குறைகளும் உடையதாயிருக்கும். உயிர், அவற்றினின்றும் விலகி விடுதலை பெற்றுத் தகுதிகளைப் பெறுதலேயாம்! உயிரின் முழு நிலையான வளர்ந்த தகுதி, உயிர் அன்பாயமர்ந்திருத்தலேயாம். அவ்வன்பின்வழி திரு வருளைத் துய்த்து இன்புறுதலேயாம். இந்த உயரிய இலட்சியத்தினையடைய அறிவு, ஆள்வினை, பொருள், பதவி எல்லாமே துணையாக அமைவனவேயாம். அன்பே இலட்சியம் என்று உணர்ந்தவுடன் அன்பினைத் தோற்று விக்க ஒரு நிலையான கருத்துத் தேவை! கடவுள் ஒருவர்! அவர் உலகத்தின் தந்தை—தாய்! உயிர்க்குலமனைத்தும் அவர்தம் அருளுக்குரியன என்ற அடிப்படைக் கருத்தை எண்ணினால் தோற்றநிலையிலும் வாழ்க்கை நிலையிலும் இறுதி நிலையிலும் ஓர் குலம் என்ற உணர்வு தோன்றும்!

அந்த உணர்வு அன்பினைத் தூண்டும்! அன்புக்கு நாடு, இனம், மொழி ஆகிய எந்த வேறுபாடும் இல்லை. வேறு பாடுகள் நேரிடையாகவோ மறைமுகமாகவோ இருந்தால் அவை அன்பைத் தடைசெய்யும். குற்றம் குறைகள் கூட அன்புக்குத் தடையாக அமையா; அமையக்கூடா. துர்நாற்றமான மலம்கூட முறையாகப் பக்குவப்படுத்தப் பட்டால் நல்ல உரமாகிவிடுகிறதே! மீண்டும் நமக்குரிய உணவைப் பெற அந்த உரம்தானே துணைசெய்கிறது? அழுக்கு வேட்டியின்மீது கோபம் கொள்வார் யார்? அழுக்கு வேட்டியின்மீது கோபம் கொண்டு அதைக் கிழிப்பவர்கள் யாரையாவது பார்த்திருக்கிறார்களா? இல்லை! கிழிந்த வேட்டியைக்கூட வேறுவகையாக உபயோகிக்கும் மனிதர் களையே பார்க்கிறோம். அதுபோல் குற்றங் குறைகளுடைய வர்களையும்கூட அன்பாகப் பழகித் திருத்திப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமே தவிர, வேற்றுமை பாராட்டக்கூடாது; வெறுப்பும் கொள்ளக் கூடாது. ஒரு குணம் அதனை ஒத்த குணத்தையே எதிர்த் திசையிலும் தோற்றுவித்து வளர்க்கும். ஆனாலும் அன்பு நெஞ்சமுடையார் சிலர். அன்பை ஒளித்து வைத்துக்கொண்டு குற்றம் குறையுடையாரைத் திருத்தி எடுத்து வளர்க்க முயற்சிசெய்வர். இத்தகு சூழ்நிலைகளில் நம்பிக்கையும் நல்லெண்ணமுமே துணைசெய்ய இயலும். அன்பில், உறவில் அவநம்பிக்கையும் பரபரப்பும் கூடவே கூடாது!

உயிர்க்குலத்தை, மானிடச் சாதியை அன்பில் நனைத்து வளர்க்கவே சமயம் தோன்றியது. 'அன்பே சிவம்' என்று திருமந்திரம் கூறும்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமான தாரும் அறிகிலார்"

(திருமந்திரம் 370)

"அன்பலால் பொருளும் இல்லை
ஐயன் ஐயாற னார்க்கே" என்பது திருமுறை.

அன்பில் மனித குலத்தை இணைத்து வளர்த்து வாழ்விக்காதது சமயம் அல்ல. சமய வேற்றுமையால் மனிதகுலத்தை வேறுபடுத்தும் கொள்கைகளைப் பரப்பு பவர்கள், பேசுபவர்கள் சமயத்தைச் சார்ந்தவர்கள் அல்லர். சமயங்கள் நிறுவனங்களாக மாறிய பிறகு, சமய நெறியிலிருந்து நெடுந்தொலைவு விலகிச் சென்ற பிறகு தம் தகுதியை இழந்துவிட்டன. அதனால் சமய அடிப்படையில் போர்கள் கூட நடந்தன—நடந்து கொண்டிருக்கின்றன! இது மக்களிடம் செல்வாக்குப் பெற்றுள்ள சமயத்தை, சமூகத் தீயசக்திகள் பயன்படுத்திக் கொள்வதன் விளைவேயாம். சமயம் காரணமன்று. ஆனால் சமயம், திருத்தும் சக்தியை இழந்துவிட்டது. உப்பே சாரமற்றுப் போனால் அதற்குச் சாரமேற்ற இயலுமா?

அன்பைத்தூண்ட, வளர்க்க, மனிதகுல ஒருமைப் பாட்டைக் காண, வையகத்தைச் செழிக்கச் செய்வதே சமயம். இந்தப் பணியில் ஈடுபடுகின்றவர்களே சமய நெறியாளர்கள்! சமயத் தலைவர்கள்! "மக்கள் சிந்தனை" —15–10–80

## தூய மனைகள் கோயில்களாகும்

அன்பு, ஆற்றல் உடையது. அன்பினும் உயர் ஆற்றலுடையது வேறு எதுவும் இல்லை. அன்பு ஒரு சிறந்த செயலூக்கி. அன்பு செயலாக்கம் உடையது. அன்பு அளப்பில் ஆண்மை தரத்தக்கது. அன்பு குடத்துள் விளக்கும், உறையுள் வாளும் போலப் பார்க்க முடியாதது என்ற கருத்து உண்மையன்று. அன்பு உணர்வுமயமானது; செயல்களாக உருப்பெறுவது. இன்று ஆற்றல் மிக்க அன்பு எங்குமில்லை. வெறும் ஆசைகளால் மக்கள் அலைக்கழிக்கப்படுகின்றனர். ஆசை, பனிமூட்டம் போன்றது. அன்பு வளம் கொழிக்கும்

மழை போன்றது. ஆசை சுரண்டி ஏமாற்றி வாழ்வது. அன்பு உழைத்து வாழ்வது. ஆசை இரந்து உதவிகள் பெற்று வாழ்வது. அன்பு உழைத்து வாழ்வித்து வாழ்வது. ஆசை இகழ்வினைத் தருவது. அன்பு புகழினைத் தருவது. அன்புடையார் நெஞ்சத்தில் வேற்றுமை இல்லை. மருத்துவ நலம் கருதியும் வளர்ப்பு நிலைகள் கருதியும் பாகுபாடுகள் இருக்கலாம். இவை சிலருக்கு நிலையானவையல்ல. எல்லாரும் பெறக் கூடியனவே.

இந்த ஆற்றல்மிக்க அன்பு வாழும் முறையால், துய்க்கப்பெறும் நிலைகளால் வேறு வேறு பெயர் பெறினும் அன்பு அன்பேயாம்; கணவன் மனைவியிடை நிகழ்வது காதல். நண்பர்களிடையில் நிகழ்வது நட்பு. கடவுள் -உயிர்களிடையில் நிகழ்வது பக்தி. இவைகளின் பெயர்கள் வேறுவேறாயினும் துய்க்கும் நிலையால் வேறுபட்டனவே தவிர, ஒன்றில் ஒன்று உயர்ந்தவையுமல்ல; தாழ்ந்தவையுமல்ல. ஒன்றின் வாயிலாகப் பெறுவதைப் பிறிதொன்றின் வாயிலாகப் பெறலாம். ஏன் இறைவனையே கூட-இன்ப அன்பினைக் கூட பக்தியினால்தான் பெறவேண்டும் என்பதல்ல. முன் இரண்டு அன்பு நிலைகளில் செழித்து வளந்தாலே இறைவன் தேடி வந்தருள்வான். ஆனால் அன்புடையராதல் என்பது சொல்லுதற்கு எளிது. வாழ்தல் அருமை. அருமையுடையதெனின் முடியாததா? இல்லை. மனம் வைத்து முயன்றால் எளிது.

கணவன் மனைவியாக வாழ்தல் தூய வாழ்க்கை. பெண்மையைப் பழித்தலும் மனையறத்தை இகழ்தலும் தமிழ் வழக்கமல்ல. "துறவியரும் தொழும் பரவை" என்பார் சேக்கிழார். சுந்தரர் பரவையாரிடத்தில் வாழ்ந்த இன்ப வாழ்க்கையை, யோக வாழ்க்கையை என்று சிறப்பித்துச் சேக்கிழார்,

"தென்னாவ லூர்மன்னன்
தேவர்பிரான் திருவருளால்

மின்னாரும் கொடிமருங்குல்
பரவையெனும் மெல்லியல்தன்

பொன்னாரும் முலைஓங்கல்
புணர்குவடே சார்வாகப்

பன்னாளும் பயில்யோக
பரம்பரையில் விரும்பினார்"

என்று கூறுவதறிக.

சிறந்த கணவன் மனைவியாக வாழ்தல் என்ற அடிப்படையில் சங்ககாலம் 'தலைவி' என்றே குறிப்பிடுகிறது. திருக்குறள் "வாழ்க்கைத்துணை நலம்" என்று பாராட்டுகிறது. சிறந்த மனையற வாழ்க்கையில் பங்கு பெறுவோர் குறைகள் நீங்கிக் குணங்கள் பெற்று ஆன்மநலம் எய்துதல் இயற்கை. ஒரு பெண், தனக்கு வாய்த்தவன் குறைகளையுடைய கணவனாயினும் அவனை நெறிப்படுத்தி, தெய்வ நிலைக்கு உயர்த்தமுடியும். குறைகளைக் கடந்து அன்பு காட்டுதல், தொண்டுசெய்தல், உதவியாக இருத்தல், கலத்தல் முதலிய நிகழ்வுகளின் மூலம் அற்புதமான மாற்றங்கள் விளைகின்றன. திருநீலகண்டர் மனைவாழ்க்கையும், கண்ணகி மனை வாழ்க்கையும் இதற்கு எடுத்துக்காட்டுகள். "குறையிலாதார் யாருமில்லை" என்பது உலகியல் வரலாறு காட்டும் உண்மை. ஆனால் அன்புக்கு, காதலுக்கு, நட்புக்குக் குறை தடையாக அமையாது; அமையக்கூடாது. அப்படி அமையும்படி அனுமதித்துவிட்டால் குறைகள் பல்கிப் பெருகுமே தவிர, அன்பு வளராது; வாழ்க்கை வளராது; வளமாக அமையாது. அதேபோழ்து குறைகளைப் பொருட்படுத்தாத அன்பை சலுகையாக எடுத்துக்கொண்டு கெட்டுப்போகவும் கூடாது. ஆதலால், அன்பின்மை போலக் காட்டுதல், அன்பு வாழ்க்கைக்குக் களை வெட்டிக் காய்ச்சல் காட்டுவது போலப் பயன்தரும். அதனாலன்றோ காதல் வாழ்கையில் ஊடல் தேவையென்று மனையறம் அறிந்தோர் கூறுகின்றனர்.

கு. XII. 13.

ஊடலும் உணவுக்கு உப்புப் போலச் சுவைமிகுந்து வழங்குவதே என்றனர். ஆதலால் காதல் வாழ்க்கையைச் சிற்றின்பம் என்று சீரழித்துச் சித்திரவதை செய்வது நன்மரபாகாது. காதல் வாழ்க்கையினால் மானிடன் பெறும் ஆற்றலைப் பாரதி,

"காற்றில் ஏறி, அவ்
விண்ணையும் சாடுவோம்
காதற் பெண்கள்
கடைக்கண் பணியிலே!"

(பெண்கள் வாழ்க—8)

என்று பாடுகின்றான். சித்தாந்தச் செந்நெறியும் கூடச் சிவமாகிய பரம்பொருள் சக்தியாகிய அம்மையுடன் சேரும்பொழுதே ஆற்றல்பெற்று ஐந்தொழில் நிகழ்த்துவதாகக் கூறுகிறது. ஏன் சிவம் அடியார்களுக்கு அருளியபோதெல் லாம் அம்மை உடனிருந்து, அருளுதற்குத் துணையாயமைந்த தால் என்பது பெரிய புராணத்தின் விளக்கம்; முடிவு. ஆதலால், மனையறத்தில் நிகழும் காதல், இறைநெறிக்கு முரணாவது இல்லை. இந்த அன்பு தூய்மையானது. காதலர்கள் முழுமையாக வளர்ந்து நன்மக்கட் பேற்றின் மூலம் வையகத்திற்கு—அன்பில் பழுத்து வளர்த்த புகழுடைய வர்களாதலால்—வானோர்க்கும் விருந்தாக அமைகின்றனர்.

துறவு வாழ்க்கையைவிட மனையற வாழ்க்கை எளிதன்று. துறவிகள் கூடக் களத்திலிருந்து விலகிப் பொறிகளை ஒடுக்கிப் பழக்கப்படுத்துதல் மூலம் எளிதில் வெற்றி பெறலாம். ஆனால் மனையறத்தில் இன்பக் களத்திலிருந்து விலகுதல் இல்லை. அங்கேயே இருந்து துய்ப்பதையே இலட்சியமாகக் கொள்ளமால் துய்ப்பிப்பதை இலட்சியமாகக் கொண்டு வாழ்தலுக்கு மிகக் கடுமையான துறவு மனப்பான்மையும் நியாய உணர்வும் தேவை. சுவையாகச் சமைத்தல் வேண்டும். ஆனால் சுவைத்து

மகிழ்வதற்காக அல்ல. காதற் கொழுநனை, மக்களை, சுற்றத் தாரை உண்பித்து மகிழ்வதற்காக; அழகாக ஒப்பனைகள் தேவை. ஆனால் தான் மகிழ, பெருமைப்பட அல்ல. காதலன் மகிழ்ந்து வாழ! காதலன் கண்டு மகிழ்ந்து வாழ்தலுக்கே பெண் அழகாக இருக்கிறாள்; இருக்க விரும்புகிறாள் என்பதை, காரைக்காலம்மையார் உணர்த்துகின்றார். இது போலவே அடலேறாகிய ஆடவருக்கும் காதலியின் மகிழ்வே மகிழ்வு. அவன் அவளுடைமை. இத்தகைய ஊன், உயிர், அறிவு, உணர்வு கலந்த மனையற வாழ்க்கையே மங்கலமாம். இங்ஙனம் மங்கலமாக அமைந்த மனையற வாழ்க்கை யிலேயே நன்மக்கள் தோன்றுவர். இத்தகு மனைகள் திருக் கோயில்கள், திருமடங்கள் போல்வன; தூய்மையானவை; இறைவன் மகிழ்ந்து தேடிவரும் இடங்கள்; இத்தகு மனையற வாழ்க்கை உயர்சமய வாழ்க்கையே; மனைகள் கோயில்களாக மாறினால் கோயில்கள் கோயில்களாக விளங்கும்.

—'மக்கள் சிந்தனை'—1–11–80

## சமய வழிபட்ட சமுதாயம்

**ம**னிதன் கூடிவாழப் பிறந்தவன். மனிதன், சமுதாய வாழ்க்கைக்கு உரியவன்; கடமைப்பட்டவன். ஏன்? தோற்றத்தால் தனி மனிதனாயினும் அவனைப் படைத்து உருவாக்கி உலாவர விட்டிருப்பதே சமுதாயம் என்ற அமைப்புத்தான்; தனிமனிதனா? சமுதாயமா? என்ற கேள்வி பிறத்தல் கூடாது. பிறந்துவிட்டால் சமுதாயம் என்பதே விடை. சமயம், அரசியல் ஆகியவற்றின் தோற்றக்களன் சமுதாயமே! இவற்றின் நோக்கமும் சமுதாயத்தைக் கட்டமைத்துக் காப்பதே.

சமுதாயம் என்ற அமைப்பில் எல்லாரும் இருப்பர். கற்றோர் இருப்பர்; கல்லாதவரும் இருப்பர். உடையவரும் இருப்பர்; இல்லாதவரும் இருப்பர். வலியுடையோரும்

இருப்பர்; வலிமையற்றோரும் இருப்பர்; ஆனால் சமுதாயக் கட்டமைப்பிற்குள் கரைந்து வேறுபாடற்ற ஒன்றாக இருப்பது சமுதாய அமைப்பின் இலக்கணம். அப்படியானால் சமுதாயம் என்பது ஒரு அச்சுவார்ப்பா? இல்லை. அச்சுவார்ப்புக்கு உயிர்ப்பு ஏது? சிந்தனை ஏது? செயல் ஏது? உணர்வு எது? சமுதாயம் என்பது சிந்தனையும் செயல் திறனும் உடைய உணர்வுகளால் பொலிவடைந்து ஓயாது இயங்கும் ஓர் இயக்கம். ஆங்கு வேற்றுமைகள் இருக்கும். ஆனாலும் வேற்றுமைகளை ஒருமை, ஆட்கொண்டுவிட்டது. பொதுமை தனிமையை எடுத்துச் செரித்துக்கொண்டு விட்டது. ஆங்கு ஒருவர் எல்லாருக்காகவும், எல்லாரும் ஒருவருக்காகவும் என்று வாழ்கின்றனர். இத்தகைய சமுதாய அமைப்பே சமய வழிப்பட்ட சமுதாய அமைப்பு. சமயம் மனிதகுலத்தைச் சமைப்பது. "சேரவாரும் செகத்திரே" என்பது சமயத்தின் அழைப்பு! அப்பரடிகள் திருக்கோயில் உழவாரப் பணிமட்டும் செய்யவில்லை, "பார் வாழத் திருவீதிப் பணி"யும் செய்தார் என்பறிக. சிவநெறியில் ஒரு வாழ்த்துப் பாடல் உண்டு. அந்தப் பாடல் கச்சியப்பர் அருளிச் செய்தது. அப்பாடலின் அமைப்பு முறையே, சமயம் ஒரு சமுதாய அமைப்பைப் பொதுநலம் செறிந்த சமுதாய அமைப்புப் படைக்கும் நோக்கும் உடையது என்பதை விளக்குவதாய் அமைந்திருக்கிறது.

"வான்முகில் வழாது பெய்க
மலிவளம் சுரக்க; மன்னன்
கோன்முறை அரசு செய்க;
குறைவிலாது உயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்க ளோங்க!
நற்றவம் வேள்வி மல்க!
மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலக மெல்லாம்!"

என்பது அந்தப் பாடல்.

மண்ணின் வளத்திற்கும் உயிர்கள் உண்டு களித்து மகிழற்கும் பொருள்கள் தோற்றத்திற்கும் இன்றியமையாத தாகிய மழை பெய்யவேண்டும். மழை பெய்தால் போதுமா? வளம்பல கொழிக்கவேண்டும். வான் மழை பெய்தாலும் வளம்பல கொழித்தாலும் முறையான அரசு இல்லையாயின் வல்லார்கள் உண்டு கொழுப்பர்: மெலியார்கள் வாடுவர். ஆதலால் வல்லார்கள்பால் சாராத முறையான பங்கீட்டினைச் செய்யும் அரசு தேவை. உயிர்கள் யாவும் யாதொரு குறையுமில்லாது வாழவேண்டும். "குறைவிலாது உயிர்கள் வாழ்க!" என்னே இலட்சியம்! உயிர்கள் யாவும் பெறுவனவெல்லாம் துய்த்து யாதொரு குறையும் இன்றி வாழ வேண்டும். இந்தச் சாதனைகள் நடந்தால்தான் அறங்கள் நடைபெறும்; தவம் இயற்றப்பெறும்; மனித குலத்தில் இன்றியமையாத நீதியும் நிலவும். இது கச்சியப்பர் காட்டும் சமய வழிப்பட்ட சமுதாய அமைப்பு.

இத்தகைய சமுதாய அமைப்பைக் காணச் சமயம் ஈடுபட்டால்தான் அது சமயம்; வாழ்விக்கும் சமயம்! இல்லையானால் சமயம் ஒரு பிழைப்பு. அது காலப் போக்கில் வரலாற்றுப் புதைமணலில் புதையுண்டு போகும். புதிய சமயநெறியைப் புத்துலகம் படைக்கும்.

—'மக்கள் சிந்தனை' 15-11-80

## இந்து சமயத்தில் சிக்கல்!
## தீர்வு காண இயலுமா!

இந்தியா பரப்பளவில் ஒரு பெரிய நாடு. பல நூறாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன் தோன்றி வளர்ந்து வரும் ஒரு நாடு. இந்தியாவின் பழமை, பரப்பளவு இவைகளின் அளவுக்கு வேற்றுமைகளும் உண்டு. இவ்வேற்று மைகளில் பல, காலத்தின் தேவையாகத் தோன்றியவை. அதாவது இமயத்தின் அடிவாரத்தில் வாழ்வோனுக்கும்

தென்குமரிக் கடலோரத்தில் வாழ்வோனுக்கும் எளிதில் உறவு ஏற்படவாய்ப்பில்லாமல் காலமும் தொலைவும் பிரித்து வைத்தமையே வேற்றுமைகளுக்கு மிகுதியும் காரணம். ஆதலால் இந்திய மக்களிடையேயுள்ள வேற்றுமைகள் பல இயல்பானவை; சில வற்புறுத்தி ஏற்றுக்கொள்ளச் செய்யப் பட்டவை. சில வேற்றுமைகளை எதிர்த்து இந்திய நாட்டின் பல பகுதிகளிலும் ஒரே நேரத்தில் ஒருவருக்கொருவர் தொடர்பு இல்லாமற் கூடப் போராடியிருக்கிறார்கள். இத்தகைய வரலாற்று நாயகர்களை நினைவில் கொண்டால் இந்திய வேற்றுமைகளை எளிதில் நீக்கலாம். வேற்றுமைகளை எளிதில் நீக்க இயலாமற் போனாலும் விழுமிய ஒருமைப் பாட்டை உருவாக்க முடியும். இதற்கு இந்திய நாட்டின் பல்வேறு நாகரிகங்களை, சமயக்கொள்கைகளை, மொழி இலக்கியங்களைச் சமன்செய்து சீர் தூக்கிப் பாராட்டும் மனப்பான்மை வளரவேண்டும். எப்பொழுதுமே, இது உயர்ந்தது-அது தாழ்ந்தது என்ற விவாதத்தை ஆய்வு மனப்பான்மை யின்றி வெறிக் கூச்சலாக்குபவர்கள் கலகத்தையே வளர்ப்பார்கள். எந்த ஒன்றின் தனித் தன்மையையும் அறிந்து பாராட்டிப் பேணுதல் சான்றோர்க்கு அழகு-கடமை. குறிப்பாக இன்று விவாதத்திற்கு ஆளாகியுள்ள இந்துமதத்தை ஆராய்வோம்.

உண்மையில் இந்துமதம் என ஒன்று இல்லை. பொது வாக உலகச் சமயங்கள் வழிபடும் க்டவுளின் பெயரால் விளங்கும் அல்லது அம் மதங்களைக் கண்ட ஞானிகள் பெயரால் விளங்கும். இந்து மதம் என்ற பெயர் இவ்விரண்டு அடிப்படையிலும் இல்லை. ஒரு சிலர் இந்து மதம் என்ற பெயர் 'சிந்து' என்ற நதி அடிப்படையில் தோன்றிக் காலப்போக்கில் 'இந்து' என்ற மருவிற்று என்பார்கள். இன்று சிந்து நதிக்கரையை இந்து சமயத்தைச் சேர்ந்தவர் யாரும் தாயகமாகக் கொண்டு இல்லை. வேறு சில அறிஞர்கள், அந்நியர்கள் இந்தியாவில் தோன்றிய சமயங்கள் அனைத்

தையும் ஒன்றாக்கி இந்து மதம் என்று பெயர் சூட்டியதாகக் கூறுவர். எது எப்படியிருப்பினும் இந்துமதம் என்ற ஒன்று வேதம், சாத்திரம், ஆகமம், திருமுறை திவ்வியப்பிரபந்தங்கள் ஆகிய எந்த நூல்களிலும் இல்லை. இந்து மத வரிசைப் பட்டியலில் இன்று ஜைனமதம்கூட சேர்க்கப்பட்டுள்ளது. எனவே, இந்து மதம் என்ற வெறும் பெயரில் ஒரு சமயத்தை உருவாக்குவதும் அதற்கு இதுதான் கொள்கையென்று நிர்ணயிப்பதும், அந்த மதத்திற்கு இன்னார்தான் தலைவர் என்று உரிமை கொண்டாடிக் கொள்வதும் வரலாற்றின் அடிப்படையில் இல்லாத ஒன்று. தத்துவங்கள் அடிப்படை யிலும் ஏற்புடையதன்று.

இன்று காஞ்சி காமகோடி பீடத்தைச் சேர்ந்தவர்கள் இந்த முயற்சியைக் கடுமையாகச் செய்துவருகிறார்கள். ஆனால், கொள்கையளவில் வேற்றுமையில்லாத சிருங்கேரி பீடம், "காஞ்சி காமகோடி பீடம் ஆதிசங்கரர் நியமித்த நான் கில் ஒன்றில்லை" என்ற நூல் எழுதி வெளியிட்டுள்ளார்கள். இது அவர்களுக்குள் இருக்கும் சண்டை. மற்றவர்கள் அந்தச் சண்டையைப் பற்றி அறிந்துகொள்ள முயற்சிசெய்வதோ விமர்ச்சிப்பதோ நாகரிகம் இல்லை. ஆதலால் அதுபற்றிச் சிந்திக்க வேண்டியதில்லை. இந்து மதம் என்பது சைவம்—வைணவம் என்னும் இரண்டு பெரும் பிரிவை உள்ளடக்கிய தாக வழங்கப்பெறுகிறது. இந்த இரண்டு பெரும் பிரிவுகளின் தனித்தன்மையை, இந்து மதம் என்ற பேரமைப்பை விரும்பு கிறவர்கள் போற்றிப் பாதுகாப்பதாகத் தெரியவில்லை. வைணவ சமயத்தைச் சேர்ந்தவர்கள் தங்களுடைய தனித் தன்மையைத் தொடர்ந்து பேணிக் காத்து வருகிறார்கள். ஆனால் சைவ சித்தாந்தச் செந்நெறிக் கொள்கைகளை–திருமுறைகள் வகுத்துத் தந்த கோட்பாடுகளை வைணவர்களைப் போலப் பாதுகாக்கத் தவறியுள்ளார்கள் என்பது மறுக்க முடியாத உண்மை. சைவ சமயத்தைச் சார்ந்தவனைக் கேட்டால், தான் வழிபடும் கடவுள் சிவன்

என்று கூறுவான். வைணவ சமயத்தைச் சார்ந்தவனைக் கேட்டால் திருமால் என்று கூறுவான்.

ஆனால், சைவனாகவோ, வைணவனாகவோ, வாழாமல் இந்துவாக வாழ்பவனிடம் அவன் வழிபடும் கடவுள் பேர் கேட்டால் ஒரு கடவுள் பெயரைச் சொல்ல அவனுக்குத்தெரியாது. பல கடவுள் வழிபாட்டுணர்ச்சியே இந்து என்ற உணர்ச்சியிலிருந்துதான் வருகிறது. ஒரு சைவனை நோக்கி உன் ஆச்சாரியர் யார்? என்று கேட்டால் மெய்கண்டார் என்று சொல்லுவான். அதுபோலவே ஒரு வைணவனைக் கேட்டால் இராமாநுசர் என்று சொல்லுவான். இந்து சமயம் என்று கூறுபவர்களைக் கேட்டால் ஆதிசங்கரர் என்று சொல்ல வைக்கிறார்கள். இந்திய மண்ணில் பிறந்த ஞானிகள் மட்டும் அல்ல, உலக அரங்கில் தோன்றிய எந்தவொரு ஞானியையும் நாம் போற்றக் கடமைப்பட்டுள்ளோம். ஞானத்திற்கு நாட்டு எல்லையும் மொழி எல்லையும் கால எல்லையும் கிடையாது. வரம்புகளைக் கடந்ததுதான் ஞானம். ஆனால் உரிய வளர்ச்சியடைகின்ற வரையில் எது சிறந்தது என்று அனுபவத்தில் வைத்து அறியத்தக்க வகையில் உலகத்தின் தத்துவ நெறிகள் எல்லாம் உலகத்தின் வற்றாத புனலுடைய பல ஆறுகளைப் போலச் செழித்து வளரவேண்டும். அவைகளின் அனுபவங்கள் உலக மக்களுக்கெல்லாம் உரிமையாக வேண்டும்.

இதில் நமக்கு இரண்டு விதமான கருத்து இல்லை. ஆயினும் சிந்தையில் மலர்ந்து நிற்க வேண்டிய ஒரு நெறியை, ஆதிக்கத்தின் மூலமும் மற்ற நெறிகளின் குரல்வளைகளை நெரிப்பதன் மூலமும் ஒன்றை ஏற்றுக் கொள்ள நிர்ப்பந்திக்கும் போதுதான் சிக்கல் தோன்றுகிறது. 1955–இல் நாம் மலேயா சுற்றுப்பயணத்திலிருந்தபொழுது "நாம் ஓர் இந்து அல்ல" என்று பத்திரிகைகளுக்குப் பேட்டி கொடுத் திருந்தோம். அச்செய்தியை அறிந்த சென்னை இந்து

பத்திரிகை நிர்வாகிககள் அவர்களுடைய மலேயா நிருபருக்குத் தந்திச் செய்தி அனுப்பி, மீண்டும் பேட்டியில் நம்மை விளக்கம் கேட்டார்கள். மீண்டும் நாம் இந்து என்ற பெயரில் நமக்கு வெறுப்பில்லையென்றும் நாம் உண்மையில் மேற்கொண்ட வழி சைவசித்தாந்தச் செந்நெறியே என்றும் தெளிவாக விளக்கினோம். ஆனால் 1969 டிசம்பரில் தமிழ்நாடு தெய்விகப் பேரவைத் தலைமையை ஏற்றுக் கொண்ட பொழுது நாம் இந்தத் தீவிரக் கொள்கையை ஒதுக்கிவைத்துவிட்டு இந்து சமூக மேம்பாட்டுப் பணிகளில் ஈடுபடலானோம். ஆனால் நம்முடைய சிந்தனையும் செயலும், ஊற்றாகவுள்ள சைவசித்தாந்தச் செந்நெறிக் கொள்கையைப் பிரதிபலிப்பனவாக இருந்தன. அதாவது தீண்டாமை இல்லை. சாதிவேற்றுமை இல்லை. எல்லாருக்கும் எல்லாம் வழங்கும் சமவாய்ப்பே சமய நெறியின் அறம் என்ற திசையில் நம்முடைய பணிகள் தொடர்ந்தன. இக்கொள்கை வளர்ச்சியின் பயனாகத் தமிழ் வடிபாட்டியக்கம் தீவிரமடைந்தது; சாதி வேறுபாடற்ற முறையில் அருச்சகர்களைப் பயிற்சிகொடுத்து நியமிக்கலாம் என்ற கொள்கை உருக்கொண்டது. இக்கொள்கைகள் சித்தாந்தச் செந்நெறிக்கு முரண்பாடானவையல்ல என்பது நமது கருத்து. ஆனால் இந்து சமயத்திற்கு முரண்பாடுடையனவாக காஞ்சி காமகோடி பீடம் நினைத்தார். நம்மையும் அழைத்து விவாதித்தார். கொள்கைகளில் உடன்பாடு ஏற்படவில்லை. இந்து சமயம் என்ற பெயரில் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டிக்கொள்ள விரும்பிய அவர் பேரவையின் வளர்ச்சிக்கே இடையூறாக அமைந்தார். இந்த நிகழ்ச்சிகளுக்குப் பிறகு மீண்டும் நாம் பழைய தீவிரக் கொள்கைக்குச் செல்ல வேண்டிய நிலை உருவாகியது. ஆனாலும் நம்முடைய தனிப்பட்ட சமய மொழிக் கொள்கைகள் 'இந்தியன்' என்ற கொள்கைக்கு மாறாக ஒருபோதும் அமையவில்லை. இனி மேலும் அமையாது.

இந்தியன் என்ற நாட்டு அடிப்படையின்றி இனம் மொழி, மத அடிப்படையில் ஒருமைப்பாடுடையவராகச் செய்தல் அரிது என்பதே நமது கருத்து.

முதலில் இன்றுள்ள சிக்கல்களுக்குத் தீர்வுகாண வேண்டுமானால் இந்து மதம் என்ற அமைப்புக்குள் மதத் தலைவர்களுக்குள்ள ஆதிபத்திய உணர்வு நீங்கி அவர்களின் தனித் தன்மைக்கு இடையூறில்லாமல் ஒருங்கிணைக்க முயற்சி செய்யவேண்டும். இது அவ்வளவு எளிதாக நடைபெறும் என்று நாம் கருதவில்லை. ஏனெனில் பார்ப்பனர்கள் பார்ப்பனர் சார்புடையவர்கள் ஆகியோர் தங்களைத் தனித்து ஒதுக்கி அமைத்துக்கொள்வதற்கே முயற்சி செய் கின்றனர்: தங்களோடு முற்றிலும் உடன்பட்டுவராதவர்களை ஒதுக்கவே முயல்கின்றனர். நாம் பேரவைத் தலைவராக இருந்தபொழுது பேரவையின் கொள்கைகளில் முற்றாக உடன்பாடில்லாத இந்து சமய அமைப்புகளாயிருந்த பல்வேறு அமைப்புக்களின் பேராளர்களைக் கொண்ட ஒருங் கிணைப்புக் குழு அமைத்தோம். பொதுப் பிரச்சனைகளில் அவர்களை அடிக்கடி கூட்டி ஆலோசனைகள் கேட்டோம். அவர்களுடைய இயக்கங்களுக்கும் இயன்ற உதவிகளைச் செய்தோம். ஆனால் பேரவைக்கு இடுக்கண் ஏற்பட்டபோது அந்த இயக்கங்களில் ஒன்றுகூட வாய்திறக்கவில்லை. இன்றுள்ள சூழ்நிலையிலும்கூட இந்த மதமாற்றச் சிக்கல் களில் ஈடுபட்டும் எவரையும்விட நாம் காலத்தில் அக்கறை காட்டியிருக்கிறோம். திருநெல்வேலி - நைனாகரம் சிற்றூரில் முஸ்லீம் மத மாற்றத்தை நேரில் சென்று தடுக்க முயற்சி செய்தோம். ஓரளவு வெற்றி கிடைத்தது. போடிநாயக்கனூரில் - லெட்சுமிபுரம் முஸ்லீம் மதமாற்றத்தைத் தடுத்து நாம் நிறுத்தியதோடு ஆங்கு வழிபாட்டுக் கோயில் இல்லாமலிருந்ததால் நாம் ஆதீனத்தின் சார்பில் நிதி உதவி செய்து கோயில் கட்டித் தரவும் செய்தோம்.

இராமநாதபுரம் மாவட்டப் பிரச்சனையிலும் இதே நிலைதான். காஞ்சிபுரம் புதுப்பெரியவாள் கேட்டுக் கொண்டதன் பேரில் குன்றக்குடி அடிகளார் சென்றார் என்று பத்திரிகைகளில் செய்தி வருகிறது. காஞ்சிபுரம் புதுப் பெரியவாள் கேட்டுக்கொண்டதன் பேரில் நாம் செல்வதில் குறையிருப்பதாக நாம் நினைக்கவில்லை. ஆனால் உண்மை அதுவன்று. ஆக, ஏதோ இந்து சமயத்தில் அவர்களுக்கு மட்டுமே அக்கறையிருப்பது போலக் காட்டிக்கொள்ளும் போது கொஞ்சம் மனச் சங்கடம் ஏற்படுகிறது. வளர்ந்த மதத் தலைவரிகளிடையேகூட பரஸ்பரம் நல்லெண்ணத்தையும் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையையும் வளர்த்துக் கொள்ளாமல் இந்து சமூகத்திற்கு விளைந்துள்ள சிக்கல் களுக்குத் தீர்வு காண்பது எளிதல்ல என்று காண்கிறோம்.

'மக்கள் சிந்தனை' —15.7.81

## மத மாற்றங்கள் இன்று செய்ய வேண்டியது என்ன?

நம் நாட்டில் இங்கும் அங்கும் பரவலாக இந்து அரிசனச் சகோதரர்கள் மதம் மாறுவதற்குரிய அடிப்படைக் காரணங்களைக் கண்டு ஆராயவேண்டும். அங்ஙனம் கண்டு ஆராயாமல் வாய்க்கு வந்தபடியெல்லாம் "கள்ளச் சாராயம் காய்ச்சுவதற்காக மதம் மாறுகிறார்கள்; பணத்தாசையால் மதம் மாறுகிறார்கள்" என்றெல்லாம் பழி தூற்றுவது அறமன்று. நம்மைப் பொறுத்தவரையில் காரணங்கள் இல்லையென்று கருதவில்லை. ஆனால் மதம் மாறிச் செல்லுகிற அளவுக்குப் போதிய காரணங்கள் இல்லை யென்றும் கருதுகின்றோம்.

தீண்டாமை என்பது இந்து நாட்டின் சாபக் கேடுகளில் ஒன்று. இந்து மதத்தின் குறைகளில் ஒன்று; தமிழ்நாட்டுச் சமய நெறிகளாகிய சைவம், வைணவம் இந்து மத அமைப்பில்

வந்துள்ள பார்ப்பனீயத்தோடு கூட்டுச் சேராம லிருந்தால் நமது சமய நெறிகளில் தீண்டாமை பற்றியிராது. பார்ப்பனீயத்தின் வழித்தோன்றிய சாதி வேற்றுமை கற்பிக்கும் நெறிகளோடும் தீண்டாமையோடும் நமது சமய நெறி தொடக்க காலத்திருந்தே எதிர்த்துப் போராடி வந்திருக் கிறது.

உலகப் பொது மறையாகிய திருக்குறள் 'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' என்று கூறியிருப்பதறிக. நமது ஞானாசிரியராகிய அப்பரடிகள்,

*"சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்*
*கோத்திரமுங் குலமுங் கொண்டேன் செய்வீர்"*

என்றும்,

*"சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து*
*தரணியொடு வானாளத் தருவ ரேனும்*
*மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்*
*மாதேவர்க் கேகாந்த ரல்ல ராகில்*
*அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயராய்*
*ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்*
*கங்கைவார் சடைகரந்தார்க் கன்ப ராகில்*
*அவர்கண்டீர் யர்ம்வணங்கும் கடவு ளாரே"*

என்றும்,

சாதி வெறியர்களோடு போராடியிருப்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். அதுபோலவே திருவாசகம் தந்த மாணிக்கவாசகரும் "சாதி குலம் பிறப்பு என்னும் சுழிப்பட்டுத் தடுமாறும் ஆதமிலி நாயேனை" என்றருளிச் செய்திருப்பதை யும் அறிக.

இவையெல்லாம் சாதிமுறைகளைக் கற்பித்துச் சமுதாயக் கேடுசெய்யும் சிறு நெறியை எதிர்த்தெழுந்த கிளர்ச்சிகள். ஆயினும் இந்தக் கருத்துக்கள் சமுதாயத்தில்

முழுமையாக வெற்றிபெறவில்லை என்பது உண்மை. ஆயினும், தீண்டாமையற்ற-சாதி வேற்றுமைகளற்ற ஒரு சமுதாய அமைப்புக்குச் சமுதாயத்தை உந்திச் செலுத்தி அத்திசையில் நகர்த்தின என்பதை யாரும் மறுத்தற்கியலாது. சமுதாயத்தைத் தனித்தனியே பிரித்து அவரவர்க்கென்று தனித்தனி நலன்கலை ஒதுக்கீடு செய்து பகையுணர்வை முட்டி மோதச் செய்த வகையில் தீண்டாமை, சாதி வேற்றுமைகள் தன்னல நயப்பைக் களமாகக் கொண்டு வெற்று பெற்றுவிட்டன—வேரூன்றிவிட்டன. இதனை எதிர்த்துத் தொடர்ந்து நாடு தழுவிய போராட்டம் நடை பெற்று வந்துள்ளது. பஞ்சாபில் குருநானக்கும், வங்கத்தில் விவேகானந்தரும் கருநாடகத்தில் பசவேசரும், தமிழகத்தில் வள்ளலாரும் சமய நெறிக்களத்தில் நின்று போராடி யிருக்கிறார்கள். அரசியல்—சமுதாயத் துறைகளில் தயானந்த சரசுவதி, காந்தியடிகள், டாக்டர் அம்பேத்கார், தலைவர் பெரியார், அறிஞர் அண்ணா ஆகியோரும், கவிஞர்களில் தேசியகவி பாரதியதும், பாவேந்தன் பாரதிதாசனும் அரும் பணி செய்திருக்கிறார்கள். இத்தகையோருடைய அரிய பணிகளின் காரணமாகத் தீண்டாமையும் சாதி வேற்றுமை களும் கணிசமான அளவுக்குக் குறைந்திருக்கின்றன. சாதி வேறுபாடுகளற்ற சமுதாயத்தை நோக்கிச் சமுதாயம் மெள்ள நகர்ந்து வருகிறது என்பதை அன்புகூர்ந்து இந்து அரிசனச் சகோதரர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

சமுதாய மாற்றங்கள் எப்பொழுதும் எண்ணிப் பார்க்கிற அளவுக்கு நடந்து விடுவதில்லை. அது மனித குல வரலாற்றுக்கு இருக்கிற குறை. ஆதலால் இந்து அரிசன சகோதர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த நிலைமைகளைவிட இன்று சமூக அந்தஸ்திலும் பிற துறைகளிலும் உயர்ந்திருப்பதைக் கணக்கில் எடுத்துக் கொண்டு, அந்த முன்னேற்றத்தை உறுதிப்படுத்திக் கொள்வதில் அக்கறை காட்ட வேண்டும்.

இங்ஙனம் கூறுவதால் தீண்டாமை முற்றாக ஒழிந்துவிட்டதாகவோ சாதி வேற்றுமை தீங்கிவிட்டதாகவோ நாம் எண்ணுவதாகப் பொருள் கொள்ளக் கூடாது. இத் துறையில் நாம் சாதிக்கவேண்டியன நிறையவே இருக்கின்றன. அதற்குரிய பணிகளில் நாம் தொடர்ந்தே ஈடுபட்டு வந்துள்ளோம். இனிமேலும் ஈடுபடுவோம். ஆதலால் மத மாற்றம் குறித்து அவர்கள் எண்ணுவதையே கைவிடுவதுதான் சரியான நெறி.

அண்மையில் மீனாட்சிபுரம், இராமநாதபுரம் பகுதி களில் ஏற்பட்டுள்ள மத மாற்றங்களுக்குரிய காரணங்களை ஆராய்ந்தபொழுது, சாதி வேற்றுமைகள் காரணம் என்பதை விட அரசுத்துறையில் காவல் துறையில் ஈடுபட்டிருந்த சிலர் அத்துமீறி நடந்ததே காரணம் என்பது புலப்படுகிறது. தற்செயலாக வரம்பு மீறிய செயல்களில் ஈடுபட்ட காவலர்கள் குறிப்பிட்ட சாதியினரைச் சார்ந்தவர்களாக இருந்துவிட்டால் இந்து அரிசனச் சகோதரர்கள் அதைச் சாதிக் கலவரம் என்று கருதுகின்றனர். பத்திரிகைகளும் அதுபோலவே செய்திகளை வெளியிடுகின்றன. இது தவறு. பொதுவாக அண்மைக் காலமாக காவல்துறை நாடு தழுவிய முறையில் வரம்பிகந்த செயல்களில் ஈடுபடுவதாகக் காண்கிறோம். பகல்பூரில் இளைஞர்களின் கண்ணைப் பறித்ததைவிடக் கொடுமையான செயல் ஒன்று இந்த நாட்டில் நடந்ததுண்டா? ஆதலால், அரசை-அரசின் தவறான செயல்முறைகளை எதிர்த்துப் போராடுவதற்குப் பதிலாக, அந்தக் காவலர்கள் எந்தச் சாதியை அல்லது மதத்தைச் சார்ந்தவர்களோ அந்தச் சாதியை அல்லது அந்த மதத்தை எதிர்த்துப் போராடுவது நெறியன்று. ஆதலால் கட்டுங்கடங்காமல் செல்லும் காவல் துறையினரின் அத்து மீறிய செயல்களுக்குக் கண்டனம் தெரிவிப்போம். குடி தழுவிய ஆட்சியைக் காணும் முயற்சியில் ஈடுபடுவோம்.

தாழ்த்தப்பட்டவர்கள் முஸ்லிம்களாக மாறி விடுவதால், காவலர்களின் கொடுமை நீங்கிவிடுமா? அல்லது உரிமைகள் தாம் வந்துவிடப் போகின்றனவா? ஒருபொழுதும் இல்லை. வீட்டுக்கு வீடு வாசற்படி என்பதைப்போல எல்லாச் சமயங்களிலும் எல்லா இனங்களிலும் வேறுபாடுகள் இருக் கத்தான் செய்கின்றன. ஆதிக்கப் போட்டிகள் இருக்கத்தான் செய்கின்றன. மனிதருக்குள்ளே கருத்துரிமைகள் சனநாயக உரிமைகள் ஆகியவற்றை நமக்கு அண்டையிலிருக்கிற முஸ்லிம் நாடாகிய பாகிஸ்தானில்கூடப் பார்க்க முடிய வில்லையே! அந்த நாட்டின் பிரதமாரக்த் திகழ்ந்த ஒருவரைக் கூட தூக்கில் தூக்குகிறார்கள்! இவற்றையெல்லாம் நாம் சிந்திக்கவேண்டாமா? "சொர்க்கத்தில் அடிமையாய் வாழ்வதைவிட நரகத்தில் சுதந்தரமாய் வாழ விரும்புகிறேன்" என்னும் வாக்கு நினைத்தற்குரியது.

இந்தக் கலவரங்களின் பொழுது தாழ்த்தப்பட்டவர் களுக்கு முஸ்லிம்கள் ஆதரவாக- பாதுகாப்பாக இருந் தார்களா? அல்லது தாக்கும்பொழுது தாக்கியவர்களுக்கு ஒத்துழைக்காமல் இருந்தார்களா? இரண்டும் இல்லை. ஆதலால், ஏதோ ஒரு கோபத்தை மனத்தில் வைத்துக் கொண்டு மதம் மாறும் முடிவை விரைந்து எடுப்பது இந்து அரிசன சகோதரர்களுக்கும் நல்லதல்ல; நாட்டுக்கும் நல்லதல்ல.

மேலும் இந்து அரிசனச் சகோதரர்கள் தாம் பெற்றுவரும் அரசுச் சலுகைகளை இழக்க நேரிடுவதன் மூலம் அவர்களின் பிற்கால வாழ்வு பாதிக்கப்படும் என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும். அடுத்து, இந்த மதமாற்றத் தைக் குறித்து மற்றவர்கள் குறிப்பாக இந்து மதத்தைச் சேர்ந்தவர்கள் அரசினர் என்ன செய்யவேண்டும்? முதலாவதாக ஆத்திர அவசரங்களில் மதம் மாறிச் செல்லும் உணர்ச்சிகளுக்கு அளவு கடந்த முக்கியத்துவத்தைக் கொடுத்து அதைக் கவனத்திற்குரியதாக்கி அஃது ஓர்

அலையாக வளர்வதைத் தவிர்க்கவேண்டும். இப்படிச் சொல்வதால் மதம் மாறிச் செல்வதைப்பற்றி நமக்குக் கவலையில்லை என்று பொருளில்லை. நம்முடன் பிறந்த இந்து அரிசனச் சகோதரனை நாம் எளிதில் இழக்க தயாராக இல்லை. ஆயினும் மதம் மாறிச் செல்லும் நிகழ்ச்சியைப் பெரிதுபடுத்தி, அங்கு முற்றுகையிடுவது விரும்பத்தக்கதல்ல. அதற்கு மாறாக மதமாற்றத்துக்குச் செல்லுமளவுக்கு இந்து அரிசனங்களைத் தூண்டும் காரணங்களை மாற்ற உரிய முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும். அதனை விடுத்து மாநாடுகள் நடத்துதல் மாநாடுகளில் இன வகுப்புக் கலவரங்கள் ஏற்படத்தக்க வகையில் கடுமையாகப் பேசுதல், முஸ்லீம் சமுகத்தினரைப் போருக்கு அழைத்தல் ஆகியவை உணர்ச்சிகளைத் தூண்டப் பயன்படலாம். ஆனால் உருப்படியான செயலைத் தூண்டாது; பயன்தராது;

இந்து சமூகத்தின் எல்லாச் சமூகப் பிரிவினரும் சாதி வேற்றுமைகளை அடியோடு அகற்ற- மறந்துவிட, முன்வர வேண்டும். சாதாரணமாகப் பிரிவினைகள் வழிப்பட்ட சமூக அமைப்பில் நன்மை தீமைகள் நிகழும்பொழுது, அவற்றிற்குக் காரணமானவர்களின் தகுதி, திறமை, வளர்ச்சி ஆகியன கணக்கில் எடுத்துக் கொள்ளப் பெறாமல் சாதி உணர்வே முன் தலைதூக்கியது. இது சமுதாய அமைப்பிற்கு நன்றன்று. குறிப்பாகத் தீண்டாமையை அறவே விலக்க உறுதியெடுக்கவேண்டும். சமுதாய அமைப்பில் தீண்டாமை என்பது ஒரு கொடிய புற்றுநோய். இந்நோயால் சமூக அமைப்பில் இருபால் தழுவிய நல்லெண்ணங்கள், நம்பிக்கைகள் கெட்டுப் போகின்றன. அவ்வழி ஆக்கமும் ஆற்றலும் அழிகின்றன. இதனை நன்குணர்ந்து தம்முடைய இந்து சமூகத்தினர் ஒவ்வொருவருடைய தனிப்பட்ட வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலும் அகத்திலும் புறத்திலும் தீண்டாமையை அறவே அகற்றவேண்டும்.

இந்த மதத் தலைவர்கள் தீண்டாமை, சாதி வேற்றுமைகள் ஆகியவை குறித்துத் தெளிவான இனம் காட்டிக் கொள்ளவேண்டும். மழுப்பல்கள் பயனதரா. சாதி வேற்றுமைகள் இருக்கத்தான் செய்யும். ஆனால் பாராட்டக் கூடாது என்று சொல்வதெல்லாம் நடைமுறைக்கு ஒத்து வராத கருத்துக்கள். மதத்துறையில் எல்லா மட்டங்களிலும் தீண்டாமையையும், சாதி வேற்றுமைகளையும் நீக்க மதத் துறையிலுள்ள பணிகளில் பதவிகளில்-எல்லாரும் எல்லா வாய்ப்புக்களையும் பெற அனுமதிப்பார்களா? இவர்கள் முகத்தில் பிறந்தவர்கள்; அவர்கள் காலில் பிறந்தவர்கள், இவர்கள் கடவுளாலேயே சிருட்டிக்கப்பெற்றவர்கள் என்றெல்லாம் உள்ள கருத்துக்கள் புறக்கணிக்கப்படுமா? இந்த வகையில் மதத் தலைவர்கள் தெளிவான கொள்கையை விளக்கம் செய்வதுடன் செயல்முறைகளிலும் காட்ட முன்வர வேண்டும்.

மத நிறுவனங்கள் தமது மக்களுடன் ஆன்மீகத் தொடர்பை இடையறாது இயக்கி உயிர்ப்புடன் வைத்துக் கொண்டிருக்க வேண்டும். இன்று இந்தப் பணியை எந்த மத நிறுவனமும் செய்யவில்லை. அதற்குரிய செயல் திட்டமும் இல்லை. ஒருசில நிறுவனங்கள் செய்வதுபோலத் தோன்று கிறது. அது பெரும்பாலும் மேட்டுக் குடியினர், வசதியும் வாய்ப்புமுள்ளாரிடத்தில் கொண்டுள்ள உறவே தவிர, சாதாரண மக்களிடத்தில் கொண்டுள்ள உறவல்ல. நமது நிறுவனத்தைப் பொறுத்த வரையில் இத்துறையில் நமக்கு விருப்பமும் முயற்சியும் இருந்தாலும் அது முழுமை அடைய வில்லை. ஆனால் அது கொண்டுள்ள உறவு சாதாரண மக்களிடத்தில் தானே தவிர மேட்டுக்குடியினரிடமல்ல; வசதி வாய்ப்புடையோரிடத்துமல்ல. இன்றுள்ள நிலையில் சாதாரண மக்களிடம் நெருங்கிய உறவுகளை, தொடர்பு களைத் தோற்றுவித்துக் கண்காணித்துப் பேணி வளர்த்துக்

கு.XII.14.

கொள்ள எந்தவொரு மத நிறுவனத்தாலும் தனித் தனியே இயலாது. அதனால் திருமடங்களின் தலைவர்கள் இந்து அறநிலையத்துறை ஆணையர் ஆகியவர்களின் ஒருங்கிணைப்புக் கொண்ட பேரவை தோன்றியது. ஆனால் அதன் வளர்ச்சியில் போதிய ஆர்வம் காட்ட மதத் தலைவர்கள் முன்வரவில்லை. ஆயினும் மக்கள் அளவுகடந்த ஆர்வம் காட்டினார்கள். இயக்கம் வளர்ந்தது. ஆனால் சாதி வெறி பிடித்தவர்கள் நெருக்கடி காலத்தில் மறைவாகச் சதி செய்து அதை முடக்கிவிட்டார்கள். அதன்பின் பேரவை சரியாக வராது என்ற எண்ணத்துடனேயே உழுவலன்பிலும் கெழுதகை நட்பிலும் நமக்குச் சிறந்தவர்களாக விளங்கும் பேரூராதீனத் தலைவர் சிரவையாதீனத் தலைவர் குன்னூர் சற்குரு ஆசிரமத் தலைவர் ஆகியோரையும் இன்னும் சிலரையும் கொண்டு 'திருமடங்கள் அவையம்' காணப் பெற்றது. இந்த அமைப்பைக் கண்ட நோக்கத்திற்கிசைய அதை இயக்க முடியவில்லை. அண்மைக் காலமாகக் குன்னூரடிகள் இயக்கும் முயற்சியில் துடிப்போடு ஈடுபட்டுள்ளார்கள். ஆயினும் செய்யவேண்டிய பணிகளை நோக்கின் இது போதாது. திருமடங்கள் அவையத்தைத் திறம்பட இயக்க நம்முடைய கெழுதகை அடிகள் பெருமக்கள் தியாகம் செய்வதைத் தவிர வேறு வழியில்லை. இங்ஙனம் நாம் சொல்வதற்குக் காரணம் அவர்களின் பணிச்சுமையே அவையும் செயல்படாமல் போனதற்குக் காரணமாகும் என்பதற்காகவே! இனியும் பணிச்சுமை என்று கருதி வாளா இருத்தல் இயலாது. பேரவையையும் புதுப்பித்து மக்கள் இயக்கமாக நடத்தவேண்டும்.

பேரவையைப் புதுப்பித்து இயக்கத் தருமபுரம் ஆதீனம் காட்டும் ஆர்வம் வரவேற்கத்தக்கது! பாராட்டத்தக்கது; திருமடங்கள் அவையம் முழுநேரத் தொண்டர் அணி அமைத்து ஆழமான—ஆக்கரீதியான நிர்மாணப் பணிகளை

மேற்கொள்ள வேண்டும். பேரவை ஒரு பிரச்சார நிறுவன மாக வெளியீட்டு நிறுவனமாக இயங்கவேண்டும். இப்படி அமைப்பது சாலும் என்று நம்புகிறோம்.

இந்து அறநிலைய ஆட்சித்துறை மக்களுடன் தொடர்புடையதாகவும் மதத் தலைவர் மக்களின் பிரதிநிதிகள் ஆகியோரைக் கொண்ட குழுவின் ஆலோனையிலும் இயங்கும்படியாகவும் செய்தல் உடனடியாக அவசரத் தேவை. இந்து சமூகத்தில் நலிந்தவர்களின் மேம்பாட்டுப் பணிகளில் ஈடுபடக்கூடிய இந்த சமூக மேம்பாட்டு வாரியத்தைத் தன்னாட்சித் தன்மையுடையதாக அமைத்து, செயல் விருப்பமும் முற்போக்குச் சிந்தனையும் உடைய தலைவர்களை உறுப்பினர்களாகக் கொண்டு இந்து சமூகத்தில் நலிந்தோர்களின் மேம்பாட்டுப் பணிகளைச் செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். இந்த வாரியத்திற்கு எல்லா இந்து சமய நிறுவனங்களும் தம் தம் வருமானத்தில் ஐந்து விழுக்காடு, நிதி பங்களிப்புத் தரவேண்டும்.

இந்த வாரியம் கல்விப்பணி, மருத்துவப் பணி இன்ன பிற மேம்பாட்டுப் பணிகளைச் செய்து இந்து சமூகத்தில் நலிந்த பிரிவினர், மற்ற சமூகத்தினரோடு ஒத்த நிலைக்கு உயர்ந்து வரத்தக்க வகையில் ஆக்கப் பணிகளை மேற் கொள்ளவேண்டும். இது உடனடியான அவசர — அவசியத் தேவை. இம்முயற்சியின் மூலமே நம்முடைய மக்கள் பாதுகாக்கப்படுவர்; மதமும் வளரும்.

பொதுவாக வாழ்க்கையில் ஏற்படுகிற வெறுப்புகள் அதிருப்திகளால் மத மாற்றம் துண்டிவிடப்படுகின்றது. நாடு விடுதலை பெற்று 33 ஆண்டுகளாகியும் இன்னமும் கிராமப்புறங்களின் நிலை ஒரே மாதிரிதான் இருக்கிறது. நாடு முழுவதும் தீமையாக வளர்ந்துள்ள பணவீக்கம்கூட கிராமங்களில் எட்டிப்பார்க்காதது ஏன்? என்றுகூடத் தெரிய வில்லை. ஆதலால் கிராமப்புறங்களின் மேம்பாட்டுக்குச்

சிறப்புத் திட்டங்கள் தயாரித்துச் செயற்படுத்த வேண்டும். இப்பணியைக் கிராமங்களில் கூட்டுறவு மூலம் செய்வது வேற்றுமையற்ற பேதமற்ற ஒரு சோசலிச சமுதாய அமைப்புக்குத் துணையாக இருக்கும். இத்துறையில் மாநில அரசும் நடுவண் அரசும் போதிய கவனம் செலுத்துதல் நல்ல பயனைத் தரும்.

அடுத்து, பல திருமண உரிமை, வருமான வரிச்சலுகை, திருமண விலக்கு உரிமை, கல்வி நிறுவனங்கள் நடத்துதல் ஆகிய பல துறைகளில் இன்னும் நாட்டுக்குப் பொதுச் சட்டங்கள் உருவாகவில்லை. சமூக விதிகளும் காலத்தின் மாற்றங்களையும் தேவைகளையும் அனுசரித்ததாக இல்லை. இந்தச் சலுகைகளும் மத மாற்றங்களைத் தூண்டிவிடும் சக்திகளாக விளங்குகின்றன. இந்திய நாட்டு அனைத்து மக்களுக்கும் ஒரே சிவில் சட்டம் உருவாக்க வேண்டிய அவசியத்தை நடுவணரசு ஆராய்ந்து ‘ஒரே சிவில் சட்டம்’ இயற்ற முன்வரவேண்டும்.

பொதுக்கல்வி நிறுவனங்களை நடத்துதல் ஒரு சமுதாயப்பணி. இதில் இந்துக்களுக்கு ஒரு விதியும் பிற சமயத்தினருக்கு ஒரு விதியும் இருப்பது நெறிமாறானது; அரசியல் சட்டத்தின் முன் எல்லாரும் சமம் என்னும் பொதுக் கொள்கைக்கு முரணானது. கிறிஸ்துவர்கள் முஸ்லிம்கள் தங்களுடைய மதக் கலாச்சாரங்களைப் பாதுகாத்துக்கொள்வதற்காக நடத்தும் எந்த நிறுவனத்திற்கும் அரசு விதிவிலக்குத் தரலாம்; மான்யங்கள் தரலாம். அதில் ஒன்றும் ஆட்சேபணையில்லை. ஆனால் எல்லாரும் படிக்கக்கூடிய—எல்லாருக்கும் உரிமையான பொதுக் கல்வித் திட்டத்தில் ஏன் பாரபட்சங்கள்? இந்தப் பாரபட்சங்களை உடனடியாக நீக்கவேண்டும். அப்பொழுதுதான் இந்து சமூகத்தைச் சேர்ந்தவர்கள் கல்வி நிறுவனங்களை நடத்த முன்வருவார்கள்.

இந்திய நாடு சமயச் சார்பற்ற நாடு. இந்த நாட்டில் மத நம்பிக்கையுடைவர்கள்கூட, தனிப்பட்ட வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலுமே மதப்பற்றைக் காட்டவேண்டும். நாடு தழுவிய வாழ்க்கையை ஏற்றுக்கொள்ளும்போது, தம் மதத்தவர் அல்லாத மற்ற மதத்தினரிடம் வெறுப்போ, பகையோ காட்டுவது மதச் சார்பற்ற நாட்டின் இலக் கணத்திற்கு மாறாகிவிடும். ஆதலால் எந்த ஒரு மதப் பிரிவினரும் மற்ற மதங்களை இழிவு படுத்துவது மத மாற்றங்களைத் தூண்டுவது ஆகியவற்றைச் செய்யக்கூடாது என்று கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். அப்படி மத நிறுவனங்கள் தம்மைத் தாமே கட்டுப்படுத்திக் கொள்ளத் தவறினால் அரசு மத மாற்றங்கள் அறிவுத் தெளிவின் அடிப் படையில் நிகழத்தக்கனவாகவும் விரும்பத்தகாத வகையில் மத மாற்றம் நிகழ்வதைத் தடுப்பதாகவும் சட்டங்களை இயற்றிக் கட்டுப்படுத்த வேண்டும்.

மத நிறுவனங்களில் இந்து மத நிறுவனங்களின் பொருளாதாரம், வரவு, செலவு ஆகியன மட்டுமே அரசின் கட்டுப்பாட்டுக்குள் வந்திருக்கின்றன. மற்ற மத நிறுவனங்கள் எத்தகையதொரு கட்டுப்பாட்டையும் பெறவில்லை. அதன் காரணமாக அந்த மத நிறுவனங்கள் தங்களுடைய பொருளாதார வசதிகளைப் பல்வேறு வழிகளில் பெறவும் தாம் விரும்பியவாறெல்லாம் செலவு செய்யவும் உரிமை பெற்றுள்ளன. இந்த உரிமைகளே மத மாற்றங்களுக்குப் பெரும் தூண்டுதல்களாக அமைகின்றன. ஆதலால் எல்லா மத நிறுவனங்களுக்கும் ஒத்த ஒரே மாதிரியான சட்டங்களை இயற்றித் தவறுகள் நிகழாதபடி பாதுகாக்கவேண்டும் இங்ஙனம் பல முனைகளில் திட்டமிட்டுச் செயற்பட்டால் தான் மதமாற்றங்களைத் தவிர்க்கலாம்; மக்களையும் காப்பாற்றலாம். நாட்டையும் காப்பாற்றலாம்.

—“மக்கள் சிந்தனை”–1–8–81

## மத மாற்றம்

அண்மைக் காலமாக நமது நாட்டில் மதம்மாறுதல் என்ற ஒரு புதிய சமுதாயச் சிக்கல் தோன்றியிருக்கிறது. இது காலத்துக்குக் காலம் மெல்ல நடைபெற்றுக்கொண்டு வந்திருந்தாலும் ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் ஏற்படும் மனத் தாங்கல்கள், புழுக்கங்கள் அவை தொடர்பான சண்டைகள் இவைகளை மையமாகக் கொண்டு வாய்ப்புழி பலரை ஒரு சேர மதம் மாற்றுதல் என்பது இப்பொழுதுதான் நடைபெற்று வருகிறது. மத அனுபவ அடிப்படையிலும் கூட இது வரவேற்கத்தக்கதல்ல. மதங்கள் வேறுபடுவதற்குக் காரணம் பல்வேறு அனுபவங்களின் வழியில் தானே தவிர வேற்றுமைகளின் பாற்பட்டதல்ல. மதம் என்பது, ஒருவர் உயிரால் அனுபவித்துத் தன்னுடைய ஆன்மிகத் தரத்தை உயர்த்திக் கொள்வதற்குத் துணை செய்கின்ற ஒன்று. அந்த அனுபவத்தின் வழியில் ஒவ்வொருவரும் தன் மதத்தை மாற்றிக்கொள்வதற்கு உரிமை இருக்கவேண்டும். அதில் ஒன்று தடையில்லை. ஆனால், இப்பொழுது நிகழ்கிற மதம்மாறுதல் என்பது அத்தகைய நிகழ்ச்சி அன்று.

இதற்கு ஏதோ ஓர் உந்து சக்தி அல்லது காரணம் இருக்கிறது என்று கருதும் பொழுதுதான் நாட்டுப்பற்றுக்கும் சமுதாயப் பற்றுக்கும் எல்லாவற்றிற்கும் மேலாகப் பல ஆண்டுகளாக நாம் காப்பாற்றி வந்திருக்கிற பரஸ்பர சகிப்புத் தன்மை மதச் சார்பற்ற வெறித்தன்மையின்மை ஆகிய உயர் பண்புகளுக்கும் இடையூறு நிகழுமோ என்று கருதிக் கவலைப்பட வேண்டியதாயிருக்கிறது. இந்தக் கவலைக்குச் சரியான தீர்வு காண்பது நம்முடைய நாட்டின் ஒவ்வொரு குடிமகனின் கடமையாகும்.

பொதுவாக, மதம் மாறுதலுக்கு அதிகமாகச் சொல்லப் படுகிற ஒரு காரணம், சமூகத்திலிருக்கிற தீண்டாமையினால்

சமூகத் தகுதி அல்லது சமூக அந்தஸ்து கிடைக்கவில்லை என்பது. இதில் உண்மை இல்லாமல் போய்விடவில்லை. இந்து சமூகத்தில் இருக்கும் இந்தத் தீண்டாமையை எதிர்த்துத் தொடர்ந்து போராடி வந்திருக்கிறோம். ஆனால் இதைக் காரணமாகக் காட்டுகிற தாழ்த்தப்பட்ட சகோதரர்கள் கடந்த முப்பத்து நான்கு ஆண்டுகளாக இந்தத் துறையில் நாம் அடைந்திருக்கிற முன்னேற்றத்தை அன்புகூர்ந்து கணித்துப் பார்க்கவேண்டும். முப்பத்து நான்கு ஆண்டுகளில் தீண்டாமை ஒழிப்பில் இந்த நாடு மிகப்பெரிய சாதனையைச் செய்திருக்கிறது. அந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் பாராளு மன்றத்தில் சட்டமன்றங்களில் பல்வேறு பொறுப்புக்களில் தகுதிவாய்ந்த பதவிகளில் இன்றைக்கு இருக்கிறார்கள். அவர்களுக்குச் சமூக அந்தஸ்து அல்லது சமூகத் தகுதி அரசியல் நிலையிலும் சமுதாய நிலையிலும் வழங்கப் பெற்றிருக்கிறது; வழங்கப்பெற்றிருக்கிற உரிமைகள் போத வில்லையென்று சொன்னால் நியாயம் உண்டு. ஆனால் இதைவிடக் கடுமையான தீண்டாமையில் தொல்லைப்பட்ட காலத்திலெல்லாம் மதம் மாறாமல் இப்பொழுது, ஏதோ தற்செயலாக நிகழ்கின்ற சில சம்பவங்களைக் காரணம் காட்டிச் சமூகத் தகுதி இல்லையென்று சொல்வது ஏற்றுக் கொள்ள தக்கதல்ல என்பது நம்முடைய கருத்து. ஆனாலும் இந்து சமூகத்தைச் சேர்ந்த மேட்டுக் குடியினர் தீண்டாமைய்யை முற்றாக ஒழிக்கவும், இந்து சமூகத்திலிருக்கிற கடை கோடி மனிதனுக்கும் நல்ல வாழ்க்கை நல்ல சமூகத் தகுதி கிடைக்கவும் உத்தரவாதம் அமையும்படி பார்த்துக் கொள்வது நீங்காத கடமையென்றே நாம் கருதுகின்றோம்.

இந்து சமூகம் எவ்வளவு சீக்கிரத்தில் தீண்டாமைக்கும் சாதி வேற்றுமைக்கும் முற்றுப்புள்ளி வைக்கிறதோ அந்த அளவுக்கு அஃது உயிர்ப்போடு ஆர்ப்பரித்து எழும்; புதிய பொலிவோடு விளங்கும் என்பது நம்முடைய நம்பிக்கை.

நம்முடைய நாடு. சமயச் சார்பற்ற அரசு நிலவுகின்ற ஒரு நாடு. அதாவது எந்த ஒரு மதத்தையும் அரசு

சார்ந்திருக்காது என்பது இதன் கொள்கை. அப்படியிருந்தும் ஒவ்வொரு மதத்திற்கும் அல்லது சமயத்திற்கும் அந்தந்தச் சமயத்தைச் சார்ந்த மக்களை வழி நடத்தத் தனித்தனி மதச் சட்டங்களையே நடைமுறைப்படுத்துகிறது. இந்த நடைமுறையின் மூலமாக வாழ்க்கை உரிமைகளில் பலவகை வேறுபாடுகள் இருப்பதும் மதமாற்றத் தூண்டுதலுக்கு ஒரு காரணமாக இருக்கிறது. உண்மையான சமயச் சார்பற்ற அரசுத் தன்மைக்கு இலக்கணமாக எல்லாச் சமயத்தைச் சார்ந்த மக்களுக்கும் வாழ்க்கையில் ஒரே விதமான பாங்கு நிலவும்படி ஒரே விதமான உரிமையில் சட்டத்தைச் செய்வது நல்லதா என்பதை இந்தத் தருணத்தில் அரசியல் தலைவர்கள் எண்ணிப்பார்க்க வேண்டும் என்பது நம்முடைய வேண்டுகோள்.

எல்லாவற்றிற்கும் மேலாக முப்பத்து நான்கு ஆண்டுகள் ஆன பிறகும் கடைகோடியில் வாழும் மக்களுக்குப்போதிய முன்னேற்றம் ஏற்படவில்லை. தீண்டாமையை உயர் சாதியினர்தான் நீக்கவேண்டும் என்பது அண்ணல் காந்தியடிகளின் கொள்கை; காரணம் ஒருவர் அல்லது ஒரு சமூகத்தினர் தங்களுடைய உரிமைகளுக்குத் தாங்களே போராடினால் அது ஒரு விதமான காழ்ப்பாக உருமாற்றம் பெறும் என்பது அண்ணல் காந்தியடிகளின் கருத்து. எனவே, தாழ்த்தப்பட்ட மக்களுடைய உரிமைகளைப் பாதுகாப்பதும் அவர்களை உயர்த்துவதும் உயர் குடியினர் செய்யவேண்டிய பணியென்று வலியுறுத்தினார். ஆனால், அண்மைக் காலமாக நம்முடைய நாட்டின் நடைமுறையில் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் தங்களுக்காகத் தாங்களே போராட வேண்டிய ஒரு நிர்ப்பந்த நிலைக்கு ஆளாக்கப்பட்டு விட்டனர். இஃதொரு பெரிய தீமை.

தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடத்திலும் கூட, தாங்கள் தாழ்த்தப்பட்டவர்களாக நீண்ட நெடுங்காலத்திற்கு இருந்தால்தான் இந்தச் சலுகைகளைப் பெறமுடியும் என்ற

ஒரு பொய்மையான நம்பிக்கை கூடக் கால்கொண்டு வருகிறது. இவைகளை நாம் நீக்கியாகவேண்டும். எனவே குறிப்பிட்ட கால எல்லைக்குள் நம்முடைய இந்து சமூகத்தைச் சேர்ந்த மதத்தலைவர்கள், திருக்கோயிலைச் சார்ந்தவர்கள் தீண்டாமையை முற்றாக நீக்கி, இந்து சமூகத்தைச் சேர்ந்த அனைத்துப் பிரிவினருக்கும் எல்லா உரிமைகளையும் ஒப்ப வழங்குகிற ஒரு புதிய சமுதாயத்தைக் கண்டேயாகவேண்டும். பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு, திருமூலர் கண்ட "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்ற உயரிய கொள்கை நம்முடைய வாழ்க்கையில் சட்டமாக இடம் பெறவேண்டும். அந்த முறையை நாம் என்றைக்கு நடைமுறைப் படுத்துகிறோமோ அன்றைக்குத்தான் மத மாற்றங்கள் நிகழாதிருக்கும். எல்லாவற்றிற்கும் மேலாக இந்து சமூகத்தைப் பொறுத்தவரையில் அது மக்களிடம் சென்று அவர்களை அணைத்து அழைத்து வருகிற செயல் திட்டங்களை இன்றும் ஏற்றுக்கொள்ளாதது பெரிய குறை.

மாணிக்கவாசகருக்கு அருளை வழங்கிய பிறகு, இறைவன் தம்மைப் பின் தொடர்ந்து வந்து பாதுகாப்பதாக மாணிக்கவாசகர் தாம் அருளிச் செய்த திருவாசகத்தில் பாடியுள்ளார்.

"பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய

ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய

தேனினைச் சொரிந்து புறம் புறம் திரிந்த
செல்வமே! சிவபெருமானே!"

என்பது திருவாசகம்.

அது மட்டுமா? வீடுதோறும் சென்று அங்கு வாழ்கின்ற மக்களுக்குத் தொண்டு செய்யவேண்டும் என்ற கருத்தை மாணிக்கவாசகர், “இல்லங்கள் தோறும் எழுந்தருளிச் செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை” என்று அருமையாகப் பாடுகிறார். இந்த இரண்டு பணிகளையும் இந்து சமய நிறுவனங்கள் நடைமுறைப் படுத்தாதது ஒரு பெரிய குறை.

நல்ல நிலமாக இருந்தால்கூட புழங்கி உழாது போனால் காட்டு நிலமாக மாறிவிடுகிறது. அதே போல நம்முடைய மக்களை நாம் அடிக்கடி சந்தித்து, அவர்களை முறைப்படுத்தி வாழ்விப்பது கடமை என்பது நம்முடைய சமய நிறுவனங்கள் அறிந்தாக வேண்டும். நம்முடைய சமயத்துக்கு ஒழுங்கு படுத்தப்பட்ட ஒருமைப்பாடும் தொடர்ந்து மக்களைப் பாதுக்காக்கின்ற தொண்டு நெறியும் உரிமையாக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் மதமாற்றங் கள் முற்றாக நீக்கப்பெறும்.

அதுமட்டுமல்ல நம்முடைய காலத்தில் நம் நாட்டில் நிலவுகின்ற பிற சமயங்கள் சமூக மேலாதிக்கமுடையனவாக வளர்ந்து அவைகளுடைய நெறிமுறைகளைப் பாதுகாத்துக் கொள்கின்றன. ஆனால் நம்முடைய இந்து சமூகத்தின் மீது இந்து சமய நிறுவனங்களுக்கு சமூக மேலாதிக்கம் இல்லை. இப்படியில்லாதது ஒரு காலத்தில் நம்முடைய மதத்துக்கு இருந்த பெருமை என்றுகூட நாம் கருதலாம். நமது சமயம் தோன்றிய காலத்தில் தொன்மைக் காலத்தில் தனித் தன்மைக்காகச் சுதந்தரமான சிந்தனையும் சுதந்தரமான வழிபாடும் வேண்டுமென்பதற்காக நாம் ஒழுங்குபடுத்தப் பட்ட முறைகளை வற்புறுத்தவில்லை; சமூக மேலாதிக்கத்தை யும் நாம் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் இன்றுள்ள நிலையில் நாம் சமூக மேலாதிக்கமுடைய ஒரு சமய அமைப்பை—ஒழுங்குபடுத்தப்பட்ட தொண்டு நெறியுடைய ஒரு சமய அமைப்பை ஏற்றுக்கொண்டால்தான் இதற்கொரு

நிலையான தீர்வு காணமுடியும் என்று நம்புகின்றோம். அதே நேரத்தில் சமயச் சார்பற்ற ஓர் அரசு நிலவுகிற நாட்டில் புறத் தூண்டுதல்கள் மூலமோ வேறு வகையான ஊக்க சக்திகளை வழங்குவதன் மூலமோ மதமாற்றம் செய்வது விரும்பத்தக்க தல்ல. அப்படி மதமாற்றம் செய்ய நாம் அனுமதித்தோ மானால் கடைவீதிச் சண்டைபோல் காலப் போக்கில் இன, சமயச் சண்டைகள் தோன்றி நாட்டில் ஆங்காங்கு அமைதியும் சமூக இணக்கங்களும் கெட்டுப் போகும்.

விருப்பம் உடையவர்கள் குறிப்பிட்ட வயது வந்தபிறகு, தங்களுடைய மத அனுபவத்தின் அடிப்படையில் மதம் மாறிக்கொள்வதை நாம் நிச்சயம் அனுமதிக்கத்தான் வேண்டும். ஆனால் செயற்கை முறையில் ஏதோ ஒரு குறிப் பிட்ட ஆதாயத்திற்காக மதம் மாற்றுகிற முறையைத் தவிர்க்க அரசு ஏதாவது செய்யலாமா? என்பதை இந்தத் தருணத்தில் ஆலோசிக்க வேண்டும். இப்படி நாம் சொல்லுகிற ஆலோசனை ஒரு மதத்திற்குச் சாதகமாகவும் இன்னொரு மதத்திற்குப் பாதமாகவும் இல்லை. இந்து மதத்தினைச் சேர்ந்தவர்கள்கூடப் பிற மதத்திலிருந்து திரும்ப எடுப்பதை அவர்கள் விருப்பம் வந்த பிறகு எடுப்பதுதான் சிறப்பான முறை. இல்லையானால் மத சம்பந்தமான பழக்க வழக் கங்கள் இன்று இந்த மதத்தில், நாளை அந்த மதத்தில், திரும்ப இந்த மதத்தில் என்பதைப் போலக் கேலிக்குரிய பழக்க வழக்கங்களாக மாறிவிடும். எல்லா மதங்களின் தலைவர் களும், சமய ஆசிரியர்களும் மதத்தை இந்த மாதிரி கேலிக்குரியதாக்காமல் இஃது உயர்ந்த வாழ்க்கை முறை; ஒப்புரவோடு வாழவேண்டிய வாழ்க்கை முறை என்பதைக் கவனத்திற்கொண்டு சமய ஒருமைப் பாட்டையும்—சமூக இணக்கங்களையும் உருவாக்கத் துணைசெய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

மதமாற்றம் நிலையானது என்று நாம் கருதவில்லை. ஏதோ இப்போது ஓர் அனற்காற்றுப்போல வீசுகிறது; ஓர்

அலை வீசுகிறது. ஆனால் நிச்சயமாக அது தடுத்து நிறுத்தப்படும். நம்முடைய மக்கள் இங்கே எல்லாவிதமான உரிமைகளையும் பெறுவர் என்ற உத்தரவாதத்தை நாம் தைரியமாகக் கூறிக் கொள்கிறோம். அவர்கள் பிறந்த சமயத்தில் வாழ்ந்து வளர்ந்து எல்லா உரிமைகளும் பெற்று அவர்கள் மகிழவேண்டுமென்பது நம்முடைய வேண்டு கோள். அந்த நல்லெண்ணத்தை அவர்களுக்கு வழங்குமாறு எல்லாவல்ல இறைவனை - வழிபடும் தெய்வத்தை இறைஞ்சுகின்றோம். —"மக்கள் சிந்தனை" 1–11–81

## மதங்களின் இலட்சியம்

*"எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையை*
*இந்தியா உலகிற்கு அளிக்கும்"*

என்பது பாரதியார் வாக்கு. இந்திய நாகரிகம் சமயப் பொறைக்கும், சமயச் சார்பற்ற தன்மைக்கும் அடிப்படை கண்டது. பல நூற்றாண்டுகளுக்கு முன் அவதரித்த மாணிக்கவாசகர்,

*"தென்னா டுடைய சிவனே போற்றி!*
*எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி!"*

என்று அருளினார்.

அண்ணல் காந்தியடிகள் மதச்சார்பற்ற தன்மை யுடைய ஒரு சிறந்த இந்துவாகவே விளங்கினார். இத்தகைய நாட்டில் இன்று பரவலாக மதக் கலவரங்களும் சாதிக்கலவரங்களும் நடப்பது வருத்தத்தைத் தரக்கூடியன. இந்தியாவில் பல மதங்கள் உள்ளன. மொழியும் மதமும் உணர்ச்சியைத் தொடக்கூடியன. எளிதில் கலவரத்தைச் செய்யக்கூடிய உணர்வைத் தூண்டக்கூடியன. இதில் மக்கள் கவனமாக இல்லாதுபோனால் பெரிய கேடுகள் விளையும். நாடு வலிமை இழக்கும்.

"இந்து மதம் மற்ற மதங்களால் அழிக்கப்படும்" என்று நம்புவது–கூறுவது ஏற்றுக்கொள்ள முடியாதது. இந்தியாவை முஸ்லிம்கள் ஆண்டபொழுதும், கிறிஸ்தவர்களாகிய ஆங்கிலேயர்கள் ஆண்டபொழுதும் இந்து மதம் ஏன் அழிய வில்லை? அல்லது அழிக்கப்படவில்லை.

மதச்சார்பற்ற கொள்கை, சுதந்திர இந்தியா எடுத்துக்கொண்ட கொள்கையல்ல. அக்பர் சக்கரவர்த்தியும், விக்டோரியா மகாராணியும் கடைப்பிடித்த கொள்கை என்பதை நினைவு கொள்வது நல்லது. இந்து சமயம், அதனுடைய வலிமையைப் பிற சமயங்களால் இழக்காது; அழியாது. இந்து சமயம் அதனுடைய மக்களிடத்தில் உருவாக்கிவைத்துப் பாதுகாத்து வரும் தீண்டாமை, சாதி வேற்றுமைகளால்தான் உள்ளீடழிந்து வலிமை இழக்கும். இந்து சமயத்தின் உண்மையான தத்துவக் கோட்பாடுகளின் படி நாயன்மார்கள், ஆழ்வார்கள் காட்டியபடி இந்து சமூகம் அமையவில்லை; இயங்கவில்லை. இந்து சமூகத்தில் நிலவிய சாதி வேற்றுமைகள் காரணமாகவும் எத்தனை சமயங்கள் தோன்றியுள்ளன? புத்தமதம், சீக்கியமதம், வீரசைவம் இப்படிப் பலப்பல. இந்தச் சூழ்நிலையில் இந்துக்களை ஒற்றுமைப்படுத்தும் முயற்சி என்ற பெயரில் கிறித்தவ, இசுலாமிய மதங்களோடு சண்டை போடும் அணியைத் தோற்றுவிப்பது எப்படி இந்துக்களை ஒற்றுமைப்படுத்தும்? ஒரோவழி ஒன்றை எதிர்ப்பதில் ஒற்றுமை தோன்றினாலும் அது நிலையான ஒற்றுமையாக- ஆக்க வழியிலான ஒற்றுமையாக அமையாது.

இந்துக்கள் ஒன்றுபடுவது நல்லது. அவசியமும் கூட. ஆனால், மற்ற மதங்களை எதிர்ப்பதற்கு அல்ல. இதனை ஒற்றுமை என்று சொல்லக்கூடாது. இந்து சமூகத்தை ஒழுங்குபடுத்தப்பெற்ற அமைப்பாக மாற்றுவது அவசியம், ஒழுங்குபடுத்தப் பெற்ற அறமனைகள், பணிமனைகள் நமது மக்கள் நலம் கருதி அமைக்கப்படுதல் அவசியம். நமது

சமூகத்தில் புரையோடி வந்துள்ள தீண்டாமையை அறவே நீக்கவேண்டும். சாதி வேற்றுமைகள் முற்றாக அகற்றப்பட வேண்டும். சமூகத்தின் ஏழ்மையும், வறுமையும் அறவே அகற்றப்படவேண்டும். இந்து சமயம் மனித நேயத்தில் தோன்றி வளர்ந்தது. இன்று தேவை, மனிதகுல ஒருமைப் பாடே! அதுவே நாகரிகம்! மனிதகுல ஒருமைப்பாட்டுக்கு எதிராக இயங்கும் "இந்து ஒற்றுமை" அவசியமா? அதுதான் உருவாகுமா? மனித குல ஒருமைப்பாடும், அமைதியும் இன்பமுமே மதங்களின் இலட்சியம்.

—"மக்கள் சிந்தனை" 1–4–82

## கடவுளைப் போற்று மனிதனை நினை!

ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையிலும் இவ்விரண்டு குறிக்கோளும் இருக்கவேண்டும். இவ்விரண்டும் ஒன்றோ டொன்று தொடர்புடையன. கடவுளைப் போற்றும் நெறியின் பயனே மனிதனை மதித்து வளர்ப்பதுதான்! மனிதனை "நடமாடுங் கோயில்" என்று திருமந்திரம் பாராட்டுகிறது. கடவுளைப் போற்றும் நெறி நிற்பவர்கள் மதத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் பண்டைக் காலத்தில் மனிதனையும் மதித்தனர்; வாழ்வித்தனர். ஆனால் மதங்கள் காலப்போக்கில் கெட்டுப்போயின. மதத் தலைவர்கள், புரோகிதர்கள் ஆகியோர் ஆதிக்க வாதிகளாக-சுரண்டும் வர்க்கத்தினராக மாறினார். இந்த நிலை வளர்ந்தது.

"மக்களைவிட மதம் உயர்ந்தது. கடவுளுக்காகவே மக்கள். மதத் தலைவர்கள் மிகமிக உயர்ந்தவர்கள். இவர்களை வணங்குவதும் இவர்களுக்குக் காணிக்கை செலுத்துவதும் புண்ணியம்" என்ற கருத்துக்கள் கால்கொண்டன. இந்த நிலையில் சுரண்டும் இதர வர்க்கங்களும் ஆதிக்க சக்திகளும்

ஒருங்கிணைந்து கொண்டு, உழைப்பாளர்களைத் துன்புறுத்தின. .

இந்தச் சுரண்டலும் ஆதிக்கமும் என்றென்றும் நிலைபெற வேண்டி, மனித குலத்திற்குள் எண்ணத் தொலையாத சாதிப் பிரிவுகளைத் தோற்றுவித்து, அவர்களுக்குள் அழுக்காற்றினை வளர்த்தும் குழுச் சண்டைகளை உருவாக்கியும் இழிபடு வாழ்க்கைக்கு வித்திட்டனர். இதனால் மனித குலத்தில் முக்கால் பங்குக்கு மேல் தாழ்த்தப்பட்டவர்களாக்கப்பட்டனர். இவர்களுக்குத் திருக்கோயில் வழிபாட்டுரிமை இல்லை. கல்வி இல்லை ஏன்? நாகரிகமாக உடுத்துதல்கூடக் கூடாது என்ற தடை. இந்த இழிநிலைமைகளைக் கண்டு மனம் வெம்பிய சில சமய ஞானிகள், இந்தச் சமூகக் கொடுமைகளைக் களைந்து சமயத்தைச் சமுதாயத்திற்காக்க முனைந்தனர். திருமுறைக் காலத்தில் இந்த முயற்சிகள் தோன்றின. பின் வள்ளலார்! அதன் பின் காந்தியடிகள்! அதற்கும் பிறகு தந்தை பெரியார்! இவர்களெல்லாம் தோன்றி, மனித உரிமைக்காகப் போராடினார்கள். ஆனால் மதத்தலைவர்கள் இதற்கெல்லாம் அசைந்து கொடுக்கவில்லை. இதனால் நாடு முழுவதும் இந்து மதத்திலிருந்து வெளியேறிய கடவுள் நம்பிக்கையுடையவர்கள், புது மதங்கள் புதுநெறிகள் கண்டனர். மதத்தின் நடைமுறைகளை-மதத் தலைவர்களின் மனப்போக்கை ஏற்றுக்கொள்ள முடியாதவர்கள் மதத்தைவிட்டு வெறியேறி, நாத்திகர்கள் ஆயினர். இவர்கள் தோன்றி, போராடித்தான் ஆதிதிராவிடர்களுக்கு ஆலய நுழைவுரிமை பெற்றுக் கொடுத்தார்கள்; கடவுட் சிந்தனையாளர்களின் அங்கீகாரத்துடன் அல்ல— சட்ட மன்றங்களின் அங்கீகாரத் துடன்! இந்தச் சூழ்நிலையிலும் ஆதிதிராவிடர்களின் ஆலய நுழைவை இந்துமதத் தலைவர்கள் 'நடமாடும் தெய்வங்கள்' எதிர்த்தார்கள். 'அரிசனங்கள்-ஆதிதிராவிடர்கள் நுழைந்த கோயிலுக்குள்

கடவுள் இல்லை. ஓடிவிட்டார்' என்று கூறிப் பல ஆண்டுகள் ஆதிதிராவிடர்கள் நுழைந்த கோயிலுக்குச் செல்லாத 'பெரியவர்'களை இந்த நாடு மறக்கவில்லை. மறக்கவும் முடியாது. ஆதிதிராவிடர்கள் நுழைந்ததால் மதுரை மீனாட்சி கோயிலிலிருந்து வெளியேறி வந்துவிட்டாள் என்றுகூறி மதுரையில் ஒரு பார்ப்பனர் வீட்டிலேயே மீனாட்சி படத்தை வைத்து வழிபட்டார்கள். இதுமட்டுமா? ஆயிரக்கணக் கானவர்களுக்குக் கல்வியையும் ஞானத்தையும் தந்த கடவுளை நம்புவதாக நடிப்பவர்கள் செய்த கொடுமைகள் கொஞ்சமா? கடவுளை நம்புவதாக நடிப்பு? கடவுள் எல்லோருக்கும் வைத்த ஞானத்தை, இந்த மனிதப் புரோகிதர்கள் - நடமாடுந் தெய்வங்கள் - மண்ணுலகக் கடவுளர்கள் நாட்டுத் தேவர்கள் தட்டிப் பறித்த கொடுமையை எடுத்துக் கூற வார்த்தைகள் ஏது? சுதந்திர அரசாங்கம் வந்தே கல்வி கிடைத்தது. வேலை வாய்ப்பு உண்டா? வேலைவாய்ப்பெல்லாம் மேட்டுக் குடியினரின் ஏகபோகமாக இருந்தது. அண்ணல் காந்தியடிகளும் அம்பேத்காரும் தந்தை பெரியாரும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ கொள்கைப் போராட்டத்தின் வழியாக வந்த பலன் தானே இன்று, தாழ்த்தப்பட்ட மக்கள்- பிற்படுத்தப் பட்ட மக்கள் அனுபவிக்கும் பட்டம், பதவிகள்!

"கடவுள் உலகிற்குப் பொதுவானவர்; உலகிற்கு அம்மையப்பர் அன்பே வடிவமாக இருப்பவர்"-என்றெல் லாம் பஜனை செய்யும் மதத் தலைவர்கள்—உபதேசிகள் ஏன் இந்த உரிமைகளை மதத்தின் பெயரால் மக்களுக்கு வழங்க வில்லை? இந்த ஏமாற்றுகள்தாமே அல்லது நீதிப் பிறழ்வுகள் தாமே சமுதாயத்தின் ஒரு பகுதியில் கடவுள் இருந்தால் இந்தச் சதிகள் நடக்குமா? என்ற கேள்விக்கு, இடம் தந்தன! சமயத் தலைவர்கள் விடை தந்திருந்தால் திராவிடர் கழகம் நாத்திக இயக்கமாக வளர்ந்திருக்காது. இந்த நாட்டில் கிறிஸ்துவ மதம், இஸ்லாமிய மதம் இடம் பெற்றிருக்காது.

இது இந்து நாடாகவே இருந்திருக்கும். யார் வெளியே போனாலும் கவலைப்படாது. திருக்கோயில் மடப்பள்ளி களை உரிமை கொண்டிருந்தவர்கள் மடங்களின் சொத்து சுகபோகங்களை அனுபவித்தவர்கள் "வழக்கம்போல்" தலைவிதி என்று கூறி வாளா இருந்தனர். இன்று மக்களாட்சி அரசு மதத்துவம் மேம்பட்டதாக இடம் பெற்றுவிட்டது. மடாதிபதிகளை, இல்லை நடமாடும் தெய்வங்களை, மண்ணகத்தில் விளங்கும் கடவுளர்களை விளக்கம் கேட்கும் அளவுக்கு அரசு மேலாதிக்கம் செலுத்துகிறது. இந்தச் சூழ்நிலையில் மதத் தலைவர்கள் நடமாடுகிறவர்களானபின் மக்களை நாடுகின்றனர். பச்சை நிர்வாண விளம்பர அதிகார வேட்டையாடுகின்றனர். கடவுளைப் போற்றியவர்கள் மனிதனை நினைக்க மறந்ததால், மனிதனை நினைக்கத் தொடங்கியவர்கள் கடவுளைப் போற்ற மறுக்கின்றனர். இதில் எந்த அணி நல்லது? நம்மைப் பொறுத்தவரை இரண்டு அணியும் ஒன்றாதலே நல்லது. இரண்டும் ஒன்றாகா போலும்! நமக்கு இரு அணிகளும் வேண்டியவைகளே! ஏன்? இரண்டையும் ஆதரிக்காது போனால் வாழ்க்கையில் ஒரு பாதிதான் நடக்கும். இங்கே மனிதர்களை நினைக்காதவர்கள் உண்மையில் கடவுளைப் போற்றுபவர்கள்தாமா? கடவுள் தத்துவம் மனிதனை மறக்கச் சொல்கிறதா? மனிதனைத் தீண்டாமையிலும் வறுமையிலும் ஆழ்த்தி அழிக்கவா சொல்கிறது மதம்? இல்லை; இல்லவே இல்லை. கடவுளைப் போற்றுபவர்கள் மனிதனை மதித்து உயர்த்தத் தவறினாலும் ஒரு வகையில் நாத்திகர்களே, ஏன்? அவர்கள் கடவுள் சித்தத்தையே மதிக்காதவர்கள்! கடவுளை நம்பாதவர்கள். கடவுளை மறந்து விட்டு கடவுள் தன்மையைப் பெற்ற மனிதனை மதிக்கிறார்கள், போற்றுகிறார்கள். இந்த இரண்டிலும் நாத்திகத்தன்மை இருக்கிறது. இரண்டு அணிகளும் இணைதல் ஆத்திகம்! அதுவே நமது கொள்கை!

—'மக்கள் சிந்தனை' 15–6–82

கு.XII.15.

# மத வளர்ச்சி

இந்திய நாட்டில் உள்ள மதங்களுக்கிடையில் வளர்ச்சிப் போட்டிகள் ஏற்பட்டுள்ளன. நலம் நிறைந்த போட்டிகள் வரவேற்கத் தக்கனவே! ஆனால் நமது நாட்டில் நிலவும் போட்டிகள் நிறைநலமுள்ள போட்டிகள் அல்ல என்று மதமாற்றங்கள், மண்டைக்காடு கலவரம், மீனாட்சி புரம் கலவரம், இராமநாதபுரம் கலவரம் ஆகியன கூறு கின்றன.

## மதங்களின் வரலாறு

மனிதன் சிந்திக்கத் தொடங்கிய உடனேயே தோன்றியது கடவுள் நம்பிக்கை. கடவுள் நம்பிக்கை தோன்றிப் பலநூறு ஆண்டுகள் வளர்ந்த பிறகே கடவுள் நம்பிக்கை அடிப்படையில் மதங்கள் தோன்றின; மதத் தலைவர்களும் புரோகிதர்களும் தோன்றினர். மத நிறுவனங்கள், சொத்துக்களும் அதிகாரமும் உடைய நிறுவனங்களாக வளர்ந்து சமுதாயத்தில் நிலையான இடத்தைப் பெற்றன. காலப்போக்கில் மதத் தலைவர்களின் ஆதிக்கமும் சுரண்டல் தன்மையும் மக்களிடத்தில் வெறுப்பை வளர்த்தன. இந்தச் சூழ்நிலையில்தான் அரசுகள் தோன்றுகின்றன. தொடக்கக் காலத்தில் மதத் தலைவர்கள் அரசியல் அதிகாரங்களையும் தம்மிடமே வைத்திருந்தனர். பின் சமுதாயத் தலைவர்கள் தோன்றி மதத் தலைவர் களிடமிருந்து விடுதலைபெற அரசியல் ஆதிபத்தியத்தைப் பெற முயன்றனர். சிலகாலம் மதத் தலைவர்களும் அரசியல் தலைவர்களும் கூட்டாக ஆட்சி செய்தனர்.

## மத ஆதிக்கச் சண்டைகள்

இந்த நெடிய வரலாற்றுப் போக்கில் மதங்களிடையில் ஏற்பட்ட ஆதிபத்தியச் சண்டைகள் மனிதகுல வரலாற்றுக்கு

இழைத்த தீங்குகள் எழுதிக்காட்ட முயாதவை. இங்கிலாந்து வரலாற்றில் ரோசாப்பூச் சண்டைகளும் இந்திய நாட்டில் முஸ்லீம் படையெடுப்புக்களின்போது இந்துக் கோயில்கள் இடிபட்டமையும் தமிழ்நாட்டில் சைவ-சமணச் சண்டைகளும் எடுத்துக்காட்டுக்கள். இவையெல்லாம் மதச் சண்டைகள் என்று கூறப்பட்டாலும் உண்மையில் மதத்துக்காக மதத்தின் நலத்துக்காக ஏற்பட்ட சண்டைகள் அல்ல! ஆதிக்கத்தின்பாற்பட்ட போட்டிகளும் சண்டைகளுமேயாம்; சைவ சமய நாயன்மார்கள் சமணத்தை எதிர்த்துச் சண்டை போட்டிருந்தால் சமணம் பிறந்த நாள் தொட்டே சண்டை போட்டிருக்கவேண்டும். அதுவல்ல நோக்கம்; அப்பரடிகள் சமண சமயத்திற்கு மாறிச் செல்லும் அளவிற்குச் சமணம் வளர்ந்திருந்தது. எப்போது சண்டைகள் மூண்டன? பல்லவ-பாண்டிய "அரசுகளைச் சமண சமயம் கைப்பற்றிக் கொண்டு தனிமனித சுதந்திரத்தில் தலையிடும் அளவுக்குச் சென்றபின்தான் சமணத்தை எதிர்த்தது சைவம். எது எப்படியாயினும் மதத்தின் பெயரால் நடந்த படுகளப் போர்கள், பெருக்கெடுத்த இரத்த ஆறுகள் இவைகளை வரலாற்று ஏடுகளிலிருந்து மறைக்க முடியாது. அதனால்தான் வள்ளலார் "மதமானபேய் பிடியாதிருக்கவேண்டும்" என்றார். மதங்களைக் கடந்த பொது "நெறி கண்டார். அதுவே சன்மார்க்கம்.

## இன்று நடைபெறுவது என்ன?

இன்று நாட்டில் நடைபெறும் மதப்போட்டிகள் மதங்களை அனுட்டானங்களாக மாற்றும் போட்டிகள் அல்ல. ஆன்ம ஞானத் தவத்தின் பாற்பட்ட போட்டிகளும் அல்ல. யார் பெரியார்? யாருடைய மதத்துக்குச் செல்வாக்கு அதிகம்? எந்த மதம் இந்தியாவை ஆளுவது? என்ற வினாக்களுக்கு விடை காணும்போட்டிகளே நடைபெறுகின்றன. இவை ஒருபொழுதும் மதத்தை வளர்க்கப் பயன்படா. மத

அமைப்புகள் வேண்டுமானரல் வளரலாம். ஆனால் மதம் வரளாது. கோயில்கள் உயரலாம், ஆனால் கடவுள் அங்கு வரமாட்டார். இதனால் மனித குலத்துக்கு என்ன பயன்?

மதங்களை அனுட்டானத்துக்குக் கொண்டு வருபவர்கள் மதங்களை அனுபவநிலையில் காண்பவர்கள். மதங்களைப் பற்றிய விவாதங்களில் (சர்ச்சைகளில்) ஈடபடமாட்டார்கள்; ஈடுபட நேரமிருக்காது. இன்று நடைபெறுவதெல்லாம் மதங்களைப்பற்றிய சர்ச்சைகளே! யாரும் தம் மதத்தில் கொள்கைகளைக் கோட்பாடுகளை எடுத்துச் சொல்வதில்லை. மற்ற மதங்களை விமர்சனம் செய்து எரிவும் வெறியும் ஊட்டுவதிலேயே ஈடுபடுகின்றனர். இந்தச் செயல்முறை நாத்திகத்தை விடக் கொடுமையானது.

## ஏன் இந்த விநோதம்?

இந்தியாவில் உள்ள முக்கிய மதங்கள் மூன்று. அவை இந்து மதம், கிறித்துவ மதம், இசுலாமிய மதம். இந்த மதங்கள் மூன்றுமே அடிப்படையில் வேறுபாடுடையன அல்ல. மூன்றுக்குமே கடவுள் நம்பிக்கை உண்டு; அனுட்டானங் களில் தான் வேறுபாடு. கடவுளை நம்புகிற மதத்திற்கும் கடவுளை நம்பாத புத்த மதத்திற்கும் சண்டையில்லை. ஏன் இந்த விநோதம்? "கடவுளை நம்புதல்—கடவுளை நம்பாமை" மட்டுமே மதம் அல்ல. திராவிடர் கழகத்தினர் பொது வுடைமைக் கட்சியினர் மட்டுமே கடவுளை நம்பாதவர்கள் அல்லர். புத்த மதத்தினருக்கும் கடவுள் நம்பிக்கை இல்லை. ஆனால் இந்துமத ஆர்வலர்கள் புத்த மதத்தை எதிர்ப்ப தில்லை. ஏன்? திராவிடர் கழகம் சாதி ஆதிக்கங்களை எதிப்பதைப்போரல் புத்தமதம் எதிர்ப்பதில்லை. பொதுவுடைமைக் கொள்கையினர் சுரண்டலை எதிர்ப்பதைப்போல புத்தமதம் எதிர்ப்பதில்லை. அதனால் ஆதிக்கம் என்ற பேரில் சாதிகளையும் சுரண்டலையும் வளர்ப்பவர்கள் திராவிடர் கழகத்தையும் பொதுவுடைமைக்

கொள்கையையும் எதிர்க்கின்றனர். "ஒன்றே குலம்" என்ற திருமந்திரத்தில் நம்பிக்கை இல்லை. ஆதீனத் தலைவர் களிலிருந்து பீடாதிபதிகள்வரை, அர்ச்சகரிலிருந்து பரிசாரகம் வரை சாதிமுறைகளே இடம்பெறுகின்றன. மேலாதிக்கம் பெற்றுள்ள சாதிகளே ஏகபோக உரிமைகள் கொண்டாடு கின்றன; அனுபவிக்கின்றன.

இந்தச் சாதி ஆதிக்கத்தை எதிர்க்கின்றனர் திராவிட கழகத்தினர். எல்லா மதங்களிலேயும் கோடீசுவரருக்கு மரியாதை மிகுதியும் உண்டு. ஏழைகளுக்கு மிச்சம் "இரக்கம்" தான். மதத்தலைவர்களுக்குப் பக்கத்தில் நிற்கும் தகுதி, பொன்னாடைகள், ஆசீர்வாதங்கள் எல்லாம் சுரண்டல் வர்க்கத்தைச் சேர்ந்த செல்வந்தர்களுக்குத்தான். இதனால் திராவிடர் கழகத்தினரை எதிர்க்கின்றனர்; பொதுவுடைமை வாதிகளை எதிர்க்கின்றனர்.

## மதங்களின் நோக்கம்!

மதங்களின் தோற்றம் மனித குலத்தை வளர்த்து வாழ்வித்து இன்ப அன்பில் திளைக்க வைப்பதுதான். கடவுள் நம்பிக்கையின் ஒரே இலட்சியம் மனித குலத்தை ஒன்றுபடுத்தி எல்லாரையும் சமநிலையில் வாழவைப்பது தான்! அதனால்தான் கடவுளை உயிர்க் குலத்திற்குத் தாய்-தந்தை என்று உருவகம் செய்து காட்டினர்; கற்பித்துத் தந்தனர். இன்றைய மத அமைப்புக்கள் இந்தப் பாடத்தை மறந்துவிட்டன போலும்!

## மதவளர்ச்சிக்குரிய பணிகள்

சாதி வேற்றுமைகள், இன ஒதுக்கல்கள் என்ற தீமை உள்ளவரை மதங்கள் வளரா. அதுபோலவே மனிதகுலத்தை வறுமையும் ஏழ்மையும் வருந்தும்வரையில் மதங்கள் வளரா. மனித குலம் அறியாமையில் கிடந்து உழலும்வரையில் மதங்கள் வளரா. ஆதலால் ஒரு மதத்துக்குப் பகை பிறிதொரு

மதம் அல்ல. திராவிடர் கழகத்தினரும் பொதுவுடைமை இயக்கத்தினரும்கூட எதிரிகளாகமாட்டார்கள். மதங்களின் வளர்ச்சியைக் கெடுக்கும் களைகளாகிய சாதிகுல வேற்றுமைப் பிரிவுகள், இன ஒதுக்கல் கொள்கைகள், உடையார்-இல்லார் என்ற வேற்றுமைகள் இவைகளை எதிர்த்து மதங்கள் போராடுவதே மதப்பற்றாகும்! வறுமை-ஏழ்மையிலிருந்து மீட்கப் போராடுவதே மதவளர்ச்சிக்குரிய பணியாகும். இந்தியா முழுவதும் பரவலாக உள்ள மதத் தலைவர்கள் மதப் புரோகிதர்கள், சந்நியாசிகள், மத போதகர்கள் மதப் பிரசாரகர்கள் இத்தகைய பணிகளில் ஈடுபட்டால் இந்தியா வளர்ந்துவிடும்! ஆனால், மனம் வரவேண்டுமே!

—'மக்கள் சிந்தனை' 15–2–83

## இந்திய சமயங்களின் மையம்

இந்திய நாடு சமயச் சார்பற்ற நாடு. அதே போழ்தில் பல்வேறு சமயங்களைச் சேர்ந்த மக்கள் வாழும் நாடு. இந்திய நாகரிகத்தில் விழுமியது வேற்றுமையில் ஒற்றுமை காண்பது என்பது. இத்தகைய சிறந்த நாகரிகம் உலகில் வேறு எங்கும் இருந்ததில்லை. ஆனால் இது பழைய வரலாறு. இன்று இந்தியாமொழி, இனம், சாதி, சமயங்களால் அலைக்கழிவு செய்யப்படுகின்றது. படித்தவர்கள் என்று நம்பப்படு கிறவர்கள்கூட இந்த நிலைக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர். திருவள்ளுவர், திருவருட் பிரகாச வள்ளலார் ஆகிய அருளாளர்கள் ஒருமைப்பாட்டினைத் தவம்போல ஏற்று இனிய அருள் மொழிகளைத் தந்துள்ளனர். இன்று அவர்களைப் பின்பற்றுவோரில் கூட பலர் இந்தப் பேரபாயத்தில் சிக்கியுள்ளனர். இஃது இந்திய நாட்டுக்கு நல்லதல்ல. சாதிமதச் சண்டைகளைத் தவிர்த்து இந்திய ஒருமைப்பாட்டை வளர்த்து இந்தியாவை வலிமைப்படுத்த வேண்டும். இஃது உடனடியாகச் செய்யவேண்டிய கடமை.

இந்திய அரசு இந்திய மக்களின் ஒருங்கிணைப்பு மையம் ஒன்றைக் காணவேண்டும். அம் மையத்தின் தலைவராகப் பிரதமர் இருக்கவேண்டும்.

இம்மையத்தில் இந்தியாவிலுள்ள பல்வேறு மதங்களின் தலைவர்கள், அறிஞர்கள், மத நிறுவனங்களின் பேராளர்கள் உறுப்பினர்களாக இடம்பெறுதல் வேண்டும். இந்த மையம் மதங்களுக்கிடையில் நல்லிணக்கத்தை வளர்க்கத் திட்ட மிட்டுப் பணிகளை மேற்கொள்ள வேண்டும். பல்வேறு மதங்களைச் சேர்ந்த மக்களிடையில் எழும் பிரச்சனை களுக்கு நட்புறவு அடிப்படையில் தீர்வு காணவேண்டும். இத்தகைய முயற்சி நல்ல பலனைத்தரும். மதப் பிரச்சாரப் பணிகளில் ஈடுபடும் அமைப்புக்கள் — இயக்கங்களுக்கு இம்மையம் விதிமுறை ஏற்பளிக்கவேண்டும். இம்மையத்தால் முறையாக ஏற்பளிக்கப்பெறாத எந்த ஒரு சமய நிறுவனமும், அமைப்பும் இயக்கமும் முறையானது அல்ல என்று அறிவிப்பதோடன்றி, சட்டப்படியும் நடவடிக்கை எடுக்கவேண்டும். தத்துவ ஞானத்தினால் ஏற்படும் மத மாற்றங்களைத் தவறு என்று சொல்லமுடியாது. ஆனால் இன்று மத மாற்றம் ஆள்பிடிப்பதற்காக நடைபெறுகிறது. இது தவறு. இந்த மதமாற்ற முறையை அனைத்து மதங்களைச் சார்ந்தவர்களும் உடனடியாகக் கைவிடுவது நல்லது. அவசியமும்கூட. முறையான மத மாற்றங்களுக்கு விதி முறைகள் இயற்றி நடைமுறைப்படுத்தவேண்டும்.

இந்தியா மதச் சார்பற்ற நாடு. ஆனால் இந்திய மக்கள் மதச்சார்பு உடையவர்கள். அவர்களுடைய வாழ்க்கைமுறை மதச்சார்புடையது என்பது முரண்பட்ட நிலை. ஒவ்வொரு இந்தியனும் மதச்சார்பற்றவனாக வாழ்தல் வேண்டும். மதச் சார்பற்ற தன்மை என்பது– மதம் இல்லாத வாழ்க்கையல்ல. மற்ற மதங்களையும் மதிப்போடு போற்றுதல் என்பதே மதச் சார்பற்ற தன்மைக்கு விளக்கம். இன்று இந்தியாவில் நடப்பதென்ன? மதத்தின் வழிப்பட்ட சட்டங்கள்– அரசியல்

சட்டத்தைவிடச் செல்வாக்குடையவனாக விளங்குகின்றன. இதைத் தவிர்க்கவேண்டும். "மதம் என்பது தனிப்பட்ட ஒருவனுடைய வாழ்க்கை சம்பந்தமுடையது. மதத்திற்கு சமூகத்திலும் — நாட்டிலும் என்ன வேலை" என்று காந்தியடிகள் கேட்டார். ஆதலால் இந்திய மக்களின் வாழ்க்கை முறைகளை முறைப்படுத்த இந்தியச் சட்டமே போதும். மற்றபடி மதத்தின் பெயரால் உள்ள சட்டங்கள் அவசியமா? இந்திய அரசியல் சட்டம் வழங்குகின்ற இந்தியக் குடிமக்கள் அனைவரும் சமம் என்ற கொள்கையை இந்த மதச் சட்டங்கள் கொடுத்துவிடுகின்றன. இந்திய மக்கள் இந்திய அரசியல் சட்டம் ஒன்றுக்கு விசுவாசம் உடையவர்களாகவும் கட்டுப்பட்டவர்களாகவும் வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். இத்தகைய பணிகளைச் செய்ய 'இந்திய சமயங்களின் மையம்' பயன்படும். இது காலத்தின் தேவை. நடுவண் அரசு செய்யுமா? —'மக்கள் சிந்தனை'—15–5–83

## மனிதவள மேம்பாட்டிற்கு ஆன்மிகம்

மனிதவளம்! ஆம்—இந்த உலகில் ஈடும் இணையும் இல்லாத வளம் மனிதவளமே! ஆம் மனிதவளம் படைப்பாற்றல் உடையது. இயக்கத் தன்மை உடையது! ஆளுமை உடையது; ஆயினும், ஏன்? இன்று நமது நாட்டில்—மனிதம் என்பதும் ஒரு வளமாகத் தோன்றவில்லை. ஏன் மனிதனேகூடத் தன்னைவிட தனது ஆற்றலைவிட, மனித சமூகத்தைவிடப் பணத்தையே பெரிதெனக் கருதும் புன்மையைக் காண்கிறோம்; இந்தப் புன்மையிலிருந்து மனிதத்தை மீட்டுத் தன்னுடைய வளத்தை—ஆற்றலை உணரச் செய்வதே கருத்தரங்கின் நோக்கம்.

மனித வளத்தை உயிரியல், இயற்பியல் என்று அறிவியல் மரபியல்—ஆராய்கிறார்கள். இயற்பியலில்

உயிர்களின் தோற்றம் இயக்கம் முதலியன பற்றியே ஆராய்கிறார்கள். இயற்பியல் ஆய்வு அளவுடன் மனித உயிரியல் நின்றுவிடுவதில்லை; மனிதம் ஓர் அறிவுப் பொருள்; உணர்வுப் பொருள். ஆம் 'ஆன்மா' என்பது உயிர் என்ற தமிழ்ச் சொல்லுக்கு உரிய வடமொழிச் சொல். ஆன்மிகம்—ஆன்மாவின் தரம்—பண்பு என்பது பொருள். இந்த உலக இயக்கம் ஐம்பூதங்கள் வழி இயங்குகிறது; இயக்கப்படுகிறது. இது அறிவியல் உண்மை. ஆனால் இந்த இயக்கம் இடையீடின்றித் தொடர்ச்சியாக இயங்கவும் நிலைபெறவும் பண்பாடு காரணமாக அமைகிறது. 'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்' என்று திருக்குறள் கூறும். ஆன்மிகம் என்பது ஆன்மாவை—உயிரை சால்பின் பண்பில் வளர்த்தல் என்பது. கடவுள் உயர்வற உயர்ந்த நலமாகும். கடவுள் குறைவிலா நிறைவு; கோதிலா அமுது! கடவுள் நன்றுடையான்; இன்பமுடையான்; ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த அன்பு; இன்ப அன்பு; கடவுள் உண்மை; வாலறிவு; கடவுள் இறவாத இன்ப அன்பு. இத்தகு இயல்புகள் மிக்குடைய கடவுட் பொருளோடு உறவு ஏற்படுத்திக் கொள்ளுதல் ஆன்மிகம். அந்தக் கடவுள் இயல்புகளைச் சால்புகளைத் தமக்கு உரிமையாக்கிக் கொள்ளும் செயல்முறை வழிபாடு.

ஆன்மா பிழைத்தல் கூடாது; வாழ்தல் வேண்டும். இன்று மனிதர்கள் வாழவில்லை. "வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே!" என்பார் மாணிக்கவாசகர். வாழ்தலே மனித வளத்தின் அடையாளம். மனிதவளம் பொறிகளில் மட்டும் அமைந்தது அன்று; புலன்களில் அமைந்து பொறிகள் வாயிலாக இயங்குவது. புலன்கள் அறிவுக் கருவிகள். இப்புலன்களில் மிகச் சிறந்த சிந்தனை எதனைச் சார்ந்திருக் கிறதோ அதனைச் சார்ந்து வாழ்வு அமைகிறது. சிந்தனை பொறிகளின் ஆற்றலுக்கடங்கி விடுமாயின் ஆன்மா வாழ்வை இழக்கிறது. மாந்தரில் பலர் உண்பர். உறங்குவர். இனவிருத்தி

செய்வர். இத்தகையோர் ஆன்மாவை இழந்து இழிபிறவி களாகி அழிவர். சித்தம் ஆன்மாவின் ஆளுகையிலும் ஆன்மா இறைவனின் ஆளுகையிலும் அடங்கி இருப்பின் வாழ்வு சிறக்கும். ஆன்மா வளரும்; ஆன்மாவின் தரம் உயரும். இத்தகு வாழ்வே வாழ்வாங்கு வாழ்தல்.

ஆன்மாவிற்கு வாய்த்த அகநிலை அறிவுக் கருவிகள் மனம், புத்தி, சித்தம் அகங்காரம் ஆகியன. இவற்றுள் இன்று பலர் மனத்தை மட்டுமே அறிந்துள்ளனர்; மனம் பற்றி மட்டுமே பேசுகின்றனர். மனம் என்பது ஒரு சாதாரணக் கருவியேயாம். மனம் செய்திகளை எளிதில் பற்றிக் கொள்ளும் தன்மையது. ஆனால் எதைப் பற்றலாம்? எதைப்பற்றக் கூடாது? என்ற அறிவு ஆன்மாவுக்கு இல்லை. மனம் எதையும் பற்றும்; மனத்தினாலேயே பலர் வாழ்க்கை பாழ்படுகிறது. அதனாலேயே தமிழ் மூதாட்டி 'மனம் போன போக்கெல்லாம் போகவேண்டாம்' என்றார். மனம் பற்றும் செய்திகளை, புத்தியினிடத்தில் ஒப்படைத்து நன்று—தீது கண்டறிந்து ஏற்பது புத்தி; புத்தியாலும் கண்டறிய இயலாத செய்திகளைச் சித்தம் ஆய்வு செய்து ஏற்றுக்கொள்ளும். சித்தம் செய்த முடிவைச் செயற்படுத்துதல் அகங்காரமாகும். இதுவே ஆன்மாவின் இயக்கமுறை. மனதை மட்டும் மையமாகக் கொண்டு வாழும் மாந்தார்கள், புத்தியைப் பயன்படுத்திவாழ்வார்கள். சித்தத்தைப் பயன்படுத்தி வாழ்பவர்கள் வளர்ந்தவர்கள்-உயர்ந்தவர்கள். சித்தத்தைத் தமது ஆளுகையில் வைத்துக் கடவுளின் ஆளுகைக்குக் கட்டுப்பட்டு வாழ்பவர்கள் வளர்ந்த மனிதர்கள்; உயர்ந்தவர்கள்; பெருந்தகையாளர்கள்.

ஆன்மிகப் பண்புகள் இயல்பாகவே வாரா. ஆன்மிகம் ஒரு சிறந்த அறிவியல்; ஆன்மிகத்தின் முதற்படி தன்னையறிதல். அதாவது தனது குறை நிறைகளை அறிதல்; பெற்றிருப்பதும் பெறாததும் அறிதல்; பெறத்தக்கனவற்றை அறிந்து, அடைய-பெற முயற்சி செய்தல். ஆன்மிகம்

கடவுளைச் சார்ந்தது என்பது உண்மை. ஆனால் ஆன்மிகம் கடவுளைச் சார்ந்தது என்றால் கடவுளை மட்டுமே சார்ந்தது என்று கொள்ளுதல் கூடாது. ஆன்மாவின் முயற்சிகளே வாழ்விற்குப் பெரிய துணை. கடவுள் தனித் துணையேயாம்.

இயற்பியல் வேதியியல்கூட காலத்தில் நிகழாத போது மாற்றங்கள் ஏற்படுவதில்லை. அதுபோல ஆன்மிகத்திலும் காலத்தில் நிகழும்போது ஆன்மா வளர்கிறது—வாழ்கிறது—உயர்கிறது. ஆன்மிகம் என்றால் வெறும் சடங்குகள் தோத்திரங்கள் என்று பொருள் கொள்ளுதல் கூடாது. இன்று கடவுளை மையமாகக் கொண்டு நடத்தப்பெறும் சடங்குகள் பயனற்றவை; ஆன்மாக்கள் கடவுளை எண்ணுதல் வேண்டும்; சிந்தனை செய்யவேண்டும். கடவுட் பண்புகளைச் சார்ந்து வாழ்தல் வேண்டும்; இதுவே ஆன்மிகம்.

வேளாண்மையில், பயிர் செய்தலைவிடக் களை எடுத்தலும் பயிர்ப் பாதுகாப்பும் இன்றியமையாதன. அது போல ஆன்மிகத்தில் வேளாண்மை என்பது கடவுளும் ஆன்மாவும் ஒன்றோடொன்று கலந்து செய்யும் ஞானவேள்வி யாகும். இந்த வேள்விக்குப் பாதுகாப்பே பத்திமையும், அன்பும், தொண்டுமாகும். ஆன்மிக வாழ்க்கையின் பயன் ஞானமேயாகும். "ஞானத்தால் அன்றி வீடு பேறில்லை" என்பது மெய்கண்ட சித்தாந்தம். ஞானம் என்பது பேரறிவு. அதாவது அறியாமைக் கலப்பிலாத அறிவு. இந்த அறிவை ஆன்மா பெறுதலும் இந்த அறிவின் பயானாகிய இன்ப அன்பில் திளைப்பதுமே வாழ்க்கையின் குறிக்கோள்.

ஆன்மாக்கள் இந்த உயர்ந்த குறிக்கோளை அடைய உள்ள வாயில்களில் ஒன்று பத்திமை. ஆன்மாவை—உயிரை இயல்பாயமைந்துள்ள கடினப் போக்கை நெகிழ்விக்கும். ஆன்மாவுக்கும் கடவுளுக்கும் உள்ள இடைவெளியை குறைக்கும். பத்திமை ஒரு செயலூக்கி.

அன்பு ஆற்றல் மிக்கது. உடலும் உடலைச் சார்ந்துமே (அறிவியலைச் சாராமல் உடலை மட்டுமே சார்ந்தது) வாழ்கிறவர்கள் தன்னலமிக்குடையவர்களாக இருப்பார்கள். இவர்களுக்கு அன்பு செய்யத் தெரியாது. தியாகம் என்பதும் தொண்டு என்பதும் இவர்கள் வாழ்க்கையில் இருக்காது. ஆன்மாவைச் சார்ந்து வாழ்பவர்கள் சற்று வளர்ந்தவர்கள். இவர்களிடம் தன்னலம் கட்டுப்பாட்டிற்குள் அடங்குவதாக இருக்கும். ஏன் நல்லவர்களாகக் கூட இருப்பர்; ஆனாலும் அதிகாரப் பசி இருக்கும்; இவர்களும் மற்றவர்களிடம் அன்பு காட்டுவார்கள். ஆனால் இவர்களை அடக்கியாளவே—அதாவது தற்சார்புடன் கூடிய—அன்பு காட்டுவர். இது பயன் அற்றது; விளைந்த அன்பும் அல்ல. கடவுளைச் சார்ந்து கடவுளின் ஆளுமைக்குக் கட்டுப்பட்டு வாழ்தல் அன்பின் களம்; ஞான வேள்வி. இத்தகையோர் தமக்கென முயலார்; பிறருக்கெனவே முயற்சிகள் செய்து உழைக்கும் நோன்புடைய வர்கள். இந்த வாழ்வு புகழ் இயல் வாழ்வு; தவம் நிறைந்த வாழ்வுமாகும்.

“இலர் பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர் பலர் நோலா தவர்”

—என்னும் திருக்குறள் நினைவு கூரத்தக்கது.

ஆன்மிகத்தில் வளர்ந்தவர்கள் கடவுளின் ஆளுகைக்கு அடங்குவர்; கடவுளின் சிறந்த இயல்புகளைப் பெற்று வாழ்க்கையில் காட்டுவர்; உயிர்க் குலத்தை நேசிப்பர்; வாழ்வித்து வாழ்வர். இந்த ஆன்மிகம் இந்தியாவின் வழிவழி வளம்; உடைமை.

இவற்றைப் பேணிக் காப்பதிலேயே நமது எதிர் காலத்தின் சிறப்பு அமைந்திருக்கிறது.

# செழுந்தமிழ் வாக்கு!*

மானுடம் முழுமை பெறுவதற்குச் சமயம் இன்றியமையாத தேவை. மானுடத்தின் வெற்றி, உலகியலை யும் உடலியலையும் மட்டும் சார்ந்திருக்கவில்லை. மானுடத் தின் வெற்றி, ஆன்மாவின் தரத்தையே சார்ந்திருக்கிறது. ஆன்மாவின் வளர்ச்சிக்கு - ஆன்மா முழுமை பெறுவதற்கு அறிவு தேவை. அறிவின் முதிர்ச்சியே சமயம். மானிடன் முதிர்ச்சியடைய—முழுமையடைய இந்த உலகியல் வாழ்க்கை யும், உடலியல் வாழ்க்கையும் கருவிகள் - சாதனங்கள் ஆகும். ஆன்மா தன்னைப் பற்றியும் தன்னுடைய வாழ்க்கை சார்ந்த உலகத்தைப் பற்றியும் எண்ணியபோது கடவுள் நம்பிக்கை தோன்றியது. "இந்த உலகத்தின் வியத்தகு அமைப்புகளிலே - வியத்தகு நிகழ்ச்சிகளிலே எத்தனையோ அதிசயங்கள் விரிந்து கிடக்கின்றன. அவற்றிலே ஒரு ஒழுங்கு இருக்கிறது. ஒரு முறை பிறழாத் தன்மையிருக்கிறது. இவற்றுக்கு யார் காரணமாக இருக்கக்கூடும்? நிச்சயமாக மனிதனாக இருக்கமுடியாது. "என்னுடைய அறிவால் சொல்ல முடியாத -என்னுடைய அனுபவத்தால் எட்டிப் பிடிக்க முடியாத ஏதோ ஓர் ஆற்றல் இருப்பதை உணர்கிறேன்" என்று கூறுகிறான் சிசரோ என்ற பேரறிஞன்.

சிலர் ஆழமாக, நுண்மையாகச் சிந்திக்க முடியாமல்—சிந்தனையில்லாமல் ஐம்பெரும்பூதங்களாகிய நிலம், நீர், தீ, வளி, வான் ஆகியவற்றைக் கடவுள் என்று அச்சத்தின்வழி அன்பு பாராட்டி வழிபட்டனர். இந்த வழிபாட்டில் அறிவின் முதிர்ச்சியும் இல்லை! பாதுகாப்பு உணர்வு மட்டுமே என்பது வெளிப்படை. வேறுசிலர் பஞ்சபூதங்களால் ஏற்பட்ட—ஒரோ வழி ஏற்பட்ட துன்பங்களுக்குப் பயந்து வழிபட்டனர்.

* மணமேற்குடி குலச்சிறை நாயனார் விழா 17-9-90 கருத்தரங்கத்தில் ஆற்றிய தலைமையுரை.

இவர்களுக்குப் பயத்திலிருந்து கடவுள் நம்பிக்கை தோன்றியது. நமது மரபு வழிக் கொள்கைப்படி பயம் தீது. பயம் மிக மிகக் கொடியது. பயத்திலிருந்து ஆன்மாக்களை மீட்பதுதான் சிறந்த அறம். ஆதலால்தான் நமது நூல்கள்,

*"சுண்ணவெண் சந்தனச் சாந்தும்*
*சுடர்த்திங்கள் சூளா மணியும்*
*வண்ண உரிவை உடையும்*
*வளரும் பவள நிறமும்*
*அண்ணல் அரன்முத லோரும்*
*அகலம் வளாய அரவும்*
*திண்ணன் கெடிலப் புனலும்*
*உடையார் ஒருவர் தமர்நாம்*
*அஞ்சுவது யாதொன்றும் இல்லை*
*அஞ்ச வருவதும் இல்லை"*

—(திருநாவுக்கரசர் 4 ஆந்திருமுறை 11)

*வானம் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்*
*தானம் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்*
*மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்டு*
*ஊனம்ஒன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே!*

(திருநாவுக்கரசர் 4 ஆம் திருமுறை 1057)

*"........எமக்கு எங்கோன் நல்குதியேல்*
*எங்கெழில்என் ஞாயிறு எமக்கு"*

(மாணிக்கவாசகர் – திருவெம்பாவை 19)

என்றெல்லாம் அருளியுள்ளன. இறைவனின் திருக்கரங்களில் ஒன்று அபயக்கரம் என்பதையும் அறிக. அதாவது உயிர் களைப் பயத்திலிருந்து மீட்கும் கை—அபயக்கை

நமது கடவுள் நம்பிக்கை அவாவுதல் அடிப்படையில் தோன்றியது. நாம் பெற்றுள்ள அறிவும் ஆற்றலும், நமது

வாழ்க்கையை வளமாக்கப் போதவில்லை. நம்முடைய அறிவு அகண்டமானால்தான் நாம் வளரமுடியும்; வாழமுடியும்; உய்தி பெறமுடியும். ஆதலால் பேரறிவும் பேராற்றலுமுடைய கடவுளை,- பேரறிவும் பேராற்றலுமுடைய பொருளை மனிதன் நாடினான். கடவுள், பேரறிவும் பேராற்றலும் உடையவன் என்று நம்பினான்! எப்படி நம்பினான்? வினா எழுதல் இயற்கை! இந்தப் பரந்த உலகியற்கையில், இயற்கையின் நிகழ்வுகளில் ஏதோ ஓர் ஒழுங்கையும் (Order) முறைபிறழாத நிலையையும் (Consistency) கண்டான்! மானுடத்தின் வரலாறு முழுதையும் கூர்ந்து நோக்கினால் ஒழுங்குகள் கெட்ட நிலையே-முறைபிறழ்வுகளே ஏராளம்! முறை பிறழ்வுகளின் காரணமாக, கெட்ட போரிடும் உலகம் தோன்றிற்று. நோய், சாக்காடுகள் ஏற்பட்டன! இவற்றைக் கற்றும் கேட்டும் கண்டும் உணர்பவர்கள், இந்த வியத்தகு உலகின் ஒழுங்கை—முறைபிறழா நிகழ்வுகளை—கடப் பாட்டுடன் இயங்கும் தகைமையைக் கண்டுணர்ந்து இவற்றிற்குக் காரணம் ஒன்றிருப்பதாக உணர்ந்தார்கள்; உணர்கிறார்கள். அந்த ஒன்றுக்குக் கடவுள் என்று பெயர் சூட்டினார்கள். அந்த ஒரு பொருளிடமிருந்து ஒழுங்கை, அறிவை, ஆற்றலைப் பெற்று வாழ்வை முறைப்படுத்திக் கொண்டு அவ்வழி முழுமையாக்கிக்கொள்ள, கடவுளை வழிபட்டார்கள்; கடவுள் வழி நின்றார்கள்!

கடவுள் நம்பிக்கை தோன்றிய பொழுது சமயம் இல்லை; தத்துவங்கள் இல்லை. கடவுள் நம்பிக்கையும் வழிபாடும் தோன்றிய பிறகே சமயநெறி, வழிபாட்டு முறைகளைக் கற்பிக்கும் வகையில் முகிழ்த்தது. இத்தகு சமயங்கள் பல, உலகில் இயல்பாகத் தோன்றி வளர்ந்தன. தொடக்கத்தில் இந்தச் சமயங்களைச் சார்ந்தவர்கள் உண்மை தேடும் வகையிலும் காலப்போக்கில் தத்தம் சமயமே உயர்ந்தது என்று நிலைநாட்ட முனைந்தபோதும் தத்துவ இயல்களே தோன்றின. தத்துவ இயல்களும் விரிந்து வளர்ந்

தன. தத்துவர்களிடையே ஏற்பட்ட போட்டியில் கடவுளர் முதன்மைப்படுத்தப்பட்டுப் புனைவுக் கதைகள்—புராணங் களும் தோன்றிய பிறகு சமயக் காழ்ப்புகளும் கலகங்களும் தோன்றலாயின. கடவுள் நம்பிக்கைக்கும் வழிபாட்டுக்கும் சமயங்களின் சார்பு போதும்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் வாங்குவாழ்வதில் ஆர்வம் காட்டினர்; தொல்காப்பியப் பொருளதிகாரத் தோற்றம் இதற்குச் சான்று. தமிழர்களின் கடவுள் நம்பிக்கையும் சமயச் சார்பும் தொன்மையானவை. தனித்தன்மையுடையவை.

"சைவசித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கையானது மிக விரிந்ததும் பெருஞ் செல்வாக்குடையதும், ஐயத்திற்கு இடமின்றி உண்மையிலேயே பெருமதிப்பிற்கு உரியதும் இந்திய நாட்டிலுள்ள சமயக் கொள்கைகளுக்கெல்லாம் தலைசிறந்ததுமாகும். தென்னிந்திய மக்களின் மிகச்சிறந்த பேரறிவின் பெருவிளைவே சைவசித்தாந்தமாகும்" என்று டாக்டர் ஜி. யு. போப் எழுதியிருப்பது இங்கு நினைவு கூரத்தக்கது.

தமிழர்களின் சமயச்சார்பு ஆரியச் சார்புடையதன்று; சமஸ்கிருதச் சார்புடையதுமன்று. தமிழர்களின் அறிவியல் தெளிவில் முகிழ்த்ததே தமிழர் சமயம். தமிழர் வாழ்வில் கடவுள் நம்பிக்கை, வழிபாடு, சமயம், தத்துவஇயல் புராணங்கள் ஆகியவை படிமுறையிலேயே வளர்ந்து வந்துள்ளன. தமிழர்கள் எந்த ஒரு மொழியையோ சமயத்தையோ வெறுத்ததில்லை. அதே போழ்து தனித்தன்மையைத் தொடர்ந்து பாதுகாத்து வந்துள்ளனர். அதனாலேயே 'ஆரியம் நன்று; தமிழ் தீது' என்றவர்கள் ஒறுத்து ஒதுக்கப்பட்டனர்.

தமிழர் சமயம் தெளிவான கொள்கையுடையது! தமிழர் சமயத்தில் இயல்பாகவே தத்துவியல் தெளிவு

இருக்கிறது. நம்பிக்கைக்கும் நல்லெண்ணத்திற்கும் இசைந்தது தமிழர் சமயம். பொருள்கள் இயல்பாக உள்ளவை என்பது தமிழர் சமயத்தின் அடிப்படை. முதலாவது கடவுள். இரண்டாவது உயிர்கள். மூன்றாவது உயிர்களைப் படைக்கவில்லை என்ற உண்மையைத் தமிழர் சமயமே—சிவநெறியே கூறுகிறது. கடவுள் உயிர்களைப் படைக்கவில்லை என்ற ஒரு கொள்கை யளவிலேயே உலகின் நூற்றுக்கணக்கான சிக்கல்களுக்கு எளிதான தீர்வு காணமுடிகிறது. அதுமட்டுமன்று வாழ்வின் பொறுப்பு மானுடத்தினுடையதாகிறது. இயல்பாக ஆணவத் தொடர்புடைய ஆன்மா, ஆணவத்தின் கொட்டத்தை அடக்கச் சிந்தனையிலும் செயலிலும் அறிவார்ந்த நிலையில் வளர்ந்து இறைவனின் இன்ப அன்பியலைச் சார்தலே தமிழர் சமயக் கொள்கையின் சாரம். இந்த அடிப்படையில் தோன்றிய சமயத்திற்கு—தத்துவம் சார்ந்த சமயத்திற்குப் பெயர் சைவசித்தாந்தம். தத்துவ உலகத்தில் இக்கொள்கையே முடிந்த முடிபாகக் கருதப்படுகிறது.

சைவ சமயம், வைணவ சமயம் இரண்டும் தமிழர்களின் பழைய சமயங்கள். சைவ சமயத்தின் கொள்கைகள் தொல்காப்பியம் மற்றும் சங்க நூல்களில் சிறப்பாகப் பேசப்பெற்றுள்ளன.

*"பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி*
*நீலமணி மிடற்றொருவன் போல*
*மன்னுக பெரும நீயே!"*

(புறம் 61; 5–7)

"மணி மிடற்றொருவன்" என்ற இந்தச் சொற்றொடர் இறைவனின் இறவா நிலையையும் உயிர்கள் மாட்டுள்ள கருணையையும் புலப்படுத்துகிறது.

*"தீதும் நன்றும் பிறர்தர வாரா"* (புறம் 192:2)

அதாவது உயிர்கள் துய்க்கும் இன்ப துன்பங்கள் அவரவர் வினை வழிப்பட்டன என்பது கருத்து. இத்தகு பாடலடிகள் சிவநெறிக் கொள்கையின் விளக்கங்களே.

இக்கருத்துக்களையே திருக்குறளும் காப்பியங்களும் வளர்த்தன. இன்றுவரை உயிர்ப்போடு வளர்ந்து வரும் சமயம் சித்தாந்தச் சிவநெறி.

சிவநெறி ஒரு கடவுள் நம்பிக்கையுடையது. உயிர்களைப் பொறுத்தவரையில் அவை பல என்னும் கொள்கையுடையது. வழிபாடு என்பது ஆன்மாவின் செயல்; ஆன்மாவின் முயற்சி வழிபாட்டுக்குச் சடங்குகள் அளவோடு இருக்கவேண்டும். அதாவது ஆன்மாவை இறைவழிபாட்டில் ஈடுபடுத்தும் அளவுக்கே சடங்குகள் இருத்தல்வேண்டும். சித்தாந்தச் சிவநெறியில் சாதி வேற்றுமைகள் இல்லை; ஏழை-பணக்காரன் வேறுபாடு இல்லை. சித்தாந்தச் சிவநெறி ஓர் உயர்ந்த சமயநெறி; வாழ்வியலைச் சார்ந்து நின்று வளர்க்கும் நெறி.

எந்த ஒரு சமயமும் இயக்கத் தன்மையைப் பெற்றால்தான் வளரும். தமிழர் சமயநெறி இயக்க வடிவம் பெறாமலும் இல்லை. அதேபோழ்து வளர்ந்து நிலைபெறு தலுக்குரிய அளவுக்கு இயக்க வடிவம் பெறவில்லை என்ற குறையை நாம் உணர்தல் வேண்டும். இயக்கம் என்பது தொடர்ந்து இயங்கிக்கொண்டே இருப்பது. இடையறாது மக்களை நாடித் தன் வயப்படுத்திக் கொள்வதே இயக்கத்தின் செயற்பாடு! பண்டைக் காலத்தில் தமிழகத் திருக் கோயில்கள், இயக்க வடிவம் பெற்றிருந்தன. இமயம் முதல் குமரி வரை திருக்கோயில் அமைப்புப் பணிகளும் வழிபாட்டு முறைகளும் வெகுவேகமாகப் பரவின.

மானுடத்தின் வாழ்க்கை வரலாற்றில் எந்த ஒன்றும் நிலையான இடம் பெற வேண்டுமானால் அதற்கு இயக்கத் தன்மை இருக்கவேண்டும். அதாவது சமயத் தத்துவங்கள்

நிலையானவையாகக் கெட்டிப்பட்டுவிடக் கூடாது. காலம், நாடு, நடைமுறைப் பழக்கங்கள் ஆகியவற்றிற்கு ஏற்ப நாளும் புதுக்கிக் கொள்ளும் ஆற்றல்-இயல்பு சமயங்களுக்கும் சமய நிறுவனங்களுக்கும் வேண்டும். இடையறாது மக்களை நோக்கிச் சென்று அம்மக்களைத் தம் வயப்படுத்திக் கொண்டு மேம்பாடுறச் செய்தலை விழுமிய குறிக்கோளாகக் கொண்டு இயங்குதல் வேண்டும். ஓய்வு ஒழிவு இல்லாத செயற் பாடுகளை—மக்களை நோக்கிய செயற்பாடுகளை நாளும் புதுப்பித்துக் கொள்ளுதல் இயக்கத்தின் இலக்கணம். தமிழர் சமயத்தில் தோன்றிய திருக்கோயில்கள் தொடக்க காலத்தில் இயக்க வடிவம் பெற்றிருந்தன. பரந்த உலகத்தில் எங்கும் வெகுவேகமாகத் திருவுருவ வழிபாடு, திருக்கோயில் வழிபாடு ஆகியன பரவின. ஊர்தோறும் மக்கள் திருக்கோயில்களை நாடினர்; திருக்கோயில்களை அந்த மக்கள் பேணினர். திருக் கோயில்கள் மக்களைப் பேணின. ஏன் வாழும் மானுடத்தின் சிக்கல்களுக்குத் தீர்வுகாண முயன்று வெற்றிகண்டது நமது சைவநெறி. அதனாலன்றோ "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்ற மூதுரை தோன்றிற்று. ஆயினும் திருக்கோயில்களைச் சார்ந்த மறுமலர்ச்சி நிகழ்வு நிலைத்து நிற்கவில்லை. இடையறவு ஏற்பட்டது. மீண்டும் ஏழாம் நூற்றாண்டில் அப்பரடிகள் தோன்றி உழவாரப் படை யேந்தித் திருக்கோயில்களைக் காக்கும் பணியில் தலைப் பட்டார். அப்பரடிகள் காலத்தில் வந்தருளிய திருஞான சம்பந்தர், தமிழ்ச் சமயநெறிக்கு முரணாக எழுந்த சூழல்களை எதிர்த்துப் போராடினார். இதனைச் சேக்கிழார், "செழுந்தமிழ் வழக்கு அயல்வழக்கின் துறைவெல்ல" என்று கூறி விளக்குகின்றார். ஆதலால் திருஞானசம்பந்தர் சமய இயக்கம், சமயப் பாதுகாப்பு இயக்கம் நடத்தியுள்ளார் என்பதை உணரமுடிகிறது.

திருஞான சம்பந்தர் சிவநெறிப் பாதுகாப்புக்காக நாளும் இன்னிசையால் தமிழ்ப்பரப்பித் தமிழ்நெறிக்கு

இயக்கம் நடத்தினார்; நமது பாதுகாப்புக்காகப் போராடினார். அதுபோலவே அப்பரடிகளும் இயக்கம் நடத்தினார். நாடெல்லாம் நடந்துசென்று “மனிதர்காள் இங்கே வம்மின்! ஒன்று சொல்லுகேன்” என்று அழைத்து அருள்நெறியில் ஆற்றுப்படுத்தினார், இங்ஙனம் அயல்வழக்கைவென்று விளங்கிய தேவாரத் திருமுறைகளைக் கூடத் தமிழர்கள் தொடர்ந்து போற்றிப் பாதுகாத்து வைத்துக் கொண்டாதாகத் தெரியவில்லை அயலவர், திருமுறைகளை முடக்கினர். காரிருள் சூழ்ந்தது. பின்னர் இராஜராஜசோழன் காலத்தில் திருமுறைகள் மீட்கப் பெற்றன. இராஜராஜசோழன் காலத்தில் தொடங்கிய சமய மறுமலர்ச்சி இயக்கம் பிற்காலச் சோழர் காலம் மூன்றாம் குலோத்துங்கன் காலம்வரை நீடித்தது. பின் தமிழ்நாட்டில் தமிழர்கள் ஆட்சியை இழக்கின்றனர். குகையிடிக் கலகங்கள் நடக்கின்றன. அதன்பின் தொடர்ச்சியாக மாறி மாறித் தமிழர் அல்லாதவர் ஆட்சிகள்; தமிழின் இடத்தைச் சமஸ்கிருதம் பெறுகிறது; சாதிமுறைகள் இறுக்கமாகின்றன. சமுதாய மையங்களாக விளங்கிய திருக்கோயில்களிலிருந்து மக்கள் பிரிக்கப்படுகின்றனர். திருக்கோயில்கள் உயர்சாதியினரின் ஏகபோகமாகின்றன. சமுதாயம் நிலைதடுமாறுகிறது. நமது சமயம் வளரவில்லை.

நாடு சுதந்திரம் பெற்றும் “இந்து சமயம்” என்ற கூட்டமைப்பின் காரணமாக உயர்சாதியினரின் உடும்புப்பிடி தளரவில்லை. நம்மவர்கள் கடவுளை அஞ்சியும் யாசித்தும் வழிபட்டனர். சடங்குகளும் கழுவாய்களும் மலிந்தன. நவக்கிரக வழிபாடுகளும் சிறு தெய்வ வழிபாடுகளும் வளர்ந்தன. நமது சமய நிறுவனங்கள் செயலிழந்த நிலையில் இருந்தன-இருந்துகொண்டிருக்கின்றன. இன்றையச் சூழ்நிலையில் கற்றறிந்த சிலருக்குத்தான் சித்தாந்தச் சிவநெறி தெரியும். மற்றபடி இந்து சமயம்தான்! மாயாவாதம்தான்! நமது சமயம் தனித்தன்மைகளை இழந்து தடம் மாறியது. ஏன்? இன்று நமது சைவ சமயமே சாதிச் சமயம்போல் வழங்கப்பெறுகிறது.

மானுட நேயத்தையே முதன்மையாகக் கொண்டு வளர்ந்த நமது சமயம் அதை அறவே மறந்து ஊழ்த் தத்துவத்தில் கிடந்து உழலுகிறது.

“அவ்வினைக் கிவ்வினை யாம் என்று
சொல்லும் அஃதறிவீர்

உய்வினை நாடா திருப்பதும்
உந்தமக்கு ஊனமன்றே

கைவினை செய்து எம்பிரான்
கழல் போற்றதும் நாமடியோம்

செய்வினை வந்தெமைத் தீண்டப்
பெறாதிரு நீலகண்டம்”

என்பது திருஞான சம்பந்தர் திருப்பாடல்.

ஊழ்த் தத்துவத்தை எதிர்த்துப் போராடி வெற்றி பெறத் திருக்குறள்-திருமுறைகள் வழிகாட்டினாலும் ஊழ்நம்பிக்கை மக்களுக்குச் சொல்லொணாத் துன்ப மிழைத்து வருகிறது. நமது சமய நெறியில் ஒரு காலத்தில் தொண்டுகளாக இருந்தவை இன்று தொழில்களாக மாறிவிட்டன. திருக்கோயில் தூய்மையை உடலுழைப்பில் செய்வோர் இன்று ஏழைகள்! ஏழைக் கூலிகள் . அக்கூலியும் வயிற்றுக்குப் போதாத கூலி. நமது சமய நெறி இன்று முற்றாக வாழ்க்கையிலிருந்து விலகிவிட்டது. தத்துவங்களை அறிந்து கொள்ளும் ஆர்வமும் இல்லை. மெய்ப்பொருள் தேடும் நாட்டமும் இல்லை. மடைப்பள்ளிதான் இன்றையத் திருக்கோயிலின் ஆதிக்க சக்தி! பௌராணிக அடிப்படைகளும் சடங்குகளும் வேண்டுதல்களும் தான் இன்றைச் சமயத்தில் எஞ்சியுள்ளன. மக்கள் ஞானத்தை நாடவில்லை. ஏன் இந்த அவலம்?

தமிழ்நாட்டில் தமிழ்ச் சமய நெறியை அரியணையில் அமர்த்தவேண்டும்; திருக்கோயில்களில் தெய்வத்தமிழில்

வழிபாடுகள் இயற்றவேண்டும். தமிழர்கள் இடையில் வந்த சாதிகளுக்கு முழுக்குப் போட்டுவிட்டு ஒருகுலமாக வேண்டும்; மீண்டும் திருக்கோயில்களைச் சமுதாய மையங் களாக ஆக்கவேண்டும். திருக்கோயில் சார்ந்தே நமது மொழி, சமயம், கலை, நாகரிகம், சமுதாயம் ஆகியன வளரவேண்டும். திருக்கோயில்கள் அரசின் ஆதிக்கத்திலிருந்து மீட்கப்பட்டு அந்தந்த ஊர்மக்கள் சொத்தாக அமைந்து, மக்களால் மக்களுக்காக நிர்வாகம் செய்யப் பெறுதல் வேண்டும்.

திருக்கோயில்களின் ஆட்சிமுறை இராஜராஜன் காலத்தில் இருந்ததைப்போல கிராமத்தினால் தேர்வு செய்யப்பெறும் தக்காரால் செய்யப்பெற வேண்டும். ஆண்டு தோறும் நிர்வாக அமைப்பு மாறலாம். அரசு தணிக்கையை வைத்துக்கொள்ள வேண்டும்.

திருக்கோயில், அதனைச் சுற்றியுள்ள மக்களைத் தாய்போலப் பேணி வளர்த்துக் கல்வியும் ஞானமும் தந்து உயர்ந்திடுதல் வேண்டும். இந்த நெறிமுறை கைகூடினால் செந்தமிழ் வழக்கு வையகத்தில் நின்று விளங்கும்.

## சித்தாந்தச் செந்நெறி*

மனித குலம் தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகள் உருண்டோடி விட்டன. கடந்த கால மனித வரலாறு, வாழும் நமக்குத் தந்த படிப்பினைகள் பலப்பல; வரலாற்றுப் போக்கில் ஆக்கவியற் சிந்தனைகள் சில தோன்றின! அந்தச் சில கருத்துக்கள், உணர்வுகள் இன்றளவும் மனித குலத்திற்கு ஒளிவிளக்குகளாக நின்று வழி காட்டுகின்றன என்பதூஉம் மறுக்க முடியாத உண்மை. ஆயினும், மனித உலகம் தீயநெறிகளில் சிக்கிச் சீரழிந்த செய்திகள் வரலாற்று

* குன்றக்குடியில் 20–10–90, 21–10–90–இல் நடைபெற்ற மெய்கண்டார் விழா – சிவாகம, திருமுறை, சைவசித்தாந்த, சிற்ப, இசை ஆய்வுக் கருத்தரங்கில் ஆற்றிய முதன்மையுரை.

ஏடுகளில் அதிகமான இடத்தைப் பிடித்துள்ளன என்பதை மறுப்பார் யார்? வரலாற்றுக் காலந்தொட்டு சற்றேறக் குறைய 5000போர்கள் நடந்துள்ளன. இந்தப் போர்களால் ஏற்பட்ட அழிவுகள் பல நூறு தலைமுறைகளின் வாழ்வுக்கு ஆக்கம் தரத் தக்கன என்று எண்ணும் பொழுது கண்கள் குளமாகின்றன. இன்றும் மனிதன் நெருக்கடிகளுக் கிடையிலேயே வாழ்கிறான். களவும் காவலுமே இன்றைய வாழ்வின் கட்டாயம். இன்றளவும் தருமம் இளைத்தே வந்து கொண்டிருக்கிறது. சூதுகளே வெற்றி பெற்றுள்ளன; வெற்றி பெறுகின்றன.

இந்தச் சூழ்நிலைகளால் எய்த்துக் களைத்துப் போன மக்கள் ஒழுங்குகள், ஒழுக்க நெறிகள், ஒழுக்க நெறிகளைச் சார்ந்த அமைதி, துன்பச் சூழலுக்கு அப்பாலுமுள்ள உலக இயக்கம் ஆகியவற்றை உற்றுப் பார்த்தனர். வியத்தகு நிகழ்ச்சிகள், சிந்தனை எல்லைக்கும் அப்பாற்பட்ட ஒழுங்குகள், முறை பிறழாத நிகழ்ச்சிகள் அமைந்திருப்பதைக் கண்டனர். இத்தகைய வியத்தகு அமைப்புக் காரணம் கடவுளைத் தவிர வேறு யாராக இருக்கக் கூடும் என்று எண்ணினர். கடவுள் நம்பிக்கை தோன்றியது. கடவுள் நம்பிக்கை, சமநெறி, தன்னலத்துறவு, பிறர் நலம் பேணல் ஆகிய அறநெறி சார்ந்த வாழ்க்கையை நாடிய மக்கள், தம்மைத் தலைமை தாங்கி வழிநடத்தக்கூடிய தனித் துணையை நாடினர். அங்ஙனம் தேடி உணர்ந்த தலைமையே கடவுள். அக்கடவுள் குறைவிலா நிறைவு; கோதிலா அமுது; நன்றுடையான்; தீயதில்லான்; இன்பன்; துன்பமில்லாதவன்.

மக்கள் கடவுள் நம்பிக்கையில் வாழத் தலைப்பட்ட பிறகு, நெறிமுறைகள் தோன்றின. நெறிமுறைகள் சமயங் களாக உருப்பெற்றன. சமயநெறிகள் வாழ்வியலைத் தழுவியனவாக இயக்க நிலையில் இருந்த வரையில் மனிதகுலம் அதிகப் பயன் பெற்றது. பின் காலப்போக்கில், சமயங்கள் நிறுவனங்களான பிறகு, அவற்றின் உயிர்ப்பாக இலங்கிய மனித நேயமும் தொண்டும் அளவால்

குறைந்துவிட்டன. மாறாக, மனித உலகத்திற்குத் தீமையையும் தரக்கூடிய நிலையில் திசைமாறி விட்டன. அதனால், சமயம் சுரண்டும் தன்மை வாய்ந்த-பொருளாதாரத் தன்மையுடைய முதலாளிகளுடனும் நிலப்பிரபுக்களுடனும் கூடிக் குலாவியதுடன், அவர்களுடைய அநீதித்தன்மை வாய்ந்த செயல்களுக்கு நீதிமுத்திரை குத்தித்தரும் பாதகச் செயலிலும் தலைப்பட்டன. கொடிய ஆதிபத்திய அரசுகளுடன் கைகோத்துக் கொண்டு, மக்கள் நலனுக்கு எதிராகச் செயல்படத் தலைப்பட்டன. இதனால் – பொருளாதார ஆதிபத்திய எண்ணங்களால் சமயங்களும் பலவாயின. பின் இச்சமயப் பிரிவுகளுக்கிடையே சண்டைகள். இங்ஙனம் சமயங்களின் வரலாறு வளர்ந்தது; வளர்ந்து வந்து கொண்டிருந்தது. இனி எதிர்வரும் காலத்திலாவது சமயம் அதனுடைய தொடக்க கால இலட்சியமாகிய மனித நேயத்தினைப் பேணிப் பாதுகாக்கவேண்டும். ஒரே கடவுள்; ஒரே குலம்; ஒரே உலகம்! ஒரே அரசு! என்ற திசை நோக்கி வையகத்தை இயக்க, வழி நடத்தச் சமயம் முன் வரவேண்டும்.

மனித குலம் வரலாற்றுப் போக்கில் கண்ட தனிச் சிறப்புடைய கொள்கை, கடவுட் கொள்கையேயாம். கடவுட் கொள்கையின் தோற்றத்திற்குப் பல்வேறு அடிப்படைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று, பயத்தின் அடிப்படையில் கடவுள் நம்பிக்கை தோன்றியது என்பது. இந்த அடிப்படை அவ்வளவு சிறப்புடையதன்று. ஏனெனில் பயத்தைவிட மிகப் பெரிய தீமை வேறொன்றில்லை. பயம் மனிதனின் ஆற்றலை அழிக்கும். ஆதலால், பயத்திலிருந்து பாதுகாத்துக் கொள்ள, கடவுளை நாடினால் விளையக் கூடிய பயன் பெரிதாக இல்லை. எதிர் விளைவுதான் மிகுதி. கடவுள் அறிவுப் பொருள்; வாலறிவு; தனக்குவமையில்லாதது; வரம்பிலாற்றல் உடையது; அளவிலா இன்பமுடையது எனத் தேறி, சிற்றறிவு, சிறு தொழில், சிறு பொழுதின் பங்களில் சிக்கித் துன்புற்ற மனிதகுலம் தனது அறிவை, ஆற்றலை விரிவாக்கிக் கொள்ளக் கடவுளைத் தேடிக் கண்டது பிறிதோர் அடிப்படை. இஃது

அறிவியல் சார்ந்த முறை. இங்ஙனம் உலகத்தில் ஆயிரக் கணக்கான சமயங்கள் தோன்றின. அவற்றுல் பல மறைந்து போயின. இன்று உயிர்ப்போடு உள்ள சமயங்கள் இந்து, இசுலாமியம், கிறித்துவம், பௌத்தம் முதலியவாகும்.

இந்தச் சமயங்கள் தம்முள் ஒத்துப் போகவில்லை. என்பது நூற்றுக்கு நூறு உண்மை. ஒத்துப் போகவும் இயலாது. மனிதனின் ஆன்மா தன்முனைப்போடு ஆவேசப்படும் இடமெல்லாம் வேற்றுமைகளே கால் கொள்ளும். இஃது இயற்கையின் நியதி. சமயங்களிடையே வேற்றுமை என்பது வேண்டும் என்றே கற்பிக்கப் பெறுபவையல்ல. ஒவ்வொரு சமய நெறியும் அது தோன்றிய காலம், நாடு, சமுதாயச் சூழல்கள், குறிப்பாகச் சமயநெறியைக் கண்டவர்கள் வாழ்ந்த சூழ்நிலை முதலியவற்றிலிருந்து விடுதலை பெற்றிருக்க இயலாது. ஆதலால், வேற்றுமைகள் இருக்கின்றன. அன்று காலமும் தூரமும் வெல்லப்படாநிலையில் வேற்றுமைகள் நீடித்திருக்கலாம். இன்று உடனிருந்து கலந்து பேசித் தீர்வு காண்பதற்குரிய சூழல்கள் உருவாகிவிட்டன. ஆதலால், பல்வேறு சமய நெறிகளையும் ஆய்வு செய்து தேர்ந்து, தெளிந்து முடிவு காணக்கூடிய வாய்ப்புகள் பெருகி வளர்ந்து விட்டன. சிந்தையில் தெளிவு காணும் முயற்சி தேவை. ஆயினும் பல்வேறு சமய அமைப்புகள் நொடிப் பொழுதில் ஒன்றாகிவிடா! அப்படி ஒன்றாக்க முயற்சி செய்வதும் நல்லதல்ல. "ஒன்று" என்ற கருத்தும் உணர்வும் முதலில் வளரவேண்டும். அவரவரும் தம்தம் சமயத்தினைச் சார்ந்தொழுகும் மனப்போக்கு வரவேற்கத்தக்கது. அதே போழ்து, மற்றச் சமயங்களிடத்தில் நன்மதிப்பீட்டு உணர்வுகளைக் காண்பிக்க வேண்டும். இஃது இன்றைய உடனடியான தேவை.

இன்றைய உலகச் சமயங்களில் பெரியவைகளாகத் திகழ்வன இசுலாமியம், கிறித்துவம், பௌத்தம், இந்து சமயம் ஆகியனவாம். "இந்து சமயம் என்ற ஒரு சமயம் இயல்பாக

இல்லை. இந்தியாவில் தோன்றி வளர்ந்த சமயங்கள் பலப்பல. இவையெல்லாவற்றையும் தனித்தனியே குறிப்பிட இயலாத இசுலாமிய அரசு, இந்தியாவில் தோன்றிய சமயங்களை யெல்லாம் 'இந்து சமயம்' என்று சொல்லிவிட்டது. ஆங்கிலேய அரசும் இந்த நடைமுறையை மேற்கொண்டது. இந்தியன் என்ற பெயரைப்போல இந்து என்பதும் பொதுப் பெயரே. இந்து என்ற ஒரு பெயர் எந்தச் சமயத்தையும் குறிக்காது; குறிக்க இயலாது. இந்திய மண்ணில் தோன்றிய சமயங்கள் நூற்றுக்கணக்கானவை. அவற்றுள் ஒவ்வொரு சமயத்திற்குள்ளும் உட்பிரிவுகள் ஏராளம். இந்தியாவில் தலைசிறந்த சமயங்கள் இரண்டு. ஒன்று வைணவம்; பிறிதொன்று சைவம். வைணவத்தின் பிரிவுகள் 2; சைவத்தின் பிரிவுகள் 6 என்பது மரபு. இவை அகச் சமயங்கள், பின் அகப்புறச் சமயங்கள், புறச் சமயங்கள், புறப்புறச் சமயங்கள் என்றெல்லாம் சாத்திரங்கள் கூறுகின்றன. இந்தச் சமயங் களுக்கிடையேயுள்ள வேறுபாடுகள் நுண்ணிய அனுபவங் களின் வழிவந்தவை. இந்து சமயங்களில் ஒன்று சித்தாந்தம்—சைவசித்தாந்தம் என்று கூறுவர்.

சைவசித்தாந்தச் சமயச் சிந்தனைகள் தோன்றிப் பலநூறு ஆண்டுகள் ஆகிவிட்டன. "இந்தியாவில் உள்ள சமயங்கள் அனைத்திலும் சைவ சித்தாந்தமே மேம்பட்டது என்பதில் ஐயமில்லை" என்றார் ஜி. யூ. போப். சௌடி பாதிரிப் பெருமகனாரும் "சைவசித்தாந்தம் இந்தியச் சிந்தனைகளினதும் உணர்வினதும் சிகரம்" என்று புகழ்ந்துள்ளார். ஆயினும் தத்துவ விளக்க அடிப்படையில் முதன் முதலாக ஒரு முழுச் சொல் தோன்றியது 13ஆம் நூற்றாண்டில்தான். ஆனால் ஏழாம் நூற்றாண்டில் நரசிம்மப் பல்லவன் காலத்துக் கல்வெட்டு ஒன்றில் "நான் ஒரு சைவசித்தாந்த" என்ற வசனம் காணப்படுவதாகத் தெரிகிறது. 13ஆம் நூற்றாண்டில் தோன்றிய மெய்கண்டார்தான் இதனைச் சிவஞான போத நூல் மூலம் முறைப்படுத்தினார்.

தமிழகம் பல்வேறு சமயத் தாக்கங்களுக்கு ஆளாக நேரிட்டதை உணர்ந்த மெய்கண்டார், சமயங்களின் தத்துவக் கலப்பு ஏற்படாமல் தடுத்துப் பாதுகாக்கவே 'சிவஞான போதம்' இயற்றினார். அப்படியிருந்தும் சைவத்தில் ஸ்மார்த்தக் கலப்பு ஏற்பட்டுவிட்டது.

சைவசித்தாந்த சமயம் தெளிவான அடிப்படையுடையது; நம்பிக்கைக்குரியது; நல்வாழ்க்கைக்குரியது; மனிதகுலச் சிக்கல்களுக்கும் துன்பங்களுக்கும் தெளிவான தீர்வு காட்டுவது; சைவசித்தாந்த சமயம் மூன்று பொருள்கள் என்றும் உள்ளவை என்று அறுதியிட்டுக் கூறுகிறது. அவையாவன முறையே, இறை, உயிர், தளை என்பன. இவற்றைப் பதி, பசு, பாசம் என்றும் கூறுவர். உலகின் பல்வேறு சமயங்கள் கடவுளுண்மையில் வேறுபட்டதைப் போலவே கடவுள் ஆன்மா என்ற இடங்களிலும் வேறுபடுகின்றன; பல சமயங்கள், கடவுள் ஆன்மாவைப் படைத்தன என்று கூறுகின்றன. இந்து சமயத்தின் உட்பிரிவிலேயே 'நானே கடவுள்' என்று கூறும் ஒரு சமயமும் உண்டு. இவையெல்லாம் வாழ்வியலை ஆராய்ந்தறிந்தால் மெய்ப் பொருளறிவுத் துறையில் தத்துவத் தெளிவில் நிற்றல் அரிது. கடவுள் உயிர்களைப் படைத்தார் என்ற கொள்கை நிலைபெறல் யாங்ஙனம்? கடவுள் பூரணப் பொருள். கடவுள் உயிர்களைப் படைத்திருந்தால் உயிர்களுக்கு அறியாமை எங்கிருந்து வந்தது? எப்படி வந்தது? என்ற வினாக்களுக்கு விடை கூறவேண்டிவரும். செழுந்தமிழ் வழக்காகிய சைவசித்தாந்த மரபுப்படி கடவுள் ஒருவர். அவர் ஞானத்தின் வடிவம்; போற்றல் உடையவர், உயிர்கள்பால் கருணை கொண்டவர்; ஆணவத்தில் கிடந்த உயிருக்கு அறிகருவிகளையும் செயற் கருவிகளையும் பொருத்தி உபகரித்து நுகர்பொருள்களையும் அளித்து வாழ்க்கையில் ஈடுபடுத்துகிறார்.

சித்தாந்தச் செந்நெறியில் கடவுள் சிவம் என்று அழைக்கப்படுகிறார். சிவத்தோடு சம்பந்தம் உடையது சைவ

மாயிற்று. சிவம் என்ற சொல் அல்லது பெயர் சங்க இலக்கி யங்களில் வழங்கப்பெறவில்லை. ஆனால் சிவபிரானின் மிகப்பெரிய அருட் செயலாகிய வானவர் வாழ அமுதம் ஈந்து தாம் நஞ்சுண்ட செய்தியை நினைவூட்டும் வகையில்

"நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே" (புறம்–61)

என்று அதியமானை ஔவையார் பாராட்டுகிறார். சிவனை அரன் என்றும் சிவன் என்றும் போற்றி வழிபடுகின்றனர். சிவன் உயிர்களின் கட்டுக்களை நீக்குபவன்; உலகம் சிவனி டத்திலேயே ஒடுங்குகிறது என்ற பொருளில் அரன் என்று அழைக்கின்றனர். சிவன்' ஈறிலாப்பதங்கள் யாவையுங் கடந்த இன்பமாக, விளங்குவதால் சிவன் என்று போற்றுகின்றனர்.

உயிர்கள் என்றும் உள்ளவை. உயிர்கள் பலப்பல. மாயையினின்றும் உயிர்களுக்கு உடல்கள் (தனு), கருவிகள் (கரணம்), உலகங்கள் (புவனம்), அவை அனுபவித்தற்குரிய பொருள்கள் (போகம்) முதலியவற்றை வழங்கியருள மாயை யினைத் தமது சிற்சத்தியின் மூலமாக இயக்கிப் படி முறையில் 36 தத்துவங்களை அமைத்து உதவிசெய்தருளுகின்றான் இறைவன். இந்த வகையில் மாயை உயிருக்குப் போகத்தைத் தந்தாலும் உயிரைத் தளைப்படுத்துவதே என்று சித்தாந்தம் கூறுகிறது. மாயை என்பது ஒரு நுண்பொருள்; கண்ணுக்குப் புலனாகாத நுண்பொருள். இந்த நுண் பொருளிலிருந்தே உலகம் தோன்றுகிறது. உயிர்களின் அறிகருவிகளும் அகநிலைக் கருவிகளும் மாயையினின்றே உயிர்களுக்குக் கிடைக்கின்றன. இந்த மாயையும் நிலையானது; எங்கணும் நிறைந்திருப்பது; இந்த மாயை உலக்கத்திற்கு வித்துப் போன்றது. ஐம்பெரும் பூதங்கள் மாயையினின்றே தோன்று கின்றன. உயிர்களில் புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய உளத் தத்துவங்களும் மாயையிலிருந்து உற்பத்தியாகின்றன என்பதும் அறியத்தக்கது.

உயிர்கள் அறிவித்தால் அறியுத்தன்மையன; சார்ந்ததன் வண்ணம் ஆம் இயல்பின. இயல்பாகவே ஆன்மா ஆணவத்தைச் சார்ந்து இருக்கிறது. ஆணவப் பிணிப்பால் அறியாமையிற் கிடக்கும் ஆன்மாவுக்கு-உயிருக்கு மாயையின் துணையால் பொறி புலன்களைத் தந்து ஆட்கொண்டருள் கின்றான் இறைவன். உயிர்கள் புலன்களாலும் பொறி களாலும் நுகர்வன நுகர்ந்து, இன்ப துன்பங்களை அனுப வித்து அவ்வழிச் செல்களும் செய்கின்றன. செயல்களைச் செய்யும் பொழுது உயிருக்குள்ள உணர்வு நிலை, நுகரும் பொழுதுள்ள மனப்பாங்கு நிலை முதலியனவே வினைகளாகி அந்த வினைகளை — அந்தச் செயல்களின் பயன்களைச் செய்த உயிர்களே அனுபவிக்க வேண்டும் என்ற நியதியாகி-விதியாகி உயிர்களின் ஊழாகி உயிர்களைச் சார்கின்றன. விதி என்ற சொல்லுக்குச் சரியான விளக்கம் ஒவ்வொரு முயற்சிக்கும் ஏற்ற பயன் நிச்சயம் கிடைக்கும் என்பதுதான். 'விதி' -கொச்சைப் படுத்தக்கூடிய ஒரு தத்துவம் அல்ல. ஆனால் நடைமுறையில் 'விதி' கொச்சைப்படுத்தப் பட்டு வருகிறது. அதனால்தான் மனிதன் எதையும் செய்யலாம்; எப்படியும் செய்யலாம் என்ற நிலைக்கு வந்து ஊழல்களுக்கும் ஒழுக்கக் கேடுகளுக்கும் வன்முறைச் செயல்களுக்கும் இரையாகி, அழிந்துகொண்டிருக்கிறது இந்த மானுடம். செய்வினைகளும் நுகரும்பொழுது கொள்ளும் எண்ணத் தடங்களுமே ஊழ் என்று பெயர் பெறுகின்றன. செய்யும் செயல்களையும் நுகரும் நுகர்ச்சியையும் தற்சார் பின்றியும் தற்சார்பான பயன்களின் மீது வேட்கையின்றியும் இயற்றினால் - நுகர்ந்தால் ஊழ் முகிழ்க்காது - உருக் கொள்ளாது. உயிர் பிறவிச் சுழற்சியிலிருந்து விடுதலை பெறலாம்-இன்ப அன்பில் தங்கலாம்.

ஆணவம் இருளனையது இல்லை, இல்லை; ஆணவம் இருளைவிடக் கொடியது. இருள் தன்பாற்பட்ட பொருள்களை மறைக்கும். ஆனால் இருள் உயிர்கள்

பார்வையிலிருந்து தப்பாது; மறையாது. ஆனால் ஆணவம் உயிர்களின் அறிவையும் மறைக்கிறது. தன்னையும் மறைத்துக் கொள்கிறது. ஆதலால் மறைவாக இருந்து துன்பம் செய்யும் ஆணவமே கொடிது.

ஆணவம் இயல்பாகவே உயிரைப்பற்றி நிற்பது. உயிர்கள்மீது ஆணவத்தின் தாக்கம் இருக்கும் பொழுது, உயிர் அறிவு இழந்து சிறுமையுற்று முடங்கிக் கிடக்கிறது. முடங்கிய நிலையிலிருக்கிறது உயிர் கடவுட் சார்பை உணர்ந்து, கடவுளைச் சார்ந்து ஒழுகத் தலைப்படும்பொழுது ஆணவம் செயலற்று விடுகிறது, ஒளியின் முன்னே இருள் செயலற்றுப் போவது போல.

உயிர் கடவுட் சார்புணர்ந்த நிலையில், கடவுளை கடவுளின் திருவடிகளை நெஞ்சத்தில் வைத்து வழிபாடு செய்ய-நிலையான உறவுகொள்ள விரும்பிய விருப்பத்தின் விளைவாகவே கடவுள் திருவுருவங்கள் பலப்பல கொண் டருளினான். திருவுருவ வழிபாடு தொடங்கிய நிலையில் மக்கள் கூடி வாழத் தலைப்பட்டனர். ஊர்கள் தோன்றின. வீதிகள் நடுவே திருக்கோயில்கள் எழுந்தன. திருக்கோயிலை மையமாகக் கொண்டு சமுதாயம் வாழத் தொடங்கியது. திருக்கோயில் வழிபாட்டினைச் சிறப்புற நிகழ்த்த விரும்பிய விருப்பத்தின் விளைவாகப் பூசிக்கும் முறைகள் அடங்கிய சிவாகமங்கள் தோன்றின. சிவாகமங்கள் சிவசக்தி அருளியது என்ற நம்பிக்கை உண்டு. சிவாகமங்கள் இறைவனை நமக்கு எளிதில் அனுபவிக்கத் தருவன. நமது மூதாதையரில் சிலர் தம்மைச் சிவ வழிபாட்டுக்கென்றே அர்ப்பணித்துக்கொண்டு முப்போதும் திருமேனி தீண்டுபவர்களாக வாழ்கிறார்கள். அவர்கள் சிவாச்சாரியார்கள். அவர்கள் உயிர்களுக்கு மேகம்போல் நின்று விளங்கி உதவி செய்பவர்கள். திருக்கோயில் வழிபாட்டுடன் சிற்பம், இசை முதலிய அறுபத்துநான்கு கலைகளும் வளர்ந்தன. இத்தகு சிவநெறியை ஏழாம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டு வரை பேணிக்காத்தனர் திருமுறை ஆசிரியர்கள். இன்றளவும்

சிவாகமும் திருமுறைகளும் செந்தமிழையும் சிவநெறியையும் பேணி வளர்த்துக் காத்துவந்துள்ளன.

இன்றுள்ள நாமும் இவைகளைப் பாதுகாத்து தலைமுறைக்குக் கொடுக்கவேண்டியது நமது கடமை. நமது சமயவரலாற்று மரபுப்படி நாம் சமயத் தொண்டுகளைச் சமுதாய உணர்வுடன் செய்து வரவேண்டும். உயிர் உய்யும் பொருட்டுச் செய்யப் பெறுவது வழிபாடு. உயிர் உய்யும் முயற்சிகளில் ஈடுபடும்பொழுது அம்முயற்சிகளுக்கு இடையூறின்றிப் பாதுகாப்புத் தருவது சமுதாயம் சார்ந்த தொண்டு. அகப்பூசையில் சிவத்தை அனுபவிப்பதே சிறந்த வழிபாடு! 'ஐம்புலன் அற அனுபவித்தல்' என்று திருவாசகம் கூறும். புறத்தேயும் திருமேனியில் சிவத்தைக்கண்டு வழிபடுதல் பொறிகளின் சேட்டையினின்று நீங்கிப் பத்திமை யடைந்து உயிர்கள் நிலைபெற்றிருக்கவேயாம். இத்தகு உயர்நிலைக்கு மனிதன் வளர்ந்துவர முதலில் மனித உள்ளம்—அதாவது மனித நேயம் பெறவேண்டும். சமுதாய அன்பும் கடமையுணர்வும் உருவமும் நிழலும் ஒத்தன.

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையினாற் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே!"

—திருநாவுக்கரசர்

என்ற அப்பரடிகளின் அடிச்சுவட்டில் உழவாரமும், திருத் தொண்டும் செய்து பேணிப்பாதுகாக்கவேண்டும். நாளும் திருக்கோயில் பூசனைகள் சிறப்புற நடைபெற ஏற்பாடுசெய்ய வேண்டும். நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் பணியில்

ஈடுபடவேண்டும். சிவகாமமும் செந்தமிழும் தழுவிய ஒரு குலத்தைக் காணவேண்டும். மனித நேயத்தைப் போற்றிப் பேணவேண்டும்.

"வான்முகில் வழாஅது பெய்க
மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க
குறைவிலா துயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்க ளோங்க
நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலக மெல்லாம்!"

–கந்தபுராணம்.

கச்சியப்ப சிவாச்சாரியாரின் இந்தப் பாடல் பலகாலும் எண்ணத்தக்கது. திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும். ஓதவேண்டும்; சைவத்தின் இலட்சியம் இந்தப் பாடலில் வகுத்தும் தொகுத்தும் கூறப்பட்டுள்ளது. "நீரின்றமையாது உலகு" என்பது திருக்குறள். ஆதலால் முதலில் மழை வளத்தைப் பெற்றுத் தண்ணீர் தேவையை நிறைவு செய்து கொள்ளவேண்டும். முற்காலத்தில் நிறைய மழை பெய்தது. இறைவனின் திருக்கோயில்கள் ஒவ்வொன்றும் மழைவளம் தரும் மரக்காடுகளின் நடுவே இருந்தன. கடம்பவனம், அரசவனம் என்ற பெயர்களை நோக்குக. தலவிருட்சம் என்று ஒரு குறிப்பிட்ட மரத்தைப் போற்றுதல் பழைய மரபு. காலஞ் செல்லச் செல்ல தல விருட்சங்களையும் திருக்குளங்களையும் (தீர்த்தம்) பேணத் தவறிவிட்டோம். அதன் காரணமாக மழைக்குறைவு ஏற்பட்டுள்ளது. தலவிருட்சங்களைப் பல நூறாயிரக் கணக்கில் காடுகளாகப் பேணி வளர்க்க வேண்டும். மழைவளம், மண்ணின் வளம் கொழிக்கத் துணை செய்யும். உண்பன தின்பன தாராளமாகக்கிடைக்கும். அரசுகள்

நெறிமுறைகளின்படி அரசு செய்யவேண்டும். "குறைவிலா துயிர்கள் வாழ்க!" இந்த ஆணை சோஷலிசம் தழுவிய ஆணை! ஒவ்வொருவரும் தாம் நுகர விரும்புவன வற்றையெல்லாம் நுகர்ந்து யாதொரு குறையுமின்றி வாழ்தல்! நான்மறைகளும் வளர்தல். அறநெறிகள் வளர்தல் வேண்டும். நல்லதவம் ஆகிய வேள்வி வளம் மல்கும்படி இயற்றுதல். நீதித்தன்மை பொருந்திய சைவம் உலகில் விளங்குக. நீதி என்பது என்ன? மனிதர்கள் அறத்தினையே வழிகாட்டியாகக் கொண்டு வாழ்தல். நீதி சார்ந்த வாழ்க்கை உயிர் வாழ்வு சட்டங்களால் கிடைக்காது. சிறைச்சாலைகளுக்குச் செல்லாமல் இருக்கவேண்டுமானால் தவிர்க்கலாம். ஆனால் மானம்—வெட்கம் என்ற கருத்துக்கள் தோன்றுவது சமயச் சூழலில்தான் என்பதை மறவாமல் நினைவிற்கொள்ள வேண்டும்.

*"சீர்வாழி தெய்வ சிகாமணி சீரருணை*
*ஊர்வாழி வாழி உலகெல்லாம்—கார்வாழி*
*சித்தமிழ்த மான சிவாகமம் வாழி,செழு*
*முத்தமிழும் வாழி முறை."*

## புண்ணிய யாத்திரை புறப்படுவோம்

உலகின் பாகங்கள் இணைக்கப்படுவதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" என்றது தமிழ். ஆம்! யாவரும் கேளிர். ஆம்! யாவரும் கேளிர்! ஆம் யாவரும் கேளிர்! இந்தச் சொற்றொடரே இன்றைய உலகின் மந்திரமொழி!

இன்று இந்தியாவைக் கிரகணம் பற்றிக்கொண் டிருக்கிறது. சாதி மதச் சண்டைகளில் சிக்கி, இந்தியா சீரழிந்துகொண்டு வருகிறது. இன்றைய இந்தியாவில் தீமை

வளர்கிறது! ஆம்! தீமை தீமையே. ஆயிரம் சமாதானம் கூறினாலும் பேதங்கள் பிரிவுகள் தீமையே. இந்தியாவின் சமயச் சார்பற்ற—சம வாய்ப்புடைய சமுதாய அமைப்பை நோக்கிச் செல்லும் நடைப் பயணத்தினூடே ஊடுருவும் தீமை, நன்மையுள் செயற்படும் தீமையாகும். நன்மையும் நன்மையாகவே நடைபெறவேண்டும். நன்மையினூடே தீமை ஊடுருவுமானால் அல்லது எதிர்விளைவாகத் தீமை தோன்றுமானால் நன்மையும் நன்மையாகாது. நன்மையாகக் கருதப்பெறும் ஒன்றும் காலப்போக்கில் தீமையாகவே முடியும். தீமை—பிரிவினைத் தீமை—ஒதுக்கி ஒதுங்கும் தீமை மனிதனின் பகையாகும். இத்தீமையை எதிர்த்துப் போராடு தல் மனிதனின் பிறப்புரிமையும் கடமையுமாகும். முதலில் மனிதன் தற்சார்பான தீமைகளை எதிர்த்துப் போராடி வெற்றிபெற்றாக வேண்டும். பின் சமுதாயச் சூழலில் அமைந்துள்ள தீமையை எதிர்த்துப் போராட வேண்டும். அப்போதுதான் மனிதன் நிறைநலம் வாய்ந்த மனிதனாவான்.

இன்றைய உலகம், மதங்களின் பெயரால் கெட்ட போரிடும் உலமாக மாறி வருகிறது. ஆனால் உண்மையில் நோக்கினால், உண்மையான மத நெறியும் மக்கள் மன்றத்திற்கு அறிமுகப்படுத்தப்பெறவில்லை. மதங்கள் தாம் தோன்றிய இடத்திலிருந்து பலகாத தூரம் விலகிவிட்டன. ஏன்? "தன்னுடைய கடவுளையே விழுங்கி ஏப்பமிட்டுவிடும் நிலைக்கு மதங்கள் வந்துவிட்டன"[1] என்று லியோ டால்ஸ்டாய் கூறியது எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது!

மனிதகுலம் தோன்றி வளர்ந்த வகையிலும் வாழ்வியல் அமைப்பிலும் ஒரே குலமாகத்தான் காட்சியளிக்கிறது. நாடு — மொழி — மதம் ஆகியன மனிதனின் படைப்புக்கள்! மனிதனின் படைப்புக் காரணமாக வேற்றுமைகள் தோன்று வது உண்மை. ஆயினும் மனித குலத்தை உணர்வு நிலையிலும் ஒழுக்க நிலையிலும் ஓர் அணியாக இணைக்கும் நோக்கத்திலேயே நாடு, மொழி, மதங்கள் தோன்றின. ஆனால்

அவை வரலாற்றுப் போக்கில் எதிர் விளைவைத் தந்துள்ளன. இந்தப் பூமண்டலத்தில் இனக்கலப்பு இல்லாது வாழும் இனம் எதுவும் இல்லை. உணர்வுக் கலப்பு—கலைக் கலப்பு—குருதிக் கலைப்பு இன்ன பிற கலப்புகள் ஏற்பட்டுள்ளன. இந்தியாவிற்கு வந்த இஸ்லாமியர்கள் இந்திய மயமானார்கள் என்பதே வரலாற்று உண்மை. இந்தியாவைத் தங்கள் தாய் நாடாக அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். இந்தியாவிலேயே இந்தியப் பெண்களை மணந்துகொண்டு வாழத் தலைப் பட்டனர். எல்லாரும் ஒரே உடன்பிறப்பினராய் வாழவேண்டும். என்ற கொள்கையை வலியுறுத்தவே கம்பன்,

"குகனொடும் ஐவ ரானோம்
முன்புபின் குன்று சூழ்வான்

மகனொடும் அறுவ ரானோம்
எம்உழை அன்பின் வந்த

அகன்அமர் காதல் ஐய
நின்னொடும் எழுவர் ஆனோம்

புகல்அரும் கானம் தந்து
புதல்வரால் பொலிந்தான் நுந்தை"[2]

என்று பாடுகின்றான்.

எல்லா உலகமும்-எல்லா உலகின்கண் வாழும் மக்களும் ஒரு குலமே! ஓரினமே என்ற கருத்தினை,

"எல்லா உலகமும் ஆனாய் நீயே!"[3]

என்ற அப்பரடிகள் பாடலால் அறிந்துகொள்ள முடிகிறது. "எவன் கடவுள் படைப்பில் உள்ள மக்கள் அனைவரையும் தன் பிள்ளைகளைப் போலக் கருதுகிறானோ அப்பொழுதே அவன் சூபியாவான்"[4] என்பது இஸ்லாமிய—மூதுரை. அருட்டிரு விவேகானந்தர், "இராமகிருஷ்ண ஆசிரமங்களில் முஸல்மான் பாலகர்களையும் ஏற்றுக்கொள்ள வேண்டும்;

அவர்களுடைய மதத்தையே கற்பிக்கவேண்டும்"[5] என்று எழுதியுள்ளார்.

மானுடம் தன்னுடைய வாழ்க்கைப் போக்கில் கடவுள் நம்பிக்கை ஏற்பட்டு வழிப்பட்ட காலம் பொற்காலம் என்று கருதத்தக்கது. தன்னிச்சையாக சமூக அமைப்பில்லாமல் நாகரிகமற்ற நிலையில் வாழ்ந்த மனிதகுலத்திற்கு நாகரிகத்தையும் சமூக வாழ்க்கையையும் அறிமுகப்படுத்தியதே கடவுள் நம்பிக்கைதான்! உலகின் பல்வேறு பகுதிகளில் பல்வேறு அடிப்படையில் கடவுள் நம்பிக்கை தோன்றி வளர்ந்துள்ளது. இந்த வியத்தகு உலகின் நிகழ்வுகளில் ஏதோ ஓர் ஒழுங்கு (Order) முறைபிறழாத நிகழ்ச்சி (Consistency) இருப்பதைக்கண்டு அத்தகு அமைப்பிற்கு மனிதனைவிட மேம்பட்டது ஒன்று காரணமாய் அமைதல்வேண்டும். அது கடவுளையன்றி வேறு யாராக இருத்தல் கூடும்? என்று கேட்டார் சிசரோ. கடவுளின் அளப்பரிய அறிவையும் ஆற்றலையும் கண்டவர்கள், அத்தகு அறிவையும் ஆற்றலையும் பெறுதலுக்கு வாயிலாகக் கடவுளை நாடினர். மிகவும் வளர்ச்சி குறைந்த மக்கள், பயத்தின் அடிப்படையிலேயே கடவுளை நம்பினார். ஆனால் உண்மையில் பயத்துக்கும் கடவுளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதை அறிக!

மாந்தர் இனம் வாழ்க்கைப் போக்கில் அவாவி நின்ற பண்புகளின் அடிப்படையில் கடவுளைக் கண்டது. கடவுளைப் போற்றிப் புகழ்ந்து பாடியவர்கள் பெரும்பாலும் குணம்-பண்பு அடிப்படையில்தான் பாடியுள்ளார்கள்.

"நன்றுடையானைத் தீயதில்லானை"[6]

என்று கடவுளைத் திருஞானசம்பந்தர் போற்றிப் பாடியுள்ளார். "நன்றுடையான்" என்று உடன்பாட்டு முறையில் கூறினாலே போதும்! ஏன் எதிர்மறை நிலையிலும் "தீயதில்லான்" என்ற கூற வேண்டும்? நன்று என்பது குறை

வில்லாத்தன்மை உடையது. நிறைவு என்பது எது? குறைவே இல்லாதது. இன்பம் என்பது எது? துன்பக் கலப்பே இல்லாததுவே இன்பம். குறைரு இல்லாததுவே இன்பம். குறைவு இல்லாத ஒன்றே நிறைவு! தீமையின் கலப்பே யில்லாத ஒன்றே நன்மை! முழுமையான நன்மை மக்கள் பழக்க வாசனையின் காரணமாகத் தீமை கலந்த ஒன்றையும் நன்மையென்று கருதும் கருத்திலிருந்து விலக்கிக் காட்டவே "நன்றுடையான்" என்று கூறியதுடன் அமையாது "தீயதில்லான்" என்றும் கூறினார். தீமையின் கலப்பில்லாத நன்மை எதுவொ அதுவே நன்றாம். அத்தகு நன்மை நலம் சார்ந்த கடவுள் எங்கும் உள்ளார். அவருக்கு ஏன் திருக்கோயில், மசூதி, சர்ச்சு முதலியன?

மனிதகுல வரலாற்றில் காலமும் தூரமும் அதிகமானதைப் போலவே, காலப் போக்கில் ஒவ்வொரு இன மக்களும் அடுத்த இனமக்களுக்கிடையே நீண்ட-அகலமான இடைவெளியை உண்டாக்கிக்கொண்டனர். அதனால் மொழிகள் பலவாயின; பல்வேறு சமயங்களாயின; ஆயினும் மூர்க்கர்கள், பைத்தியக்காரர்கள், பிழைப்பு நடத்துகிறவர்களைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் கடவுள் ஒருவரே என்று நம்பினார்கள். மாணிக்கவாசகர் சிவநெறிச் சார்பினர். சிவபக்தர். அவர்,

> "தென்னா டுடைய சிவனே போற்றி!
> எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி!"[7]

என்றார். மாணிக்கவாசகர் வாழ்ந்த தமிழ்நாட்டில் கடவுளைச் "சிவன்" என்று அழைக்கின்றனர். ஆனால் அந்தச் சிவன் உலகமாந்தருக்கு "இறைவ' னாக விளங்குகின்றான் என்பது விளக்கம். முன்னையது பழக்கத்தால் ஏற்பட்ட சிறப்புப் பெயர்; பின்னையது உலகப் பொதுப் பெயர். எந்நாடு என்பதில் தென்னாடும் அடங்கியது. எந்நாட்டிற்கும் இறைவனாக இருப்பவனைத் தென்னாட்டு மக்கள் "சிவன்"

என்று அழைப்பது மொழிவழக்கேயாம். பொருள் வேறல்ல என்பது உணர்க. உலகிற்குக் கடவுள் ஒருவரே. அந்தக் கடவுளுக்கு உருவம் இல்லை. பெயருமில்லை. ஆனால், உலகமாந்தர் அவனுக்கு எண்ணற்ற பெயர்களைச் சூட்டி அழைக்கின்றனர். ஏன்? "பித்தன்" என்ற பெயரைக்கூடச் சூட்டி அழைக்கின்றனர். "ஈசுவரன் ஒருவரே. அந்த ஒருவரைத்தான் இராமர், அல்லா என்றெல்லாம் அழைக்கின்றனர். அந்த ஒரே ஒரு கடவுள்தான் உலகத்தைத் தாங்குகிறார். அவருக்கு அடுத்து இரண்டாமவர்கூடக் கிடையாது"[8] என்றார் கபீர். மசூதியிலும் திருக்கோயிலிலும் இருந்தருள் செய்பவர் ஒரே கடவுள்தான் என்பது கபீரின் வாக்கு.

*"சிற்சபையில் நடிக்கின்ற நாயகனார் தமக்குச்*
*சேர்ந்தபுறச் சமயப்பேர் பொருந்துவதோ என்றாய்*
*பிற்சமயத் தார்பெயரும் அவர்பெயரே கண்டாய்*
*பித்தர்என்ற பெயர் படைத்தார்க்கு எப்பெயர்*
*ஒவ்வாதோ?"*[9]

என்பார் அருட்பிரகாச வள்ளலார். இந்துக்களால் "பிரம்மம்" எனவும் சொராஸ்திரியரால் "அஹுரா மஸ்தா" எனவும் பௌத்தர்களால் "புத்தர்" எனவும் யூதர்களால் "எகோவா" எனவும் கிறிஸ்துவர்களால்-"பரமண்டலத்தில் உள்ள தந்தை" எனவும் வழங்கப்படுகின்ற தெய்வம், உங்களது மேலான எண்ணம் நிறைவேறும்படி உங்களுக்கு வலிமையைத் தருவதாக"[10] என்று விவேகானந்தர் வாழ்த்தும் பாங்கினை அறிக. "அல்லா" என்ற சொல் முஸ்லீம் மதத்தையும் "இராமர்" என்ற சொல் ஹிந்து மதத்தையும் மட்டும்தான் குறிக்கும் என்றால் அப்படிச் சொல்பவர்களிடமிருந்து தூரவிலகி நிற்கவே விரும்பு" என்றார் கபீர்.[11] ஏன்? "எல்லா ஒன்றே" என்ற தன் கருத்துக்கு ஒத்துவராதவரிடம் கபீர் கண்டிப்பாகவே இருக்கிறார். எல்லா மதங்களிலும் பேசப்

படும் கடவுள் ஒருவரே என்பது அனுபவம். அனுபவத்தில் உணர்ந்த உண்மை. ஆனால் வேற்றுமைகளையே பன்னிப் பன்னிப் பேசுபவர்கள் சமயக் கணக்கர்கள், கடுதாசிகளில் எழுதியதை ஒப்பிக்கும் புலிகள். அனுபவ ஞானிகள் சொல்லும் “ஒன்றே” என்ற உண்மை சிக்கலைத் தீர்ப்பது. கடுதாசிப் புலிகளே சிக்கலை உண்டாக்குகிறார்கள்.

கடவுள் நம்பிக்கை தோன்றி வளர்ந்து பலநூறு ஆண்டுகள் கழித்தே மதங்கள் தோன்றியிருக்க வேண்டும். மதங்கள் தத்துவ வளர்ச்சியில்—மெய்ப் பொருள், அறிவு அடிப்படையில் தோன்றின. இத்தகு மதங்கள் மெய்ப் பொருளியலை விளக்கவே தொடக்கத்தில் பயன்பட்டன. காலப்போக்கில் குழு மனப்பான்மையால் மதத்தின் பெயரால் ஒரு கட்டுப் பாட்டை உருவாக்கவேண்டும் என்ற எண்ணமும் மதத்தைச் சார்ந்தவர்களிடையே தோன்றி வளர்ந்தது. மேலும் மேலும் மதங்களுக்கே உரிய நெகிழ்ச்சித் தன்மை, மனித நேயம் முதலிய உயரிய தன்மைகளிலிருந்து விலகி, இறுக்கமான மனப்பான்மையைப் பெற்றுக் கொடுமையான தன்மையுடையனவாக மதபீடங்கள் தோன்றின. மத பீடங்கள் மதங்களைக் குறுகிய எல்லைக் குட்படுத்தி வேற்றுமைகளை வளர்த்து மக்களுக்கிடையில் பரஸ்பர குரோதப் புத்திகளை வளர்த்துச் சண்டைகளை உருவாக்கின; கடவுள்களுக்கிடையே உருவாக்கிக் காட்டின. அவ்வழி பொருளாதார ஆதிபத்திய ஆசைகள் வளர்ந்து, மத பீடங்களுக்குள்ளேயும் அரசைச் சார்ந்தும்கூடச் சண்டைகள் தோன்றின. உலக வரலாற்றில் மதங்களின் பேரால் மதபீடங்கள் நிகழ்த்திய கொடுமைகள்–சண்டைகள் எழுதிக் காட்ட முடியாத அளவுக்கு அதிகமானவை. இங்கிலாந்தில் நடந்த ரோஜாப்பூச் சண்டைகளும் தமிழ்நாட்டில் அப்பரடிகள் மீது ஏற்பட்ட தாக்குதல்களும் திருஞான சம்பந்தர் தங்கியிருந்த திருமடத்தில் தீ வைக்கப்பெற்ற நிகழ்ச்சியும் மனிதகுலம் வெட்கித் தலை குனிய வேண்டிய

நிகழ்ச்சிகளே! ஆயினும் இவை மக்களின் பேரால் மத பீடங்கள் நடத்தியவையாகும். இவை சமயச் சார்பற்று ஒழுகத் தெரியாத அரசுகள் நடத்தியவை. மதத் தத்துவங்களுக்கும் இந்தப் போர்களுக்கும் யாதொரு தொடர்புமில்லை. ஆனால் பழியைச் சுமந்துகொண்டவை மதங்களே யாகும். பல சமயங்களில், அரசுகள் சமயச் சார்பின்மையை— நடுநிலையை விட்டுப் பிறழ்ந்து, மகவெனப் பல்லுயிரையும் ஒக்கப் பார்த்து நலம் செய்ய மறந்துள்ளன. சாதி, மதம், கட்சிகள் பார்த்து, வேற்றுமை பாராட்டி, அரசுகள் நலம் செய்தவன் காரணமாகவும் மதங்களுக்கிடையே அழுக்காறும் அழுக்காற்றின் வழிப்பட்ட போட்டிகளும் வளர்கின்றன.

இன்று இந்திய அரசுகள் சாதனைகளையும் மதங்களையும் வளர்த்துக்கொண்டு வருகின்றன. இதனால் அண்மைக் காலமாக இந்தியாவில் ச்ாதி மதச் சண்டைகள் அதிகரித்து வருகின்றன என்பதை எவரும் மறுத்தல் இயலாது. மறத்தலும் இயலாது. சிறுபான்மையினருக்குப் பாதுகாப்புத் தருதல் என்பது வேறு. அவர்களுக்கென்று தனிச் சலுகைகள் தருதல் என்பது வேறு. இன்று இந்தியாவில் சாதி மதச் சண்டைகள் வளர அரசுகளே காரணம் என்பதை நினைவிற்கொள்க. அரசுகளின் போக்கு மாறாதுபோனால் இந்திய ஒருமைப்பாடு நிலைகுலையும்.

மதங்களின் தோற்றம்தான் முரண்பாடுகளைத் தோற்றுவித்தது என்பது உண்மையே யானாலும் அந்த மதங்களுக்கிடையே ஒருமை நலம் கண்டன. மதங்கள் வேற்றுமைப் படுத்தினாலும் ஒருமை நலம் கண்டன. மதங்கள் வேற்றுமைப் படுத்தினாலும் ஒருமைப்பாட்டுக்குரிய எண்ணங்களை அறவே புறக்கணித்துவிடவில்லை. அவற்றுக்குள் ஒருமைப் பாட்டு நிலையும் காணப்படுகிறது. "மாந்த ராகிய நீங்கள் எல்லோரும் ஒரு குலத்தவரானீர். உங்களைப் போற்றிப் பாதுக்காப்பவன் ஒரே ஆண்டவன்,,[12] என்று முகம்மதிய மதம் கூறுகிறது.

"வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளே! நின் விளையாட்டு
அல்லால்
மாறுபடுங் கருத்தில்லை."[13]

என்று தாயுமானவர் விளக்குகின்றார். அருட்டிரு விவேகானந்தர் "உலகில் மதங்கள் பல. வழிபாட்டு முறைகளும் பலப்பல. என்னும் அடிப்படையில் அவை ஒன்றே!',[14] என்று கூறியுள்ளமையை ஓர்க! உணர்க! சீக்கிய மதத்தைக்கண்ட குருநாணக் "ஹிந்து என்பதும் முஸ்லீம் என்பதும் இல்லை"[15] என்று அருளிய உரையை உணர்க; உணர்ந்து ஒழுகுக!

"வணங்கும் துறைகள் பல பல ஆக்கி"[16]

என்றார் நம்மாழ்வார். இந்துக்களையும் முஸ்லிம்களையும் ஒற்றுமைப்படுத்தவே சீக்கிய மதத்தைக் கண்டார் குருநானக். அருட்பிரகாச வள்ளலார், "சன்மார்க்கம்" என்ற பெயரில் புதிய சமயமே கண்டார்.

"அச்சா நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்
ஆநந்த நிலைகளெல்லாம் அறிந்தடைதல் வேண்டும்
எச்சார்பு மாகியுயிர்க் கிதம்புரிதல் வேண்டும்
எனையடுத்தார் தமக்கெல்லாம் இன்புதரல் வேண்டும்
இச்சாதி சமயவிகற் பங்கள் எல்லாம் தவிர்ந்தே
எவ்வுலகும் சன்மார்க்கப் பொதுவடைதல் வேண்டும்"[17]

என்ற திருப்பாடல் சன்மார்க்க நெறி விளக்கும் திருப்பாடல். இன்று சீக்கியர்களும் சன்மார்க்க சங்கத்தினரும் என்ன செய்கிறார்கள்? அவர்களும் பழக்க வாசனையால் சார்புகளுக்குள் சிக்கித் தவிக்கின்றனர்.

வைணவ சீலாராகத் திகழ்ந்த இராமானந்தர் சமுதாயத்தில் பல்வேறு பட்டோரின் ஒத்துழைப்புடன் ஒரு புதிய மதத்தையே தோற்றுவிக்க முயன்றார். இராமானந்த

ருடைய முயற்சி வெற்றி பெற்றிருந்தால் இந்தியா ஒரு புதிய பொலிவுடன் விளங்கும் வாய்ப்புப் பெற்றிருக்கும். அண்ணல் காந்தியடிகள் "சொந்த சமயத்தில் விருப்பமும் மற்ற சமயங் களிடத்தில் காட்டும் மதிப்புணர்வுமே சமயச்சார்பற்ற தன்மை"[18] என்று விளக்கினார். சமயங்களுக்கிடையில் ஒருமை நலம் காணும் முயற்சிகள் வெற்றிபெறவில்லை என்பது உண்மை. ஒருமை நலம் கண்டு அனுபவிக்க இயலாத நிலையில், மனித குலத்தின் நல்வாழ்வு கருதிச் சமயப் பொறுமையை மேற்கொள்ளுதல் வேண்டும். இந்த நூற்றாண்டிற்குச் சமயப்பொறை தவிர்க்க இயலாதது. ஆனால் வரவர இந்திய மக்கள் பாரபட்சமற்ற திறனாய்வை அணுகுமுறையை இழந்து வருகின்றனர். இன்று இந்திய மக்களுக்குள்ள பெரிய பலவீனம் இதுவே. அக்பர் சமயப் பொறையுடையவர் மட்டுமல்லர். எல்லாச் சமயங்களையும் மதித்துப் போற்றியவர். சிவபக்தியில் சிறந்து விளங்கிய மூன்றாம் குலோத்துங்கசோழன் ஜைனப் பள்ளிகளுக்கு இறையிலியாக நிலங்கள் வழங்கியுள்ளான் என்பது வரலாறு. தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னன் கிறிஸ்துவ சமயத்தை அன்புடன் ஆதரித்து வந்தார். அல்லா பண்டிகைக்கு எல்லா தர்காக்களுக்கும் சரபோஜி மன்னர் செல்லும் பழக்கம் இருந்தமையை அறிக.

காலப்போக்கில் மனிதகுலத்தில் ஏற்பட்ட பொருளா தாரச் சீரழிவுகளால் பற்றாக்குறை நிறைந்த சமுதாய அமைப்பும் உத்தரவாதம் இல்லாத வாழ்க்கை நிலையும் அமைந்த சூழ்நிலையில் மாந்தருக்கிடையில் இருந்த இணக்கங்கள் இல்லாதொழிந்தன. பரஸ்பரச் சார்புகள் அற்றுப்போய் எங்கும் சொத்தின் அடிப்படையில் சண்டை கள் நிகழ்ந்தன. இந்தச் சூழ்நிலையை மதத் தலைவர்கள் நன்றாகப் பயன்படுத்திக்கொண்டு ஆதிக்க சக்திகளின்பாற் சார்ந்து நின்றனர். இந்தச் சூழ்நிலையில்தான் பல்வேறு மதங்களைச் சார்ந்த மக்களுக்கிடையில் வெறுப்புணர்வு

வளர்க்கப்பெற்றது. ஆதிக்கம் செய்தோர் எல்லாருக்கும் சமவாய்ப்பு அளிக்கத் தவறியது; குறிப்பிட்ட சிலருக்கே உரியதாக அறிவுக்குத் தடை விதித்தது ஆகிய செயல் முறைகள் மதங்களுக்கிடையில் சண்டைகள் கலகங்கள் தோன்ற இடம் கொடுத்தன. அதுபோல இந்து மதம் போன்ற சில மதங்கள் ஏன்? எல்லா மதங்களுமே கூட மக்களுக் கிடையில் உயர்சாதி அமைப்பை அங்கீகரித்து அவர்களுக்கே சமூகத் தகுதிகளைக் கொடுத்து வந்ததால் ஒடுக்கப்பட்ட மக்கள் புதிய மதங்களைக் காணவும் அல்லது தகுதி கிடைக்கும் என்ற நம்பிக்கையில் மதம் மாறவும் தலைப் பட்டனர். இன்றளவுகூட இந்து சமயத்தில் சாதிகளைச் சார்ந்த மனப்பான்மை மாறவில்லை. இனி மாறும் என்ற நம்பிக்கைகூட இல்லை. ஏன்? சாதிகளை ஒழிக்கப் புறப் பட்டவர்கள் கூடச் சாதிச்சேற்றில் அவர்களை அறியாமல் சிக்கிக் கொண்டு எழுந்திருக்க முடியாமல் தவிக்கின்றனர். அதுமட்டுமல்ல. பலநூறு ஆண்டுகளாக வெறுத்து ஒதுக்கப் பெற்று வந்த சாதிகள் இன்று சமூக, அரசியல் ரீதியான அங்கீகாரம் பெற்றுவிட்டன, என்பதையும் கவனத்தில் கொள்வது அவசியம். இன்று மதவெறுப்பு, சாதி வெறுப்பு முதலியன மதங்களின் அடிப்படையில் தோன்றவில்லை; சமூக பொருளாதார ஆதிபத்தியங்கள் அடிப்படையிலேயே மதப் போர்வையில் நடத்தப்பெறுகின்றன. இதன் காரண மாக உரிமைப் போராட்டங்கள் என்று தொடங்கிக் காலப் போக்கில் வெறுப்பாகவும் பகையாகவும் வந்துள்ளது. உலக வரலாறு எப்படி இருந்தாலும் நமது நாடு பல்வேறு சமயங்களுக்கும் அங்கீகாரம் கொடுத்து வளர்ந்த நாடு; பேணிய நாடு. பிற்காலச் சோழ அரசன் ஆதி இராசேந்திரன் என்பவன் குறுகிய மதக் கொள்கைகளை ஆதரித்ததை மக்கள் விரும்பவில்லை. மக்கள் இதற்கு உடன்படாமல் எதிர்த்துப் போராடினார்கள். 'கிருமி கண்ட' என்று வெறுத்து ஒதுக்கப்பட்டான். கல்லால் அடித்துக் கொல்லப்பட்டான்

என்று நீலகண்ட சாத்திரிகள் எழுதுகின்றனர். யூதர்கள் இயேசுவைத் தள்ளி விட்டனர். ஆனால் சாக்கியரை ஏற்று நாயன்மாராக்கியது நமது நாடு. நமது நாட்டு மக்களிடத்தில் மீண்டும் சமயப் பொறைப் பண்பு வளர்தல் வேண்டும்.

சமயப்பொறை என்றால் அவரவர் சமய மரபுகளை விட்டுக்கொடுக்கவேண்டு மென்பதில்லை. தன்னுடைய சமயத்தில் ஈடுபாடும் விருப்பமும் காட்டுதலும் பிற சமயங்களிடத்தில் மதிப்புக் காட்டுதலுமே வேண்டற்பாலது. இன்று பொதுவாக நோக்கின் தமக்குரிய சமய நெறிகளில் விருப்பார்வம் காட்டாமல் பேணி வளர்க்கும் பணிகளில் ஈடுபடாமல் விளம்பரத்துக்காகப் பாதுகாப்பு என்ற ஆலவட்டத்தில் சமய வெறுப்பு இயக்கச் சங்கங்களை நடத்துவது விரும்பத்தக்கதல்ல. அண்ணல் காந்தியடிகள் ஒரு இந்துவாகவே வாழ்ந்தார். "நான் ஒரு இந்து" என்று பகிரங்கமாகவே ஒத்துக்கொண்டார். அதேபோழ்து மற்ற மதங்களிடத்தில் அளவிறந்த மதிப்பு வைத்திருந்தார் என்பதை மறத்தல் கூடுமா? யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் பெருமான் சைவநெறிக் காப்பாளராக வாழ்ந்தார்; பணி செய்தார். அதேபோழ்து அவர் கிறிஸ்துவ மதத்து வேத நூலாகிய பைபிளைத் தமிழில் மொழி பெயர்த்துத் தந்த பெருந்தகைமையை மறத்தலும் கூடுமோ? மறத்தல் கூடாது.

இந்தியாவைப் பொறுத்தவரையில் இந்து இஸ்லாம் கிறிஸ்துவ சமயங்கள் பெரிய சமயங்கள். கிறிஸ்தவ இஸ்லாமிய மதங்களை மேற்கொண்டு ஒழுகுபவர்கள் அந்நியர்களல்லர். இந்திய மண்ணில் பிறந்தவர்கள்; இந்திய மண்ணுக்கு உரிமையுடையவர்கள்; இந்தியர்கள் என்பதை மறந்துவிடுதல் நன்றன்று. இந்த மதங்களையெல்லாம் ஆழ்ந்து கற்ற சுவாமி விவேகானந்தரின் வழிகாட்டுதலை நாம் ஏற்று அவ்வழியில் நடத்தல் நல்லது. விவேகானந்தர், "என்னுடைய அனுபவமாவது இதுதான்! இந்தச் சமத்துவ நிலைக்கு ஒரு

கணிசமான அளவிலே எப்பொழுதேனும் எந்தச் சமயமேனும் அணுகிவந்தது என்றால் அது இஸ்லாம் ஒன்றேதான்"[19] என்று கூறும் அனுபவவாக்கு எண்ணத்தக்கது. ஆம்! பலநூறு ஆண்டுகளாக இந்து மதம் பலகோடி மக்களைத் தீண்டத்தகாதவர்களாக வைத்திருந்தது. இந்தக் கொடுமையை எதிர்த்துப் பேசியவர்களை இந்து மதம் வெளியிலே தள்ளியது. இந்து மதத்தில் சாதிமுறைகளை—தீண்டாமையை எதிர்த்துப் போராடிய மகான்கள் எண்ணற்றவர்கள் தலைமுறை தலைமுறையாகப் போராடி வந்திருக்கிறார்கள். இந்துமத பீடங்கள் நெகிழ்ந்து கொடுக்கவில்லை. சிவாஜி காலம் முதல் காஞ்சி ஜயேந்திரர் காலம் வரையில் மாற்றமில்லை. தமிழர் பார்ப்பனர் என்று இனம் பிரித்துப் பேசுகின்றனர். சராசரிப் பொதுமக்கள் நலனுக்கு மாறாகவே செய்கின்றனர்; காலத்தின் சூழ்நிலை கருதிப் பரந்த மனப்பான்மை உள்ளதுபோலக் காட்டப்படுகிறது. ஆனால் உண்மையில் அப்படி இல்லை. விவேகானந்தரையும் நாராயண குருவையும் அப்பரடிகள் அருட்பிரகாச வள்ளலாரையும் ஏற்றுக்கொள்ளாத இவர்கள் எப்படிச் சராசரி மனிதர்களை ஏற்றுக்கொள்வார்கள்? எதிர் பார்ப்பது தான் மதியீனம்.

மேலும் இந்து இஸ்லாமிய உறவுகள் பற்றி விவேகானந்தர் கூறும் செய்திகள் நம்முடைய கவனத்திற் குரியன. "என் உறுதியான நம்பிக்கையாவது இதுவேயாம். கிரியாம்சையிலே மிளிர்கின்ற இஸ்லாம் மதத்தின் உதவி யின்றி வேதாந்த வாதக் கொள்கைகள் (அவை எவ்வளவு நேர்த்தியாக எவ்வளவு ஆச்சரியமாக இருந்தபோதிலும்) மனித இனமாகின்ற பெருந்தொகையினருக்கு முற்றிலும் பிரயோஜனை மற்றவையாகும். வேதங்களோ பைபிளோ குர்-ஆனோ பெறாத மண்டலமொன்றுக்கு மனித இனத்தை அழைத்துச் செல்ல நாம் விரும்புகின்றோம். ஆனாலும் வேதங்களையும் பைபிளையும் குர்ஆனையும் சமரசப்படுத்தி

யமைப்பதின் மூலமே இது செய்யப்படவேண்டும். ஏகதத்துவ மாகின்ற அந்த ஒரு சமய தர்மம் உள்ளதே அதனுடைய பல் வேறான வெளித்தோற்றங்களேயாம். உலகத்துச் சமயங்கள் எல்லாம் என்பதை மனித இனத்தவருக்குப் போதிக்க வேண்டும்"[20] என்று கூறும் அறிவுரையை இன்றைய மனித உலகம் குறிப்பாக இந்தியா உணரவேண்டும். இன்றைய இந்திய சமூகம் நிழலின் பின் செல்லத்துடிக்கிறது. இது அறவே ஆகாது! ஆகாது! ஒளியின் பின் செல்லவேண்டும். இத்தகு அறிவுரைகள் இயக்க வடிவம்பெற இராமானந்தர், நானக், ஞானேசுவரர், நாமதேவர், சைதன்யர் முதலிய அருளாளர்கள் முயன்றனர். இந்து சமயம்-இஸ்லாமியம் ஆகிய இரு மதங்களின் கொள்கைகளையும் கலந்த ஓர் இயக்கம் உருவாக்கினர்.

மதங்களின் இலட்சியம் ஆண்டவனைக் காண்ப தாகவே இருக்கவேண்டும். ஆண்டவன் ஒருவனையே வழிபடவேண்டும். ஒவ்வொருவரும் தமக்கென ஒரு இலட்சி யத்தைத் தேர்ந்தெடுத்து, அதில் உறுதியாக நிற்பாராயின் மதம் பற்றிய சச்சரவுகளெல்லாம் மறைந்துவிடும். மதம் வாழ்க்கை முறை. அதனால் மதம் இலட்சியமாக முடியாது. இலட்சியம் என்பது வாழ்க்கையின் குறிக்கோள். இன்றைய இந்தியன் எதை இலட்சியமாக எடுத்துக்கொள்ளவேண்டும்? எண்ணிப்பாருங்கள்!

இன்று இந்தியாவில் எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் பலகோடி பேர்; நாளும் வறுமையில் நைந்து வாழ்கின்றனர் பலகோடி பேர்; பல நூறாயிரம் இளைஞர்களுக்கு வேலை இல்லை; சாதிப் புன்மைகள் நீங்கியபாடு இல்லை. இந்த அவலங்களை எதிர்த்துப் போராடி வலிமையும் வளமும் உடைய பொலிவான இந்தியாவை உருவாக்குவது மட்டுமே இந்தியாவின் இலட்சியமாக இருக்கமுடியும்; இருக்க வேண்டும் இந்தியாவின் இலட்சியமாக வேறு இருத்தல் இயலாது. கூடாது.

சாந்தியும் சமாதானமும் நிலவாத வாழ்க்கையில் மானுடம் என்ன செய்ய இயலும்? இதனாலன்றோ நடையில் உயர்ந்த நாயகனாகிய இராமன் "யாரோடும் பகை கொள்ளா" நெறியைப் போற்றினான். இன்றோ இராமன் பெயரில் பகை, கலகம், துப்பாக்கிச் சூடுகள். இது அவசியந் தானா? அல்லது நியாயந்தானா? தவிர்க்க இயலாததா? தவிர்க்கக்கூடாததா? உலகில் அமைதியைப் பரப்பிப் பிணக்குகளைப் போக்கிச் சமாதானம் செய்பவர் பாக்கிய வான்கள் என்று கிறித்தவம் போதிக்கிறது. இறைவா! நான் உன் அன்பு விதையை விதைப்போனாகுக!

இந்தியாவில் உள்ள பெரிய சமயங்கள் மூன்று; அவற்றுள்ளும் பெரிய சமயங்கள் இரண்டு. ஒன்று இந்துமதம்; பிறிதொன்று இஸ்லாம். இந்த இரு சமயங்களைச் சார்ந்து வாழும் மக்கள் தொகை அதிகம். இந்த இரு சமயங் களிடையிலும், சமயங்களைச் சார்ந்த மக்களிடையிலும் நிலவும் நல்லிணக்கத்தில்தான் இந்தியாவின் வலிமை அமைந்திருக்கிறது என்பது விவேகானந்தரின் கருத்து. "நமது தாய்நாட்டுக்கு இந்துமதம், இஸ்லாம் ஆகிய இரு பெருஞ் சமயத்திட்டங்களின் கூடுதலே வேதாந்த மூளையும் இஸ்லாமிய உடலும் ஒரேயோர் உய்யும் வகையாய் உள்ளது.[21] என்று அருளியுள்ளமையை ஓர்க.

இந்திய ஒருமைப்பாடும் மனிதகுல ஒருமைப்பாடும் ஆன்மநேய ஒருமைப்பாடும் இன்றியமையாதன. ஒருமைப் பாடு உளதாய வாழ்க்கை உருவாக மக்கள் சில நல்ல மரபு களைப் பின்பற்றவேண்டும். மதம் என்பது வாழ்வதற்குரிய - வாழ்ந்துகாட்டுதற்குரிய சாதனம். மதம் என்பது ஆன்ம அனுபவத்திற்கு மட்டுமே உரியது. மதம் என்பது பிரசாரத் திற்கு உரியது அல்ல. பிரசாரம் என்பதே விரும்பத்தக்க ஒன்றல்ல. அதுவும் பிரசாரத்தையே வாழ்க்கைத் தொழிலாகக் கொள்வது வெறுத்து ஒதுக்கவேண்டிய ஒன்று. முன்னர்க் கூறியது போல, பெருமன்னன் அசோகன் பிரசாரப் போர்

வேண்டாம் என்றார். பிரசாரப் போருக்குப் பயமும் குரோதமுமே காரணம். அல்லது துணை பிரசாரப் போர் மனிதகுலத்திற்கு நேரக்கூடிய அபாயங்களையே அதிகரிக்கச் செய்கிறது. பிரசாரம் பிரச்சனைகளுக்குப் பரிகாரம் தேடித் தரக் கூடியதல்ல. இது தெளிவாகப் புலனாகிறது என்பது சிந்தனையாளர் கருத்துக்கள். இன்று உடனடியாகப் பிரசாரப் போருக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டும். மத சம்பந்தப் பட்ட சிந்தனைகள் அனுபவங்கள் அந்தந்த வழிபாட்டு நிறுவன வளாகங்களுக்குள்ளேயே பரிமாறிக்கொள்ளப் படுதல் வேண்டும். ஆன்மா நோக்கிச்செல்லும் பயணத் திற்குப் புறத்தே ஆரவாரம் ஏன்? ஆன்ம அனுபவங்கள் எல்லாச் சமயங்களிலும் உண்டு. அவைகளைக் கற்றும் கேட்டும் அறியும் முயற்சி தேவை.

சார்புகள் எந்தச் சூழ்நிலையிலும் அந்நியத் தன்மையை உருவாக்க அனுமதித்தல் ஆகாது. இறைவன் சார்பற்றவன். அளவற்ற அருளாளனாகிய இறைவன் எல்லா உலகமுமாக இருப்பவன். இறைவனுக்கு நாடு ஏது? சமயம் ஏது? சாதி ஏது? இறைவனுக்கு உலகமே பணிக்களம். வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாதவன் கடவுள்.

இன்றுள்ள சூழ்நிலையில் மனிதகுல ஒருமைப் பாட்டைக் காண்பதையே மதங்களின் உயர் நோக்கமாகக் கொள்ளவேண்டும். இவர் கடவுள் அவரே கடவுள் என்றும் விரும்பும் வம்புத் தன்மையுடைய இரண்டாட்டு விவாதங் களை ஒழித்திட முன்வரவேண்டும். மதங்களைச் சார்ந்த பீடங்கள் இந்த நிலைக்கு வராவிடின் உலகமாந்தர் இதயம் படைத்த மாந்தர் அறிவாளிகள் ஒன்றைச் செய்ய முன்வர வேண்டும். அந்த ஒன்றை உடனடியாகச் செய்ய முன்வர வேண்டும். அந்த ஒன்றுதான் 'புதிய மதம்' ஒன்றை உருவாக்குவது. விஞ்ஞானத்திற்கு அடுத்துச் செய்யவேண்டிய பெரிய பணி இதுவேயாம். அந்தப் புதிய மதம் இன்றுள்ள உலக மக்களின் உயிர்த்துடிப்பான கொள்கைகளின்

கூட்டமைப்பாக அமையலாம். இந்து மதத்தின் உயர் தத்துவமும் இஸ்லாமியத்தன் கடவுள் நம்பிக்கையும் கிறித்தவத்தின் தொண்டுணர்வும் பௌத்தத்தின் உயிரிரக்கமும் சமணத்தின் அகிம்சையும் ஒருங்கிணைந்ததாக அமையலாம். இந்தப் பணியைச் செய்யவேண்டிய தருணம் இதுவே. பல்வேறு மதக் கலாச்சாரங்களுக்கிடையே இணைப்பு ஏற்படவேண்டிய தேவையை இன்று உள்ளதுபோல் வேறு எப்போதும் அதிகமாக உணர்ந்ததில்லை. விஞ்ஞானச் சாதனங்கள் பூதபௌதீக உலகங்களை மிகமிக நெருக்கமாகக்கொண்டு வந்துவிட்டன. செவிக்கும் வாய்க்கும் ஓர் உடம்பில் எவ்வளவு தூரமோ அவ்வளவுதான் இன்றைய உலக இடைவெளி என்று தொலைபேசி செய்துவிட்டது; தொலைக்காட்சியின் சாதனையும் அப்படித்தான். அதுமட்டுமின்றி இன்று இந்த உலகை ஒரு நாளில் வலம் வரமுடியும் என்ற நிலை உருவாகிவிட்டது. ஆனால் மனித நெஞ்சங்கள் இணைக்கப் பெறவில்லை. மனித நெஞ்சங்களை இணைக்கும் பொறுப்புடைய மதங்கள் அந்தப் பணியைச் செய்யத் தவறியது மட்டுமன்றி அதற்கு நேர் எதிர்த் திசையில் மக்களிடையே அந்நியத் தன்மையை வளர்த்து வெறுப்பை, பகையை வளர்த்து இந்த உலகத்தை கெட்டப் போரிடும் உலகமாக ஆக்குவது வருந்தத்தக்க செயல். அதுமட்டுமல்ல. கண்டிக்கத் தக்கதும் கூட. மனிதகுலத்தை வெறுப்பில் ஆழ்த்திக் கலகம் செய்யும் மதங்கள் எதற்காக? இதற்கு மதங்களின்றியே வாழ்ந்துவிட்டுப் போகலாமே!

மனிதகுலத்தின் இன்றையத் தேவை என்ன? இன்றையத் தேவை மனிதத்துவமும் தயாவுணர்ச்சியுமே யாகும். 'வேதம்', குர்ஆன், புராணம், சாஸ்திரங்கள் யாவும் இப்பொழுது-சிறிது காலத்திற்கு அமைதியுற்றுக் கிடக்கட்டும். பிரத்யட்ச பகவான் ஆகிய தயை, பிரேமை ஆகியவற்றின் பூஜையானது நாட்டிலே நடைபெறட்டும். பேதபுத்தியே பந்தமாகும். அபேதபுத்தியே முத்தியாகும்.........அஞ்சற்க!

கு.XII.18.

அஞ்சற்க! மனிதர்களாய் இருப்பீர்களாக! கிருமிகளாய் அல்ல! இந்து முஸ்லிம் கிறித்தவர் உள்ளிட்ட சகல ஜாதிப் பிள்ளைகளையும் ஏற்றுக்கொள்வீராக!.........சமய தர்மத்திலே எது சர்வ ஜனப் பொருத்தமாகவும் சாதாரணமாகவும் உள்ளதோ அதையே போதிப்பீராக!"[22] என்ற விவேகானந் தரின் அறிவுரை இன்று உலகமாந்தர் அனைவரும் ஏற்று ஒழுகவேண்டிய ஒன்று.

நமது தாய்நாட்டின் ஒருமைப்பாட்டை மனிதகுல ஒருமைப்பாட்டைக் காப்பாற்றுவதே இன்றுள்ள ஒரே குறிக்கோள். இந்தியாவைக் குழப்பங்களிலிருந்து மீட்க வேண்டும். இன, சாதி மதப்போராட்டங்களைத் தவிர்ப் போம்! அறவே விலக்குவோம். இந்தியாவை வலிமையும் வளமும் உடைய நாடாக அமைப்பதற்குரிய உழைப்புப் போரில் ஈடுபடுவோம்! இந்துவின் மூளை, இஸ்லாமிய உடல், கிறித்தவ இதயம் பெற்றுக் கிளம்பிடுவோம்! உரமான நோக்க மும் உயர்வான உள்ளமும் கொண்டு இந்தப் புண்ணிய யாத்திரையை நாம் தொடங்கிவிட்டோம்! பயணம் நீண்டதாக அமையலாம். ஆனால் இலக்கை அடையும் வகையில் நமது பயணம் தொடர்க!

*ஒன்றுசேர்ந்து நம்மைக் காத்துக்கொள்வோம்!*
*ஒன்றுசேர்ந்து உண்போம்!*
*ஒன்றுசேர்ந்து வீரியம் பெறுவோம்!*
*ஒன்றுசேர்ந்து அறிவொளி பெறுவோம்!*
*எவரையும் வெறுக்காமல் இருப்போம்!*
*ஓம் சாந்தி, ஓம் சாந்தி, ஓம் சாந்தி!*

"திருவருள்', இதழ்–நவம்பர்–90

## அடிக்குறிப்புகள்

1. டால்ஸ்டாய் கட்டுரைகள் "வாழ்வும் மதமும்" பக். 78
2. கம்பராமாயணம்

3. திருநாவுக்கரசர் தேவாரம்—ஆறாம் திருமுறை பா. 386.
4. இஸ்லாம்—சர்வோதயப் பிரசுரம் பக். 69
5. விவேகானந்தர் ஞானதீபம் சுடர்—10. பக். 258
6. திருஞானசம்பந்தர் தேவாரம்
7. திருவாசகம்
8. கபீர் அருள்வாக்கு முன்னுரை பக். 11
9. திருவருட்பா ஆறாந்திருமுறை—அனுபவமாலை 69
10. விவேகானந்தர் ஞானதீபம் சுடர் 1 பக். 23
11. கபீர் அருள் வாக்கு, முன்னுரை பக். 25
12. இஸ்லாம் சர்வோதயப் பிரசுரம் பக். 24
13. தாயுமானவர் பாடல்—கல்லாலின். 25
14. விவேகானந்தர் ஞானதீபம் சுடர் 6 பக். 305
15. உலக மதங்கள் பக். 57
16. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்—இயற்பா திருவிருத்தம் 97
17. திருவருட்பா—ஆறாந்திருமுறை – ஆன்ம தரிசனம் 8
18. சோழர்கள் II கே. ஏ. நீலகண்டசாஸ்திரி பக். 844
19. விவேகானந்தர் ஞானதீபம் 10 பக். 304
20. விவேகானந்தர் ஞானதீபம் சுடர் 10 – பக். 305
22. விவேகானந்தர் ஞானதீபம் சுடர் 10 – பக். 258–259

# 3

# தமிழில் வழிபாடு (கொள்கை விளக்கம்)

## தமிழ்ப்பெரு மக்களுக்கு நமது பணிவான வேண்டுகோள்

*தமிழக ஆலயங்களில் தமிழிலும் வழிபாடு (அருச்சனை) செய்ய வசதி வேண்டும் என்று அருள் நெறியாளர்களாகிய நாம் பலகாலம் சொல்லி வந்துள்ளோம். தக்க சான்றுகளுடன் நம்முடைய கொள்கையைத் தெளிவாக இந்த வெளியீடு விளக்கும் என்று நம்புகிறோம்.*

*தமிழ் அருச்சனை இயக்கத்திற்கு ஆதரவு நம் மனத்தளவில் மட்டும் இருந்து பயனில்லை. நம் எண்ணத்தை மீண்டும் மீண்டும் வலியுறுத்துவதின் மூலமே நாம் வெற்றி காணும் காலத்தை விரைவில் நெருங்க இயலும்.*

*தமிழகத்து நற்குடி மக்கள் நாளும் நற்றமிழ் அருச்சனை செய்து திருவருள் நலம்பெற கேட்டுக் கொள்கிறோம்.*

# தமிழில் அருச்சனை

## நமது கொள்கை

உயிர்கள் துன்பத்தினின்று விடுதலை பெற்று அருளார்ந்த வாழ்வு பெறுவதே சமய வாழ்வின் விழுமிய பயன். இத்தகைய விழுமிய பயனைத் தரவல்லது வழிபாடேயாம். வழிபாடு என்பது தூய பேரருளின் வழி தன்னை வழிப்படுத்திக் கொள்வது - உயிரின் அனுபவத்துக்கு உரியதொன்று சிந்தனையைத் தூண்டிக் காதலைத்தந்து, கனிவையும் நல்கி, நெகிழ்ச்சியைக் கொடுத்து வழிபாட்டின் பயனைத் தரக்கூடியதாக வழிபாட்டு முறை அல்லது அருச்சனை இருக்க வேண்டும். தற்பொழுது உள்ள அருச்சனை முறையில் இருதயம் கலந்த வழிபாட்டுக்குப் பெரும்பாலும் இடமில்லை. தாய்மொழியில் வழிபாடு அல்லது அருச்சனை செய்தால், அவ்வழிபாடு இருதயம் கலந்ததாக, விழுமிய பயனைத் தரக்கூடியதாக இருக்குமென்று நம்புகின்றோம். ஆதலால், தமிழகத் திருக்கோயில்களில் விரும்பினால், தமிழிலும் அருச்சனை செய்ய வாய்ப்பு இருக்க வேண்டும் என்பது நமது கொள்கை. அதுபோலவே, தற்பொழுது இருந்து வருவது போலவே வடமொழியிலும் வழிபாடு அல்லது அருச்சனை நடத்தலாம். அது போலவே பிறமொழிகளிலும் செய்யலாம் என்பதே நமது கொள்கை. இக்கொள்கை மொழி வழியாகத் தோன்றிய தல்ல. வழிபாட்டின் முழுப்பயனைத் தரவேண்டுமென்ற கருத்துவழித் தோன்றியதேயாம் என்பதை உறுதியாகவும் தெளிவாகவும் கூறுகிறோம்.

## கொள்கைக்கு அரண் செய்கின்ற கருத்துக்கள்

1. எந்த இனத்திற்கும் அவற்றின் தாய்மொழிவழியே சமயம்தோன்றி வளர்ந்து வாழ்வளிக்குமே தவிர பிறமொழி வழியல்ல என்பது வரலாற்று நூல் முடிபு.

2. வழிபாட்டிற்குச் சிந்தனையே அடிப்படை. பெருபான்மையோர்க்குத் தாய்மொழிவழியே சிந்தனை தோன்றிச் சிறக்குமென்றால், வழிபாட்டிற்குத் தாய் மொழியின் தேவையைச் சொல்லவும் வேண்டுமோ?

3. ஒரு கால், அறிஞரானோர் சிலருக்குப் பிற மொழியில் சிந்திக்க முடியுமானால், அக்கருத்து உணர்வைத் தொடுவதில்லை. வழிபாட்டுக்கு உணர்வே உயிர்நாடி. உணர்வைத் தொட்டுப் பெருகிய அன்பினராக உருகி, வழிபாடு செய்யத் தாய்மொழியின் மூலமே முடியும்.

4. வழிபாட்டிற்குக் காதல், கனிவு, கசிவு இவ்வுணர்வுகளின் வழிப்பட்ட நெகிழ்ச்சி தேவை. இவ்வுணர்வுகளை, மெய்ப்பாடுகளை ஒருவர் தாய்மொழியிலேயே பெறமுடியும் என்பதால் தாய்மொழியில் வழிபாடு அவசியம்.

5. வழிபாடு என்பது உயிரைத் தூய அருளார்ந்த அனுபவத்திற்கு அழைத்துச் செல்கின்ற சாதனம். எந்த உயிர் அனுபவத்தை விரும்புகிறதோ அந்த உயர் மனம் கரைந்து கசிந்து வழிபாடு செய்ய வேண்டும். தூய்மையாக்கப்பட வேண்டிய பாத்திரத்தைத் தேய்த்தாலே பாத்திரம் தூய்மையாகும். உழுது பண்படுத்த வேண்டிய நிலத்தை உழுதாலேயே நிலம் பண்படும். அதுபோலவே, அனுபவ நிலையினின்றும் விலகியே, அருளார்ந்த அனுபவத்தைப் பெற வேண்டிய உயிர்களின் உணர்வை, வழிபாடு தொட்டு அவ்வுயிரின் புலன்களை ஞான ஏர்கொண்டு உழுதாலேயே அவ்வுயிர் திருவருளைப் பெறமுடியும். அதற்குத் தாய்மொழியே சாதனமெனக் கூறவும் வேண்டுமோ?

6. வழிபாடு அல்லது அருச்சனை என்பது ஓர் உயிர் இறைவனை நோக்கி அழுகின்ற அழுகையேயாகும். எவ்லோர்க்கும் தாய்மொழியில்தான் அழமுடியுமே தவிரப் பிற மொழியிலும் அழ முடியுமோ?

7. மந்திரங்களுக்கும், மறைகளுக்கும் மொழி வரையறை கிடையாது. நிறைமொழி மாந்தர்கள் (ஞானிகள்) அருளிச் செய்தனவெல்லாம் பொருளும் பயனும் நோக்கி மறைகளும் மந்திரங்களுமாகும்.

8. உலகில் எல்லா மொழிகளிலும் எல்லாச் சமயங்களிலும் மறைகளும் மந்திரங்களும் பழக்கத்தில் இருந்து வருகின்றன.

10. தமிழில் மந்திரங்கள் இருந்தன, இருக்கின்றன என்பதைத் தொல்காப்பியம்-திருக்குறள்-காஞ்சிப் புராணம்-திருமுறை கண்ட புராணம்-திருமந்திரம் முதலிய நூல்களின் வழியறிந்து உணர முடிகிறது. தமிழகத் திருக்கோயில்கள் பலவற்றிற்குத் திருவருட் பொலிவும் (சாநித்தியம்) பெருமையும், சைவ நாயன்மார்களின் திருப்பாடல்களாலும், ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களாலேயுமாம் என்பதை மறுப்பதற்கில்லை. அப்படியானால் அப்பாடல் களால் பெருமைபெற்ற திருத்தலங்களில் பாடல்களை ஓதி அருச்சனை செய்வதில் தவறென்ன?

11. கன்று பசியினால் தாய்ப்பசுவின் மடியை முட்டும்போது பால் சுரக்கும். கன்றாக முட்டாத போது நாம் பிடித்து முட்டச் செய்தாலும் பால் சுரக்கும். இறைவன் நாயன்மார்களின், ஆழ்வார்களின் பாடல்கேட்டு மகிழ்ந்து திருவுருவங்களை இடமாகக்கொண்டு வீற்றிருந்தருளி அருள் வழங்கினார். அதே பாடல்களை இன்று நாம் மனம் கலந்த அன்பினராக ஓதி அருச்சனை செய்தால் திருவருள் அனுபவம் எளிதில் கிடைக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

12. அருச்சனை என்பது இறைவனைப் புகழ்ந்து போற்றித் துதி செய்தலேயாகும். தாய்மொழியில் போற்றிப் புகழ்வதே எளிது. இறைவன் உலகத் தலைவன். எல்லா உயிர் களுக்கும் தலைவன். எல்லாச் சமயங்களுக்கும் தலைவன்.

அவனுக்கு எல்லா மொழிகளும் சொந்தம். எல்லா மொழிகளும் தெரியும். ஆனால் அவன் அருளைப்பெற வேண்டிய உயிர்களோ சிற்றறிவின. உயிர்களுக்குத் தெரிந்த மொழி இறைவனுக்குத் தெரியும். ஆனால், இறைவனுக்குத் தெரிந்த மொழிகள் உயிர்களுக்குத் தெரியாது. உயிர்கள், தனக்கும் இறைவனுக்கும் தெரிந்த ஒரு மொழியில் வழிபாடு செய்தால் பெரும்பயனைத் தரும்.

13. இறைவன் நம்முடைய தாய்மொழியாம் தமிழ் மீது காதலுடையவன்.

அ. தமிழ்ப்புலவனாக அமர்ந்து தமிழை ஆராய்ந்து கவிதையையும் செய்திருக்கிறான்.

ஆ. அவன் மட்டுமல்ல; அன்னை பராசக்தியும், செந்தமிழ் முருகனும் தமிழ் ஆராய்ந்திருக்கின்றனர்.

இ. சைவ நாயன்மார்கள் பாடிய பாடல்களைக் கேட்க வேட்கை மீதூர்ந்து காசும் பிறவும் இறைவன் கொடுத்துக் கொண்டிருக்கிறான்.

ஈ. சேக்கிழாருக்குப் பெரிய புராணம் செய்ய அடி எடுத்துக் கொடுத்த போது “உலகெலாம்” என்ற தூய தமிழ்ச் சொல்லை எடுத்துக் கொடுத்தான்.

உ. மாணிக்கவாசகர் பாடி திருவாசகத்தைத் தானே தன் கைப்பட எழுதியிருக்கிறான்.

ஊ. உமாபதி சிவாச்சாரியாருக்குக் கொடுத்த சீட்டும் தமிழிலேயாம்.

எ. ஆடுகின்ற அம்பலத்தரசு தென் தமிழும் அனுபவிக்கும் வேட்கையிலேயே தென் திசை நோக்கி ஆடுகின்றான். தென்திசை நோக்கி நகர்ந்து மிதிக்கின்றான்.

ஏ. அன்னை பராசக்தி கொடுத்த சிவஞானப் பாலை உண்ட, வேத நெறி தழைத்தோங்கப் பிறந்த

குழந்தை திருஞானசம்பந்தர் "தோடுடைய செவியன்" என்று தமிழிலேயே பாடியது. அப்படியானால் அன்னை பராசக்தி கொடுத்த சிவஞானம் தமிழ் வழிப்பட்டதுதானே!

மேற்கண்ட சான்றுகளால், இறைவன் தமிழ் விரும்பினன் என்ற கருத்து உறுதியாகிறது. அப்படியானால் தமிழ் அருச்சனை செய்து போற்றினால் அவன் திருவுளம் மகிழ்வான் என்பதற்கும் ஐயமுண்டோ!

14. சேக்கிழார் சிவபெருமான் வாயிலாக "அருச்சனைப் பாட்டேயாகும்." என்று அருளிச்செய்த சொற்றொடர் அருச்சனை என்பது திருமுறைப்பாடல்களினால் செய்வதேயாம்.

15. திருமுறைகளை ஓதி அருச்சனை செய்கிற வழக்கு இருந்தமையினாலேயே "அருச்சனைப் பதிகம்" என்ற அகத்தியர் தேவாரத்திரட்டில் "பந்துசேர்விரல்" எனத் தொடங்கும் திருஞானசம்பந்தர் பதிகமும்; "வேற்றாகி விண்ணாகி" எனத் தொடங்கும் திருநாவுக்கரசர் திருத்தாண்டகமும், "கொன்று" எனத் தொடங்கும் சுந்தரர் தேவாரமும் அமைந்துள்ளன.

16. நம்முடைய சமயத்திற்குப் பௌத்த சமண சமயங்களால் இடர் வந்துற்ற போது அவ்விடரிலிருந்தும் சைவத்தைக் காப்பாற்றித் தந்த ஞானப் பாடல்களாகிய திருமுறைகளை அருச்சனை செய்வதில் இழுக்கு என்ன? அப்படி செய்வதின் மூலம் நன்றியுடையவர்களாகவும் வாழ முடியுமே.

17. திருமுறைகள் இறைவனே தனது உரைகளாக உகந்து, ஏற்றுக் கொண்டவைகளேயாகும். அவைகளால் அருச்சனை செய்வது ஆண்டவனுக்கு மிகவும் உகந்தது.

18. திருமுறைகள் செந்தமிழ் மந்திரங்கள்; அவைகளில் ஒவ்வொரு எழுத்தும் சொல்லும்கூட மந்திரங்கள்; அவைகள்

செயற்கரிய செய்கைகளைச் செய்தன. அத்தகு செயற்கரிய செயல்களைச் செய்த திருமுறைகளால் அருச்சனை செய்தால் எண்ணிய பயனை எய்த முடியும்.

## வினாவும் விடையும்

1. தாய்மொழி வழிபாட்டுக் கொள்கையை மொழி விருப்பு வெறுப்பின்பாற் பட்ட கொள்கை, எனச் சிலர் கருதுகிறார்கள். தாய்மொழியில் வழிபாட்டுக் கொள்கை, மொழிவழி தோன்றியதல்ல. வழிபாடு நெஞ்சு கலந்ததாக இருந்து பூரணப் பயனைத்தர வேண்டும் என்ற வழிபாட்டு வழித்தோன்றிய கருத்தே. நமக்குத் தமிழில்தான் செய்ய வேண்டும் என்ற கொள்கை இல்லை. எம்மொழியிலும் வணங்கலாம். எல்லா மொழியாலும் தேவர்கள் இறைவனைத் துதித்ததாகத் திருஞான சம்பந்தர் தேவாரம் பேசுகிறது. ஆதலால் பல மொழிகளில் வழிபாடு செய்யலாம் என்று சொல்வதினால் மொழிவெறி உண்டாகாது. வடமொழியில் தான் வழிபடலாம் பிற மொழியில் கூடாதென்று சொல்லும் பொழுதே மொழிவெறி எனக்கருத முடிகிறது.

2. இப்படி மொழிவழிப்பட்ட எண்ணங்களினால் மக்களிடையே பிரிவினை சக்தி வளர்ந்து பிளவுகள் ஏற்படும் என்று சிலர் கருதுகிறார்கள். அதுவும் உண்மையல்ல. தன்மொழி மீது விருப்பும் பிறமொழியின் மீது வெறுப்புக் காட்டும் பொழுதே பிரிவினை தோன்றும்; பிளவுகளும் உருவாகும். அவரவர் தாய்மொழியில் அவரவர் விரும்புகிற வண்ணம் அருச்சனை செய்யலாம் என்று சொல்வதினால் பிரிவினையும் பிளவும் தோன்றுகிறதில்லை. இந்தியப் பேரரசு நாட்டின் ஆட்சிக்கென்று ஒரு பொது மொழியைத் தேர்ந்தெடுத்தாலும், அந்தந்த மாநிலங்களின் தேசீய மொழிகள் அந்த மாநிலங்களின் ஆட்சி மொழியாக ஆக்கியதின் மூலம் இந்தியாவின் ஒற்றுமையை உருவாக்க

நினைக்கிறது. அது போலவே, வழிபாட்டுத் துறையில், பரவலாகச் சமஸ்கிருதமும், பிராந்திய எல்லையில் விரும்பியவர்களுக்குத் தாய்மொழியும் இருக்க வேண்டும் என்று சொல்வதினால் தேசீய ஒற்றுமை பாதிக்கக் கூடியதில்லை.

3. திருக்கோயில் நடைமுறைகள் சிவாகமங்களின் வழி நடைபெறுகின்றன. அதற்கு மாறாக, தமிழில் செய்யக்கூடாது என்று சிலர் சொல்லுவர். அதுவும் உண்மை அல்ல. இன்று அருச்சனைக்குப் பயன்படுகிற 'அஷ்டோத்திர' 'சகஸ்ர நாமங்கள்' சிவாகமங்களுக்கு உரியனவல்ல. மிகப் பிற்காலத்தில் வடமொழிப் புராணங்களிலிருந்து புகழ் மொழிச் சொற்றொடர்களாகத் தொகுக்கப்பெற்று அருச்சனைக்கு உரிமையாக்கப் பட்டனவேயாம். ஆதலால் இன்றைய அருச்சனை முறையும் சிவாகமங்களுக்கு உடன் பாடில்லாதனவேயாம். எப்படி வடமொழி சொற்றொடர்பை அருச்சனைக்கு உபயோகப்படுத்திக் கொண்டோமோ, அப்படி திருமுறைப் பாடல்களையும் அப்பாடல்களிலிருந்து தொகுக்கப்பெற்ற சொற்றொடர்களைக் கொண்டு அருச்சனை செய்வது ஏற்றுக் கொள்ளத்தக்கதேயாகும்.

4. ஓம், ஹாம், ஹிறீம், வௌ ஷட் ஆகிய மந்திரங்கள் வடமொழியைச் சார்ந்தனவென்று சிலர் சொல்லுகின்றனர். அதுவும் நிறைவான கருத்தல்ல. ஓம் என்பது தமிழ் மந்திரமே என்பது பல பேரறிஞர்களின் முடிவு. ஹாம் ஹிறீம், ஹௌம், போன்றவை எம்மொழியையும் சார்ந்த மந்திரங்கள் அல்ல. மொழிகடந்த ஒலிக்குறிப்புகளேயாம்.

5. திருவைந்தெழுத்து வடமொழி என்று சிலர் சொல்லுவர். அதுவும் நிறைவான கருத்தல்ல. திருவைத்தெழுத்து தமிழ்மந்திரமே என்று சைவசித்தாந்த சண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகம், மறைமலையடிகள் ஆகியோர் தெளிவாக வரையறுத் துள்ளார்கள். எனினும், ஒரே மந்திரத்தை இருமொழியினர்

தம்தம் மந்திரமென்று சொல்லிக் கொள்வதில் நன்மையே தவிர இழப்பொன்றுமில்லை. திருவைத்தெழுத்து எம்மொழி மந்திரமாயினும் ஆகுக.

6. வழக்கத்தில் இருக்கின்ற முறையை மாற்றக்கூடாது என்று சிலர் சொல்லுகிறார்கள். காலத்திற்குக்காலம் உண்மை மாறுவதில்லை. ஆனாலும், நடைமுறைகளும் பழக்க வழக்கங்களும் மாறி வருவதை அறிஞர்கள் உணர்வர். தாயுமானாரும் "காலமொடு தேசவர்த்தமானமாகிக் கலந்து நின்ற கருணைவாழி" என்றார். இறைவன் யுகத்திற்கு யுகம் வெவ்வேறு பெயர்களும் வடிவங்களும் கோலங்களும் ஏற்று அருள் வழங்கி இருக்கிறார் என்பது வரலாறு. அப்படியானால் நடைமுறையை மாற்றக்கூடாது என்பது பூரண விவாதமாகமாட்டாது. தொடக்க காலத்திலிருந்து இன்றிருக்கும் நிலையிலேயே வழிபாடு, நடந்து வந்ததுவென்று சொல்ல முடியாது. மிக அண்மைக்காலம் வரையில், எல்லோரும் மூர்த்தியைத் தீண்டி, திருமுழுக்கு செய்து, மலர்தூவி வழிபாடு செய்கின்ற முறை இருந்திருக்கிறது என்பதைத் திருமுறைகளின் மூலமும், புராணங்களின் மூலமும் அறிந்து கொள்ள முடிகிறது. பின்னர் வழிபாட்டு முறையில் ஒழுங்கு உண்டாக்குவதற்காகவே, இப்பொழுதுள்ள நடைமுறைகள் கொண்டுவரப்பட்டுள்ளன.

தமிழ் வழிபாட்டுமுறை மிகத் தொன்மையானது என்பது நமது கருத்து. நாம் அதைப் புதியதாகக் கருதவில்லை. அப்படியே புதியதாக வைத்துக்கொண்டாலும், நாம் இருக்கிற முறையை மாற்றச் சொல்லவில்லை. இருக்கும் முறையோடு தமிழிலும் அருச்சனை செய்கின்ற முறையை இணைப்பாகச் சேர்த்துக் கொள்ளவே சொல்லுகிறோம்.

7. இன்று திருக்கோயில்களில், திருமுறைகளுக்குரிய இடம் கொடுக்கப் பெற்றிருப்பதாகச் சிலர் சொல்லு கிறார்கள். திருமுறைகளுக்கு உரிய இடம் இருக்கிறதா என்ற கேள்வி அல்ல இங்கு. தமிழில் வழிபாடு செய்ய வேண்டும்

என்ற கோரிக்கை திருமுறைகளுக்கு உரிய இடத்தை வாங்குவதற்கென்று எழுந்ததல்ல. வழிபாடும் அருச்சனையும், உரிய பயனைத்தர தாய்மொழியில் வேண்டும் என்பதே. இதை நோக்க இவ்விவாதம் பயனில்லாமல் போகின்றது. மேலும் திருமுறைகளுக்கு எத்தகைய இடம் கொடுக்கப் பெற்றிருக்கிறதென்பதையும் ஆராய்ச்சி செய்வோம். உள் வீட்டில் ஒருவரை இருத்தி உணவிட்டு, அதே நேரத்தில் இன்னொருவரை வீட்டு வெளியே நிறுத்தி உணவிட்டால், வெளியிலிருந்து உணவு பரிமாறப்பட்ட ஒருவன் தன்மானம் உடையவனாக இருந்தால் உணவுதான் கிடைத்திருக்கிறதே என்று அமைதி கொள்வானா? அல்லது அமைதி கொள்ளத்தான் முடியுமா? இறைவன் எங்கே? எங்கே? என்று தேடி அலைந்த-அலைந்து கொண்டிருக்கின்ற சமஸ்கிருதம் இறைவனுக்கு அண்மையில் பூசனை மொழியாக இருக்க, இறைவன் இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன் என்று கண்டு எழுதி காட்டித் தந்த தெய்வத்தமிழ் வெளியிலும் அதுவும் ஒரு உபசாரப்பொருளாக இருப்பதைத் திருமுறைகளுக்கு உரிய இடம் என்று கருதமுடியுமா?

8. சமஸ்கிருதத்தில் இருப்பவைகளை மொழிபெயர்த்து அர்ச்சனை செய்வதனால் சுவைக்காது என்று சிலர் சொல்கிறார்கள். நாம் சமஸ்கிருதத்திலுள்ள அருச்சனைகளை மொழிபெயர்த்து அருச்சனை செய்ய வேண்டும் என்ற நோக்குடையோமில்லை. இயல்பிலேயே, திருவருள் நலம்பெற்ற ஞானப்பாடல்களாக இருக்கும் திருமுறைகளைக் கொண்டும், அவைகளிலிருந்து தொகுக்கப்பெற்ற அருச்சனைக் கொத்துக்களைக் கொண்டும் அருச்சனை செய்ய வேண்டும் என்பதே நமது கொள்கை. ஆதலால் மொழிபெயர்ப்புச் சிக்கல் எழ இல்லை.

## செய்முறை

தமிழகத் திருக்கோவில்களில் விரும்புகிறவர்களுக்குத் திருப்பதிக அருச்சனையும், தமிழில் அருச்சனையும் செய்துதரப்பெறும் என்ற அறிவிப்பு தரவேண்டும்.

## திருப்பதிக அருச்சனை

அ. சைவ பன்னிரு திருமுறைகளில், எந்த ஒரு பதிகத்தையாவது அல்லது பகுதியையாவது அப்படியே ஓதி அருச்சனை செய்வது திருப்பதிக அருச்சனையாகும்.

ஆ. திருமுறைப்பாடல்களிலிருந்து தொகுக்கப்பெற்ற சொற்றொடர்களை வைத்து நூற்றெட்டு, ஆயிரத்தெட்டு என்று தொகுக்கப் பெற்ற அருச்சனைக் கொத்துக்களைக் கொண்டு செய்வது தமிழ் அருச்சனையாகும்.

## குறிப்பு:—

கடையம் சு.சு.தெ. அருணந்தி சிவாச்சாரியார் அவர்கள் 1946ல் தொகுத்து வெளியிட்டுள்ள திருநெறி அருச்சனைக் கொத்தையும் திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் கழகப்புலவர் ப. இராமநாதபிள்ளையைக் கொண்டு வெளியிட்டுள்ள “மலர் பாட்டு வரிசை” நூலையும் பயன் படுத்தலாம்.

இ. அருச்சனைப் பதிகத்தை அல்லது அருச்சனைக் குரிய மொழிகளை அருச்சகரே பயின்று ஓதிச் செய்வது வரவேற்கத்தக்கது. அதற்குரிய காலம் வரும்வரை எப்படி சமஸ்கிருத அருச்சனையை அத்யானபட்டர் சொல்ல அருச்சகர் அருச்சிக்கிறாரோ, அதுபோல, திருமுறை ஆசிரியர் ஓத, அருச்சகர் அருச்சிக்கலாம்.

# 4

# ஆசீர்வாதப் பேருரை

## சென்னை சைவ சித்தாந்த சமாஜம்
## 46–வது ஆண்டு விழா

### சித்தாந்தச் சிவநெறிச் செல்வர்களே!

*சைவ சித்தாந்த மகாசமாசம் இந்த ஆண்டு விழா நிகழ்ச்சி குன்றக்குடியில் நிகழ்ந்தது குறித்து மகிழ்ச்சி. அம்மகிழ்ச்சியில் திளைக்கின்ற உள்ளத்தோடு ஒரு சில சொல்ல விரும்புகின்றோம்.*

### சமயத்தின் தோற்றம்

*உலகியல் பொதுவாக, துன்பச் சூழலிலேயே உழலுகின்றது. இத்துன்பச் சூழலிலும், இன்பதைக் காணமுயல்வது அறிவுடைமை. இதனையே,*

*"இன்னாதம்ம இவ்உலகம்*
*இனியகாண்க இதன் இயல்புணர்ந்தோரே"*

*என்று, புறநானூறு பேசுகின்றது. இன்பத்திற் கிடையூறாக, துன்பத்திற்குக் காரணமாக-நம்மை ஒருநோய் பிடித்துள்ளது. அந்த நோய் யாது? அந்நோய்க்கு மூலகாரணம் யாது?*

அந்நோயை நீக்கிக் கொள்ளும் வகை யாது? என்றெல்லாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இக்கருத்தினையே, தமிழ்ப்பெரு நாவலராம் வள்ளுவர்,

"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"

என்று கூறி விளக்குகிறார். நோயினையும், அதன் காரணத்தையும் அது தீரும் உபாயத்தையும், சொல்லுவதே சமயம். எனவே துன்பத்தின் அழிவிலே-இன்பத்தின் தோற்றத்திலே அரும்புவது சமய உணர்ச்சியும் வாழ்க்கையுமாம்.

## சித்தாந்தச் செந்நெறி

தமிழகத்தின் தவநெறி சைவத்திருநெறி. தொன்மை யான பெருநெறி சைவசித்தாந்தத் திருநெறியேயாம். இத் திருநெறி, மிகப்பழமை உடையதாகவும், உலகப் பொது நெறியாகவும் காட்சியளிக்கிறது.

இது அது என்ற பிணக்குகள் இன்றி, பரந்துபட்ட நிலையில், விரிந்த மனப்பான்மையுடன், அமைந்துள்ள சமயம் சைவம் ஒன்றேயாம். அத்தன்மையினாலேயே, அது உலகப் பொது நெறியாக அமையக்கூடிய தகுதியைப் பெற்றுள்ளது. உலகெங்கும் ஒரு காலத்தில் சைவம் பரவி இருந்தது. சிந்து நதிக்கரையில், மொஹஞ்சதரோ, ஹரப்பா என்னும் இடங்களில், அகழ்ந்தெடுக்கப் பெற்ற புதை பொருள்கள், சைவத் திருநெறியின் தொன்மைக்கு எடுத்துக் காட்டாகும். சிவலிங்கங்களும், அம்மை, கூத்தப்பிரான், தென்முகக் கடவுள் முதலிய திருவுருவங்களும், பிறவும் கிடைத்துள்ளன. இவைகளிலிருந்து, அங்கு கி.மு. நாலாயிரத்திற்கு முன்னரே சைவத் திருநெறி நிலவி இருந்தது என்பதை உணரமுடிகிறது. சிந்துநதி, புதைபொருள்களை ஆராய்ந்த ஓர் அறிஞர்-சர்ஜான் மார்ஷல் (Sir John Morshal),

'Saivism has a history going back to chalcolithic age or perhaps even further still, and it thus takes its place as the most ancient living faith in this world.'

என்று சைவத்தின் பழமையைக் குறிப்பிடுகின்றார். இங்ஙனம், சைவம் காலத்தால் பழமையாகவும், உணர்ச்சி யாலும் வளர்ச்சியாலும் நலங்கள் மல்கிப் புதுமையாகவும், காட்சி அளிக்கிறது.

## சித்தாந்த சமயத்தைப் பற்றிய புகழுரைகள்

திருவாசகத்தில் ஈடுபட்டு அகம் குழைந்த அன்பராகிய போப்பையர் அவர்கள், சைவசித்தாந்தக் கொள்கை தமிழரது பேரறிவின் சிறந்த பயன் என்று பாராட்டுரை கூறியுள்ளார். கௌடி என்னும் பாதிரியாரும்,, சைவசித்தாந்தத்தின் சீர்மையைச் செப்பமுறக் கூறியுள்ளார். அவர் கூறுவதாவது, 'சைவசித்தாந்தக் கொள்கை தொன்மை நலம் பல அமையப் பெற்றது', என்பதாம்.

சமயக் கருத்துக்களில் மிகப் பழமையானவை யாவும், தென்னிந்தியாவின் இச்சமயத்திற்குத்தான் உரிமையுடையன. இதுவே தமிழினத்தாரின் பண்டைச் சமயமாகும். ஏனைய வெல்லாம் பின் வந்தனவாகவும், பிற சமயத்திற்குரியன வாகவும் காணப்படுகின்றன. அணிபெற அமைந்த சமய மாயும், நம்பிக்கைக்கும் நல்வாழ்வுக்கும் எடுத்துக்காட்டாக வும். இருப்பதில் சைவசித்தாந்தமே தென்னிந்தியாவில் உள்ள சமயங்கள் யாவற்றிலும் சிறந்ததாகும். இந்தியா முழுவதிலுங் கூட இந்தியரது நினைவின் சீர்மைக்கும் உயர்தர வாழ்க்கைக்கும் எல்லையாகும் பெருமை படைத்தது என்று கூறுதல் மிகுதியாகாது. நம் நாட்டு அருளாசிரியப் பெரு மக்களும், சைவத்தின் சிறப்பினைப் பலபடப் பாராட்டிப் பேசியுள்ளனர். "சைவத்தின் மேற் சமயம் வேறில்லை" என்றும், "ராஜாங்கத்தமர்ந்து வைதீக சைவமே" என்றும்

அவர்களால் பாராட்டப் பெற்றுள்ளது. நால்வர் பெருமக்கள் "திருநெறி" என்றும், "செந்நெறி" என்றும் பாராட்டுரை பகர்ந்துள்ளார்கள்.

## சித்தாந்தத்தின் சீர்மை

உலகில் பயில்கின்ற சமயங்கள் பல. அவை, பலவும் ஒன்றோடொன்று ஒவ்வாது தம்முள் மாறுபட்டுள்ளன. சைவசித்தாந்தக் கொள்கை எச்சமயத்தினரோடும் முற்றிலும் பிணக்குக் கொள்ளவில்லை. அவ்வவற்றின் கொள்கைகளை யெல்லாம், சோபான முறையில் வைத்து, அவற்றில் மேம்பட்ட நிலையைப் போதிக்கின்றது. சமய உலகின் குழப்பங்கள் தலைகாட்டாத உயர்ந்த நெறியில் சைவம் இலங்குகின்றது.

"வேதாந்தத்தின் தெளிவாம் சைவசித்தாந்தத்திறன் இங்குத் தெரிக்கலுற்றாம்' என்றார் உமாபதி சிவம். சித்தாந்தம் என்ற சொல்லுக்கே முடிந்தமுடிபு என்பதுதான் பொருள். வழக்கில் சித்தாந்தம் என்றால், அது சைவத்தையே குறிக்கிறது.

"சித்தாந்தமே சித்தாந்தம்; அவைக்கு வேறானவை பூர்வபக்ஷங்கள்'' என்பது இரத்தின திரயம். அந்தம் வேதாந்தம்; அந்ததரம் சித்தாந்தம் ஆகலின், அதனைப் பெற்றோரது பெருமை கூறுவார், "சிவமென்னும் அந்தர என்றார்" என்பது சிவஞான பாடியம்.

## சைவ சாத்திரக் கொள்கை

சைவம் முப்பொருளுண்மையைப் பேசுகின்றது. முப்பொருளாவன, இறை, உயிர், தளை, என்பனவாம். இவற்றின் உண்மையினையும், இலக்கணத்தையும், தெளிவுற எடுத்துப் பேசுகிறது சைவம். இவ்வுலகம் உள்பொருள், தோற்றம், நிலை, இறுதியாகிய முத்தொழிற் படுகின்றது. இங்ஙனம் முத்தொழிற் படுகின்ற உலகம் சடப் பொருள்.

சடப்பொருள் தானாகத் தொழிற்பட முடியாது. மண்தானே தன் வடிவத்தைக் குடமாக மாற்றிக் கொள்ள மாட்டாது. அதனை அவ்வாறு மாற்றக் குயவனொருவன் வேண்டும். அவ்வாறே உலகின் காரண வடிவத்தைக் காரிய வடிவமாக மாற்றுவதற்கும், அவ்வடிவில் அதனை வளர்ப்பதற்கும், மீள அதனைக் காரண வடிவமாக ஒடுக்குவதற்கும் சேதனனாகிய கர்த்தா ஒருவன் வேண்டும். இக்கருத்துப் பற்றியே மெய்கண்டாரும்,

*"அவன் அவள் அது எனும் அவைமூவினைமையின்*
*தோற்றிய திதியே ஒடுங்கிமலத்துளதாம்*
*அந்தம் ஆதி என்மனார் புலவர்"*

என்ற முதற் சூத்திரத்தில், அவை தோன்றிய என்னாது, 'அவை தோற்றிய' என்று பிறவினையில் ஓதியருளினர். உலகிற்கு முதற்காரணம் மாயை. மாயை என்ற சொல்லில் மா தோற்றத்தையும், யா ஒடுக்கத்தையும், உணர்த்தும். இங்ஙனம் முத்தொழிற்படுகின்ற உலகிற்குச் சர்வசங்காரனே கர்த்தா. அக்கர்த்தாவே அரன் அவனையே, சைவ சாத்திரம், அந்தம் ஆதி என்று பேசுகிறது. "அந்த" மென்பது அந்தமாகிய ஒடுக்கத்தைச் செய்யும் அரன் என்பதையும், ஆதி என்பது அவனே முதன்மையுடையவன் என்பதையும் உணர்த்தும்.

## உயிரியல்பு

உயிர்கள் எண்ணிறந்தன. நித்தியத்தன்மை உடையன. உயிர்கள் அநாதியே, பாசச் சார்புடையன. உயிர்களை அநாதியே பந்தித்திருப்பது ஆணவமாம். வியாபமாய் உள்ள உயிரை அணுத்தன்மை அடையச் செய்வதாலே ஆணவம் எனப்படும். இப்பாசத் தொடர்பிலிருந்து விடுதலை பெற்றுத் திருவருள் இன்பத்தை நுகர்ந்து இன்புறுதலே உயிர்களின் இறுதி நிலையாகும். இந்த நிலையையே 'பேரா இயற்கை' என்பர் வள்ளுவர். சைவப் பெருநூல்கள் திருவடிப் பேறு

என்றும், முத்தி என்றும் பேசும். பசுக்கள் பாசத்தினை விட்டுப் பதியினை அடைதல் முத்தி என்று திறம்படக் கூறுவர் சிவஞானமுனிவர்.

## சைவசாதனங்கள்

சைவத்தின் சாதனங்கள் அனபுள்ளத்தை அடிப்படையாகக் கொண்டவை. சைவசாதனங்கள், சரியை, கிரியை, யோகம், ஞானம் என நால்வகைப்படும். இவைகள் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடையன. அரும்பு, மலர் பிஞ்சு, காய் என்று தொடர்பினை விளக்கிக் கூறுவர். தாயுமான அடிகள், சித்தத்தைச் சிவமாக்கிச் சிவஞானப் பெருவாழ்வைக் கொடுக்கும் இயல்பு, சரியை முதலிய மூன்றற்கே உரியதாகும். வேதவேள்விகள் நிலையற்ற காமியங்களை நல்கும். வேள்வி முதலாயின ஞானத்தைப் பயவாமையோடன்றி, தீவினைபோல அது நிகழவொட்டாது தடைசெய்து நிற்றலும் ஆம். ஆதலால் தீவினைகள் இரும்பு விலங்கும் வேதத்துள் விதித்த வேள்வி முதலிய நல்வினைகள் பொன் விலங்கும் போல உணரற் பாலனவாம். வேள்வி முதலியவற்றாலாய இன்பம் முன் பசித்துண்டு பின்னும் பசிப்பானுக்கு அவ்வுண்டியால் வரும் இன்பத்தைப் போலும். அவ்வேள்வி முதலியன போல அநுபவ மாத்திரையாற் கெடுதலின்றி மேன்மேல் முறுகி வளர்வனவாகிய சரியை கிரியை யோகங்களால் எய்தப் படும் சிவஞானம் பசித்து உண்டு பின்னும் பசித்தலில்லாத தேவர்களுக்கு அவ்வமுத உண்டியாலாய பயனைப் போலும் அவ்வமுத உண்டி நரைதிரை மூப்பின்றி நிலைபெறுதலாய பெரும்பயனைத் தருவதோடன்றி, பசி தீர்தலாகிய அவாந்தரப் பயனையும் தருதல்போல், சரியை முதலியனவும், சில ஞானத்தைத் தருவதோடன்றித் தத்தம்பத முத்தியாகிய அவாந்தரப் பயனையும் பயப்பனவாம். இத்தகு முத்தியாகிய அவாந்தரப் பயனையும் பயப்பனவாம். இத்தகு நெறிகளில் நின்றொழுகி,

நல்வாழ்வு வாழ்ந்து, பேரின்பப் பெருநிலையை எய்துதலே மக்கள் வாழ்க்கையின் குறிக்கோள்.

## குருவழிபாடு

சைவத் திருநெறியில் குருவழிபாடு முதன்மையாகவும் சிறப்பாகவும் எடுத்துப் பேசப் பெற்றுள்ளன. சிவம் உயிர் களுக்கு அதனியல்பை, சிறப்பியல்பை உணர்த்தும். சிவம் உயிர்களுக்கு மூன்று வேறு விதங்களாய் உணர்த்தும். இருமலமுடைய பிரளயாகலருக்கு அது போதாது. அவ்வுயிர் களுக்குச் சிவன் தன் இயற்கை வடிவோடு முன் நின்றுணர்த் தும். இவ்வுபதேசமும் மும்மலத்தவருக்குப் போதாது. இவர்களுக்கு நூல்முகமாயும், அநுபவமுகமாயும், உணர்த்த வேண்டும். இவர்களுக்கு உணர்த்துவதற்காகச் சிவம் குருவடிவத்தில் தங்கி நின்று நூல் முகத்தாலும் அநுபவமுகத் தாலும் உணர்த்தும். இங்ஙனம் சிவம் கருணையுள்ளங் கொண்டு நம்மனோர் போல எழுந்தருளி, நமது வாழ்க்கையைச் சிவஞானப் பெருவாழ்வாக ஆக்குகின்றது. இக் கருத்தினை நகர்த்தார் குலத்துதித்த சிவஞானச் செல்வ ராம் சொக்கலிங்க ஐயா அவர்கள், நமது திருவண்ணாமலை ஆதீன பிரதிஷ்டாபகர்களாகிய பிரதம பரமாசாரிய குரு தெய்வசிகாமணி சுவாமிகளைத் துதிக்கின்ற பாடல் ஒன்றிலே விளக்கிக் காட்டியுள்ளார்கள். மும்மலத்தவருக்கு அருள் பாவிப்பதற்காகச் சிவபெருமானே மாந்தர் உருக்கொண்டு, அருணையில் அமர்ந்தார். மக்கள், மனிதன்தானே என்று எள்ளி இடர்ப்படாவண்ணம், காப்பதற்காகத் தமது இயற் பெயரையே கொண்டார். தன்னைச் சார்கின்ற சீவர்களைச் சிவமாக்குகின்றர். அங்ஙனம் செய்வதினாலே மாந்தரது விகார உணர்ச்சியை எல்லாம் அழிக்கின்ற தேவ சிகாமணி என்று வாழ்த்துகின்றார்கள்.

**"அவனியில் மும்மலர்க்கருள அவருருக்கொண்டு**
**அருணையில் வந்தமர்ந்தும் ஏனோர் புவியுரு**

*என்றுள்கி யிடர்ப்புகா வகை தன் சீர்ப் பெயரே*
*புனைந்துதற்சேர், பலர் பெயர் முன்விகாரமுறப்பண்ணி*
*அவர் விகாரமெலாம் படுக்கும் வாய்மைச், சிவகுரு*
*சிகாமணியாய்த் திகழ்தேவசிகாமணிதாள் சென்னி*
*வைப்பாம்."*

என்பது பாடல். இத்தகைய தெய்வசிகாமணி நம்மனோர்க்கு அருளுள்ளங்கொண்டு வழங்குகின்ற சுகம் சுத்தாத்துவித சுகமேயாம். "நன்றென்ற இத்தாந்த மா மருணைத் தேவசிகாமணி செய் சுத்தாத்துவித சுகம்" என்று குமாரசாமி முனிவரின் கூறியது சுத்தாத்து வித சுகம் மட்டுந்தானா! தெய்வசிகாமணி குருமூர்த்திகளின் திருவடிகளே, சிவபோக மெய்ஞ்ஞானத்தின் குரு என்றெல்லாம் பேசப் பெறுகின்றது.

*"பருவமழியாஞ் சிவபோக மெய்ஞ்ஞானப்*
*பலனுயிர்க்குங்*
*கருவழியாமெனக் காண் நெஞ்சமே*
*யொருகா லையினுந்*
*திருவழியா துறு பேரின்ப வாழ்வு தினங் கொடுக்கும்*
*திருவருணாசலத் தேவசிகாமணி சிற்குருவே"*

இத்தகு அருள் நலம் கனிந்த ஆசாரியப் பெருந்தகையின் திருவடி மலர்களை வந்தித்து வாழ்த்துகின்றோம்.

இதுவரையில், துன்பத்தை இன்பமாக்கிக் கொள்ளு கின்ற எண்ணத்திலே- முயற்சியிலே சமய உணர்ச்சியும் வாழ்க்கையும் அரும்புகின்றன என்பதையும், உலகின் பல்வேறு சமயங்களுக்கெல்லாம் சைவம் மிகப் பழமையான தென்பதையும், சைவத் திருநெறி பரந்த மனப் பான்மையுடன் வேற்றுமைகள் எல்லாங் கடந்து முடிந்த முடிபாக விளங்குகின்றது என்பதையும், சைவம் இறை உயிர் தளை என்ற முப்பொருள் இயல்பை விளக்கி, உயிர்கள் தளையி னின்று விலகி இறையைச் சார்வதே சமய வாழ்க்கையின்

பயன் என்பதையும் இந்தச் சிவானந்தப் பெருவாழ்வைச் சரியை முதலிய மூன்று நெறிகளால் அடைய முடியும் என்பதையும், அங்ஙனம் அடைய மும் மலத்தாராகிய சகல ஆன்மாக்களுக்கும் இறைவனே குருவடிவில் தங்கி உபதேசிக் கின்றான் என்பதையும், அத்தகைய அருண்ஞான குருமூர்த்தி களே திருவண்ணாமலை ஆதின தாபகர், ஸ்ரீமத் தெய்வசிகாமணி குருமூர்த்திகள் என்பதையும், அவர்களது திருவடிமலர்கள் சிவஞானப் பெருவாழ்வையும், ஒருநாளும் அழியாத வாழ்வையும் அளிப்பன என்பதையும், திருவருள் உணர்த்த உணர்த்தினோம்.

## ஆசியுரை

அருள்ஞானத் தெய்வசிகாமணியின் உரிமைப்பதி அருணை என்று பேசப்பெற்றாலும், இன்று மூர்த்திகளது திரு வருளில் திளைக்கின்ற பேறு இந்த மாவட்டத்து மக்களுக்கே கிடைத்துள்ளது. அதன் பயனாகவே இன்று சமாஜ ஆண்டு விழாப் பேரவையை இங்கே - குன்றக்குடியில் கூட்ட முடிந்தது. சமரசத் தொண்டரும் நமது அன்பிற்குரியாரும் ஆகிய திரு. ஜி. கல்யாணம் பிள்ளை அவர்களின் விருப்பத்திற் கிணங்க இங்கு சமாசத்தை நடத்த எண்ணினோம்.' அதனைச் செயல் முறையில் கொண்டுவர அன்புணர்ச்சியும் தொண்டுவளர்ச்சி யும் உள்ள அன்பர்களது குழு ஒன்று அமைத்து அவர்களை இப்பணியில் ஈடுபடச் செய்தோம். அக்குழுவின் தலைவராகச் சைவ உணர்ச்சியில் தலை சிறந்தவரும், கலைவளர்ச்சியில் ஆர்வங் கொண்டவரும் உலகம் சுற்றிப் பேரனுபவம் பெற்றவரும் நமது தூய அன்பிற்குரியவருமாகிய கோட்டையூர், க.வீ. அள. மு. இராமநாதன் செட்டியார் அவர்கள் அமைந்தார்கள். சிறந்த அரசியல் தொண்டரும் நமது ஆதின உழுவலன்பரும் சிறந்த பண்பாட்டினருமாகிய சா. கணேசன் அவர்களது அருமை முயற்சி இந்த விழாவிற்குப் பெரிதும் துணையாக இருந்தது.

இன உள்ளம் படைத்தவரும் உழைப்புணர்ச்சியிற் சிறந்தவரும், நமது ஆதினப் பணிகளிலே பங்குகொண்டு விளக்கமுறச் செய்கிறவருமாகிய இளவல் திரு. வீர. சா. மெய்யப்பன் அவர்களுடைய அயராமுயற்சி மறக்கற் பாலதன்று. இயற்கையாகவே, நமது ஆதீனத்தின் பணிகளைத் தமது பணிகளெனக் கருதிச் செயலாற்றும் நமது புரவலர், சேவு மெ. மெய்யப்பச் செட்டியார் அவர்களது பணி பாராட்டுதற்குரியது. இவர்களுக்கும் இவர்களோடு ஒன்றி நின்று பல்லாற்றாலும் பணிபுரிந்த ஏனைய அன்பர்களுக்கும் சீரும் செல்வமும் வாழ்நாளும் பெருக, அண்ணாமலை அண்ணலின் திருவருளைச் சிந்திக்கின்றோம். சமாசமும், சமாசத்து அன்பர்களும், பல்லாண்டு வாழ்ந்து சைவத்தின் ஆக்கத்திற்குப் பணிசெய்யத் திருவருள் துணை செய்வதாகுக.

வளர்க சைவம்!—வாழ்க சமாஜம்!

*சீர்வாழி தெய்வ சிகாமணி; சீர்அருணை*
*ஊர்வாழி; வாழி உலகெல்லாம்;—கார்வாழி*
*சித்தமிழ்தம் ஆனசிவஆகமம் வாழி செழு*
*முத்தமிழும் வாழி முறை.*

5

# தலைமையுரை

## ஈரோடு சைவர் மாநாடு — 24–4–53

*"கண்ணார் நுதலோய் கழலிணைகள்*
*கண்டேன் கண்கள் களிகூர*
*எண்ணா திரவும் பகலும்நான்*
*அவையே எண்ணும் அதுவல்லால்*
*மண்மேல் யாக்கை விடுமாறும்*
*வந்துன் கழற்கே புகுமாறும்*
*அண்ணா எண்ணக் கடவேனோ*
*அடிமை சால அழகுடைத்தே."*

சித்தாந்த சைவப் பெருமக்களே! தாய்மார்களே! மறைத்திரு ஞானியாரடிகளின் அருள் உள்ளத்தில் அரும்பி அன்பர்கள் உள்ளத்தில் மலர்ந்து தொண்டர்தம் தொண்டின் திறத்தால் பல்லாண்டுகளாகத் தென் தமிழ்நாட்டில் தெய்வ மணத்தை வழங்கிவருகின்ற சைவ சித்தாந்த சமாஜத்தின் ஆண்டுவிழாவில் கலந்து கொள்ள வண்ணப் பணித்து வா வென்று வான்கருணை செய்த ஈரோடை அப்பரின் இணையடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம். இத்தகு

இன்பப் பேற்றை நமக்கு அளித்த அருள்நெறித் திருக்கூட்டத் தொண்டர்களுக்கு நமது நெஞ்சம் கலந்த வாழ்த்து.

தமிழகம் தெய்வ மணம் கமழும் திருநாடு. இறை மணம் கமழும் இன்பத் திருநாடு. சாத்திரத்திலும் உயர் ஞானத்திலும் சிறந்து விளங்கும் பெருமை செந்தமிழ் நாட்டிற்கே உரியது. கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே தோன்றிய மூத்தகுடி தமிழ்க்குடி. அன்று தொட்டே அவர்களது வாழ்க்கையில் சமய வாழ்வு இடம்பெற்றிருந்தது. அறிவுக் கண் கொண்டு இப் பரந்துபட்ட உலகியலைக் காண்கின்ற பேறுபெற்ற பொழுது-அகலமும் ஆழமும் அளவிடப் பெறாத நீலத் திரைக் கடல்-காலம் தவறினும் தான் தவறாது எழுந்து நல்லொளி பரப்பி ஞாலத்தை வாழ்விக்கும் ஞாயிறு - வானுயர் தோற்றமென்ன மலை இவை போன்ற இயற்கையின் மதிப்பிட முடியாத அமைப்புகளைக் கண்டு வியந்தனர். உலகியலில் ஓர் ஒழுங்கு ஒரு முறைபிறழாத நிகழ்ச்சி முதலியன அமைந்து கிடப்பதனைக் கண்டனர். இத்தகு அமைதிகளைக் கண்டு இவை தம்மை அமைத்துக் கொடுப்பதற்குரியது மனித எல்லைக்கும் அப்பாற்பட்டது என்று உணர்ந்தனர். அந்த ஒன்று பேரறிவும், பேராற்றலும் உடையது என்ற முடிவுக்கு வந்தனர். அப்பொருள் அப்பாலுக்கப்பாலாய் இருந்தும் ஊனாகவும், உயிராகவும், உயிர்ப்பாகவும் இருப்பதை உணர்ந்தனர். இத்தகு நிலையில் காட்சியளிக்கின்ற அந்தப் பொருளை எங்ஙனம் சிற்றறிவுடைய உயிர்கள் வாழ்த்த முடியும். இதனை நமது மணிவாசகப் பெருமானார்,

> *"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி*
> *ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்*
> *கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு*
> *வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே."*

என்று அருளிய திருப்பாடலால் அறியலாம்.

தமிழர் சமயத்தில் ஆண்டான் அடிமைத் திறம் மிகச் சிறந்தது. இன்று அடிமையென்ற சொல் மக்களினத்தால் வெறுக்கப்படுகிறது. ஆனால் அடிமை என்ற சொல் அவ்வளவு தீயதல்ல. அடிமைத் தனத்தில் உள்ள நன்மை தீமைகளை அடிமையாக ஆட்படும் இடத்தைப் பொறுத்தது. சின்னாட் பல்பிணி வாழ்க்கைக்காகச் சிற்றறிவும் சிறு தொழி லும் உடைய இறக்கும் தன்மையை இயல்பிலேயே பெற்ற மக்களிடம் அடிமைப்படுவதில் இகழ்ச்சி உண்டு. தீமையும் கூட உண்டு. ஆனால் வரம்பில் ஆற்றலும் இணையில் இன்பமும் உடைய பிறவா யாக்கைப் பெரியோனிடத்தில் அடிமைப்படுவது சாலவும் நன்மையுடைத்து. அடிமைப் படாததால் தீமைகூட விளையலாம். இத்தகு அடிமைத் திறத்தை நினைந்து நினைந்து வரவேற்றார்கள் தமிழ்ச் சான்றோர்கள். அருள் மொழி மணிவாசகப் பெருமானார் அருளிய திருவாசகத்திலே அடிமை வேண்டி வேண்டிக் கேட்கப்படுகிறது. தேசீய கவிதை முழக்கி விடுதலை முரசு கொட்டிய தேசீயக் கவிஞர் பாரதியாரும்,

"பூமியில் எவர்க்குமினி அடிமைசெய்யோம்-பரி
பூரணனுக் கேயடிமை செய்து வாழ்வோம்"

என்று கூறுகின்றார். சமய வாழ்வில் கூறப்படும் அடிமை குற்றேவலுக்காக அல்ல. எண்ணத்தால் அடிமை.

தமிழர்கள் வாழ்வில் நீதி பொருந்தியிருந்தது. நேர்மை நிலவியிருந்தது. அன்பு மலர்ந்திருந்தது. அறவுணர்வு மண்டி யிருந்தது. அவர்கள் மறந்தும் கூட தீயன செய்ததில்லை. செய்ய நினைத்ததுமில்லை. அவர்களுடைய வாழ்க்கையில் அகமும் புறமும் ஒத்திருந்தது. சிந்தனையும் செயலும் ஒன்றுபட்டிருந்தன. பிறர்நலம் பேணுகின்ற பெருமனம் பெற்றிருந்தார்கள். காரணம் கடவுட்பற்று, கடவுள் நம்பிக்கை. சென்ற சென்ற இடத்திலெல்லாம் சென்று பற்றுகின்ற அறிவைத் தீதினின்றும் விலக்கி நன்மையின் கண் உய்ப்பது

சமயம். விலங்கு நீர்மை பொருந்திய பொல்லாத புல்லிய உணர்ச்சிகளினின்றும் விலக்கி, பூரண மனிதப் பண்பை நல்கி அருள் உள்ளத்தைக் கொடுப்பது சமயம்! மகவெனப் பல்லுயிரையும் ஒக்கவே பார்க்கும் பண்பைக் கொடுப்பது சமயம்! ஏன்? “காக்கை குருவி எங்கள் சாதி” என்ற பேருணர்வைக் கொடுப்பதும் சமயமே? வாழ்க்கையை வளம் படுத்துவது நல்லெண்ணங்கள். தனி மனிதனின் வாழ்வைச் செம்மைப்படுத்துவது சிந்தனையும் செயலுமாம். சமுதாயத் தைச் சீர்படுத்துவது தனி மனிதனது ஒழுக்கம் நிறைந்த வாழ்க்கை. தனி மனிதனது ஒழுக்கம் குலையுமானால் சமுதாயம் குலைந்துவிடும். அதனால் குற்றங்கள் நிறைந்து கொலைகள் பெருகும். உறுப்பாலே மக்கள்; வாழ்க்கையாலே விலங்குகள் என்றாகிவிடுவர். எனவே நாட்டின் நல்வாழ்வு, சமுதாயத்தின் சிறப்பு எல்லாவற்றிற்கும் அடிப்படை தனி மனிதனின் ஒழுக்கம் பொருந்திய வாழ்வுதான். அப்படி யானால் வேண்டுவது ஒழுக்கம்தானே! அது இருந்தால் போதாதா? என்று! சிலர் கேட்கலாம். சமயச் சார்போடு வளர்கின்ற ஒழுக்கம்தான் நிலைத்து நிற்கும். சமயச் சார்பற்ற–கடவுள் நம்பிக்கையற்றவர்களின் ஒழுக்கம் என்றும் நிலைத்திருக்காது. குறிப்பாகச் சமயச்சார்பற்றவர்களின் ஒழுக்க நெறி ஊற்றில்லா ஓடை போன்றது; வேரில்லா மரம் போன்றது’ என்று கூறிவிடலாம். அதாவது வாழ்க்கையின் தேவை நிறைந்திருக்கிற வரையில்–இன்பம் பொருந்தியிருக் கின்ற அளவில் சமயச் சார்பற்றவர்களின் ஒழுக்கம் நிலைபெற்றிருக்கும். ஆனால் தேவை நிறைவு பெறாதபோது, வாழ்க்கையில் துன்பப் புயல் சுழன்றடிக்கின்றபோது, துன்பச் சுழலினின்றும் விடுதலை பெற்றுத் தேவையை நிறைவு செய்துகொண்டு இன்பத்திற் பொருந்தி வாழ்வதற்காகத் தாம் கொண்ட ஒழுக்க நெறியினின்றும் நழுவுவர். அப்படி நழுவ நேரிடும் காலத்துச் சிலகால வாழ்வுக்கு நீதியையும் நேர்மையையும் பலிகொடுக்காதே;. அநீதிக்குத் தண்டனை

தரத் தலைவன் ஒருவன் உளன் என்று உணர்த்தி நல் வாழ்வில் நிலைக்கச் செய்வது சமயம். எனவே வாழ்க்கையில் ஒழுக்கம் உறுதி பெறச் சமய வாழ்வு வேண்டியிருக்கிறது.

இந்த உண்மையைப் பண்டைத் தமிழ்ப் பெருமக்கள் நன்றாக உணர்ந்திருந்தனர். அவர்களது வாழ்க்கையில் சமயப் பண்பியல்புகள் கலந்து படிந்திருந்தன. அவர்கள் தம் சிந்தனையிலும் செயலிலும் கடவுட் பற்றும் நம்பிக்கையும் கலந்திருந்தது. அவர்களுடைய தனி வாழ்வு பொது வாழ்வு ஆகிய இரண்டிலும் சமயப் பண்பாடு முதலிடம் பெற்றிருந்தது. அவர்களுடைய வாழ்க்கையில் வழிபாட்டுணர்ச்சி வளர்ந்து வளம் பெற்றிருந்தது. வாழ்த்துகின்ற கலையன்றி வசை பாடும் கலையை அறியார். விண்ணை அளந்து காட்டுகின்ற-துன்பம் துடைத்து நல்லின்பம் நல்குகின்ற எண்ணற்ற ஆலயங்கள் தமிழகத்தில் எழுந்தன. எழுச்சிக்கு அடிப்படை பண்டைப் பெருமக்களது சமய வாழ்வும் வழிபாட்டுணர்ச்சியும்தான். தமிழகம் கண்ட சமய நிலையங்கள் இரண்டு வகையின. ஒன்று ஆலயங்கள், பிறிதொன்று மடாலயங்கள். ஆலயங்கள் வழிபாட்டு நிலையங்கள். பண்புகள் பல்கி-பக்தி உணர்ச்சி வளரத் துணை செய்பவை ஆலயங்கள். உணர்ச்சிக்குத் தூண்டுகோல்-காவலிடம் ஆலயங்கள். நல்லறிவு கொளுத்தித் தெளிவான உள்ளம் தந்து நல்லுணர்வை நல்கி; கொள்கையைப் பரப்பிக் காக்கும் காவல் நிலையங்கள் மடாலயங்கள். ஒன்று உணர்ச்சியை உண்டாக்கி வளர்த்துக் காக்க; இது மடாலயங்களின் தொண்டு. நல்லுணர்ச்சியைப் பக்தியாக மாற்றி வழிபாட்டிற் கலந்து இன்புறச் செய்வது. இவை ஆலயங்களின் தொண்டு. இவ்விரு வகை நிலையங்களையும் கண்டு அன்பு பேணி அருளுள்ளம் கொண்டு அறம் பல வளர்த்துக் களிப்புடன் வாழ்ந்த பெருமை பண்டைத் தமிழினத்திற்கு உண்டு. ஒரு சில ஆண்டுகளாகத் தமிழினத்தின் வாழ்வை இருட்சூழல் கவ்வியுள்ளது. கிப்ஸன் சொன்னபடி இவ்வுலகுபற்றிய அறிவு

மிக மேம்பட்டுள்ளது. மற்றொரு மீளா உலகைப் பற்றிய அறிவு குறைந்து வருகிறது. சிறப்பாக வாழ்க்கையோடியைந்த சமயப் பண்பு அருகி வந்து விட்டது. வாழ்க்கை வேறு; சமயம் வேறு; சடங்கு வேறு என்ற புல்லிய உணர்ச்சிக்கு ஆட்பட்டுவிட்டனர். இதனால் இதயம் மடிந்தது. எலும் புடம்பு இருக்கிறது. நெஞ்சம் தோய்ந்த சமய வாழ்வு குறைந்து வரலாயிற்று.

தமிழினத்தின் தனிமைப் பண்பு சமரச நோக்கு. தமிழ்கண்ட உன்னத உயர்மொழி 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்பதாம். இடையில் இந்த நிலை மாறியது. சமய வாழ்வில் சாதி முதலிய புல்லிய உணர்ச்சிகள் தோன்றி வளர்ந்தன. அகவுணர்வைப் போற்றிக் காத்துக் கொள்வதற் காகக் கையாளப் பெற்ற சமயச் சடங்குகள் சடங்குகளாகவே காட்சியளித்தன. நெஞ்சந் தோய்ந்த சமய வாழ்வு இல்லாமற் போய்விட்டது. புறம் வளர்ந்தது. அகம் தேய்ந்தது. அதனால் தமிழகம் மிகத் தாழ்ந்துவிட்டது. தாழ்ந்தமைக்கு ஒரு சில எடுத்துக்காட்டுகள். தமிழ் நாட்டிற் பிறந்தாரனைவரும் தமிழர்கள். பாதிக்கு மேற்பட்ட.மக்கள் சைவத்திருநெறி நின்று ஒழுகுகின்ற பேறு பெற்றவர்கள். ஏனைய மதக்களில் பெரும் பகுதியினர் வைணவக் கொள்கையினர். ஒரு சிலர் பிற சமய மக்களும் உண்டு. இங்ஙனம் வாழ்ந்த நூற்றுக்கணக்கான சைவக் கொள்கையினர் பிற மதம் புகுந்து கொண்டே யிருந்தனர். ஆயிரக்கணக்கான ஆலயங்களிலிருந்தும். நூற்றுக் கணக்கான மடாலயங்களிலிருந்தும் இவை தமக்கு மூன்றரை கோடி ரூபாய் வருமானம் இருந்தும் பிற மதம் புகுகின்ற சகோதரர்களைத் தடுக்கவில்லை. தடுக்க நினைக்கவும் இல்லை. இதனால் இவற்றிற்கு விளைந்த கேடு எண்ணும் தரத்ததா? பிற மதத்தினர் தம் மதப் பிரசாதத்திற்காக சைவத் திருநெறியின் கொள்கைகளைச் சிறப்பாக உருவ வழிபாட்டுக் கொள்கையினை எள்ளி நகைத்துப் பேசிவந்தனர். ஏனென்று கேட்பார் இல்லை. இதனையொட்டி நம்மவரினும் பலர்

சமய வாழ்வினையும், வழிபாட்டினையும் இழித்து எள்ளிப் பேசத் தலைப்பட்டனர். இவ்வியக்கம் சாதி ஒழிப்பியக்க மாகத் தோன்றி சமய ஒழிப்பியக்கமாக மாறிவிட்டது. மூலை முடுக்குகளில் எல்லாம் நாத்திகம் பரப்பப் பெற்றது. சிறந்த இலட்சிய நெறியினின்று வாழ்ந்த பெருமக்களின் வரலாற்றினை இன்பத் தமிழில் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட பாடித் தந்த சேக்கிழார் பெருமான் எள்ளப் பெற்றார். அவர் தம் திருநூல் எரிக்கு இரையாக்கப்பட்ட வேண்டுமென்று பேசப்பெற்றது. அது போலவே ஊனினை உருக்கி உயிரையும் உருக்கி உலப்பிலா ஆனந்தத்தைக் கொடுக்கும் அருமைத் திருவாசகத்திற்கும் எரியிட வேண்டுமென்று ஆர்ப்பரித்தார்கள். தமிழ் நாட்டின் ஒரு சில ஆலயங்களில் சில ஆண்டுகளுக்கு முன்பு கருத்து வேற்றுமை யின் காரணமாக தகாத செயல்களையும் செய்யத் தலைப் பட்டனர். செய்தும்விட்டனர். எனினும் கவலைப்படுவார் யாருமில்லாத கதியற்ற நிலை சைவத்துக்கு இருந்து கொண் டிருந்தது. இந்த நிலை இன்றும் மாறவில்லை என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. இன்றும் பிற சமயத்தினரின் சமயப் பரப்பு வேலை துரிதமாக, நடந்து கொண்டிருக்கிறது. நாத்திகர்களும் பெருகி உருவங்களை உடைப்பதும் திருமுறை களைத் தீயில் இடுவதும் எங்கள் இலட்சியம் என்று ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கின்றனர். நாடாளும் அரசோ மதச் சார்பற்ற அரசு என்ற பேரில் இருக்கிறது. ஆதலால் இவை தம்மை எதிர்த்து நிற்பதில் அது நேரடியாகத் தலையிட முடியாது. இந்த நிலை சமயப் பற்றுள்ள ஒவ்வொருவருக்கும், சமயச் சான்றோர்களுக்கும், சமயத் தலைவர்களுக்கும் ஒரு சோதனை. இது கடைசி நேரம். இனியும் உறங்கினால் கடமையினின்று தவறியவர்கள் ஆகிவிடுவோம். இடம் பொருள் ஏவல் இருந்தும் இழக்கமுடியாத கொள்கையினை இழந்துவிட்டோம் என்ற பழிச் சொல்லுக்கு உரியவர்கள் ஆகிவிடுவோம். அன்புடைய பெருமக்களே! இதனைச்

சிந்தனையில் பதித்துக்கொண்டு செயலில் இறங்குவோமாக! நமக்குத் தெரிந்த ஒரு சில ஆக்க வேலை முறைகளையும் குறிப்பிட ஆசைப்படுகின்றோம்.

1. நல்லன பெருகி அல்லன மறைய வேண்டுமானால் அதற்குரிய சாதனம் நல்லனவற்றைப் பற்றிப் பன்னிப் பன்னிப் பேசுதலும் பரவுதலும் ஆம். முதலில் சமயச் சார்புடைய அனைவர் மாட்டும் நெஞ்சந் தோய்ந்த சமய வாழ்க்கையை மலரச் செய்ய வேண்டும். வாழ்க்கையோடு ஒன்றுபட்ட சமயந்தான் நல்ல பயனைத் தரும். எனவே ஒவ்வொருவர் வாழ்விலும் பூரண பக்தி உணர்ச்சியை வளர்க்க வேண்டும். வீடுகளில், வீதிகளில், மன்றங்களில், ஆலயங்களில் எங்கும் தெய்வத் திருமறைத் தமிழ் முழக்கத்தை எழுப்ப வேண்டும். நாள் தவறினும் நாழிகை தவறினும் தான் தவறாத முறையில் திருமுறைகளை ஓதுகின்ற பழக்கத்தினை மேற்கொள்ள வேண்டும். ஊர்தோறும் கூட்டு வழிபாட்டு இயக்கங்கள், பொதுப் பிரார்த்தனைகள் முதலியவற்றைத் தோற்றி வளர்க்க வேண்டும். இவை நம்மவர்பால் நடக்க வேண்டியவை.

2. சமய வாழ்வு வாழ்கின்ற பெருமக்களிடத்தும், சமய நிலையங்களிடத்தும் சாதி மனப்பான்மையை வளரவிடக் கூடாது. உண்மைச் சமயத்திற்கு சாதி உடன்பட்டதல்ல; புறம்பானது என்று தெளிவாக அறிவிக்க வேண்டும். அப்படி அறிவித்து விடுவது ஒன்றாலேயே பெரும் பகுதியான மக்கள் சமய வாழ்வுக்கு வந்துவிடுவர்.

3. சில ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் ஒரு மறுமலர்ச்சி. அதுதான் தமிழைப் பற்றியது. எங்கும் தமிழார்வம் தலையெடுத்து வளர்கிறது. தமிழன்பு பெருகிவருகிறது. தமிழன்பில் திளைக்கின்ற பல அன்பர்கள் திருக்கோயில்களில் தமிழுக்கு இடமில்லை என்ற ஒரு காரணத்தால் திருக்கோயில் வழிபாட்டுணர்ச்சிக்கு மாறுபடுகின்றனர். திருக்கோயில்

களில் தமிழுக்கு இடம் தருதல் தவறானதாகாது. வேண்டுமானால் பழக்கமெனும் பாசிபடிந்த உள்ளங்கள் தவறானதாக நினைக்கலாம். மேற்பரப்பில் காட்சியளிக்கும் பாசியை நீக்கிப்-பார்த்தால் அந்தப் பாசி இடையில் படர்ந்தது வேர் ஊன்றாத பாசி. இயற்கையிலேயே தண்ணீர் தெளிவுதான். அது போலவே பண்டுதொட்டே ஆலயங்களில் தமிழ் முழக்கம் கேட்கப் பெற்றதுதான். ஏன் நலிவுற்ற காலத்து நல்லுணர்வு கொளுத்திச் சைவம் பரப்பி நானிலத்தைக் காத்த நால்வர் பெருமக்கள் இன்பத் தமிழில்தானே பாடினார்கள். எனவே சமய நிலையங்கள் தமிழைப் புறக்கணித்துத் தவறானதோர் செயலை விளைவித்து விட வேண்டாமென்று குறிப்பிட ஆசைப்படுகின்றோம். விரைவில் தமிழ்நாட்டுத் திருக்கோயில்கள் அனைத்திலும் தமிழில் அர்ச்சனை செய்கின்ற பழக்கத்தைக் கையாள முன்வர வேண்டும். இதனால் ஆயிரக்கணக்கான இளைஞர்களின் மனம் மாறும். அவர்கள் தமிழன்போடு சமயப்பற்றிலும் சிறந்து விளங்குவார்கள்.

4. இனி சமயத்தை வளர்ப்பதற்குரிய வழி, வீடு தோறும் செல்வதுதான். சமயச் சான்றோர்களும், சமயத் தொண்டர் களும் வீடுகள் தோறும் நுழைந்து பரிவாகப் பேசி வீட்டில் நாள் தவறாது வழிபாடு அல்லது பிரார்த்தனை குடும்பத்து உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றாக இருந்து செய்யும்படித் தூண்ட வேண்டும். இங்ஙனம் செய்வதால் வீடுகளில் சமயம் விளக்கம்பெறும். வீடுகள் திருந்தினால் நிச்சயமாக நாடு திருந்தும் என்ற நம்பிக்கை நமக்குண்டு. இத்தொண்டினை யாரும் மேற்கொள்ளலாம். பொருட்செலவற்ற மிகச் சுலபமான தொண்டு. ஆனால் பெரும் பயன் விளைகின்ற பெரும் தொண்டு. வீடுதோறும் சமய விளக்கம் காண முயல்வோமாக!

எத்தனையோ ஆண்களாக தமிழினத்தின் ஒரு பகுதி யினர் தாழ்த்தப்பட்ட மக்களாக ஒதுக்குப்புறத்தில் வாழ்

கின்றனர். அவர்கள் வாழ்க்கையில் நன் மணம் இல்லை. வளமும் இல்லை. இப்பகுதியினரில் பலர்தான் பிற மதம் புகுந்தவர்கள். இன்னும் ஒரு சிலரே எஞ்சியிருக்கின்றனர். அவர்களையும்கூட புத்தர்களாக ஆக்கப் பாடுபடுகின்றார் ஒருவர். அதே காலத்தில் இந்தியப் பேரரசு அவர்களுக்கு எல்லா வகுப்பினரோடும் உடனிருந்து வாழ்வதற்குரிய உரிமையைச் சட்ட ரீதியாக வழங்கியுள்ளது. அவர்கள் அடியெடுத்து வைக்கக் கூடாதென்றிருந்த ஆலயங்களில் அச்சமின்றி நுழைய உரிமை வழங்கப்பட்டுள்ளது. எனவே நாம் நமது பழக்கத்தை மாற்றிக் கொண்டு சேரிகள்தோறும் நுழைந்து பரிவோடு அவர்களை அணுகி அவர்களது துன்பம் துடைத்து அவர்களது உணர்ச்சியிலும் வாழ்விலும் சமயத்தைக் கலக்க வேண்டும். இந்தப் பணியால் இரண்டு நன்மை விளைகிறது. ஒன்று சமயத் தொண்டு, மற்றொன்று சமூகத் தொண்டு. இத்தகு பணியால் தமிழினமே உயர வழியுண்டு. ஒவ்வொரு சேரியிலும் என்று பிரார்த்தனை ஒலி எழுகிறதோ அன்றே சமயத்தின் நன்னாள்.

இந்த நூற்றாண்டை மேடை நூற்றாண்டென்று சொல்லிவிடலாம். எதற்கெடுத்தாலும் மேடைச் சொற் பொழிவு. அலங்காரமான நடையில் ஒரு சில மணி நேரங்கள் பேசினால் மக்களை ஈர்த்துக் கவர்ந்துவிடலாம், என்ற நம்பிக்கை வளர்ந்துள்ள காலம் இது. அப்படியே நடந்து வருவதையும் நாம் அறிவோம். எனவே நாமும் சிறந்த சமயச் சொற்பொழிவாளர்களைத் தயாராக்க வேண்டும். அவர் களின் சொல்லாற்றலைப் பெருக்க வேண்டும். மூலை மூடுக்களிலெல்லாம் நின்று சமய வாழ்வின் நல்லியல்புகளை மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். மாறுபட்டவர் களின் மாறான பேச்சுக்களை உண்மையை எடுத்துக் காட்டுவதின் மூலம் மக்களுக்குத் தெளிவு படுத்த வேண்டும். சமயத் தொண்டர்கள் மேடையோடன்றி வாழ்க்கையிலும் பண்பட்டவராயிருத்தல் வேண்டும். இத்தகு தொண்டர்கள்

ஒரு சிலரை நாட்டிலே உலவவிடுவேமானால் பெரிதும் நன்மை உண்டு.

சமயத் தத்துவங்களை விளக்குகின்ற முறையில் இனிய எளிய தமிழில் அடிக்கடி சிறு நூல்கள் வெளியிட வேண்டும். அவைகள் மிகவும் குறைந்த விலைக்கு வழங்கப் பட வேண்டும். நூல்கள் விருப்பு வெறுப்பு உணர்ச்சிகளினின்றும் எழுதல் கூடாது. குறிப்பாக உருவ வழிபாட்டு முறைகள் தத்துவங்கள், சமயச் சார்பில் உள்ள புறச் சாதனங்கள், சமய நூல்கள், புராணங்கள் முதலியவற்றைப் பற்றிய உண்மைக் கருத்துக்களை மக்களுக்குத் தெளிவாக எடுத்துக் காட்ட வேண்டிய கடமை நமக்குண்டு. இக் கடமையினின்றும் தவறி விடுவோமானால் ஒன்றை மற்றொன்றாகப் பேசுகின்ற கூட்டம் பெருகி உண்மை அருகிவிடலாம். சமய அறிஞர்கள், சமயப் பற்றுள்ள படித்த இளைஞர்கள் இம் முயற்சியில் ஈடுபட வேண்டும். இந்தத் திருத் தொண்டினால் இன்று மக்களிடையே பரவியுள்ள மாறுபட்ட கருத்துக்களை மாற்றிவிடலாமென்று நம்புகின்றோம்.

அன்புடைப் பெருமக்களே! பணிகள் பலவற்றைப் பாங்குறத் தீட்டிக் காட்டலாம். எனினும் அனைத்தும் செயல் முறைக்கு வரவேண்டுமே. எனவே விரிவஞ்சி விடுக்க ஆசைப்படுகின்றோம். சமயத் தலைவர்கள் அனைவரும் இந்த இறுதியான கட்டத்தில் ஒன்றுபடவேண்டும். ஒவ்வொருவர் தனி வாழ்விலும் சமயத் தொண்டு நல்ல இடம் பெற வேண்டும். இங்ஙனம் ஒன்றுபட்டு நல்ல ஈடுபாட்டுணர்ச்சி யோடு பணி செய்வோமானால் எண்ணிய பயனைப் பெறுவதற்கு யாதும் ஐயமில்லை. ஒன்றுபடவும், தொண்டு களில் ஈடுபடவும் ஆண்டவன் திருவருள் துணை செய்யு மென்று நம்புகின்றோம்.

இந்த முயற்சியின் சின்னம் தான் தமிழ்நாடு அருள்நெறித் திருக்கூடம். திருக்கூட்டத்தின் அருள் முழக்கம்

தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் கேட்கப் பெறுகிறது. நூற்றுக்கணக்கான அன்பர்கள் தம்மையும், தம் வாழ்வையும் மறந்து இத் திருத்தொண்டில் ஈடுபட்டிருக்கின்றனர். அவர்களுக்கு நமது இதயம் கலந்த வாழ்த்து. கடந்த மூன்றாண்டுகளாகச் சைவசித்தாந்த சமாஜத்தினரோடு கலந்து உறவாடுகின்ற இன்பப்பேறு தொடர்ந்து கிடைத்து வருகிறது. இந்த உறவு முறை இடையீடுபடாது வளரும் என்ற நம்பிக்கை நமக்குண்டு. இன்றைய சூழ்நிலையில் தமிழ்நாடு அருள்நெறித் திருக்கூட்டத்தினர் மேற்கொண்டுள்ள பெரும் பணிகளுக்குச் சமாஜத்தினர் பக்கபலமாக இருந்து வருகின்றனர் தொண்டர் குலம் அனைத்தும் ஒன்று என்ற உண்மையை அருள்நெறித் திருக்கூட்டத்தினரும், சமாஜத்தினரும் மெய்ப்பித்து வருகின்றனர். இத்தகு பேரன்பு படைத்த சமாஜத்தினர்க்கு நமது உளம் கலந்த வாழ்த்து. மீண்டும் ஒருமுறை சமயவாழ்வுடையார் அனைவரும் ஒன்றுபடவும் அருள்பாலித்துத் திருத்தொண்டின் நெறிபேணி வளர்க்கத் துணை செய்யும் வண்ணம் ஈரோடையப்பரின் இணையடிகளைச் சிந்திக்கின்றோம்! அன்பர்களது அன்பு பொருந்திய, ஆர்வம் நிறைந்த ஒத்துழைப்பினை வேண்டி நிற்கின்றோம்!

வாழ்க தமிழ்! வளர்க அருள்நெறி!

# 6

# மனம் ஒரு மாளிகை

## பேரின்பம்

*"தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே—ஒரு*
*தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே!"*

—திருஅருட்பா

தன்னை அறிதல் என்றால் என்ன? தன்னை அறிந்து கொள்வது எப்படி? தன்னை அறிந்து கொள்வதால் பயன் உண்டா? என்ற கேள்வியை நமக்கு நாமே கேட்போமானால், கேட்டும் புலன் வழி போகாது திரிகரணங்களையும் அடக்கி நின்றோமானால் ஆங்கு–'தன்னை யறிந்தின்பமுறுவது' தானே சித்திக்கும்.

"நான் யார்? என் ஞானங்கள் யார்?" எனக் கேட்போமானால் 'தன்னை அறிந்து இன்பமுறலாம்,' தன்னை அறிவது என்பது நம் மனத்துக்குள்ளேயேயிருக்கும் சோதியை (பரம்பொருளை) உணர்வது ஆகும். தன்னை அறிந்தால் பிறவியை ஒழித்துப் பேரின்பம் பெறலாம்.

தன்னையும் இன்னார், இனையன் என்று எண்ணாமலும் சிந்திக்காமலும் இருந்தும், அஞ்ஞானக்

கோரை மண்டித் தரிசாகக் கிடந்தாலும், புலன் வழி ஏகி, மனம் போன போக்கில் சென்றால் ஆங்குச் சிற்றின்பங்களும், "பெருந்துன்பங்களுமே" விளையும். ஒரு முடிவுடைய இன்பங்களும், முடிவிலாத் துன்பங்களும்தான் மிஞ்சும்.

இச்சிற்றின்பங்களும் அளவீடற்ற இடுக்கண்களும் அடுக்கடுக்காக வந்து புதை சேற்றில் ஆழ்த்தும்.

இன்னும் ஒவ்வொரு பொழுதும் மலமொடு எழுந்திருந்து பசி, நித்திரை, யாத்திரை, பிழைத்து, பித்த உலகத்தில் பித்தனாக ஆகி, மதம் கொண்ட யானையைப் போன்று 'ஆசை' என்ற வலையில் வீழ்ந்தும். கல்வி என்னும் பலகடல் பிழைத்தும்; பொறாமை என்ற பேயால் ஆட்டு விக்கப்பட்டும்; செல்வம், வறுமை, அறிவு இவைகளில் தேனில் விழுந்த ஈயாக மயங்கி, வாது பேசி, ஆறுகோடி மாயா சக்திகள் ஊடே பிழைத்தும, 'நாத்திகம்' பேசி நாத்தழும்பு ஏறியும், உறவு சுற்றம், நட்பு என்னும் அலைகடலில் வீழ்ந்தும், சமயம், மதம், சாத்திரம், கோத்திரம், விரதம் இவைகளில் மயங்கியும், ஐம்பூதங்களின் அல்லலில் சிக்கியும், இன்னும் பல அளவீடற்ற மாயையின் சூழ்ச்சிகளுக்கு ஆளாகி வீணே விழலுக்கு இறைத்த நீர் போல பிறந்து, பிறந்து, இறந்து, இறந்து பவக்கடல் ஏறாது. பிறவிக்கரை காணாது நீந்திக் கொண்டேயிருக்க வேண்டியதுதான், தன்னையறிந்து இன்பமுறாத வரையில்.

தன்னை அறிந்து இன்பமுறுவதாவது 'பேரின்பம்' எனப்படும். இப் பேரின்பத்திற்கு 'முதலும் முடிவும்' இல்லை. பேரின்பத்தை அனுபவிக்குங் காலத்துச் சலிப்பில்லை, வெறுப்பில்லை, கசப்பில்லை. தன்னை அறிய ஆங்கு ஆணவம், கன்மம், மாயை ஆகிய மலங்கள் தன்னை அறிந்த மாத்திரத்திலேயே நிர்மலமாகி விடும். எல்லாமும் தானேயாகி பேரின்பத்தோடே தன்மயமாதல்.

இப்புன்புலால் யாக்கை புரையோடிக் கனியுமாறு, கண்ணார நீர் மல்கி, கசிந்துருகி, உள்ளம் நெக்குருகி, நாயினேன், பேயினேன், வன்மனத்தேன் என அரற்றி 'தான்' என்ற அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுத்து நினைந்து, நினைந்து, உணர்ந்து, உணர்ந்து நெகிழ்ந்து, நெகிழ்ந்து, சிந்தித்து, சிந்திக்கும் பொருளும், சிந்திக்கும் திறனும் ஒரே தன்மையாகி முயற்சி செய்து, நொந்து நொந்து, அழுது, புலம்பி, அரற்றி, எவ்விதத்தாலும் சலனம் அடையாது. நிலைகுலையாது, தாயையே நினைந்து அழும் சேய் போல ஒரே குறிக்கோளாக நம் மனதை உள்முகமாக நிறுத்தி ஒருமைப் படுத்தித் தூய்மை செய்தோமானால் ஆங்குத் தோன்றும் உள்ளொளியை (சோதியை)க் கண்டு, அதாவது 'தன்னை' அறிந்து இன்ப முறலாம்.'

இப்பேரின்பத்திற்கு ஒரு வரையறையில்லை. இதனால் தான் தன்னை அறிந்து இன்பமுற்றவர்கள், 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்றனர்.

'ஒருநாமம், ஓர்உருவம் ஒன்றும் இல்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடி, நாம்—தெள்ளேணம் கொட்டாமோ"

— திருவாசகம்

என்ற மணிவாசகரின் மணிவாக்காலும் இதை உய்த் துணரலாம்.

'உன்னையே நீ அறிவாய்'-என்றார் கிரேக்க நாட்டுப் பேரறிஞரான சாக்ரட்டீஸ். ஆகவே நம்மையே நாம் நன்கு அறிந்தோமானால் நடப்பது யாவும் நலமே; பயன் என்ன வாக இருக்கும் எனச் சிந்திக்க வேண்டா.

நம்மை நாம் அறிந்து கொள்ளாத போதுதான் பலனைப் பற்றி ஏங்கி, எவ்வாறு வழி தவறிய ஒருவன் திகைப்பானோ அவ்வாறு இவ் உலகாயதத்தில் தவிக்க வேண்டி உள்ளது. இவ்விதம் தவிப்பதால் தடுமாற்றமும், தடுமாற்றத்தில் மனம் அமைதியிழந்து தன்னை அறியாமல்

விழலுக்கு நீர் இறைத்து எட்டிக் காயாகத் தனக்கும் பயனின்றி, பிறருக்கும் பயனின்றிக் கெடுகின்றனர் என்பதைத் திருமூலர் திருவாக்கால் அறியலாம்.

"தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்".

— திருமந்திரம்

தன்னை அறிந்தால் பிறிதொன்றால் ஆங்கு யாதொரு தீமையும் இல்லை. இதனால்தான் கணியன் பூங்குன்றனார் என்ற பெரும் புலவர் புறநானூற்றில் "தீதும் நன்றும் பிறர்தர வாரா"-என்றார்.

தன்னை அறிவதே ஞானத்தின் இறுதி நிலையாகும். தன்னை அறிந்தால் ஆங்கு தன்னுள்ளே ஈசனைக் காணலாம்.

'தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே"

— திருமந்திரம்

என்ற திருமூலர் வாக்காலும்,

"தேடிக் கண்டு கொண்டேன்-தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டு கொண்டேன்" — தேவாரம்

என்ற அப்பரடிகள் வாக்காலும் அறியக் காண்கிறோம். இக்கருத்தையே உணர்ந்த தாயுமானவரும்,

"நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்-அன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே"

என்று தாமும் பரமும் ஒன்றாகிய நிலையை எடுத்தியம்பு கின்றார்.

தன்னை அறிந்து இன்பமுற்றவர்கள் கூற்றுவனுக்கு அஞ்ச வேண்டியதில்லை என்பதைத் திருமந்திரத்தால் அறியலாம்.

*"ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்*
*நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை."—*

எனத் திருநாவுக்கரசர் கூறுவதுபோல் தன்னை அறிந்தால் ஆங்குத் தன் மனத்துள்ளே மறைந்துள்ள ஈசனைக் காணலாம்.

*"விறகில் தீயினன் பாலிற்படு நெய்போல்*
*மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்*
*உறவு கோல்நட் டுணர்வுக் கயிற்றினால்*
*முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே"* — தேவாரம்

மனம், வாக்கு, காயத்தால் வல்வினைகள் ஆரம்ப மாகும். வல்வினை ஆரம்பமாகிய போது பிறவி உண்டாகும். பிறவி தொடரும்போது பாவ, புண்ணியங்கள் வந்து சேரும். இதையே பிறவி வாசனை என்பார்கள். மனம், வாக்கு, காயம், நேர் நிற்கில் பிறவியில்லாப் பெரு நிலையை அடைவர்.

*"அனைத்துலகும் ஆய நின்னை*
*ஐம்புலன்கள் காண்கிலா"*

— என்பதாலும்,

*"இரந்து இரந்து, உருக என் மனத்துள்ளே*
*எழுகின்ற சோதியே"*

என்ற திருவாசகத்தாலும் "தன்னை யறிந்தின்ப முற்றோர்" நிலையை உணரலாம்.

தன்னை அறிந்து இன்பமுற்றோர்களுக்கு இருவேறு பட்ட தன்மைகளே ஆங்கு இல்லை. இப்புன்புலால் யாக்கையில் உயிர் புணர்ந்து கொண்டிருக்கும் போதே எது எதுவோ அது அதுவேயாகி 'அருட்சோதியில்' கலத்தலே தன்னையறிந்தின்பமுறுதல் ஆகும்.

*"தன்னை யறிந்திருந்த தத்துவ ஞானிகள்*
*முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பார்கள்*

*பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்*
*சென்னியில் வைத்த சிவனரு ளாலே."* — திருமந்திரம்

அவனருளாலே அவன் 'தாள்' வணங்கி, கிடைத்தற்கரிய இம்மானுட உடலைப் பேரின்பத்திற்காகவே பயன்படுத்தி "தன்னையறிந்தின்பமுற்று" பேரின்ப வாழ்வினை (நிறைவுடைய வாழ்வினைப்) பெற்றுப் பேரின்பத்தை அடைந்து மகிழ்வோமாக.

## நீதியே கடவுள்

மதம் என்ற சொல், தமிழ் இலக்கிய இலக்கணங்களில் கொள்கை என்ற பொருளிலேயே வழங்கப் பெறுகிறது. "எழுவகை மதமே உடன்படன் மறுத்தல்" என்பது நன்னூல் நூற்பா. மனித உலகம் தன்னுடைய வாழ்க்கையின் தொடக்க காலத்தில் அஃதாவது காட்டு வாழ்க்கைக்கு அடுத்த கட்டத்தில், கொள்கைகளை .உருவாக்கும் உணர்வினைப் பெற்றது. மனம் போன போக்கில் வாழ்ந்த மனிதர்களிடையே மோதல்கள் ஏற்பட்டன.

இரண்டு தற்போக்குக் கொண்ட மனிதர்களிடையே மோதல் ஏற்படத்தானே செய்யும்! மனிதர்களிடையே ஏற்பட்ட இந்த மோதல்களைத் தவிர்க்கவே கொள்கைகள் உருவாயின; ஒழுங்கு முறைகள் பிறந்தன; ஒழுக்க நெறிகள் எழுந்தன. ஒரு மனிதன் மற்றொரு மனிதனுக்கோ, மற்றை மன்பதைக்கோ உரிமை பேசமாட்டான்; பேசவும் முடியாது என்று கருதியது அன்றைய மன்பதை.

ஆதலால் முதற் கொள்கை, மனிதனை மையமாகக் கொண்டு எழாமல், மனிதனையும் விஞ்சிய கடவுளை மையமாகக் கொண்டு பிறந்தது. முதற்கொள்கை கடவுளை மையமாகக் கொண்டே பிறந்ததால், இன்று பல்வேறு கொள்கைகள் தோன்றி வளர்ந்திருப்பினும் 'மதம்' என்ற

சொல் கடவுட் சார்புடைய கொள்கையை மட்டுமே குறிக்கிறது.

ஒரு மனிதன், பிறிதொரு மனிதனின் நலத்தைக் கைப்பற்றாததே அறம். ஒரு மனிதனின் நலம் பிறிதொரு மனிதனின் நலத்தோடு மோதாமல் ஒதுங்கி வளர்வதே நேர்மை. ஒரு மனிதன் பிறிதொரு மனிதனின் உரிமைகளை-உணர்வுகளை மதித்து நடப்பதே சிறந்த மத ஒழுக்கம். இதுவே மத நெறியின் தொடக்க காலச் சீரிய இயல்பு.

காலப் போக்கில், மதம் மனிதர்களின் உரிமைகளுக்கு அரண் செய்வதற்கு மாறாக, வன்முறையாளர்களுக்கே கை கொடுத்தது. இதன் விளைவாகச் சாதிகள் தோன்றின; பொருளியல் ஏற்றத் தாழ்வுகள் மலிந்தன.

எல்லார்க்கும் பொதுவாம் மன்றுள் நடமாடும் இறைவன் திருமுன்னும்; சாதியே ஆட்சி செய்தது; இன்னும் ஆட்சி செய்கிறது. சுரண்டும் மனப்பான்மையுடைய பொருள் வன்முறையாளர்களின் ஆட்சியே நடந்தது; நடந்து கொண்டிருக்கிறது. "காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்" என்ற கோட்பாட்டு அறிவுரை இன்றைய மத உலகத்தில் செரிக்கவில்லை.

"எல்லா உலகுக்கும் அம்மையப்பரே அம்மையப்பர்" என்ற நெறிக்கும் மதவியலாருக்கும் நெடுந்தொலைவு இருக்கிறது. கோயில்களுக்கும் குடிசைகளுக்கும் இடையே நீண்ட தூரம் உள்ளது. சாதி வன்கண் மனப்பான்மையுடையோர்களும், பலருடைய வயிற்றிலடித்துப் பழியுடை வழியே பொருள் திரட்டியவர்களும், ஈரம் என்ற ஒன்று நெஞ்சில் இல்லா மதவாதிகளும் ஒப்புடன்படிக்கை செய்துகொண்டு ஏழைகளின் வாழ்வைக் கூற்றெனக் குடித்து வருகின்றனர். இளைய மன்பதையினர் இதனை நினைந்து நினைந்து நெஞ்சுருகித் தூய புரட்சிக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்; மன்பதை நலனுக்குற்ற மத நெறியைக் காண வேண்டும்.

மதம் கடவுளுக்காகத் தோன்றியதன்று. மதத்தின் மையம் கடவுள் உணர்வேயாம். ஆனாலும், மதம் மனிதனை, அறிவால், உணர்வால் வளர்த்துக் கடவுள் தன்மை யுடையவனாய் ஆக்குவதையே நோக்கமாகக் கொண்டது. மனிதன் தனமையினால் விலங்குமல்லன்; ஆனால் மனிதனுமல்லன.

மனிதன் தன்னிடம் இயல்பாய் அமைந்துள்ள விலங்குத் தன்மைகளினின்று விலகி மனிதத் தன்மைகளைப் பெற்று வளர்ந்து பின் தெய்வத் தன்மைகளையும் பெற்று விளங்குதல் வேண்டும்.

விலங்குத் தன்மையாவது, இன்ப துன்ப உணர்வு களுக்கு அடங்கி ஆட்பட்டு அழிதல். மனிதத் தன்மையாவது இன்ப துன்ப உணர்வுகளுக்கு உட்பட்டு-ஆயினும் எதிர்த்துப் போராடித் துன்பங்களில் மட்டும் வெற்றி பெற்று இன்பமாக்கிக் கொள்ளுதல். தெய்வத் தன்மையாவது இன்ப துன்ப உணர்வுகளை வெற்றி பெற்று, உணர்வுகளைக் கடந்த-என்றும் எப்பொழுதும் துன்பம் தலைகாட்டாத இன்ப அன்பில் திளைத்து, இன்புற்று, மகிழ்ந்து வாழ்தலில் வெளிப்படுவது. இஃதே மதத்தின் குறிக்கோள். இந்தக் குறிக்கோளுக்கும் இன்றைய மதத்திற்கும் நெடுந்தொலைவு ஏற்பட்டிருப்பதை நாமனைவரும் உணர வேண்டும்.

பலநூறு ஆண்டுகட்கு முன்பே தமிழகத்தின் ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர், ஒருலகம் பற்றிப் பேசினர். "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்கிறது புறநானூறு; "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்கிறது வள்ளுவம். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்கிறது திருமந்திரம்.

இங்ஙனம் மனித உலகத்தை ஒருலகமாக எடுத்துக் கூறிய தமிழக மதச்சூழலின் குரலும். தமிழக மதநெறியின் ஒழுக்கமும் உடனடியாக நடைமுறைப்படுத்தப் பட வேண்டும். இறைவழிபாட்டிற்குச் சாதி முறைகள் குறுக்கே

நிற்கக்கூடாது. தந்தை தாயாரைத் தீண்டி, மெய்தொட்டுப் பயின்று மகிழ்வதைத் தடைசெய்ய எவருக்கு உரிமை உண்டு?

நந்தம் திருக்கோயில்களில் உள்ள திருமேனிகளை எல்லா நாட்டினரும், எல்லா மொழியினரும், பலரும் நீரும் பூவுமிட்டுத் தொட்டு மகிழ்ந்து வழிபாடு செய்யும் உரிமை வேண்டும்; அன்றைக்கே இந்த உரிமை மலரும் நாளிலேயே மதம் மன்பதை மதமாகும். அதுவரையில் கோயில் “மதமாகவே” இருக்கும்.

உலகுக்கு முதல்வன் தலைவன் கடவுள். மனித உலகம் இன்புற்று மகிழ்ந்து வாழ இந்த உலகில் எத்துணையோ கோடி இன்பங்களை வைத்திருக்கிறான் இறைவன், “எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா” என்று பாரதியும் பாடினா னன்றோ!

இன்பங்களைத் துய்த்து மகிழ்வதில் மேடு ஏன்? பள்ளம் ஏன்? ஏழை ஏன்? பணக்காரன் ஏன்? இறைவன் இந்த வேறுபாடுகளைத் தோற்றுவிக்கவில்லை.

எல்லா உலகமும், எல்லா உயிர்களும் “இன்புற்றிருக்க நினைப்பதுவே யல்லாமல் வேறொன்றறியேன்' என்ற தாயு மானாரின் கோட்பாடு எங்கே? எல்லாருடைய இன்பத்தை யும் நாமே சூறையாடிக் கொண்டு தாமின்புறுதலிலேயே தலை நாட்டமுடையோர் கையில் சிக்கியிருக்கும் மதம் எங்கே?

“பிறிதின் நோய் தன் நோய்போல் போற்றுதல்' மதத்தின் ஒழுக்கம்; மதத்தின் கொள்கை. உண்மையான மதம் உலகில் கால் கொள்ளுமாயின் போர் ஏது? பற்றுக்கோடல் ஏது? இன்றைய மன்பதை உலகத்தில் மதம், காரணங்களாகக் கால் கொண்டிருக்கிறதே தவிர, ஒழுக்கங்களாகக் கால் கொள்ளவில்லை.

இன்றைய மனித உலகத்திற்குத் தேவை மிக உயர்ந்த புதுமையும் பொதுமையும் உடைய மதத்தின் கொள்கையே.

உயிரினத்திற்குக் கொல்லாமை அன்பு காட்டி, வாழவைக்கும் மன்பதையின் இன்ப மகிழ்ச்சியே மதத்தின் குறிக்கோளாக இருக்க வேண்டும். மன்பதையை, நேர்மை, அறம் ஆகிய அரண்களால் காக்கின்ற மதமே தேவை. அதனாலன்றோ அப்பரடிகளும் கடவுளை "நீதியே" என்று கூறி வாழ்த்தினார்.

## சமயப் பல்கலைக் கழகங்கள்

பழங்காலம் முதலே மனிதனுக்குத் தன் வாழ்வில் ஒழுங்கு, அமைதி, நீதி, இன்பம், அன்பு ஆகியவை இருத்தல் வேண்டுமென்ற ஆர்வம் அவனை அறியாமலேயே அவனுள் ஏற்பட்டது. இந்த ஆர்வத்தின் தூண்டுதலே சமயமாக மலர்ந்தது.

சமயம்-மனிதனின் உள்ளத்தைச் சமைத்துப் பக்குவப் படுத்துவது. அவனுடைய வாழ்வில் நிகழும் ஆவேச உணர்வு, பரபரப்பு உணர்வு, பிறருக்குத் துன்பம் இழைக்கும் தீய உணர்வு ஆகியவற்றை அடக்கி அவனை நல்வாழ்க்கைக்குப் பக்குவப்படுத்துவது சமயம். மற்றவர்க்குப் பயன்படுமாறு வாழ்பவனே-பிறருக்குத் தொல்லை கொடுக்காமல் வாழ்ப வனே முதிர்ந்த சமய வாழ்வு உடையவனாவான்.

நம்முடைய சமய வாழ்க்கைக்காகச் சென்ற காலத் தலைமுறை திருக்குறளைத் தந்தது. திருமுறைகளைத் தந்தது. எல்லாம் தந்தது. தராதது ஒன்றும் இல்லை. மனிதனது படைக்கும் ஆற்றலினால் ஒரு தலைமுறைக்கும் மற்றொரு தலைமுறைக்கும் தொடர்ச்சி உண்டாகிறது. நிகழ்காலத் தலைமுறையினராகிய நாம் என்ன செய்துகொண் டிருக்கிறோம். வரும் தலைமுறையினருக்கு நாம் என்ன படைத்துக் கொடுக்கப் போகிறோம் என்று சிந்தித்தல் வேண்டும்.

சமய வாழ்க்கைக்கு நம் ஐம்பொறிகளைப் பக்குவப் படுத்தல் வேண்டும். ஐம்பொறிகள் மனிதனுக்குத் துணையும்

செய்யும்; துன்பமும் செய்யும். சந்தர்ப்பம் பார்த்து, இப் பொறிகள் நம்மைத் துன்பப்படுத்தும்.

நம் பொறிகளைப் பக்குவப்படுத்துமுன் நம்மை அறிதல் வேண்டும். நம்மை இயக்கும் தலைவனை அறிதல் வேண்டும். மனிதன் தன்னை அறிய முடியாத நிலையில் இருக்கிறான். "இருகை யானையை ஒத்திருந்தது என் உள்ளக் கருவை யான் கண்டிலேன் கண்டது எவ்வமே" என்றார் மணிவாசகர். யானை தன் உருவைத் திரும்பிப் பார்க்க இயலாதது. நாமும் அப்படித்தான் இருக்கிறோம். அது மட்டுமன்றி யானை தன்னைச் செலுத்தும் பாகனையும் உணராது. நாமும் அவ்வாறே. நான் யார்? என் உள்ளம் யார்? என்று மணிவாசகர் அறிந்தாற்போல் அறிதல் வேண்டும். "மக்களே போல்வர் கயவர்" என்றார் திருவள்ளுவர். நாம் மனித உருவில் விலங்குகளாக வாழ்கிறோம். நம் வாழ்வைத் திரும்பிப் பார்த்தல் வேண்டும்.

நாம் அறியாமையில் இருக்கிறோம்; இருளில் இருக்கிறோம் என்று அறிந்தால். அறிவு தேவை; ஒளி தேவை என்ற உணர்வு தோன்றும்; நோயை அறிந்தவனுக்கு மருந்து தேவை என்ற உணர்வு தோன்றுவது போல, இந்த உணர்வு தோன்றியபோதே மனிதனுக்குச் சமய வாழ்வின் தேவையும் அருமையும் புலப்படுகின்றன. இந்த உணர்வு நிலைத்திருக்க வேண்டும். இந்த உணர்வு தோன்றிய பின்னரும் சிலர் பழைய விலங்கு நிலைக்குத் திரும்பி விடுவதுண்டு. இதில் மிக விழிப்பாக இருந்து தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும்.

நாம் பிறர்க்குத் துன்பம் செய்யாதிருந்தால் பிறர் நமக்குத் துன்பம் செய்யார். அதுவே சமய வாழ்வின் அடிப்படை. உலகில் துன்பத்தை எதிர்த்துப் போரிட மனிதன் கண்ட நெறி சமயநெறி. சமய நெறியில் நின்று வாழ்வை ஒழுங்குபடுத்திக் கொண்டால் துன்பம் வராது.

நல்ல சமய வாழ்வு உள்ள நாட்டில் சட்ட புத்தகங்களுக்கு வேலையில்லை. வேத புத்தகங்கள் செல்வாக்கு இழந்த நாட்டில் வேந்தனும் கொடிய அரசியல் நடத்த வேண்டி இருக்கும். இப்பொழுது சமயம் சமுதாயத்தின் ஒரு பகுதியாகத் தான் கருதப்படுகிறது. இந்நிலை மாற வேண்டும். சமுதாயம் முழுவதிலும் சமயம் ஊடுருவி நிற்றல் வேண்டும்.

நாம் புதுமையை விரும்புகிறோம். பழைமை தீயதன்று. இறைவனைப் "பழையோன்," "முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்'' என்கிறோம். பழைய அடிப்படையை மாற்றாமல் புதுமையை மேற் கொள்கிறோம். பழைய கோவிலைப் புதுப்பித்துக் குட நீராட்டு விழா செய்வது போல சமய சமுதாயத்தையும் புதுப்பிக்கும் நல்ல தொண்டினை நாம் செய்தல் வேண்டும். நாம் சமய வழிப் பட்ட சமுதாய வரலாற்றின் புதிய அத்தியாயத்தை எழுத வேண்டும்.

மறைமலை அடிகள், திரு.வி.க., கா.சு. பிள்ளை போன்றவர்களால் தொடங்கப் பெற்ற சமுதாயப் பணி இடையில் தளர்ச்சி அடைந்தது. இத்தலைமுறையில் நாம் அதைத் தொடர்ந்து செய்ய வேண்டும். நம்முடைய பயணத்தின் எல்லை நெடுந் தூரத்தில் இருக்கிறது. தளராது நடந்து செல்லுதல் வேண்டும். சமுதாயத்தில் இடைக்காலத்தில் வந்து கலந்துள்ள தீய, நஞ்சு உணர்வுகளை மாற்ற வேண்டும்.

கோயிலைத் தழுவிய குடும்பங்களும், குடும்பங்களைத் தழுவிய கோவிலும் அமைகிற சமுதாயத்தை உருவாக்குவதே நம் பணியின் குறிக்கோளாக இருத்தல் வேண்டும். இத்திருத் தொண்டில் முயலும்போது பல இன்னல்கள் ஏற்படலாம். அவற்றிற்கெல்லாம் தளராமல் வெற்றி காணும்வரை உழைக்க வேண்டும். இந்து சமயம் இந்த நல்ல தொண்டு புரிவதற்கான வழி வகைகளைச் சிந்தித்துச் செயலாற்ற முற்படும் என்று

நம்புகிறோம். நம் பணி நிச்சயம் வெற்றி பெறும் என்பதற்கு அடையாளமாக நம் சமயத் தலைவர்கள் எல்லோரும் ஓர் அமைப்பின் கீழ் ஒன்றுபட வேண்டும் என நாம் விரும்புகிறோம்.

திருமடங்கள் தமிழகத்தின் தத்துவப் பல்கலைக் கழகங்களாகத் திகழத் திருவருள்தான் துணை செய்ய வேண்டும்.

## இந்து சமயம்

இந்து சமயம் என்று தோன்றியது என்று கூற முடியாத காலப் பழமையுடையது. கடவுள் உண்டு; அது ஞானப் பொருள்; உயிர் உண்டு. அது அறியாமையின் பாற்பட்டது; ஆனாலும் அறிவுப் பொருளாதற்குரிய தகுதியுடையது. உயிர் அறியாமையினின்று விலகி ஞானத்தை அடைதலே வாழ்க்கையின் நோக்கம் என்ற மையக் கருத்தைச் சுற்றி வட்டமிட்டு வளர்ந்து வந்துள்ள பல நெறிகளை இணைப்பாகக் கொண்டது இந்து சமயம்.

இந்து சமயம் இந்திய நாட்டின் மாபெரும் சமயம்; மொழிகளைக் கடந்த சமயம்; இனங்களைக் கடந்த சமயம். ஆனாலும் பாய்ந்தோடுகிற ஆறு பாய்ந்து செல்லும் நிலப்பரப்புக்களிளெல்லாம் வளம் உண்டாக்குதல்போல இந்து சமயம் இந்திய நாட்டில் பேசப் பெறும் எல்லா மொழிகளுக்கும், எல்லா இனங்களுக்கும் வளம் சேர்த்திருக்கிறது.

இவ்வளவு பெருமை பெற்ற இந்து சமயமாயினும் காலத்தின் விளைவான சலிப்புகளிலிருந்து உயிர்ப்புடன் காப்பாற்றிக் கொள்வதற்கான கொள்கை ஆக்கங்கள்–கோட்பாடுகளில் புதுப்பிப்புகள் இந்து சமயத்தில் தேவையான அளவு நடைபெறவில்லை. அது மட்டுமின்றி சில நன்னெறிகள்–மனிதர்களின் தன்னலத்தால்–உருமாறி தீநெறிகளாகி உள்ளன. அதனால் இந்து சமயம் தனது உயிர்ப்பு

கு. XII. 21.

நிலையை இழக்காவிடினும், ஆக்கரீதியான வள்ரச்சியைப் பெற முடியவில்லையென்பது மறுக்க முடியாத உண்மை.

## ஒழுங்கினைக் காப்போம்!

பொதுவாக உடல் மூச்சினை இடையீடின்றி உயிர்த்தல் போல நெஞ்சு இறைவன் நாமத்தை இடையீடின்றி எண்ணிக் கொண்டே யிருத்தல் வேண்டும். இதுவே சமய நெறி நிற்போரின் உயர்சீலம். அடுத்து, குறைந்தது நாளொன்றுக்கு மூன்று வேளை வணங்க வேண்டும். காலை, உச்சிப்பொழுது, மாலை இறைவனை வணங்க வேண்டுமென்பது நியதி; மரபு.

இந்த வழிபாட்டு முறையை இன்றைக்கு இந்துக்களில் பின்பற்றுபவர்கள், விரல் விட்டு எண்ணத்தக்க எண்ணிக்கை யினரேயாவர். நாள்தோறும் ஆலயம் தொழுவது நமது ஆன்றோர் மரபு. ஆனால் இன்று நாள்தோறும் ஆலயத்திற்குச் செல்பவர் எண்ணிக்கை இந்து சமய மக்கள் தொகையை நோக்க மிகக் குறைவு. பொதுவாக இந்து சமூகத்தைச் சேர்ந்த மக்கள் திருவிழாவிற்குத் திருவிழா திருக்கோயிலுக்குச் செல்லும் பழக்கத்தை வளர்த்துக் கொண்டுள்ளனர். இந்தக் குறை நீங்கச் சில ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் வார வழிபாட்டு இயக்கங்கள் அறிமுகப்படுத்தப் பெற்றன.

வார வழிபாடு என்ற சொல் திருமுறை வழக்குச் சொல். அதாவது அன்பினால் செய்யும் வழிபாடு வார வழிபாடாகும். ஆனால் அது நடைமுறையில் வாரத்துக் கொருமுறை செய்யும் வழிபாடாயிற்று. இந்த வார வழி பாட்டு முறையிலும் போதிய ஒழுங்குகள் அமைய வில்லை. ஊர்தோறும் கோயில் தோறும் வார வழிபாடு நிகழும் கிழமைகள் வேறுபடுகின்றன.

ஆதலால் பொதுவாக இந்துக்கள் அனைவருக்கும் உகந்ததாகிய வெள்ளிக்கிழமையை வார வழிபாட்டு நாளாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுதல்; எல்லா ஊர்களிலும்

வெள்ளிக் கிழமையன்றே வார வழிபாடு நிகழும். வார வழிபாடு நிகழ்த்த வேண்டிய காலம் மாலை ஆறு மணிக்கு என்ற நியதியை மேற்கொள்ளுதல். எல்லா ஊர்களிலும் வெள்ளிக் கிழமைதோறும் மாலை ஆறு மணிக்குக் கூடி வழிபாடு செய்வதென்ற ஒழுங்கு முறையைக் காப்பாற்ற வேண்டும். கிழமையும் குறித்த நேரமும் எக்காரணத்தைக் கொண்டும் யாருக்காகவும் மாறக்கூடாது. இந்துக்களாகப் பிறந்த யாவரும் நாடு முழுவதும் நிகழும் இந்த வார வழிபாட்டில் தவறாது கலந்து கொள்வதைக் கடமையாகக் கொண்டு ஒழுகி ஒழுங்கைக் காப்பாற்றுவோமாக.

நமது வழிபாட்டில் நம்முடைய ஆன்றோர்கள் கடைப் பிடித்தொழுகிய சில மரபுகளைக் கடைப்பிடித்தொழுக வேண்டும். திருக்கோயிலுக்கு வார வழிபாட்டுக்கு வருவோர் வரிசையில் ஒருவர் பின் ஒருவராக ஒழுங்கமைதியாக வழி பாட்டில் கலந்து கொள்ள வேண்டும்.

ஒருவரைப் பின் தள்ளி ஒருவர் முன் போதல் உலகியலில் வேண்டுமானால் தற்காலிகமான பயன்களைத் தரலாம். ஆனாலும் தீது. சமய வாழ்க்கையில் எல்லாம் வல்ல இறைவன் சந்நிதியில் ஒருவரைப் பின் தள்ளி ஒருவர் முந்துதல் அறமன்று; அருள் நெறியும் அன்று. அப்பரடிகள் தமக்கு முன் வந்தவர்கள் பின் தாம் திருக்கோயிலுக்குள் புகுவதாகக் கூறியுள்ளார்.

“போதோடு நீர்சுமந் தேத்திப்
புகுவார் அவர்பின் புகுவேன்”

என்பது அப்பரடிகள் திருப்பாடல். ஆதலால் திருக்கோயில் வழிபாட்டில் வார வழிபாட்டில் கலந்து கொள்பவர் பலர் வந்து வரிசையில் ஒழுங்கமைதியுடன் நின்று சென்று வழிபாட்டை நிகழ்த்தும் ஒழுங்கு முறையைக் காப்பாற்ற வேண்டும்.

## உறவினை வளர்ப்போம்!

இந்து சமூகம் மொழிகளைக் கடந்து இனங்களைக் கடந்து வளர்ந்துள்ள ஒரு சமூகம். இயற்கையான மொழி, இன வேறுபாடுகள் தவிர்க்க முடியாதவை. ஆனால் இந்த மொழி, இன வேறுபாடுகள் மாறுபாடுகளாக முரண்பாடுகளாக உருவம் கொள்ளக் கூடாது. ஆதலால், இந்து சமூகத்தைச் சேர்ந்தவர்கள் இந்திய மொழிகளின்பால் வெறுப்புணர்ச்சி காட்டாது, இந்திய மொழிகள் பலவற்றைக் கற்க முயல வேண்டும். மொழிகளில் வெறுப்புக் காட்டுதல் அறிவுக்குத் தடை விதித்துக் கொள்வதாகும். இதை விட மனித குலத்துக்குப் பெரிய தற்கொலை எதுவும் இல்லை. தமிழில் பக்தியுணர்வை அள்ளி வழங்கும் திருவாசகத்தை அனுபவிப்போர் தெலுங்கில் உள்ள தியாகேசரின் பக்திக் கீர்த்தனைகளை, இந்தியில் உள்ள மீராவின் பக்திக் கீர்த்தனைகளைக் கற்கவும் கேட்கவும் முயலுதல் வேண்டும். இதனால் இதயம் விரியும், பண்பாடு வளரும்.

வாழ்க்கையின் நிலையாமைகளைப் பட்டினத்தார் பாடல்களில் படிக்கும் நாம் கபீர்தாசரின் அருள்மொழிகளைக் கற்றால் சிந்தனையின் இழையோட்டச் சிறப்புகளை உணரலாம். அப்பரடிகள், வள்ளற் பெருமான் ஆகியோரின் பழைமைக்கு உயிரூட்டும் புதுமை நல ஆக்கக் கருத்துக்களை கன்னட நாட்டு பசவேசரின் கருத்துக்களோடு ஒப்பிட்டுப் பார்த்து வளர்த்துக் கொள்ளவேண்டும்.

ஆதலால், இந்து சமூகத்தைச் சேர்ந்தவர்கள் சமய அடிப்படையில் இன, மொழி வேறுபாடுகளைக் கடந்து இந்துக்கள் அனைவரிடமும் உறவினை வளர்த்துக் கொள்ள வேண்டும். அதுவே இந்து சமூகத்தை வாழ்விக்கும் உயரிய நெறி. உடனடியான தேவையும் கூட. ஆதலால் இந்து சமூகத்தினரிடையில் இனம், மொழி வேறுபாடுகளைக் கடந்து உறவினை வளர்ப்போம்.

நம்முடைய நல்லூழின்மையின் காரணமாக இந்து சமூகத்தில் இயற்கையான இன, மொழி வேறுபாடுகள் மட்டுமல்லாமல் செயற்கையான சாதி வேற்றுமைகள் வளர்ந்துள்ளன. இந்தச் சாதி வேற்றுமைகள் தொடக்க காலத்தில் தொழில் வழிதான் அமைந்தன. ஆனால் காலப் போக்கில் இந்தச் சாதி வேற்றுமைகள் பிறப்பின் வழியதாக அமைந்து விட்டன. தொழிலியல் அடிப்படையில் அமையும் வேறுபாடுகள் மாறுபாடுகளை முரண்பாடுகளை உண்டாக் காது; மிகப் பெரிய உயர்வு தாழ்வுகளையும் தோற்றுவிக்காது. தொழிலியற் பகுப்பு முறையில் பெருமைகள், மேற்கொள்ளப் படும் தொழிலின் அடிப்படையிலேயே அமையும்; பிறப்பில் அமையாது.

ஆனால் நடைமுறையில் இந்து சமூகத்தில் சாதிகள் பிறப்பின் அடிப்படையிலேயே அமைந்து செயற்படுகிறது. இரண்டு சாதியினர்க்கிடையில் மலைக்கும் மடுவுக்கு மிடையேயுள்ள மாறுபாடுகள் ஏன்? முற்றிய நஞ்சாகத் தீண்டாமையே உருப்பெற்று விட்டதே! இங்ஙனம் பிறப்பின் அடிப்படையில் சாதி வேறுபாடுகள் வளரத் தொடங்கிய வுடன் இந்து சமூகத்தினரிடையில் வெறுப்பும் பகையும் ஆரோக்கியமில்லாத போட்டா போட்டிகளும் வளரத் தொடங்கிவிட்டன. காலப் போக்கில் பழக்கத்தின் காரண மாகக் குடும்பங்களிடையே கூட, இந்த நிலைமைகள் பரவிக் கால் கொண்டன. இந்த வேற்றுமைகளின் காரணமாகவே இந்து சமூகத்தினிடத்தில் பரஸ்பர நம்பிக்கை குறைந்து– நல்லெண்ணங்கள் குறைந்து அவநம்பிக்கை மேலிட்டு எரிச்சலூட்டும் பிரச்சாரங்களும், பகை மூட்டும் இயக்கங் களும் தோன்றலாயின. இவற்றின் விளைவாகக் கோடானு கோடி மக்கள் மதமாற்றத்திற்கு ஆளாயினர். நம்முடைய இந்து சமூக வரலாற்றில் நிகழ்ந்த இந்தத் தீய விளைவுகளை நாம் கணக்கில் எடுத்துக் கொள்ளத் தவறுதல் கூடாது.

ஆதலால், நம்முடைய இந்து சமுதாயத்தைச் சேர்ந்த அனைவரும் ஒருகுலமாகி, ஒரு குடும்ப உணர்வில் அன்பினைப் பெருக்கி, உறவினை வளர்ப்போமாக, நம் முடைய சமூகத்தில் பலரோடும் கூடிப் பழகி இதயத்தினை வளர்த்துக் கொள்வோமாக.

இன்று நம்முடைய சமூகத்தில் பரவியுள்ள ஒரு தீமை உறவின்வழி அன்பு காட்டுவது. இது தீது. ஒரு பொழுதும் நாட்டுக்கும் சமூகத்திற்கும் இஃது ஆக்கம் தராது. அன்பின் வழி உறவுவழித் தோன்றும் அன்பு உறவுக்குரிய காரணங்கள் மாறுபடும்பொழுது, குறையும்; வற்றும். ஏன் முரண்பாடு களாகக் கூட உருமாறி விடுகின்றன.

நம்முடைய சமூகத்தில் நாள்தோறும் ஏற்படும் மன முறிவுகள் அளப்பில. சாலை விபத்துக்களைச் செய்தியாக்கு வதைப் போல மனமுறிவுகளைச் செய்தியாக்கினால் சிந்தனை கலங்கும். சிலர் மனமுறிவுகளைத் தவிர்க்க முயற்சி செய்யாமல் சாமர்த்தியமாகச் சமாளிக்க முயலுகின்றனர். வேறுசிலர், மனமுறிவுகளையே வெற்றி தோல்விகள் ஆக்கு கின்றனர். எது எப்படியாயினும் மனமுறிவுகள் வரவேற்கத் தக்கன அல்ல.

ஆதலால், மனமுறிவுகள் தோன்றுதலுக்குரிய சூழல் களையே தவிர்த்திடுதல் வேண்டும். அதற்கு ஒரே வழி அன்புதான். அன்பிற்குத் தடையாய் இருப்பன தன்னலமும், தன்முனைப்புமேயாம். தீமையைக் கூட ஒறுத்தலின் மூலம் ஒரு பொழுதும் மாற்ற இயலாது. தீமையுடையாரையும் கூட உவந்து, கலந்து பேசி மாற்றுதலின் மூலமே நிலையான அடிப்படையில் தீமை மாறும்.

ஆனால் நன்மையில்லாதார் ஒருவர் தீமையை அந்தத் தீமையின் காரணமாகவே தாம் நன்மையுடையார் போல் காட்டிக் கொள்ளும் தீய பழக்கம்தால்தான் மனித உறவுகள் பாதிக்கின்றன. ஆதலால், எந்தக் காரணத்தையும் மனத்திற்

கொள்ளாமல் அன்பு காட்ட வேண்டும். அன்பு காட்டுவதே குறிக்கோள்.

அன்பின்வழி சிலரிடத்தில் உறவு வளரலாம். சிலரிடத்தில் உறவு வளராமல் நிற்கலாம். ஆனால், அடிப்படையான அன்பு இருப்பதால் உறவு வளராது போனாலும் பகை தோன்றாது. தீமையும் தோன்றாது. ஆதலால் இந்து சமூகத்தைச் சேர்ந்தவர்கள் சமய அடிப்படையில் இந்துக்களாக வாழ்வோர் அனைவரிடமும் எந்தவித வேறுபாடும் பாராட்டாமல் அன்பாகக் கலந்து பேசிப் பழகவேண்டும். உண்ணும் பொழுதுகூட உறவு கலந்து உண்ணச் சொன்னாரே தாயுமானவர்.

ஆதலால், இந்து சமூகத்தினில் உறவு கலந்து பழகுதற்குரிய வாய்ப்புகளைத் தோற்றுவித்துக் கொள்ள வேண்டும். அவ்வழி அன்பினைக் காட்ட வேண்டும்; அன்பினைப் பெற வேண்டும். அவ்வழி இந்து சமயத்தின் உயர் கொள்கையாகிய **"ஒன்றே குலம்"** என்ற உயரிய கொள்கை நடைமுறைப் படுத்தப் பெற வேண்டும். அப்படியானால் ஆசாரங்கள் என்ன ஆவது? என்று சிலர் கேட்கலாம். ஆசாரமுடையவரிடம் பழகுவதன் மூலம் மற்றவரும் ஆசாரமுடையவராக மாறி வளர்வார்கள். சீலமுடையாருடன் சீலமில்லாதவர் பழகுவதன் மூலம் சீலம் பெறுவர். இதுவே நடைமுறை உண்மை. ஆதலால், இந்து சமூகத்தினிடத்தில் உறவினை வளர்ப்போம்!

## உதவிகள் செய்வோம்!

மனித குலத்தின் உயிர்நிலை ஒருவருக்கொருவர் உதவி செய்தலில்தான் ஜீவித்துக் கொண்டிருக்கிறது. உயிர்க் குலத்தில் இயல்பாகவுள்ள வேறுபாடுகள் கூட உயிர்க் குலத்தின் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் தேவையான உதவி களை ஒருவருக்கொருவர் செய்து கொள்ளத்தான் போலும். இயற்கையில் ஒன்று புளிக்கிறது; ஒன்று காரமாக இருக்கிறது.

தோற்றத்தில் வேறுபாடுகள்! செயல் முறையில் பயன் படுவதில் ஒருமைப்பாடு; உயிர்க்குலத்தின் ஆக்கம்; வாழ்வு இதுதானே உண்மை! உதவியென்ற அடிப்படையில் தான் வேளாண்மை நடைபெறுகிறது. தொழிலுலகம் செயற்படுகிறது.

ஆனால், காலப்போக்கில் உதவியென்ற இந்த மனப்பான்மை அருகி, நாட்டில் ஏழ்மையும் வறுமையும் வளர்ந்து விட்டன. இந்து சமூகத்தில் மிக அதிகமான மக்கள் வறுமையிலும், ஏழ்மையிலும் உழல்கின்றனர். இந்து சமூக மக்கள் மதமாற்றங்களுக்கு ஆளானதற்கு மிக முக்கியமான காரணம் வறுமையும், ஏழ்மையுமே என்பதை எளிதில் மறந்து விட முடியாது. இன்றும் ஓர் இந்துவுக்குச் சமய அடிப்படையில் சமூக அடிப்படையில் உத்தரவாதமில்லை என்ற மனவேதனை நிறைந்த உண்மையை நாம் உணர்ந்து, செயற்படும் நாளே இந்து சமூகத்தில் பொன்னாள்!

ஆதலால் ஒவ்வொரு இந்துவும், இந்து சமூகத்தின் வளர்ச்சிக்கும் மேம்பாட்டுக்கும் உதவி செய்யும் மனப் பான்மையில் தம்மை வளர்த்துக் கொள்ள வேண்டும். இந்த உதவி இரக்கத்தின் அடிப்படையில் தோன்றுதல் கூடாது. உரிமை, கடமை என்ற அடிப்படையில் தோன்ற வேண்டும். இந்த உதவி அற உணர்ச்சியில் மட்டும் நடைபெறக் கூடாது. முறையான ஆக்க ரீதியான உதவியாக அமைய வேண்டும்.

ஆதலால், ஒவ்வொரு இந்துவும் தம்முடைய வருவாயில் ஒரு குறிப்பிட்ட நியாயமான விழுக்காட்டு நிதியைச் சமூகப் பாதுகாப்பு நிதிக்கு மனமுவந்து தர வேண்டும். அந்த நிதி இந்து சமூகத்தில் நலிந்தவர்களுடைய மேம்பாட்டுக்கு ஆக்கபூர்வமான வழியில் பயன்படுத்தப் பெறல் வேண்டும்.

இந்து சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் எல்லா நலன்களும் பெற்று வாழத் தக்க வகையில் வளர்க்கப் பெறுதல் வேண்டும். இந்து சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் எல்லா நலன்களும் பெற்று வாழத்

தக்கவகையில் வளர்க்கப் பெறுதல் வேண்டும். இந்து சமூகத்தின் மேம்பாட்டுக்குத் தொண்டு செய்தல்-உதவி செய்தல் இந்து சமூகத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரின் தலையாய கடமை என்பதை உணர வேண்டும். இந்து சமூகத்தில் எந்தவொரு மனிதன் நலிவுற்றாலும் காலப் போக்கில் இந்து சமூகத்தின் மொத்த உருவமும் பாதிக்கும் என்பதை நாம் உணர வேண்டும். ஆதலால், இந்து சமூகத்திற்கு உதவிகளைச் செய்து அதனை வாழ்விக்க முன் வரவேண்டும். ஆதலால் உதவிகள் செய்வோம்!

"ஒழுங்கினைக் காப்போம்!
உறவினை வளர்ப்போம்!
உதவிகள் செய்வோம்!"

என்ற இந்த மூன்று கோட்பாடுகளையும் சிந்தனையாலும் செயலாலும், அக நிலையிலும் புறநிலையிலும் ஒவ்வொரு வரும், நடைமுறைப் படுத்த வேண்டும். இந்தக் கோட்பாடு களை முழுமையாக நடைமுறைப்படுத்தினால் இந்து சமூகத் தினர் பக்தியில் சிறப்பர்; ஞானத்தினைப் பெறுவர்; உறவிற் கலந்து ஒருகுலமாக வாழ்வர். இந்துக்கள் அனைவரும் இன்புற்று வாழ்வர், நாம் அனைவரும் சிறந்த இலட்சியத் தினை அடைந்து மகிழ்வோம்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்.

## அவர்களைத் தேடுங்கள்

நாம் வணங்கும் இறைவன் காலத்தை வென்றவன். ஆதலால் "காலகாலன்" என்பர். அப்படியானால் என்ன பொருள்? இறைவனுக்குச் சாதல் பிறத்தல் இல்லையென்று சிலர் கூறுவர். அதாவது, ஆதியும் இல்லை; அந்தமும் இல்லை யென்பர். இதுதான் காலத்தை வென்றவ்ன் என்பதற்குப்

பொருள் என்றால் நாமும்கூடக் காலத்தை வென்றவர்கள் தாம்.

சைவ சித்தாந்த சமய நெறியின்படி உயிர்கள் என்றும் உள்ளவை. அவைகளுக்கும் பிறப்பில்லை. இறப்பில்லை. உயிர்கள் உடல் தாங்கி உலா வருதலையே பிறப்பு என்கிறோம். உயிர்கள் உடலை இழத்தலை "இறப்பு" என்றும், புதிய உடல் பெறுதலைப் "பிறப்பு" என்றும் கூறுகிறோம். சைவத்தின்படி உயிர்களுக்கு முத்தி நிலையிலும்கூட அழிவில்லை. இறைவனுங்கூட உயிர்களை ஆட்கொள்வான் வேண்டி, பல திருமேனிகளை எடுக்கிறான், பல பெயர் களைப் பெறுகிறான். ஆதலால், இறைவன் காலத்தை வென்றவன் என்பதற்குப் பொருள் பிறப்பில்லாதவன்-இறப்பில்லாதவன் என்பது மட்டுமாக இருக்கமுடியாது. அந்தத் தகுதி நமக்குத்தான் இருக்கிறதே. ஏன்? நம்மை அலைக்கழிக்கும் ஆணவத்திற்குங்கூட அந்தத் தகுதி உண்டு. அப்படியானால் காலத்தை வென்றவன் என்பதற்கு என்ன பொருள்? இறைவன் காலத்தை வென்றவன் என்பதற்குரிய பொருளை மாணிக்கவாசகர், மிக அருமையாக விளக்கு கிறார். "முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே" என்ற திருப்பாடல் காலத்தை வென்றமைக்கு இலக்கணம். ஆம். காலம் சுழல்கிறது. சுழன்று கொண்டேயிருக்கிறது. காலத்தின் தேவைகள் மாறுகின்றன; மாற்றம் உலக இயற்கை, மாறாதது தேங்கும்; மூப்படையும்; முதுமையடையும்; பாழ்படும்.

இறைவனைப் பொறுத்தவரையில் தேக்கமில்லை. அவன் காலத்தினும் கடிதாக விரைந்து தொழிற் படுகின்றான். அவன் உயர்ந்து அருமையாகப் பூசனைகள் பெறுவதும் உண்டு.

அவனே உயிர்களை நோக்கிப் பள்ளங் கால்மடையாக இறங்கி வந்தருளிச் செருப்படியைப் பெறுதலும் உண்டு.

இறைவனுக்கு வரன்முறைகள், சம்பிரதாயங்கள், சட்டதிட்டங்கள் இல்லை. இறைவனுக்கு ஒரே நோக்கு உயிர்களை ஆட்கொள்ள வேண்டும் என்பதே. இந்த நோக்கத்திற்காக இறைவன் செய்யாத செயல் ஏதேனும் உண்டா? இறைவன் ஆட்கொண்டருளுவதற்காக உயிர்களின் நிலைநோக்கிப் பெறும் கோலங்கள் புதுமைக் கோலங்கள். அதனால் எந்த ஒரு காலத்துச் சமுதாயமும் அவனைக் கண்டு ஒதுங்காமலும், அவனால் ஒதுக்கப் பெறாமலும் ஆட்கொள்ளப்படும் கருணையைப் பார்க்கிறோம். இத்தகைய உயர் அருள் நெறியை நோன்பாக, சீலமாகக் கொள்ள வேண்டுமென்பதே சமயநெறி. இறைவன் திருவிளையாட்டில் அவனடைந்த முத்திரைகள் யாதுமில்லை. ஆனால், உலகச் சமுதாயத்தின் வாழ்க்கையில் அவன் பதித்த முத்திரைகள் பலப்பல உண்டு.

காலம், நம்மைப் பொறுத்தவரையில் புவியீர்ப்பு ஆற்றலைவிட வெகுவேகமாக இருந்து வீழ்த்துகிறது. காலத்தின் அருமை புரிவதில்லை. நாம் குறிப்பிடுவது இரண்டு பொருளிலுமேதான். ஒன்று காலத்தை அளக்கும் விநாடிகளின் அருமை. வினாடிகளைக் காப்பாற்றுவதும் கடமைதான். ஆனால் வினாடிகளைக் காப்பாற்றுவதன் உட்பொருள் என்ன?

அந்தந்தக் காலத்தின் அருமைப்பாடுகளை அறிந்து உணர்ந்து படிப்பினைகளை ஏற்றுக் காலம் நம்மைக் கட்டுப்படுத்தாமல், காலத்தை நாம் கட்டுப்படுத்தும் அளவுக்கு வளரவேண்டும்.

கட்டுப்படுத்துதல் ஆணையினாலன்று; அறிவினால், அன்பினால், உணர்வினால் என்பதை மறத்தல் கூடாது. கால வெள்ளத்தில் ஆணைகள் சிதறும். ஆணைகளுக்குரிய

அரசுகள் நிலைபெற்றன அல்ல. அதனால் அறிவில், அன்பில், அருளில் வைத்து வாழ்வியலை அரவணைத்து ஆற்றுப் படுத்திக் கட்டுப்பாட்டுக்குக் கொண்டுவர வேண்டும். காலத்தின் படிப்பினைகளை அலட்சியம் செய்யக் கூடாது. ஒரு சிலர் வாழ்வது இருபதாம் நூற்றாண்டில்; ஆனால் அவர்களுடைய சிந்தனை கற் காலத்தில் இருக்கிறது. இத்தகையோர் தீண்டாமைக்கு நியாயம் கற்பிப்பர். சாதி வேற்றுமைகளுக்குச் சாத்திரம் காட்டுவர். உழவர் பெருங்குடி மக்கள் உயர்வதை ஏற்கும் மனம் இருக்காது. அவர்கள் மற்றவர்களைப் போல் உடுத்துதலைக்கூட விரும்பமாட்டார் கள். ஆனால் இவர்கள் இருபதாம் நூற்றாண்டில் வாழ்ப வர்கள். இல்லை-இல்லை; அவர்களுடைய உடல் இருபதாம் நூற்றாண்டில் வாழ்கிறது. அவர்களுடைய உணர்வுகள் வழி, கற்காலத்தில் வாழ்கிறார்கள். அவர்கள் காலத்தை வென்ற வர்கள் அல்லர். வெல்லவும் மாட்டார்கள்.

நம்முடைய மொழி, காலத்தை வென்று விளங்க வேண்டும். நம்முடைய இனம், காலத்தை வென்று விளங்கவேண்டும். நம்முடைய சமயம், காலத்தை வென்று விளங்க வேண்டும். இவையே இதுவரையில் நம்மை இயக்கிய உந்து சக்திகள்.

நம்முடைய மொழி, செழித்து வளரவேண்டும். புத்தம் புதிய கலைகளைப் பெற்று விளங்கவேண்டும். அன்றாடம் நம்முடைய வாழ்வைத் தூண்டி வளர்க்கும் புத்தம் புதிய சிந்தனையை வாரி வழங்குவதாக விளங்க வேண்டும். அன்னைமொழி, உலக மொழியாக விளங்க வேண்டும். உலகம் அதற்கு உரிமையாக வேண்டும். தமிழன்னை பெற்றிருக்கும் எண்ணற்ற இலக்கியச் செல்வங்கள் உலகோர்க்குப் பொதுமையாக வேண்டும். இதுவே நமது விழைவு.

மனிதகுலம் ஒன்றேயாகும். அதில் நமக்கு எட்டுணையும் ஐயமில்லை. மனிதகுலத்தை ஒரு குலமாகக்

கருதி அன்பு காட்ட எந்த ஒன்றும் தடையாக இருக்கக் கூடாது. இது நமது அசைக்க முடியாத நம்பிக்கை. இல்லை...இயன்ற வரையில் நம்முடைய வாழ்க்கையில் நடைமுறைப்படுத்தி வெற்றி தோல்விகளைக் கண்டு 'பலபட்டறை' என்ற பெயருக்குக்கூட ஆளானோம். இந்த ஒரே காரணத்தினாலேயே நமக்கென்று ஒரு கூட்டத்தை நாம் உருவாக்கி வைத்துக்கொள்ள முடியவில்லை. நடு நிலைக்கு நாட்டில் வரவேற்பு அவ்வளவு தான். ஆயினும், நாம் இனவழி அன்பை வரவேற்கின்றோம். ஏற்றுப் போற்றுகின்றோம். இது என்ன முரண்பாடு என்று சிலர் கேட்கலாம். முரண்பாடு இல்லை என்பது நமது கருத்து. ஒரு மனிதன் உலக மனிதனாக வளர்ந்து உயரலாம்; வளர்ந்து உயர வேண்டும். ஆனால் அந்த வளர்ச்சி படிப்படியாகத்தான். கடமைப்பட்டுள்ள சூழலில் உள்ள மனித சமூகத்திற்கு அன்பு காட்டாமல் உயர முடியாது; வளர முடியாது. அங்ஙனம் சொல்வது பிழை. ஆனால் இனவழிப்பட்ட அன்பில் சிறைப்படுத்திக் கொண்டு, மற்ற இனத்தை வெறுப்பதை அல்லது அன்புகாட்ட மறுப்பதை நாம் ஒருபோதும் ஏற்றுக் கொள்ள இயலாது. ஏற்றுக் கொண்டதும் இல்லை. நாம் மனப்பூர்வமாகத் தமிழினத்தை நேசிக்கிறோம். தமிழினத்தை முன்னேற்ற விரும்புகின்றோம். தமிழினம் பிறிதோரினத்திற்கு அடிமைப் படலாகாது, என்பதில் அளவற்ற அக்கறை காட்டுகிறோம்.

இது நமது பிறப்பில் குறையாக அமைந்தது. இது தவறு என்றால், இந்தத் தவற்றைத் தொடர்ந்து செய்கின்ற பேறு நமக்குக் கிடைக்க வேண்டும்.

ஆனால் மறந்துங்கூட வேறு எந்த இனத்தின் மீதும் நாம் வெறுப்புக் கொண்டதில்லை. கொள்ளவும் மாட்டோம். இன்னும் தெளிவாகச் சொன்னால் குறுகிய இனவட்டத்திலிருப்பவர் பலர் இன்று இனப்பற்றில்லாதவர்கள் போல நடிக்கின்றனர். நாடும் அவர்களை நம்பத்தான் செய்கிறது. நாளேடுகள் அப்படித்தான் காட்டுகின்றன.

மொழி, இனம் இரண்டிற்கும் அடுத்து இன்றியமை யாதது சமயம். பெரும்பாலும் இனவழி; மொழிவழி வந்தமைவது. நம்முடைய சமயத்தைப் பொறுத்தவரை இன்று இதே நிலைதான். நம்முடைய சமயமாகிய சைவ சித்தாந்தச் செந்நெறியில் நமக்கு ஆழமான நம்பிக்கை உண்டு. ஆனாலும், இந்து சமயத்தை நாம் ஏற்றுக் கொள்ளத் தயங்கவில்லை. அது போலவே நாம் கிறித்தவத்தைப் போற்றவோ, இசுலாமியத்தை ஏற்றிப் பாராட்டவோ என்றுமே தயங்கியதில்லை. ஆனாலும், நம்முடைய சமயம் சைவ சித்தாந்த செந்நெறியேயென்பதும், அது உலகப் பொது நெறியாக வளர வேண்டும் என்பதும் நம்முடைய விழுமிய நோக்கம்.

இந்த நோக்கங்களை மையமாகக் கொண்டுதான் பயணம் நடைபெற்று வந்திருக்கிறது. நோக்கங்களுக் கிசைந்தவாறு நட்புகளும் உறவுகளும் அமைந்தன. அமையும். ஆனாலும் நம்முடைய சமுதாயம் காலத்தை வென்று விளங்க விரும்புவதில்லை. மொழி, இனம், சமயம் மூன்று துறை யிலுமே இந்தக் குறையிருக்கிறது.

மொழித்துறை ஓரளவு விழிப்படைந்திருக்கிறது. ஆனாலும் காலத்தின் தேவைக்கும் உலக நாடுகளின் வளர்ச்சிக்கும் ஈடுகொடுப்பதாக இல்லை.

இனப்பற்று. சென்ற காலத்திற்கு இப்போது பரவாயில்லை. அவ்வளவுதான். தமிழினம் இன்னமும் தம்முள் முரணி மோதிக் கொண்டிருக்கிறது. இனவழிப் பட்ட அன்பை வளர்த்துக் கொள்ளக் கொள்கைகள் கோட்பாடு கள் தடையாக இருக்கக் கூடாது. இது வேறு உலகம், அது வேறு உலகம். மண்ணிலிருந்து விண்ணுலகத்தை எண்ணிப் பார்ப்பார்கள். நட்பு உலகத்திற்கும் கொள்கை உலகத்திற்கும் இடையிலுள்ள வேறுபாட்டைக் குறைக்கக் கூடாதா? அன்பின் வழி. கொள்கை மாற்றங்களை உருவாக்க முடியும். கொள்கை வளரும். பகைவழி ஒரு பொழுதும் முடியாது.

ஆதலால், இனவழிப்பட்ட அன்பும் செழித்து வளரவில்லை. ஒரு தமிழன் இன்னொரு தமிழனை வெறுத்துப் பகை கொண்டு ஏசுவதைக் கேட்கின்றோம். அவன் வாழ்க்கைக் குட்பட்டு சூழ்ந்து தீமை செய்வதைக் காண்கின்றோமே! பகுத்தறிவுவாதிகளின் அமைப்புங்கூட உடைந்துவிட்டதே. இனவழி அன்பு என்று பேசத் தொடங்கிய ஐம்பதாண்டு களுக்குள் எத்தனை உடைசல்கள். எண்ணிக்காட்ட வேண்டுமா? இல்லை. எண்ணிக்காட்ட இதயம் கல்லாக இல்லை. இனவழிப்பட்ட அன்புக்கு, உறவுக்கு நம்முடைய தலைமுறையில் வாழ்ந்த அமரர் பேரறிஞர் அண்ணா ஒரு விழுமிய எடுத்துக்காட்டு.

ஆதலால், இனவழி அன்பும் முழுமையாக வளர்ந்து விடவில்லை. நாமேகூட இனவழி அன்பைப் பலரிடத்தில் பெற முடியவில்லை. ஆனால், அவர்கள் இன வழிப்பட்ட அமைப்புக்களில் விளங்குகின்றனர். இந்த முரண்பாடு ஏன்? தமிழினம்- கொள்கை, கோட்பாடு, கட்சி, சமயம் இவற்றை மறந்து இனவழிப்பட்ட அன்பைக் காட்டக் கற்றுக் கொள்ள வேண்டும், வளர்த்துக் கொள்ள வேண்டும்.

இப்படி இனவழிப்பட்ட அன்பில் தமிழினம் வளர்வது மற்ற இனங்களின் வளர்ச்சிக்கு எதிராக அல்ல. எந்த ஒரு இனமும் பிறிதோரினத்தைத் தாழ்த்தி வளர்ந்துவிட முடியாது. அப்படி வளரும் வளர்ச்சியும் நிலையானதல்ல. அமுக்கப்படுகிற இனம் என்றாவது ஒரு நாள் எழுந்தே தீரும். அப்பொழுது அமுக்கிய இனத்தின் வரலாறு துன்பமாக முடியும்.

ஆதலால், தமிழினம் இந்திய இனங்களோடு ஒருங்கிணைந்து வாழ விரும்புகிறது. உலக இனங்களோடு உறவு கொள்ள விரும்புகிறது.

ஒருலக அமைப்பிற்குத் தமிழினம் என்றும் துணை நிற்கும். ஆனால், தமிழினத்தின் தன்மையை அஃது என்றும் இழக்காது. இழக்கக் கூடாது.

தமிழர் தம் அறிவில் பூத்துத் தோன்றியதே சைவ சித்தாந்தச் செந்நெறி. உலகச் சமயங்கள் உயர்வுடையன. ஆயினும் தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடுகிறவர்கள் சைவசித்தாந்தமே உலகச் சமய நெறிகளில் உயர்வுடையதாக இருப்பதை அறிவர். எந்த ஒரு காரணத்தினாலாவது உலகம் இதை அறிந்து கொள்ள மறுத்தால், அறிந்தும் எற்றுக் கொள்ள மறுத்தால் அது உலகத்திற்கு இழப்பேயாகும்.

ஆனால் தமிழகத்திலேயே கூட சித்தாந்தச் செந்நெறி தனித் தன்மையை இழந்து கலப்படமாகி உருவம் இழந் திருக்கிறது.

எந்த நோக்கங்களுக்காக நம்முடைய பணிகள் தொடங்கப் பெற்றனவோ அந்த பணிகளில் நாம் இன்னும் முழுமையான வெற்றியை அடையவில்லை. தேக்கத்தில் இயக்க உணர்வை உண்டாக்க முடிந்தது; அவ்வளவுதான். தமிழகம் எதையும் எளிதில் ஏற்றுச் செயற்படுத்தாமல் வாளாயிருந்ததால் எல்லைகளை இழந்திருக்கிறது. இனவழி மக்களை இழந்திருக்கிறது. இது ஆண்டாண்டுக் காலமாக வளர்ந்து வந்திருக்கிற நோய். வள்ளுவரை ஈன்றெடுத்த நாடு, திருநாவுக்கரசரை ஈன்று புகழ்பெற்ற நாடு, வள்ளலாரைப் பெற்ற நாடு எவ்வளவு இழப்புகளை அடைந்திருக்கிறது? அந்த இழப்புகள் இன்னும் தொடர்கின்றன.

நாம் தனிப்பட்ட வாழ்க்கையிலும் தோல்விகளைச் சந்திக்கிறோம்; இகழ்ச்சிகளை ஏற்றுக் கொள்ள என்றும் தயங்கியதில்லை. ஆனால், இனம், மொழி, நமது சமயம் ஆகியவற்றுக்கு இழப்புகள் ஏற்படும் பொழுது உயிர் துடிக்கிறது. நமக்குப்பின் வருபவர்கள், நம்மைச் சேர்ந்த வர்கள் இந்த உயிர்த் துடிப்பைப் புரிந்து கொண்டு செயற் பட்டால் அதுவே நமக்கு மகிழ்ச்சி.

அன்புகூர்ந்து சாதனைகளைச் செய்யத் துணியுங்கள். நம்முடைய இயக்கத்திற்கு–கொள்கைக்கு மேட்டுக் குடியினர்

ஆதரவு கிடைக்காது. செல்வச் சீமான்களின் ஆதரவு கிடைச் காது. இவர்கள் சமரசத்திற்கு, சமதர்மத்திற்கு உடன்படாத வர்கள். இங்ஙனம் உடன்படாதவர்கள் எண்ணிக்கையில் சிலரே. ஆனாலும் வலிமையான முகாம். நம்முடைய கொள்கைகளை இதயத்தில் ஏந்தித் துணை நிற்க வேண்டிய வர்கள், சாதாரணமானவர்கள், கிராமங்களில் வாழ்பவர்கள். அவர்களைத் தேடுங்கள்' அவர்களிடத்தில் மொழி உணர்ச்சியைத் தூண்டுங்கள். இனப் பற்றை வளருங்கள். சமய வாழ்க்கையை மலரச் செய்யுங்கள்.

௫. XII. ௨௨.

# 7

# சிந்தனை மலர்கள்

## மதங்களின் உண்மை அறி

மதம் என்ற சொல்லுக்குப் பொருள் கொள்கை என்பதாகும். பண்டைக் காலத்தில் மதம் என்பது ஆன்மிகத்தையும் கடவுட்சார்புடைய கொள்கைகளையும் குறிப்பதாயிற்று. வரலாற்றுப் போக்கில் மனித சமுதாயத்தை நெறிப்படுத்தும் கொள்ளைகள் பல்வேறு துறையினவாகப் பல்கிப் பெருகி வளர்ந்து வந்துள்ளன. எனவே. இன்று மதம் என்ற சொல் கடவுட்சார்புடையதாகவும் ஆன்மிகச் சார்புடையதாவும் மட்டுமே வழங்கப்பெறும் ஒரு பொருள் பொதிந்த பரந்த நிலையிலிருந்து சுருங்கிவிட்டது. இன்று மதங்கள் கடவுட்சார்புடையவனவாக மட்டுமே இருக்கு மானால் ஏன் அவை தம்முள் ஒருமைப்பட்டு நிற்க முடிய வில்லை? ஒருமைப்பட்டு இயங்காநிலை மட்டுமல்ல. தம்முள் முரணி நின்றும் போராடுகின்றன. உலக வரலாற்றுப் பேரேட்டில் மதச்சண்டைகளின் இரத்தக்கறை படிந்துள்ள பக்கங்களே மிகுதி. அதனால்தான் **'சமயக்கணக்கர்'** என்று கல்லாடமும் **"மதமெனும் பேய்"** என்று திருவருட்பாவும் கடிந்து பேசின. மதம் என்ற சொல் சமுதாயத்தில் தனது மதிப்பை

இழந்தவுடன் அந்த இடத்தை நிரப்ப மதத்தலைவர் கள் கண்ட புதுச் சொல்லே 'ஆன்மிகம்' என்பது

ஆன்மிகம்-உயிரியல் அறிவு. ஆன்மாவின் பண்பு எனப்படும். ஆன்மிகம் என்ற சொல்லை மார்ச்சியவாதிகளும் எடுத்தாள்கின்றனர். ஆன்மிகம் என்ற பெயரிலும் கண்மூடிப் பழக்கங்களே மேவி வளர்ந்தன. இதற்குக் காரணம் மதங்களல்ல. ஆதிபத்தியத்தையும் பொருளாதாரத்தையும் நாடிய மதத்தலைவர்களேயாவர். ஆனால், மானுடன் கண்ட வாழ்வியல் முறைகளில் மதம் மிகமிக உயர்நெறியாகவே தொடக்க காலத்தில் விளங்கியது. தன்னையறிதல், தன்குற்றங்களை உணர்தல், தன்னைப் பலவீனப்படுத்தும் குற்றங்களையும். குறைகளையும் தவிர்த்தல், குறிப்பாகத் தன்முனைப்பு, தன்னலம் இவற்றினின்றும் விடுதலை பெறுதல், அன்புடையராதல், அருள்நலம் சார்ந்த சீலம் பெறுதல், ஞானம் பெறுதல், உலக உயிர்களிடத்தில் ஒருமை யுடையவராக விளக்கம் பெறுதல் முதலிய உயர்நலன்களை மக்களுக்கு அறிவுறுத்தி, வழிகாட்டி வழிநடத்தி வாழ்வித்தலே மதங்களின் குறிக்கோள். இந்த நோக்கத்துடன் மதங்கள் இயங்கி வந்ததால்தான் மானுடம் வளர்ந்தது; வாழ்ந்தது!

உடல் எப்போதும் தற்சார்புடையது. அது தனது சுகத்தையே - இன்பத்தையே அவாவி நிற்கும். ஆனால் ஆன்மா - உயிர் - பிறர் நலத்தையே கருதும். ஆன்மாவின் செல்வாக்கிற்குக் கட்டுப்பட்டு இயங்கினால் மதம் வெற்றி பெறுகிறது. இங்ஙனம் வெற்றிபெற்ற தலைவர்கள் புத்தர், மகாவீரர், முகம்மது நபி, இயேசுகிறிஸ்து, அப்பரடிகள் முதலானோர். உடலுக்குத் தேவைகள் இருப்பதைப் போல ஆன்மாவிற்கும் தேவைகள் பலப்பல உண்டு. ஆன்மாவின் தேவைகளாகிய அன்பு, ஆற்றலின் பெருக்கம், மனித நேயம், அருள், ஞானம் முதலியவற்றை நிறைவு செய்யவே மதம் தோன்றியது. உலக மாந்தரை இதயத்தால் இணையச்

செய்வதே மதங்களின் குறிக்கோள். ஆன்மநேய ஒருமைப் பாடே ஆன்மிகத்தின் இலட்சியம்.

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவனாக, உயர்வற உயர்ந்து விளங்கும் தனக்குவமை இல்லாத பரம்பொரு ளுடன் ஆன்மா, ஓர் உறவை ஏற்படுத்திக் கொள்வதற் குரியனவே மதம், வழிபாடு என்பவையெல்லாம்! இந்த உறவு. பரம்பொருளை இடையறாது எண்ணுவதன்மூலமும் நினைந்து நெகிழ்ந்துருகுவதன் மூலமும்தான் கிடைக்க இயலும். இன்று மதங்கள், பரம்பொருளை வழிபடுதலுக்குரிய பயிற்சியைத் தருவதில்லை. மாறாகக் கடவுளையே கையூட்டுப்பெறும் நிலைமைக்குக் கீழ்ப்படுத்தி, தூப தீப ஆராதனை, அருச்சனையுடன் தொழும் சடங்கு வழிபாட்டு நிலையே எங்கும் வளர்ந்து வருகிறது; வளர்க்கப்படுகிறது. ஒரு கடவுள் வழிபாட்டு நெறியும் இல்லை. அன்பு, தியாகம், தன்னலமின்மை, பிறர்நலம் போற்றல் ஆகியன இன்று சமயத் துறையில் போதிக்கப் பெறவில்லை. வளர்க்கப் பெறவு மில்லை. இந்தப் போக்கு விரும்பத் தக்கதல்ல.

இன்று மதங்கள் பெரும்பாலும் மனித நேயத்தை, உயிர்க்குல ஒருமைப்பாட்டை ஒதுக்கி வைத்துவிட்டன. மனித உயிர்கள் நடமாடுங் கோயில்கள். இந்த மனித உயிர்களை ஆதரிப்பது முதற்கடமை; மதம் வற்புறுத்திய தலையாய கடமை. 'எவ்வுயிர்க்கும் அன்பில்லார் ஈசனுக்கும் அன்பில்லார்'. ஆதலால், மனித நேயமும் மனித மேம்பாட்டுக்குரிய தொண்டுகளுமே இன்றைய அவசரக் கடமை! நம்முன் நிற்கும் மானுடம் நடமாடும் கோயில்! போற்றுவோம். வாரீர்!

## அறிவியலும் ஆன்மிகமும்

வாழ்க்கையென்பது உடலும் உயிரும் சேர்ந்தது. வாழ்க்கையில் உடல் தேவைகளும் உண்டு; உயிர்த்

தேவைகளும் உண்டு. உடலை இயக்கி உயிர் பயன்பெறுதலும் உண்டு. உயிரை இயக்கி உடல் பயன்பெறுதலும் உண்டு. வாழ்க்கை முழுமைபெற முதல் தேவை உடல் தேவை. வாழ்க்கையின் முடிவுநிலை உயிர்க்கு ஊதியமாகிய இன்ப அன்பினை எய்துதல்.

"பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை"

என்பது வள்ளுவம். பொருள், உடற்சார்புடையது. அருள், உயிர்ச் சார்புடையது. பொருள் நலம் பெறாத உடலியல் வாழ்க்கை வளமாக இருத்தல் இயலாது. உடலியல் வாழ்க்கை வளமாக அமையாத நிலையில் உயிர்நலமாகிய அருள்நலமும் சிறத்தல் இயலாது. பொருள்நலம் சிறந்தாலும் அருள்நலம் இல்லாது போயின் வாழ்க்கை வீணாகும். உடலியல் வாழ்க்கைக்குரிய பொருள்நலப் பேற்றுக்கு அறிவியல் அடிப்படை. நம்மைச் சுற்றியுள்ள வான், மண், வளி, ஒளி, நீர் ஆகியவற்றை நல்வாழ்க்கைக்குரியவாறு பயன்படுத்தத் துணை செய்வது அறிவியல்; உடல்-உயிர்க் கூட்டு வாழ்க் கைக்குரிய நுகர் பொருள்களைப் படைத்தும் காத்தும் வகுத்தும் பயன்படுத்தத் துணை செய்வது அறிவியல். ஐம் பூதங்களின் மீது பெற்ற வெற்றியை மானிடத்திற்கு நன்மை செய்யத் தக்கவகையில் ஆற்றுப்படுத்துவது ஆன்மிகம். அறிவியலுக்கும்கூட ஆன்மவியலே அடிப்படையாக இருக்கிறது. ஆன்மாவின் அறிவில் தோன்றும் செய்திகளை அனுபவத்திற்குக் கொண்டு வரத் துணைசெய்வது அறிவியல். ஞானத்தின் விரிவுகளுள் ஒருபகுதியே விஞ்ஞானம். ஞானம் என்ற அறிவு, உலகியலைச் சார்ந்து-பூத பௌதிகவியலைச் சார்ந்து இயங்கிப் பயன்படும் பொழுது விஞ்ஞானம் அல்லது அறிவியல் என்று பெயர் பெறுகிறது. ஆன்மாவின் அறிவு, உடற்சார்புடையதாகவும் தற்சார்புடையதாவும் அமையும் பொழுது தரப்பாடு குறைந்த ஆன்மஞானமாகிறது. இதை ஆன்மஞானம் என்று யாரும் ஒத்துக் கொள்ளவில்லை. **"பசுஞானம்"** என்று சித்தாந்த நூல்கள் கூறும்.

ஆன்மாவின் தராதரத்தினை அறிந்துகொண்டு அதன் தரத்தை உயர்த்துவதற்குரிய முயற்சியுடைய வாழ்க்கைக்கு ஆன்மிக வாழ்க்கை என்று பெயர். ஆன்மா, இயற்கையில் குறைபாடுடையது; அறியாமைச் சார்புடையது; ஆனாலும் அறிவினைப் பெறும் தகுதியுடையது. குறையிலிருந்து நிறையை நோக்கிப் பயணம் செய்வதே வாழ்க்கை. அறிவிய லும் ஆன்மிகமும் உடம்பும் உயிரும் போல இணைந்து செயற்பட வேண்டியவை. ஒன்று, பிறிதொன்றுக்குத் துணை. ஒன்றின்றிப் பிறிதொன்றில்லை. அறிவியலும் ஆன்மிகமும் அல்லது அறிவியலும் அருளியலும் ஒரு நாணத்தின் இரண்டு பக்கங்களைப் போன்றவை. ஆன்மிகச் சார்பில்லாத அறிவியல் நொண்டித் தனமானது. அறிவியற் சார்பில்லாத ஆன்மிகம் குருட்டுத்தனமானது. ஆன்மிகச் சார்பில்லாத அறிவியலால்தான் இன்று உலகத்தில் அணு ஆயுதப் போர்ப்பயம்! அருளியல் சார்பில்லாத அறிவியல், ஆக்கத் திற்குப் பதிலாக அழிவையே தரும். அறிவியல் சார்பில்லாத ஆன்மிகம், உலகியல் வாழ்வை வறட்சிக்கு ஆளாக்கி, நுகருமாறு நுகர்ந்து வாழ்வித்து வாழும் வாழ்வை இல்லாமல் பாழாக்கி விடும். வறுமையும் பிணியும் நிறைந்த வாழ்க் கையில் ஆன்மஞானம் இடம் பெறுவதில்லை. செழிப்பான மண்ணில்லாத நிலத்தின் எங்ஙனம் பயிர் வளர முடியும்? நீர்த்திவலைகள் செழித்த கருமேகம் இல்லாதபோது ஏது வான்மழை? அதுபோலவே வாழ்க்கையை நிறைவாக நடத்த இயலாதபோது ஆன்மா சிறப்படைவதில்லை. சாதாரண அறிவு கூட வறுமையாளர்க்கு இல்லை. அறிவுப் புலன்களுக் குரிய அறிவுவாயில்கள் எளிதில் கிடைப்பதில்லை. இதற்கே வாய்ப்பில்லையெனில் ஆன்மிகம் எப்படி வளரும்? அதனால்தான்,

"நல்குர வென்னும் தொல்விடம் பிழைத்தும்"

என்று மாணிக்கவாசகரும்,

"வறுமையாம் சிறுமை தப்பி"

என்று அருணந்தி சிவமும் கூறினர்.

ஆதலால், அறிவியலும் ஆன்மிகமும் வாழ்க்கைக்கு இன்றியமையாதவை. அறிவியலையும் ஆன்மிகத்தையும் நெறி முறைப்படுத்தி வையகம் சிறக்க வாழ்ந்திடுதல் வேண்டும். ஆன்மிகத்திற்குக் துணை செய்வதற்கே அறிவியல். அறிவியல், ஆன்மிகத்தைச் சார்ந்தும். ஆன்மிகத்திற்கு அரண் செய்வ தாகவும் இருக்குமானால் ஆக்கவழிப் பட்டதாக இருக்கும். ஆன்மிகம், அறிவியலைத் தழுவி முறையாகப் பயன்படுத்து மானால் மண்ணை விண்ணகமாக்கும்! 17-3-86

## வழிபாட்டில் ஒருமைப்பாடு

மனம், ஓரிடத்தில் நிலைத்து நிற்கும் இயல்பு டையதன்று; சலிக்கும் தன்மையுடையது; சென்ற சென்ற இடங்களில் எல்லாம் தங்கும் இயல்பினது. அதன் காரணமாக மனத்தின் ஆற்றல் கெடுகிறது. அவ்வழி ஆன்மாவின் வலிமையும் குறைகிறது. இங்ஙனம் அலைந்து திரியும் மனத்தை ஓரிடத்தில் நிற்கச் செய்தல் நல்ல முயற்சி. ஒருநிலை நிற்கும் மனம் ஆற்றலைத் தரும்; அறிவை வளர்க்கும்; எண்ணற்ற பயன்களைச் சேர்க்கும். இந்த நோக்கத்திலேயே வழிபாட்டுமுறை தோன்றியது.

இறைவனை வழிபடுதல் என்பதை, இறைவனுக்குச் செய்கின்ற ஒரு கடமையாகக் கருதுதல் கூடாது. வேண்டுதல் வேண்டாமை இல்லாத இறைவன், வழிபடுவோர்க்கு நன்மை செய்வான் என்பதும் சாதாரண மக்களுக்கு வழிபாட்டின் அருமைப்பாடுதோன்ற எடுத்துக் கூறப்பட்டதேயாம். வழி பாட்டின் பயன் ஆன்மாவிற்கேயாம். ஆன்மா, அறிவில், ஆற்றலில், பயன்பாடு நிறைந்த வாழ்வில், அன்பில் சிறந்து விளங்க வழிபாடு துணை செய்யும். குவிக்கப் பெற்ற கதிரவனின் ஒளி, ஆற்றல் மிக்குடையதாக இருப்பதுபோல்

ஒருநிலைப் படுத்தப்பெற்ற மனம், ஆற்றலுடையதாக இருக்கும்.

வழிபாட்டில் ஒருமைநிலை என்பது பொறிகள். புலன்கள், மனம் அனைத்தும் ஒருமுனைப்படுத்தப் பெறுத லாகும்.

**"ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற உத்தமர்"** என்றார் வள்ளலார்.

**"ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை"** என்று அப்பரடிகள் மொழிந்தார்.

வழிபாட்டில் ஒருமைநிலை தோன்ற ஒரு கடவுள் வழிபாடு தேவை. **"ஒன்றென்றிரு; தெய்வம் உண்டென்றிரு"** என்றார் பட்டினத்தார். ஒரு கடவுள் வழிபாட்டிலும்கூட, திருநாமம், திருக்கோலம் அனைத்தும் வழிபாடு தொடங்கிய நாள் தொட்டு ஒரே தன்மையுடையனவாய் இருத்தல் வேண்டும்.

*"பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல் சிறந்து'*

என்றார் காரைக்காலம்மையார். ஆக, பிறந்து மொழி பயின்ற காலந்தொட்டு ஒருருவம், ஒருநாமம் என்ற பழக்கம் ஒருமை நிலைப்பட்ட வழிபாட்டுக்குத் துணை செய்யும். பழக்கத்திற்கு வந்து வழக்கமாகிவிட்ட எந்த ஒன்றும் எளிதில் நினைவிற்கு வரும்; எந்தச் சூழ்நிலையிலும் நினைவிற்கு வரும். இந்த அடிப்படையில்தான்,

*"வழுக்கி வீழினும் நின்திருப் பெயரல்லால்*
*மற்று நான் அறியேன் மறுமாற்றம்"*

என்றும்,

*"நற்றவா உனை நான் மறக்கினும்*
*சொல்லும் நா நமச்சிவாயவே"*

என்றும், அருள்நூல் பேசும்.

வழிபாட்டில் ஒருமைநிலை காணத் தொடக்கக் காலத்தில் ஆரவாரமற்ற அமைதியான சூழல் தேவை. இயற்கைச் சூழல் நிறைந்த காடு, மலை, ஆற்றோரம், கடற்கரை முதலிய இடங்கள் எளிதில் மனம் ஒரு நிலைப்படுவதற்குத் துணை செய்வன; திருக்கோயில்களும் வழிபாட்டில் ஒருமைநிலை காணத் துணை செய்வன. திருக்கோயில் தோற்றத்தின் நோக்கமும் அதுவே. பலர் தனித்திருந்து ஒருமைநிலையில் இறைவனின் திருநாமத்தை எண்ணுதற்கேற்ற நிலையிலேயே பரப்பளவில் கூடுதலான திருக்கோயில்கள் தோன்றின. ஆனால், காலப்போக்கில் திருக் கோயில்களின் பல பகுதிகள் பயன்பாடில்லாது போயின. இன்று திருக்கோயிலில் இறைவன் எழுந்தருளியுள்ள. சந்நிதிகள் மட்டுமே பெரும்பாலும் பயன்பாட்டில் உள்ளன. இறைவன் சந்நிதிகளிலும் அண்மைக்காலமாக நெரிசலும் இரைச்சலுமே தோன்றி வழிபாட்டிற்குரிய சூழ்நிலையைக் கெடுத்துக் கொண்டிருக்கின்றன. பழங்காலத்தில் ஆலமர் செல்வன் சந்நிதி. கொடிக்கம்பத்திற்கு முன்னிடம் ஆகிய இடங்களில் ஒருமைநிலையோடு உட்கார்ந்து இறைவன் திருநாமத்தை எண்ணும் பழக்கம் இருந்தது. இன்று பெரும்பாலும் இந்தப் பழக்கம் அருகிப் போய்விட்டது. இது விரும்பத்தக்கதன்று. ஆதலால், திருக்கோயில் சூழலில் எங்கோ ஓரிடத்தில் அமைதியாக இருந்து இறைவனை நினைந்து நினைந்து அவன் திருவருட் பெருக்கில் திளைத்துத் தியானித்தல் வழிபாட்டின் ஒருமை நிலைக்குத் துணை செய்யும். வழிபாட்டின் ஒருமைநிலை கண்டால்தான் ஆன்மாவிற்குப் பயன் கிடைக்கும்; அனுபூதி சித்திக்கும்.

14-4-86

ஒருவர் நெருங்கச் செய்வது; ஒருமையுடையராக்குவது; அகனமர்ந்த அன்பினராக ஒழுகச் செய்வது. வன்சொல் தோன்றும் களம் தற்சார்பேயாம். தற்சார்பான தன்னலத் திற்குக் கேடுவருமோ என்று ஐயுறும் பொழுது, தற்காத்துக்

கொள்ளும் முயற்சியில் வன்சொல் தோன்றுகிறது. அடுத்து, வன்சொல் தோன்றும் களம் ஏமாற்றங்களும் தோல்விகளு மாகும். அழுக்காற்றின் காரணமாகவும் வன்சொல் தோன்றும். இந்தக் களங்களில் தோன்றிய வன்சொற்கள் யாதொரு பயனையும் தந்ததில்லை. மாறாக எதிர்விளை வையே உண்டாக்கியுள்ளன என்பதே வரலாற்று உண்மை. அது மட்டுமல்ல, கருத்து வளர்ச்சியும் மாற்றங்களும்கூட வன்சொல் வழங்குவதின் மூலம் தடைப்படுகின்றன. நிலம் செப்பமாக இல்லாதபோழ்து விதைத்து என்ன பயன்? முளைக்காது. கேட்பார் மனம் செப்பமாக இருக்கத்தக்க வகையில் இன்சொற்களைக் கூறாது போனால் பயன் கிடைக்குமா? மற்றவர் கூறிய இனிய சொற்கள் இன்பம் விளைவித்திருப்பதைச் சென்ற கால வரலாற்றிலும் காண முடிகிறது. நிகழ்கால வரலாற்றிலும் காண்கிறோம். இன் சொல் இன்பத்தைத் தருகிறது. பழகும் இனிய நட்பினைத் தரும்! இத்தகு மேம்பட்ட பயன்களை இன்சொல் அளிப்பதை அறிந்திருந்தும் ஏன் வன்சொல் வழங்குகிறீர்கள்?

வன்சொல், வாளினும் கொடிது; நாவினால் வன்சொல் கூறிச் சுடுவது தவறு. வன்சொல் இன்ப அன்பிற் குப் பகை; அறத்திற்கு முரண். வன்சொல் அமைதியைக் கெடுத்திடும். வன்சொல் வழங்கற்க! இன்சொல்லைச் சொல்லிடுக!

வன்சொல், சிறுமை பொருந்தியது. இன்சொல் பெருமையோடு தொடர்புடையது. வன்சொல் இம்மையையும் கெடுக்கும்; மறுமையையும் கெடுக்கும். நன்றைத் தரும் இன்சொல் கூறிப் பழகுக! இன் சொல்லை அணியெனப் பற்றுக!

22–3–1987

# சீர்திருத்தக் கருத்தும் சமூக மேம்பாடும்

இன்று தலைவர் பெரியார் பிறந்த நாள். பகுத்தறிவையே கருவியாகக் கொண்டு. சமுதாயச் சீர்திருத்தத்திற்காக உழைத்தவர் தலைவர் பெரியார். மூடத்தனங்களின் முடைநாற்றத்தையும். சாதிப் பிரிவினைகளின் புன்மையினையும் வாழ்நாள் முழுவதும் சாடியவர் பெரியார்; தாழ்த்தப் பட்டோருக்காகப் போராடி வைக்கம்வீரராக விளங்கியவர். பெரியாரின் சமுதாயத் தொண்டு நினைக்கத்தக்கது; பின்பற்றத்தக்கது. தலைவர் பெரியார் நினைவில் நாம் சிந்தித்துச் செயற்பாடுறுதல் வேண்டும்.

மனிதகுலத்தின் வரலாறு, ஒரு நீண்ட வரலாறு. இந்த நெடிய வரலாற்றில் மனிதகுலம் வளர்ச்சி பெற்றுள்ளது. மனித குலம் மண், நீர், தீ, வளி, வெளி ஆகிய ஐம்பூதங்களை அடக்கி ஆளுவதில் வெற்றிபெற்று விட்டது. அதேபோழ்து ஒளியின் அடியில் நிழல்போலக் கொடிய துன்பங்களையும் அனுபவித்து வந்துள்ளது; அனுபவித்துக் கொண்டிருக்கிறது ஏன்? இன்றைய மனித குலம் தனது அழிவின் எல்லைக்கு வந்துவிட்டது. அதாவது அணு ஆயுதப்போர், நட்சத்திரப் போர், ஏவுகணைகள் என்றெல்லாம் அழிவின் ஆற்றல்கள் வளர்ந்து வந்துள்ளன! ஏன் இந்த நிலை? ஆளத்தெரிந்தால் மட்டும் போதாது! தானே ஆண்டுகொள்ளவும் தெரிந்தால் தான் மனித குலத்திற்கு விடிவு தோன்றும். அதுபோலவே ஆளப்படுதலுக்கும் ஆயத்தமாக இருந்தல் நயத்தக்க நாகரிகமாகும்.

மனிதப்பிறப்பு உயர்ந்தது; மிகமிக உயர்ந்தது. பயன்காணும் பெருவாழ்வு மனித வாழ்வு. இன்ப அன்பே பயன். இந்த அறிவை முதலில் வளர்த்தாக வேண்டும். இன்று, வாழ்வாங்கு வாழும் முனைப்புடன் வாழ்கின்றவர்களையே

காணோம்; பிழைப்பு நடத்துகின்றவர்களையே பார்க்கின்றோம். மனிதகுலத்தின் இந்த நிலை அறியாமையின் விளைவு. "வாழ்க்கை துன்பமானது; வாழ்க்கை யாராலேயோ அமைக்கப்படுகிறது. இது இப்படித்தான் இருக்கும்" என்றெல்லாம் கூறும் அறியாமையிலிருந்து மக்களை மீட்கவேண்டும். "வாழ்க்கை வாழ்வதற்கே! வாழ்வாங்கு வாழ்வதற்கே!" என்ற அறிவியல் சார்ந்த விழிப்புணர்வைத்தர வேண்டும். வறுமை, துன்பம், அவமானம் ஆகியவற்றோடு ஒன்றிப் பழகிப் போய் - இவையெல்லாம் இயற்கையென்றும், விதியின் விளைவு என்றும், இறைவனின் ஏற்பாடு என்றும், மாற்றமுடியாத ஏற்பாடு என்றும் நினைத்துக் கொண்டு இழிவினை எதிர்த்துப் போராட உந்துதலும் திறனுமின்றி வாழும் மக்களிடத்தில் பொய்ம்மைச் சாத்திரங்களைத் தோலுரித்துக் காட்டி விழிப்புணர்வு உண்டாக்க வேண்டும். அவர்களிடம் போர்க்குணத்தினை உண்டாக்கிட வேண்டும்.

அறியாமையைப் போலவே இரக்கம் காட்டுதல், தானம் தருதல், இலவச வாழ்க்கை வழங்குதல் ஆகியவையும் மனிதகுலத்திற்குத் தீமையையே தரும். வாழப் பிறந்த மனிதனுக்குக் கல்வியும். தொழிற்நுட்பக் கல்வியும் இயல்பாகவே பெற உரிமை உண்டு. இது சமுதாய, அரசியல் அடிப்படையிலான உரிமை ஆகும். அந்த உரிமையை எந்தவிதமான வேறுபாடும் காட்டாமல் அனைவருக்கும் எளிதில் கிடைக்கச் செய்ய வேண்டும். கல்விக்குக் கட்டணம் என்பது கூடாது! கூடாது! கல்விக்கு கட்டணம் என்ற நிலை நீடித்தால் மானுடத்தின் பிறப்புரிமையைப் பறிப்பது போல ஆகும்; செயற்கை வழியதாகிய ஏற்றத்தாழ்வுகளை நிலைப் படுத்துவதும் ஆகும்; மானிடத்தின் இயல்பே கெட்டுவிடும்.

அடுத்து, உழைத்து உண்பது உயிரியற்கை. உழைப்புக்கே மானிடப்பிறப்பு. உழைத்து வாழ்தலே இயற்கையான வாழ்வு; இறைமை சார்ந்த வாழ்வு. உழைக்காதவர்க்கு உண்ண உரிமை இல்லை. இதுவே புதிய அறம். உழைப்பிற்குரிய களங்களைச்

சமுதாயமோ, அரசோ ஏற்படுத்தித் தரவேண்டும். உழைப் போர்க்கு உழைப்புக்குரிய சூழலை உருவாக்காத அரசு, சமுதாயம் ஆகியவைவ் அதனதன் தகுதியை இழந்ததாகவே கருத வேண்டும். உழைத்து வாழும் நெறி நடைமுறைப் படுத்தப்பட்டால் செல்வ வாழ்க்கையில் அருவருக்கத்தக்க மேடுபள்ளங்கள் அமையா. ஒரோவழி அமைந்து விட்டாலும் அறத்தின் அடிப்படையில் சீராக்கப்படுதல் வேண்டும். இஃது அற வேள்வியாகும்.

நுகர்வுக் களங்கள் நாளும் வளர வேண்டும்; புதியன புதியனவாக வளர வேண்டும். ஆடம்பரமின்றி, போதை யின்றி அதேபோழ்து நலமுடனும் மகிழ்வுடனும் வாழ்தலுக் குரிய நுகர்வு வேட்கை வளர்ந்தால்தான் புதிய படைப்பு களுக்குரிய கட்டாயம் தோன்றும்; தொழில் வாய்ப்புகள் பெருகும்; தொழில் வாழ்க்கை நடத்தலாம். அங்ஙனமின்றிக் 'கந்தையானாலும் கசக்கிக் கட்டு; கூழானாலும் குளித்துக் குடி' என்றெல்லாம் சொல்லி நுகர்வுத்திறனை மழுங் கடித்தல் கூடாது. உழைப்பு வாய்ப்புகளை நாளும் கண்டு பெருக்கி வளர்ப்பதைத்தான் வள்ளுவம் "இயற்றல்" என்று குறிப்பிட்டது.

அறிவறிந்த ஆள்வினை வழியில், உழைப்பு வழியில் மட்டுமே பொருளீட்டும் உரிமை மக்களுக்கு இருக்க வேண்டும். பிறர் பங்கைத் திருடிச் சொத்துச் சேர்க்கும் முறைக்கு முற்றுப்புள்ளி வைத்தாக வேண்டும். எந்த வகை யிலும் பணம் வைத்திருப்பவனைவிட அறிஞனும் உழைப் பாளியும் தரம் தாழ்ந்தவராகார். இன்றைய சமுதாயத்தில் அரசியல் அதிகாரமுடையவர்களும், பணம் வைத்திருப்ப வர்களும் எந்தவிதத் தகுதியும் இல்லாது போனாலும் - சுரண்டி வாழ்ந்தாலும்கூட - மதிக்கப் பெறும் கேவலம் வளர்ந்து விட்டது. வளரும் சமுதாயத்திற்கு இஃது ஏற்றதன்று. விஞ்ஞானிகளையும் அறிஞர்களையும் உழைப்பாளிகளையும் மதிக்கும் மனப்பண்பு வளரவேண்டும். இன்று வளர்ந்துள்ள

பண மதிப்பீட்டுச் சமுதாயம் அறவே மாற வேண்டும். மனித இயல் மதிப்பீட்டுச் சமுதாயம் அமைய வேண்டும்.

இந்தியச் சமுதாயம் - தமிழ்ச் சமுதாயம் இன்றும் வேதகாலத்திலேயே' வாழ்கிறது. காலமும் தூரமும் வெல்லப்படாத காலத்தில் தோன்றிய வருணப்பிரிவினைகள், சாதி, குல, கோத்திரப் பிரிவினைகள் இன்றும் அப்படியே பின்பற்றப்படுவது நியாயமும் அன்று; மரபும் அன்று. அறநெறிக்கும் மனித நேயத்திற்கும் முரணான சாதிமுறை களைக் காப்பாற்றுவது எந்த வகையிலும் நியாயப்படுத்த முடியாத அநீதி என்பதை உணர்தல் வேண்டும். இந்த வருணம் - சாதி வேற்றுமைகளில் ஆதாயம் கண்டவர்கள் இந்த முறைகளைக் காப்பாற்றப் பெரிதும் முயல்கின்றனர். இதற்கு ஆதரவாகச் சாத்திரங்களையும் ஆகமங்களையும் காட்டுகின்றனர். இது நமது காலத்தில் மட்டுமன்று; அப்பரடிகள் காலத்தில் அவரிடத்திலேயே இந்தக் கைவரிசைகளைக் காட்டியுள்ளனர். அப்பரடிகள் தம்மிடம் தீண்டாமை. சாதி முதலியவற்றிக்குச் சாத்திரங்களைக் காட்டி வாதாடியவர்களைப் பார்த்து,

"சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும்கொண் டென்செய்வீர்!"

என்று கண்டிக்கிறார். இன்று அரசியல் நெறியினரும் மதங்களைச் சார்ந்த பிற்போக்குவாதிகளும் சாதிகளைக் காப்பாற்றும் முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். கடைகோடி மனிதனுக்கும் கடைத்தேற்றம் - மேம்பாடு தேவை. இதில் இரண்டு கருத்துக்கு இடமில்லை. ஆனால், கடைகோடி மனிதனை நிர்ணயிப்பதில் அளவை முறையாகப் பிற்பட்ட நிலையைக் குடும்ப அளவில் எடுத்துக் கொள்ள வேண்டும். அதற்கு மாறாகச் சாதி, மதங்கள் அடிப்படையில் தாழ்த்தப் பட்டோர். பிற்பட்டோரை நிர்ணயித்தல் கூடாது. இங்ஙனம் நிர்ணயித்தால் சாதிமுறைகள் நிலைப்பட்டுப் போகும்.

சலுகைகளைக் காப்பாற்றச் சாதிகளைக் காப்பாற்றுவார்கள். அதுமட்டுமா? எந்தக் காலத்திலும் "கடைகோடி மனித" னுக்கு மேம்பாடு கிடைக்கவே கிடைக்காது. ஆதலால், இன, சமய, சாதிப் பிரிவினைகளுக்கு அப்பாற்பட்ட நிலையில் அனைவருக்கும் வாழ்க்கை உத்தரவாதம் வழங்கப் பெறுதல் வேண்டும்.

உலகம் இருபாலது; வேற்றுமைப்பட்டது. இந்த வேற்றுமை ஆக்கத்தின் பாற்பட்டது; மகிழ்வின் பாற்பட்டது. இந்த வேற்றுமை தவிர்க்க இயலாத தவிர்க்கக்கூடாத அமைப்பு. அதாவது, ஆண்-பெண் என்ற அமைப்பு. இந்த வேறுபட்ட அமைப்பு இல்லையானால் களிப்பு இல்லை; மகிழ்ச்சி இல்லை; துணை இல்லை. ஆதலால், இந்த வேறுபாட்டை - இயற்கையின் நியதியை மதித்துப் போற்றி வாழ்தல் வேண்டும். பெண், அனைத்து உரிமைகளுக்கும் உரியவள். அவள் வாழ்க்கைத் துணைநலம். இஃதன்றிப் பெண்ணைக் கவர்ச்சிப் பொருளாக, போகப்பொருளாகக் கருதுதல், மூடத்தனத்திலும் அடிமைத்தனத்திலும் ஆழ்த்து தல், பணம் காய்க்கும் கருவியாக மாற்றுதல் போன்ற தீமைகள் ஆகாதன! ஆகாதன! பெண் பெறும் பெருவாழ்வே ஆடவர்க்குப் பீடு சார்ந்த பெருமித நடையைத் தரும். பெண்மை வளர்தலும் வாழ்தலும் சமுதாயச் சீரமைப்பிற்கு இன்றியமையாததாகும்.

வாழ்க்கை, நீரோட்டம்போல ஓடிக்கொண்டே இருக்க வேண்டும்; தேங்கக் கூடாது. சோகத்தில் ஆழ்ந்துவிடக் கூடாது. பிரச்சினைகளை நாம் ஆளவேண்டும். பிரச்சனை கள் நம்மை ஆள அனுமதித்து விடக் கூடாது. இதற்குக் கலை துணைசெய்யும். பண்டைய வாழ்க்கையில் வீடே கலைபயில் கூடமாக இருந்தது. அழகுக்கலை பெண்களைச் சார்ந்து வளர்ந்தமைக்குக் காரணமே அதுதான்! பெண்கள் இசைக் கலையில் ஈடுபாடு கொண்டிருந்தனர். வீடுகள் அழகுபொலி யும் கவின்கலை பயில் மனைகளாக விளங்கின. திருக்கோயில் களும் கலைபல நடைபெறும் கலை தெரிகோயில்களாக

விளங்கின. இத்தகு கலை வளர வேண்டும். இசை முதலிய கலைகளின் வாயிலாகக் களிப்பில், மகிழ்ச்சியில் ஈடுபடுவது சமுதாயச் சீரமைப்புக்குத் துணை செய்யும். இதனால் மன விகாரங்கள் குறையும்; அளவான சிறு குடும்பங்களே இருக்கும்.

தலைவர் பெரியாரின் பிறந்த நாள் நினைவாகச் சிறந்த முறையில் சாதிகள் அற்ற-சமநிலைச் சமுதாயம் காண முயற்சி செய்ய வேண்டும். சமூகச் சீர்த்திருத்தம் என்பது தொடக்கநிலை; சமூக மேம்பாடு என்பது முடிவுநிலை. சமூக மேம்பாடு பொருளாதார ரீதியானதாகவும் -சமநிலை யுடையதாகவும் சமூகம் அமையும் பொழுதுதான் சமூக மேம்பாட்டுப்பணி நிறைவுபெறும்! இந்தத் திசையில் நாம் அனைவரும் - சிந்திக்க வேண்டும்! செயல்பட வேண்டும்! என்பதை அறிவோமாக! உணர்வோமாக! செயற்படு வோமாக!

17–9–88

## கலைமகள் வழிபாடு

கலைநலம் பொருந்திய வாழ்க்கையே வாழ்க்கை. இயல், இசை, நாடகக் கலைநலம் செறிந்த வாழ்வே சிறப்புடையது. அப்படியானால் இயல். இசை, நாடகத்தில் எல்லாரும் பயிற்சிபெற்று நிகழ்த்த வேண்டுமா? அப்படி யல்ல. இயல், இசை, நாடகத்தில் ஒவ்வொருவரும் பயிற்சி பெற்றிருந்தால் நல்லது மட்டுமல்ல, வரவேற்கக்கூடியதே! அவற்றை நிகழ்த்தும் பயிற்சி இல்லையாயினும் அனுபவிக்க ஒவ்வொரு வரும் கட்டாயம் பயிற்சி பெற்றிருக்க வேண்டும்.

மானிட வாழ்க்கையில் கொடூரத்தன்மைகள் இல்லாமல் ஆக்கமும் அன்பும் அமைதியும் மகிழ்ச்சியும் பொருந்திய வாழ்க்கை அமையக் கலையை அனுபவிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். கலைமகளை வழிபாடு செய்வ தென்றால், கலை மகளைப் பூசிப்பது என்பது பொருளல்ல. கலைகளைப் போற்றி வளர்த்துப் பேணுதல், கலைகளை அனுபவித்தல் ஆகியனவேயாகும்.

நாள்தோறும் காலையில் நல்ல பண் பொருந்திய பாடல்களைப் பாடிப் பத்திமை உணர்வில் திளைப்பது கலைமகள் வழிபாடு. அல்லது, நல்ல இசைப்பாடல்களைக் கேட்டு அனுபவிப்பது சிறந்த கலைமகள் வழிபாடு ஆகும்.

அடுத்து, நாடகம்! நாடகம் நாட்டைத் தன்னகத்தே கொண்டது. அதாவது நாட்டு மக்களை ஈர்த்துத் தன்பால் அணைப்பது நாடகம். நாம் ஒவ்வொருவரும் அன்றாட வாழ்க்கையில் மற்றவர்களுக்கு மகிழ்வூட்டி, அவர்களை நமக்கு வேண்டியவர்களாக - நம்பால் விருப்பம் உள்ளவர் களாக - அமைத்துக் கொள்ளும் முயற்சியும் ஒரு கலைதான்! இப்பண்பு, நாடகக் கலையைச் சார்ந்தது! நாள்தோறும் காலையில் எழுந்தது முதல், வணங்கிய கைகளும், இனிய சொற்களும். முகத்தில் படரும் புன்முறுவல் தாங்கிப் பழகுதல், அவரவர் நிலைமைகளுக்கு ஏற்ப, யாருடனும் பிணக்குகள் வாராது பழகுதல் ஓர் அற்புதக் கலை! சிறந்த கலை வழிபாடு!

இயல் - இலக்கியம்! சிறந்த இலக்கியங்கள் வடிவம் கொள்ளத் தக்கவாறு அறிவறிந்த ஆள்வினைகளை இயற்றி வாழ்தல் இயல்சார்ந்த வாழ்க்கை! பாட்டுடைப் பொருளுக் குக் கருவாய் அமையும்படி புகழ்பூத்த வாழ்வு வாழ்தல் எளிதன்று! அத்தகு இலக்கியமாய் அமைந்து இலக்கிய உருவாக்கத்திற்குக் கருவாய் அமையும் வாழ்க்கையை இயக்குதல் மிகச் சிறந்த கலைமகள் வழிபாடு!

"பாட்டும் பொருளும் பொருளாற்
பொருந்தும் பயனும் என்பாற்
கூட்டும் படிநின் கடைக்கண் நல்காய்"

என்று .குமரகுருபரர் வேண்டுகிறார். தமிழிலக்கியம் முழுவதும் கவிதை இலக்கியங்களேயாம்! பாட்டுக்குப் பொருள், பதவுரையும் பொழிப்புரையும் மட்டுமல்ல. பாட்டின் பொருள். பாட்டுடைக் கருப்பொருளாகும்.

கு.XII.23.

பாட்டுக்குரிய பொருளாய் அமையத்தக்கவாறு வாழ்வாங்கு வாழ்தல்! கவிதை இயற்றும் திறன் பொருந்தி வாழ்தல்! இந்த உலகத்தினை யாதொரு சுவடும் இல்லாமல் அனுபவிக்க வேண்டுமானால், கவிதை உள்ளம் தேவை! பாட்டின் கவிதையின் பொருளாக விளங்குதல், பாட்டின் பயனாகிய இன்ப அனுபவச் செறிவுடன் கூடிய வாழ்க்கை வாழ்தல் இவையே நாம் ஒவ்வொருவரும் வாழ வேண்டிய முறை அல்லது நாம் நாள்தோறும் செய்ய வேண்டிய கலை வழிபாடு!

நாள்தோறும் இசைப்பாடல்களை வீணை ஒலியுடன் கலந்து நின்று பாடுக! பாட்டைக் கேட்டுக் கலந்து அனுபவித் திடுக! நாள்தோறும் காலையில் வாழ்க்கை இசையுடன் தொடங்கட்டும்!

அடுத்து, நாள்தோறும் ஒருமணி நேரமாவது நல்ல புத்தகங்களைப் படித்து மகிழும் இனிய பழக்கம் தேவை. நமது வாழ்க்கை, உலகியல் காரணமாக வதைக்கப்படுதல் இயற்கை! இந்தச் சூழ்நிலையிலும் நாம் தேர்ந்தெடுக்கும் நல்ல இலக்கியம் நம்மை நிலைப்படுத்தும்; உறுதிநிலையை அளிக்கும்! ஆன்மாவின் - உயிரின் நோய் நன்னெறி சார்ந்த கருத்துகளாலேயே விலகும். **"உயிர்க்கு மருந்து நூலகம்"** என்பது அறிஞரின் அனுபவ வாக்கு. படிக்கும் முயற்சியை விட, படிப்பதற்குரிய நல்லநூலத் தேர்ந்தெடுப்பதில்தான் வாழ்க்கையின் வெற்றி பொருந்தியிருக்கிறது. மானுட வாழ்க்கை சிறப்புற அமைவதற்கென்றே தோன்றிய திருக் குறள், சிறந்த வாழ்க்கை நூல். நாள்தோறும் திருக்குறள் கற்பது, திருக்குறள் தெளிவில் வாழ்க்கையைக் காண்பது என்பன கலைமகள் வழிபாட்டின் சிறந்த நடைமுறையாகும். இதுவே கலைமகள் வழிபாடு!

**27.9.90**

# அலைமகள் வழிபாடு

பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் பரந்தாமனுடன் அலைகடலில் உறையும் திருமகள் - இலக்குமி, செல்வம்! திருமகள் வழிபாடு என்பது பொருளை, செல்வத்தைப் போற்றுதல் என்பதாகும். இந்த வையகத்தின் வாழ்வுக்குப் பொருள் இன்றியமையாதது. "பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்பது திருக்குறள். இங்குப் பொருள் என்றது பணத்தையல்ல. வாழ்க்கையை இயக்கப் பயன்படும் - உண்டு, தின்று, உடுத்து வாழ்வதற்குப் பயன்படும் பொருள்களை யேயாம்!

பண்டமாற்றுமுறை வந்தவுடன் நம்மையும் அறியாமல் பணமதிப்பீட்டுச் சமுதாயம் வளர்ந்து வருகிறது. அதாவது, பணத்தை உண்மையில் மதிப்பைத் தந்த - மானுட வாழ்வை இயக்கும் நுகர்வுப் பொருள்களே செல்வமாகும். நெல், பயறு, கடலை, கரும்பு முதலிய பொருள்களைச் செல்வமாக - திருமகளாக எண்ணிப் போற்றிப் பாதுகாத்திடுதல் வேண்டும். இந்தச் செல்வங்களை உற்பத்தி செய்யும் தொழிலில் ஈடுபடுவது ஒரு வகையில் திருமகள் வழிபாடாகும்.

சமயத்துறையினர் காத்தற் கடவுளாகிய திருமாலின் மனைவியே திருமகள் எனக் கூறுவர். இந்த உலக இயக்கத்தை. மானுடத்தைப் பேணிக்காத்து இயக்குவது திருமகள் வழிபாடு எனக் கொள்ளுதல் சாலப் பொருந்தும்.

மண்ணில் பிறந்து, மண்ணில் வளர்ந்து மண்ணில் விளையும் பொருள்களை உண்டு வாழ்தலே வாழ்க்கை. வாழ்க்கையை நடத்த உண்மையில் துணையாக அமைவது பணப்பெட்டியன்று; நிலமேயாகும். இன்று, பணப் பெட்டிக்குத் தரும் மரியாதையை நிலத்திற்கு யாரும் தருவதில்லை. நமது நாட்டில் பல இலட்சக்கணக்கான ஏக்கர் நிலங்கள் பயன்படுத்தப் படாமல், மண் அரிப்புக்கு

இலக்காகிப் பரிதாபமாகக் கிடக்கின்றன. தரிசு நிலங்களைச் சீர்திருத்தம் செய்தல், உழுது வேளாண்மை செய்தல், மரம் நடுதல் ஆகியன திருமகள் வாழிபாட்டுச் செய்முறைகள். மானுடத்தின் நல்வாழ்வுக்கு மரங்கள் இன்றியமையாதன. ஒரு மனிதனின் வாழ்வு செப்பமுறக் குறைந்தது பத்து மரங்களாவது தேவை. ஆம்! நாம் "வீட்டுக்கு ஒருமரம்" என்று சொல்லிக் கொண்டிருக்கின்றோம்! இது போதாது. குறைந்தது ஒவ்வொருவரும் ஒவ்வொரு மரமாவது நட வேண்டும்; ஆண்டுதோறும் நடவேண்டும். இது, திருவினைச் சேர்க்கும் திருமகள் வழிபாடாகும்.

ஒன்பான்வகைத் தானியங்களையும் உற்பத்தி செய்து மானுடம் உண்டுவாழ, மகிழ்ந்து வாழ உதவுதல் சிறந்த திருமகள் வழிபாடாகும். செல்வத்தை. பொருளை ஈட்டுதல் எளிது. செலவு செய்தல் கடினம். அதனால்தான் பலர் செலவு செய்வதே இல்லை! இது அல்ல உண்மை! உழைத்தால் பொருளீட்டலாம். ஆனால், தேவைக்கேற்ப நெறிமுறை அறிந்து செலவு செய்யும் நுட்பம் எல்லாரும் வாய்ப்பதில்லை. ஏன், இன்று நமது நாட்டில் எல்லா மட்டங்களிலும் திட்டமில்லாத, திட்டம் சாராத செலவு செய்பவர்கள் தாம் மிகுதி. ஒரு பகுதியினர் எதற்குமே செலவு செய்வதில்லை என்று உள்ளனர். இது விரும்பத்தக்க தல்ல.

**"பொருட்செல்வம் போற்றாதார்க்கு இல்லை"** என்பது திருக்குறள்.' பயனற்ற - தேவையற்ற செலவுகள், விளம்பரம் செய்து கொள்ளும் செலவுகள், ஆடம்பரச் செலவுகள், முதலீட்டுத் தன்மையில்லாத செலவுகள் ஆகியன தவிர்க்கத் தக்கன. "நுகருமாறு நுகர்தல்" வாழ்வாங்கு வாழ்தலாம். ஆக்கத்தின் பாற்பட்ட முதலீட்டுச் செலவுகள் மட்டுமே செய்யத் தக்கன.

நாம் ஏழைகள். வறுமைக் கோட்டிற்குக் கீழ் பலகோடி மக்கள் வாழ்கிறார்கள். ஏன் இந்த அவலம்? ஆனால், நமது

நாடு ஏழை நாடல்ல. நிலம் முழுவதாகப் பயன்படுத்தப் பெறவில்லை. இயற்கை வளங்கள் முழுவதாகப் பயன் படுத்தப் பெறவில்லை. ஆதலால், இன்று செல்வ உற்பத்தியில் ஈடுபடுவதே திருமகள் வழிபாடு. நாட்டைத் தானியக் களஞ்சியமாக்கும். முயற்சியே திருமகள் வழிபாடு! நாட்டில் நூறுகோடி மரங்கள் நட்டு வளர்த்துப் பாதுகாத்தலே திருமகள் வழிபாடு! பணத்தைத் தேடிச் செல்லாதீர்! பசுமையைத் தேடிச் செல்லுங்கள். எங்கும் பசுமையைக் காணவேண்டும். மனிதனுக்கு ஆடைபோல, நிலத்திற்குப் பசுமைப்போர்வை தேவை! அப்போதுதான் நிலமகள், விளைவிக்கும் ஆற்றலை இழக்காமல் இருப்பாள்! நிலம் போற்றுவோம்! உழுது, உரமிட்டு, விதையிட்டு, நீர்பாய்ச்சி நிலமகளை – உழைப்பால் வழிபடுங்கள்! இதுவே இன்று நாடு அவாவி நிற்கும் திருமகள் வழிபாடு!

28–9–90

## மலைமகள் வழிபாடு

ஆற்றலோ, ஆற்றல்! இன்று, எங்குப் பார்த்தாலும் எரிபொருள் சிக்கல் பற்றிய ஆய்வு! பேச்சு! ஆம்! வையகத்தை இயக்குவது ஆற்றல்-சத்தி! இந்தத் தத்துவம் தலைமுறை தலைமுறையாக நமதுநாட்டில் வளர்ந்து வந்ததுதான்! ஆயினும், காலப்போக்கில் சக்தி வழிபாடு சடங்காகப் போய்விட்டது!

பொருள் – Matter – சிவம். ஆற்றல் – Energy – சக்தி என்று அறிவியல் சார்ந்த சமயம் கற்றுக் கொடுத்தது. இயங்காநிலை. சிவத்தொடு சத்தி ஒன்றியிருக்கும் நிலை! சிவத்தினுள் அடங்கி நிற்கும் சக்தி, ஆன்மாக்களின் படைத்தல், காத்தல், மறைத்தல், அருளல், அழித்தல் என்ற ஐந்தொழிலாற்றும் பொழுது சக்தி! அம்மை! இந்த சக்தி, பௌராணிக உருப்பெற்ற பொழுது மலைமகள் ஆகிறாள்!

மலைமகள் என்பது காரணப் பெயர். மலை நிலையானது; உறுதியானது; வளம்பல தருவது; எல்லாமே மலைபடுவளம்! படைப்பாற்றல் உடையனவெல்லாம் ஆற்றலுடையன. உமை சக்தி படைப்பாற்றல் உடையவள். ஆதலால், சக்தியை மலைமகள் என்று கருதுதல் சரியே! மலைமகள் வழிபாடு, சக்தி வாழிபாடு! சக்தி வழிபாடாவது நாம் ஒவ்வொருவரும் நமது சக்தியை, படைப்பாற்றலைப் பேணி வளர்த்துக் கொள்ளுதலாகும். நாளும் தாழாது வளர்ச்சியோடு பொருந்திய அரிய படைப்பாற்றல் மிக்க படைக்கும் தொழில் மேற்கொள்ளுதலே மலைமகள் வழிபாடு! **"நாட்டுக்கு உழைத்தலே யோகம்"** என்றான் பாரதி.

அளவற்ற சக்தியுடைய இந்த மானுட உடல். நாளும் ஆற்றல்மிக்குடையதாக வளர்க்கப்படுதல் வேண்டும். மானுடத்தின் ஆற்றலைச் சிதைக்கும் வறுமை, பிணி முதலிய வற்றை எதிர்த்து நாள்தோறும் போராடுதல் மலைமகள் வழிபாடாகும். வறுமை என்பது நுகர் பொருள்கள் இல்லாமையாகும். நுகர்பொருள்கள் படைப்புப் பொருள் களேயாம்! உடல், அழியக் கூடாது! உடல் அழிந்தால் உயிர் அழியும்! உயிர் அழியின் இந்த உலகத்தின் மானிடப் பேராற்றல் அழிவுறும்! எண்ணுக! **"உடம்பை வளர்த்தேன்; உயிர் வளர்த்தேன்"** என்றார் திருமூலர். உடம்பை வளர்த்தலாவது உடம்பின் பயன்பாடு கொள்ளும் ஆற்றலை, உழைக்கும் ஆற்றலை வளர்த்துக் கொள்ளுதலாம்! ஆம்! அதுவே, பொருள்!

மானிடன் ஆற்றல் மிக்கவனாக, படைப்பாளியாக, வரலாற்றை இயக்குபவனாக வளர்தலும், வாழ்தலுமே மலைமகள் வழிபாடு! **"எங்கெங்கும் சக்தி"** என்றான் பாரதி! இந்த சக்தி வழிபாட்டின் முதிர்ச்சியே நவராத்திரி வழிபாடு!

நன்மை செய்யப்படுதல் வேண்டும். அப்போதுதான் தீமை அகலும், பின் நிகழ்ச்சியே அதாவது, தீமையை அடக்கி

வெற்றிபெற்று வாழ்க்கையின் பேறுகளைப் படைத்தளிக்கும் விழாவே நவராத்திரி விழா! ஆனால், இன்றைய நவராத்திரி விழாவில் இந்தப் பொலிவு இல்லை! நமது வாழ்க்கை அடுக்கி வைக்கப் பெற்ற கொலுவைப் போன்றது! கொலு கலைவதற்கு முன்பே வாழ்க்கை வெற்றி பொருந்தியதாக அமைய வேண்டும். இதுவே, நவராத்திரி விழாவின் தத்துவம். மலைமகள் வழிபாடு வளர்ந்த முறை.

உலகை இயக்குவது சக்தி! ஆற்றல்! நாள்தோறும் நம் ஆற்றல்-உடலின் உழைப்பாற்றல், அறிவாற்றல், அன்பாற்றல், அருளாற்றல், படைப்பாற்றல் ஆகியவற்றை வளர்த்துக் கொள்ளவேண்டும். இவ்வகை ஆற்றல்கள் பூசையால் வளர்வன அல்ல. உழைப்பால், பயன்படுத்தும் இயல்பால் வளர்வன. நாளும் கருவிகளைப் பயன்படுத்தினால் அவற்றின் பயன்படும் ஆற்றல் வளரும். இல்லையானால் கருவிகள் துருப்பிடித்து அழியும். உற்பத்தி ஆற்றலும் உற்பத்திக் கருவிகளும் பேணப்படுதலும் வளர்க்கப்படுதலுமே மலைமகள் வழிபாடு! “நான்” “எனது” என்ற அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுத்து உள்ளத்தில் அன்பினைத் தேக்கி ஆற்றல் மிக்க உழைப்பால் பொருள்கள் பல படைத்து, உலகத்தை உண்பித்து, உண்டு வாழ்தலே மலைமகள் வழிபாடு!

நாள்தோறும் ஊனில், உயிரில் ஆற்றலை ஓம்புக! வளர்த்திடுக! அறிவில், உணர்வில் ஆற்றலை வளர்த்திடுக! இதயத்தில் ஆற்றலைப் பெருக்கி வலிமை பெறுக! இதுவே மலைமகள் வழிபாடு!

29–9–90

# 8

# தமிழமுது

## சமுதாயத் தொண்டே சமயத் தொண்டு

மானுடத்தின் வரலாறு ஓயாமல் இயங்கிக் கொண்டே இருக்கிறது. இந்த ஓய்வில்லாத இயக்கத்திற்குரிய உயிர்ப்பு ஆற்றல் எங்கிருந்து கிடைக்கிறது? தனக்கென முயலாது பிறர்க்கென முயலும் பெற்றியே மானுடத்தின் இயக்கத்திற்கு உயிர்ப்பு; உந்து சக்தி.' கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திலிருந்து மானுடம் சிந்திக்கப் பழகி வந்திருக்கிறது; வாழும் துடிப்பினைப் பெற்றுப் படிப்படியாக வளர்ந்து வந்திருக்கிறது; வாழ்வித்தும் வந்திருக்கிறது. பண்டைக் காலத்தில் அதாவது புராணங்கள் தோன்றிய பிறகு தேவர்கள் பாராட்டப்படவில்லை. மாறாக "வானவர்கள் வாழ்த்துவதும் தாம் வாழ்வான்" என்றும், "தக்கன் வேள்வித் தகர் தின்று" என்றும் "தேவரனையர் கயவர்" என்றும் எள்ளி நகையாடப்பெற்றுள்ளனர். ஆனால் மானுடம் பாராட்டப் பெற்று வந்துள்ளது. ஏன்? இறைவன்கூட மானுடத்துடன் உறவு வைத்துக் கொள்ள இம்மண் புகுந்துள்ளான். ஏன்?

மானுடத்தினுடைய வாழ்வியலில் பழங்காலத்தில் பொதுமை இருந்தது. எனவே மானிடர் வாழ்வித்தே வாழ்ந்துள்ளனர்; மற்றவர்களை வாழ்விக்க இயலாத பொழுது நொந்து வேதனைப்பட்டுள்ளனர். அவர்கள் பொருளைத் தேடினார்கள். ஆனால் பொருளைச் சேமித்துப் பாதுகாக்கும் பூதமாக வாழ்வதற்கல்ல. "இல்லென இரப்போர்க்கு இயைவது கரத்தல் வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும் பொருளே காதலர் காதல்" என்ற நெறியே வாழ்வு நெறியாக இருந்தது. இங்ஙனம் அருளொடும் அன்பொடும் தேடிய பொருளே பொருள் என்று வாழ்தலே வாழ்வு. இத்தகு வாழ்வு தமிழகத்தில் நடைபெற்ற சங்க காலத்தில் வாழ்வே சமயமாக இருந்தது. சமயநெறிச் சீலங்கள் வாழ்க்கையின் துறை தோறும் ஊடுருவி ஊனும் உதிரமும் ஆக இருந்தன. ஆதலால் சங்க காலத்தில் நோன்பு என்ற சமயநெறி வழிபட்ட சொல், பிறர்க்கென முயலும் முயற்சியினைக் குறித்து வழங்கிற்று.

> "தனக்கென முயலா நோன்றாள் பிறர்க்கென
> முயலுநர் உண்மை யானே"

என்பது புறநானூறு. இத்தகு நெறி வாழ்வியல் நெறியாக இருந்தவரையில் சமுதாயம் உத்தரவாதமும் பாதுகாப்பும் பெற்றிருந்தது. காலப்போக்கில் அயல் வழக்கின் நுழைவு காரணமாக 'விதி நம்பிக்கை' வலுத்தது: உயர்வு தாழ்வு மனப்பான்மைகள் கால்கொண்டன. அறியாமை, வறுமை, ஏழ்மை முதலியன ஒன்றன்பின் ஒன்றாக, சமுதாயத்தை அகநிலையிலும் புறநிலையிலும் தாக்கிப் பீடழித்தன. அதனால் திருக்குறள் கூறுவது போல இலர் பலர் ஆயினர். மனித இயல்கள் அழியத் தொடங்கியபின் சமுதாயத்தில் மக்களுக்கு இருந்த பிடிப்பு தளர்ந்தது. 'சுயநலமே' எங்கும் தலைவிரித்தாடியது.

இந்தச் சூழ்நிலையில் சில சிந்தனையாளர்கள் மீண்டும் சமய இயக்கத்தைப் புதுப்பிக்கவும் அவ்வழி சமுதாயத்தை

உயிர்ப்புடன் இயக்கவும் முன் கைகொடுத்து முயற்சி எடுத்தனர். இந்தப் பேரியக்கம் திருமூலர் முதல் வள்ளலார் வரையில் வளர்ந்து வந்தது. மனிதர்களை 'நடமாடும் கோயில்' என்று வர்ணித்தது; அது மட்டுமா? நடமாடும் மனிதர் களாகிய கோயில்களுக்கு வழங்கினால் இறைவனுக்கு ஆகும் என்றது. நடமாடும் கோயிலாகிய மானுடத்தைப் பேணுதலே சமுதாயத் தொண்டு.

ஒரு மனிதன் தனது பொறி புலன்களைப் பக்குவப் படுத்திப் பலருக்கும் பயன்பட வாழ்தலே சமய வாழ்க்கை. மற்றவர்க்குப் பயன்படாதன எல்லாம் தற்சார்புடையன. அவையெல்லாம் காலப்போக்கில் அழியும். ஆதலால் மானுடத்தை முழுமையாக வளர்த்து உயிர்க்குலத்திற்கு அர்ப்பணிப்பதே சமயத்தின் குறிக்கோள். இக்குறிக்கோள் வழி சமயம் பேணப் பெற்றால் சமயம் வளரும்; சமுதாயம் வளரும்.

சமுதாயம் என்பது பலர் கூடி வாழும் ஒரு சமூக அமைப்பு. சமுதாய அமைப்பில் உள்ள ஒவ்வொரு வருடைய ஆன்மாவும் செழித்து வளர்ந்தால்தான், சமுதாயம் செழிப்படையும். ஆதலால் சமயத்திற்கே அடிப்படை உறுப்பு சமுதாயம்தான். எனவே, சமுதாயத்தை வளர்ப்பது சமூகத் தொண்டே தான். காலத்தால் பிந்திய பிற்போக்கு வாதிகள் தொண்டினை இரண்டாகப் பிரித்தனர். ஒன்று சிவத்துக்குச் செய்வது பதித்தொண்டு, பிறிதொன்று பசுத் தொண்டு - அதாவது உயிர்களுக்குச் செய்வது. இதனால் காலப்போக்கில் சிவத்திற்கு அஞ்சியாயினும் அன்புபட்டாயினும் தொண்டு செய்யத் தலைபட்டனர். உயிர்களுக்குச் செய்வதை அதாவது பசுத்தொண்டைக் கைவிட்டனர். இது பெரும்பிழை. பசுக்களுக்கு - உயிர்களுக்குச் செய்தாலும் திருவருள் சிந்தனையுடன் பாத்திரம் என்று எண்ணிச் செய்யின் அதுவும் சிவத்தொண்டேயாகும்.

இறைவன் உயிர்கள் வளர்ந்து வாழ்ந்து உயர்வு பெற, உய்தி அடைய உயிர்களுக்குக் கருவி, கரணங்களை வழங்குகின்றான். இந்தக் கருவி கரணங்களுக்குரிய துய்ப்புகள் தடையிலாது கிடைக்கச் செய்து துய்க்கச் செய்வது தொண்டு ஆகும். உடலுடன் பொருந்தியுள்ள அறிவுக் கருவிகள், அறிவறிந்து இயங்கத் துணை செய்தல் தலையாய தொண்டு. கொடையில் சிறந்தது அறிவுக் கொடையே. பொது நூல்களைக் கற்றவும், ஞானநூல்களை ஓதவும், தெளிவு பெறவும் உரியன செய்தல் ஒப்பற்ற சமயத் தொண்டு. இறைவன், சொல் எடுத்துக் கொடுத்த வரலாறும், நாளும் இன்னிசையால் தமிழ் கேட்க விரும்பியதும் அறிவு வளர்ச்சிப் பணியின் பாற்பட்டதேயாம்.

"பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்றது திருக்குறள். ஆம்! உண்பனவும் தின்பனவும் உடுத்துவனவும் உயிர்ப்பனவும் இல்லாது போயின் எங்ஙனம் வாழ்க்கை இயங்கும்? ஆதலால் தின்கின்ற சோறும் பருகுகின்ற நீரும் வெற்றிலை பாக்கும் கொடுப்பது சிறந்த சமூகத் தொண்டு; சமயத் தொண்டுமாகும். இறைவன் பொதி சோறு சுமந்து கொண்டு சென்று அடியார்களுக்குக் கொடுத்த வரலாற்றினை அறிக. அது போலவே அடியார்களாகிய சிறுத் தொண்டரும், இளையான்குடி மாறரும் சோறளித்துச் சோறு பெற்ற வரலாற்றினை உணர்க!

வாழ்க்கை என்பது பொன்னால் மட்டும் ஆவது அல்ல. பொருளும் அதற்குத் தேவை. வாழ்க்கை என்பது பொருளால் மட்டும் ஆவதல்ல. மனிதருக்குப் பொருளும் கருவியே. இன்பம் வேண்டும்; "இறைவன் கழலேத்தும் இன்பமே இன்பமல்ல" என்று தமிழ் வழக்கு கூறுகிறது. ஆயினும் தமிழ் மரபில் இன்பம் என்று கூறினால் அது காமஞ்சான்ற இல்வாழ்க்கையைக் குறிக்கும். தமிழ் மரபில் பெண் பெருமைக்குரியவள். அறம் என்று மனையறம் பாராட்டப் படுகிறது. பிற்காலத்தில் அயல் வழக்குகளின் தாக்கத்தால்–

பாதிப்பால் இல்வாழ்க்கை தரம் தாழ்த்தப் பெற்றுக் கொச்சைப் படுத்துப் பெற்றது. திசை தவறிய இந்த நிலையில் தான் அம்மையப்பன் வழிபாடு வற்புறுத்தப் பெற்றது. இறைவனே முன்னின்று சுந்தரருக்கு இரண்டு திருமணங் களை நடத்தி வைத்தமையை ஓர்க. திருஞானசம்பந்தர் திருமருகலில் திருமணம் செய்து வைத்தமையை எண்ணுக. ஆதலால் மனிதர்களை முறையான வாழ்வில் ஆற்றுப்படுத்து தலும் அந்நெறியில் நின்று வாழச் செய்தலும் சமயத் தொண்டேயாம்.

அடுத்து மானிட வாழ்க்கைக்குக் களிப்பும் மகிழ்ச்சியும் தேவை. களிப்பையும் மகிழ்ச்சியையும் தரக்கூடிய இசை முதலிய கலைகளை வளர்ப்பதும் சமயத் தொண்டே. சமயம் கலைகளாக, கலைகளின் முடிவாக முடிந்த கலையாக விளங்குகிறது. “ஏழிசையாய், இசைப் பயனாய்” நின்றாடும் தேவதேவனை உன்னுக. திருஞானசம்பந்தர், திருநீலகண்ட யாழ்ப்பாணர், ஆனாய நாயனார், மாணிக்கவாசகர் ஆகிய திருத்தொண்டர்களின் வரலாற்றையும் அறிக. ஆதலால் கவின் கலைகளை வளர்த்து மானுடத்தின் தரத்தை உயர்த்துவதும் சமயத் தொண்டேயாம்.

இயற்கையோடிசைந்தது நமது வாழ்வியல். நமக்கு பாதுகாப்பு இயற்கைதான். இயற்கையோடு ஒத்து இசைந்து வாழ்ந்தபோதெல்லாம் வாழ்க்கை சிறந்து விளங்கியிருக்கிறது. இயற்கையையே இறைவனாக எண்ணிப் போற்றிய நாடு இது. “வர்சமலரெலாம் ஆனாய் நீயே” என்பது நினைந்து நினைந்து ஓதத்தக்கது. அதுபோலவே தலமரங்கள் (தல விருக்ஷங்கள்) என்று மரம் வளர்க்கும் நெறியை அறிகமுப்படுத்தி வளர்த் தனர். திருத்தலங்கள் அரசவனம், கடம்பவனம் என்று அழைக்கப் பெற்றன. திருத்தலங்கள் இயற்கையான சோலை யும் காடும் சூழ்ந்து விளங்கி மிளிர்ந்தன. இப்போழுது கடைகளும் காட்டிரைச்சலும் அமைந்து திருக்கோயிலின் சூழலையே கெடுத்து விட்டன. அதனால் மழைவளம்

குறைந்து போயிற்று. ஆதலால் மரங்களை வளர்த்தல், மலர்ச் செடிகளை வளர்த்தல் உயிர்க் குலத்திற்கு உரிய உயிர்க் காற்று (OXYGEN) தட்டுப்பாடின்றிக் கிடைப்பதாலும் மழைவளம் பேணுவதாலும் சமுதாயத் தொண்டுமாகும்.

"நீரின்றி அமையாது உலகம்" என்றது திருக்குறள். அதனாலன்றோ சிவம் தண்ணீரின் அருமை கருதி அதனை உச்சித் தலைமேல் வைத்துப் போற்றுகின்றார். இறைவனுக்கு உவப்பானது தண்ணீர்தான். அதனால் முன்னோர் திருக் குளங்களை அமைத்தார்கள். நீராடுதலின் இன்றியமை யாமையை உரைக்கத் தீர்த்தவாரித் திருநாள் ஏற்படுத் தினார்கள். கண்ணிரண்டும் இழந்த தண்டியடிகள் திருவாரூர் கமலாலாயம் என்ற திருக்குளத்தைச் சேறு அள்ளித்தூய்மை செய்த அரிய வரலாறு நம்மனோர் வாழ்வாவது என்று? இன்று திருக்கோயிலைச் சார்ந்த திருக்குளங்கள் பேணு வாரில்லாமல் உள்ள அவலநிலை ஆற்றொணாத் துயரத்தைத் தருகிறது. திருக்குளங்கள் தூர்வை அள்ளல் சமுதாய நலம் தழுவிய சமயத் தொண்டு.

ஆன்றோரே! சான்றோரே! சமயம் வேறு சமுதாயம் வேறு என்று பிரிக்காதீர்கள்! இரண்டும் ஒன்றையொன்று தழுவியது. ஒன்றில்லையேல் பிறிதொன்றில்லை. நமது சமயத்தைக் கடவுட் சமயம் என்ற நிலையிலிருந்து கோயில் சமயமாக்கிச் சமுதாய சமயம் ஆக்க வேண்டும்! இது நடந்தால் வாழ்வு சிறக்கும்! வரலாறும் சிறக்கும்!

## பழநிப் பழக்கதை

இயற்கைப் பெரும் பகுதி இயல்பாகவே உயிர்க்குலத் திற்கு இதத்தையும் மகிழ்வையும் தரக்கூடியனவாகவே அமைந்துள்ளன. ஆயினும் ஒரு சில பரிணாம வளர்ச்சி நிலை எய்தி முழுமை நிலை அடைந்த பிறகே இதமும் இன்பமும் தருவனவாய் அமைந்துவிட்டன. இந்த வகையினவற்றுள்

ஒன்று கனி. அதாவது பழம். அரும்பு போதாகி, மலராகிக் காயாகிக் கனியாதல் வளர்ச்சிமுறை. இந்தப் படிமுறை வளர்ச்சியில் முழுமை நிலை எய்த இயலாத நிலையில் அரும்பு நிலையிலேயே வீணாதல் உண்டு. அரும்பு நிலை கடந்த போது ஆன நிலையிலும் சிதைவு ஏற்படுகிறது. பொது நிலையினைக் கடந்து வளர்ந்த நிலையில்-மலர் நிலையில் பாழாதல் உண்டு. மலரிலிருந்து பிஞ்சு, பிஞ்சு நிலையில் காய்நிலை பெறாமல் உதிர்ந்து வீணாதல் உண்டு. காய்நிலையில் கனியாதற்கு இயலாமல் வெம்பி வீழ்தலும் உண்டு. இத்தனை ஆபத்துக்களைக் கடந்து பழமாதல் ஒரு பெரிய வளர்ச்சி; சாதனை; இதுபோலத்தான் மனிதனின் நிலையும். மனிதன் அவனுடைய குணங்களின் படிமுறையில் வளர்ந்த பிறகே பயன்படுகின்றவன். ஆகின்றான். குணம் என்னும் குன்றேற வேண்டும். இதுவே வாழ்க்கையின் சாதனை-பயன்? இந்தக் குணம் என்னும் குன்றேறி முடியாமல் பழுத்த மனத்தராகாமல் இடையிலேயே அழுக்காற்றில் ஆழ்ந்து கெட்டுப் போகிறவர்களும் உண்டு. அவா வெள்ளக்கடலில் வீழ்ந்து கரையேற முடியாமல் ஆழ்ந்து போகிறவர்களும் உண்டு. சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லும் பாவையிடம் சிக்கி அழிந்து போனவர்கள் பலர். நாவடக்கம் இன்றிக் கடுஞ்சொல் கூறிக் குன்றியவர்களும் உண்டு. இந்த ஆபத்துக்களைக் கடந்து குணம் என்ற குன்று ஏறி நிற்பவனே மனிதன்! மாமனிதன்!

இயற்கையில் மனிதன் நல்லவனாகவே பலநூறாயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்திருக்கிறான். பண்டைக்கால மனிதன், அதாவது ஆதி மனிதன் தன் வாழ்க்கையோடு ஒத்து வாராத இயற்கையொடும் விலங்குகளொடும் தான் போராடினான். தன்னையொத்த மனிதர்களோடு போராட வில்லை. ஏதோ ஓர் இனக்கவர்ச்சிக்கு ஆட்பட்டுப் பகைமை யின்றி வாழ்ந்திருக்கிறான். ஆனாலும் இன்றுள்ள அமைப் பியலில் உறவுகள் இருந்ததாகக் கூறமுடியாது. இன்றும்

குழந்தைப் பருவநிலையில் பேதம் இல்லை. உரிமை, வேற்றுமை, பகை வாசனையின்றிப் பிறந்து வளரும் குழந்தை களுக்கு இந்தப் பொல்லாத சமுதாயம் பொல்லாதன வற்றையெல்லாம் கற்றுக் கொடுத்து விடுகிறது. மனித குலத்தில் சொத்துடைமை தோன்றிய பிறகுதான் மனிதன் ஒருமை நிலையில் வாழ்தலினின்றும் மாறுபட்டான். 'எனது' 'உனது' என்ற நச்சு மரங்கள் வளர்ந்தன. இந்த நச்சு மரங்கள் மானிட சமுதாயம் என்னும் கட்டுமானத்தைப் பிளந்தன; பிரிவினைப் படுத்தின; பகைமையை வளர்த்தன. 'எனது' 'உனது' என்னும் நச்சுமரங்கள் ஈன்ற கனிகளே நான், அதிகாரம், காவல், அரசு ஆகியன! ஆக, மானுடம் அறிவு, அன்பு, இணக்கம் உறவு என்று வளர்ந்து சொர்க்கத்தைப் படைப்பதற்குப் பதிலாக அழுக்காறு, அவா, வெகுளி, சண்டை, காவல், சிறை என்னும் தீயவட்டத்தை மையமாகக் கொண்டு சுழலத் தொடங்கிவிட்டது. வாழ்க்கை நரகமாகி விட்டது. இது தவறான பாதை என்று மானுடத்திற்கு உணர்த்தத் தோன்றியது பழனியின் பழக்கதை.

இருப்பது ஒரு கனி. தாயும் தந்தையும் கணபதி, முருகன் ஆகிய குழந்தைகளுக்கும் பகிர்ந்து கொடுப்பதே முறை. ஆனால், போட்டிகள் கால் கொண்டுவிட்ட உலகத்தின் நடைமுறையால் பாதிக்கப்பட்ட மனிதன் எழுதிய கடவுட் கதை என்பதை மறந்து விடக்கூடாது. போட்டி உருவாக்கப்படுகிறது. கணபதி, முருகன் நிலை தீய திசையில் நடை பயிலத் தொடங்கிய நிலை ஆதலால், "எங்களுக்குப் போட்டி வேண்டாம்" என்று மறுத்துவிட்டு இருவரில் ஒருவர் எடுத்துக் கொள்ள மனம் ஒருப்பட்டிருக்கலாம். அன்றைய உலகம் அஃதன்று. அது கிடக்கட்டும். சமமாகவாவது பங்கிட்டிருக்கலாம். இதுவும் தீய திசையில் மேலும் நடந்த நிலைதான். 'சமம்' இருக்கலாம். அதுவே உரிமையாக மாறும்பொழுது வேறுபாடுகள் கால்கொள்ளும் என்பதை மறந்துவிடக் கூடாது. தவிர்க்க முடியாத நிலையில் போட்டி தொடங்கிவிடுகிறது. போட்டியில் ஒருவர்—முருகர் உண்மை

யிலேயே உலகத்தை வலம் வருகிறார். ஒருவர்—கணபதி அம்மையப்பனை வலம் வருகிறார். அம்மையப்பனை வலம் வந்தவருக்குக் கனி கிடைத்துவிடுகிறது. ஆம்! தன்னை நாடி மதித்தவருக்குப் பரிசில்கள் தருவது என்கின்ற மானுடத்தின் தற்சார்பு—தற்போத நிலையின் தாக்கம்-அம்மையப்பனுக்கு! திறமை புறக்கணிக்கப்பட்டுவிட்டது. இந்த நிலையில் உள்ள மானுடம் மிகவும் தாழ்ந்த நிலையினதாகும். இந்த இடத்தில் வீழ்ந்து கொண்டிருந்த மானுடத்தைத் தடுத்து நிறுத்தி உயர்நிலையில் உய்த்துச் செலுத்த எம்பெருமான் முருகன் திருவுள்ளம் கொண்டான்; துறவியானான்; முருகன் மேற்கொண்ட துறவி விரக்தியால் ஏற்றபட்டதன்று; விவேகத்தினால் ஏற்பட்டது. முருகன் ஏற்றுக் கொண்ட துறவு மோட்சத்தைக் கருதி ஏற்றுக் கொண்ட துறவன்று. மண்ணகத்தை விண்ணமாக்க ஏற்றுக் கொண்ட துறவு.

மண்ணில் மாந்தர்கள் கலகம்செய் மாந்தர்களாக வாழ்தல் கூடாது. ஒருவர் எல்லாருக்காவும் என்று வாழ்தல் வேண்டும். அப்பட்டமான நிர்வாணமான தன்னலத்தைத் துறக்க வேண்டும். வையகம் உண்ண, உண்ணவேண்டும். வையகம் உடுத்த, உடுத்த வேண்டும். இத்தகு சமுதாயத்தைக் காண மனம் பழமாதல் வேண்டும். மனம், அன்பில் பழுக்கவேண்டும். பழுத்த மனத்தடியார்களானால் சமுதாய ஆர்வம் தோன்றும்; பிறர்க்கென முயலும் நோன்பு தலைப்படும். வையகம் வளரும்; வாழும்.

இத்தகு அருமையான வாழ்வியல் தத்துவத்தைக் கற்றுத் தரும் பழநிமலை வாழ்க! பழநியில் எழுந்தருளியுள்ள நமது வாழ்முதல் வாழ்க!

## சமரசம்

தமிழ் நாகரீகம் சமநிலைச் சமவாய்ப்புச் சமுதாயத் தைக் குறிக்கோளாக உடையது. அந்நெறியிலேயே முயன்று வாழ்ந்த பெருமை தமிழினத்துக்கு உண்டு.

சமநிலைச் சமவாய்ப்புச் சமுதாயத்தின் உயிர்நாடியாக விளங்குவது ஒப்புரவு. விருந்தோம்பல் சிறந்த வேள்வியாகப் போற்றப்பெற்றது. இல்லையென்று சொல்லாது ஈதல், வாழ்வின் கடமை என்று கொண்டவர்களும் வாழ்ந்திருக் கிறார்கள். பெரியபுரணம் காட்டும் ஒப்புரவு நெறியில் மிகவுயர்ந்து பரவையார் மேற்கொண்ட நெறி. திருவருளால் மழையெனப் பொழிந்த நெல் மலையை 'எல்லாரும் அவரவர் தம் இல்லத்துக்கு எடுத்தேகுக' என்று அறிவித்து அள்ளிக்கொள்ளச் செய்த ஒல்காப் புகழ்மிக்க ஒப்புரவுப் பண்பாட்டை என்னென்று வாழ்த்துவது!

தமிழர்களின் சமநிலைச் சமவாய்ப்புச் சமுதாய வாழ்வுக்குச் சங்க காலத்தில் அமைந்த ஒரு நிகழ்ச்சியைச் சான்றாக அமைக்கலாம். சங்ககாலச் சான்றோர் பக்குடுக்கை நன்கணியார் என்பவர் ஒரு வீட்டில் மணமுரசு கேட்பானேன்? பிறிதொரு வீட்டில் சாப்பறை கேட்பானேன்? இம்மாறுபட்ட நிகழ்வு கொடுமையானது. இதற்குக் காரணமாய் அமைந்துள்ள அடிப்படையானது பண்பில்லாதது. அதனை மாற்ற வேண்டும் என்றார் பக்குடுக்கை நன்கணியார். மாற்றிக் காட்டினார் சுந்தரர்.

"......... எதிர் மனைகள்
இரண்டில், நிகழ் மங்கலவியங்கள்
அறையும் ஒலி ஒன்றில், ஒன்றில்
அழுகை ஒலி வந்து எழலும்
......... இரண்டும்
உடன் நிகழ்வது என்?"

என்பது சுந்தரர் வினா. ஒரு வீட்டில் துன்பம்; அடுத்த வீட்டில் இன்பம். ஒரு வீட்டில் வளம்; ஒரு வீட்டில் வறுமை. திருக்கோயிலில் செல்வச் செழிப்பு; மக்களிடத்தில் வறுமை. இது மேன்மைகொள் சைவ நீதி ஆகுமா? பொதுமையில் ஆடுபவனை அடிப்படையாகக் கொண்டதே சைவ சமுதாய

ரு·XII·24.

அமைப்பு. எனவே எல்லார்க்கும் இன்பம் என்ற புதுமை நிறைந்த பொதுமை தழுவிய சமநிலைச் சமவாய்ப்புச் சமுதாயமே தமிழர் கண்ட, தமிழர் சமயங் கண்ட சமுதாயச் செந்நெறியாகும்.

இந்நிலையில் சமநிலைச் சமவாய்ப்புச் சமுதாயத்துக்கு ஒரு வகையில் சராசரித் தகுதி ஒன்றை வரையறை செய்ய வேண்டியுள்ளது. இவ்வடிப்படையிலேயே சமய உண்மைகள் சைவத்தில் விளக்கப்பெறுகின்றன. ஒரு மனிதன் சராசரித் தகுதியுடையவனாக இருப்பதற்கு அவன் இறை வழிபாடு நிகழ்த்துபவனாக இருக்க வேண்டும் என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். இவ்வாறே சராசரிக் குறைகளைக் கடந்த அறிவின் முதிர்ச்சியையே ஞானம் என்று வரையறை செய்கிறது சைவம். சமநிலைச் சமுதாய அமைப்புக்கு, உடையார் இல்லார் என்ற வேற்றுமை இல்லாது உரிமை யுடையார் ஒருவருக்குப் பொறுப்புடையார் வழங்குவதை யொத்த ஈதலைச் சைவ சமயம் மையமாகக் கொள்கிறது.

ஆயினும், இத்தகைய சமநிலை சமவாய்ப்புச் சமுதாயத்தை அறவழியில் மலரவைக்கும் முயற்சியில் ஈடுபடும்போது, மக்களின் வாழ்த்துப் பொருளாக இல்லாமல் வாழ்வுப் பொருளாக அமையும் கடவுள் வழிபாட்டில் பொதுநிலை, சமநிலை, சமரசம் என்பவைகளின் உண்மைப் பொருளை அறிந்து கொள்ளவேண்டும்.

நமது நெறி ஒரு கடவுளைத் தொழும் உயர் மாண்புடையது. ஆனால், அறுவகைச் சமய இணைப்பானது, நம்முடைய சமுதாயத்தில் பலரை ஒரு கடவுள் வழிபாட்டி லிருந்து நெடுந்தொலைவுக்கு இழுத்துச் சென்றுவிட்டது. எந்தவொரு மூர்த்தியையும் ஆன்ம நாயகனாக ஏற்றுக் கொள்ளாமல் கிழமைக்கொரு சாமி, சந்தர்ப்பத்துக்கொரு சாமி என்று தொழுது ஏய்க்கும் அவலம் இன்று பெருகி விட்டது. நால்வர் காலத்தில் பல தெய்வ வழிபாடுகள்

இருந்தன. நால்வர் பெருமக்கள் இவர்களைத் தனித்தனியே வழிபடவில்லை. பதிகம் அருளிச்செய்யவும் இல்லை. சைவர்கள் சிவத்தையே வழிபட்டனர். ஆழ்வார்கள் திருமாலையே தொழுதனர். இதுதான் சமய சீலம். கடவுளை வழிபடும் துறையில் சிலர் சமரசம் கூறியுள்ளனர். அந்தத் தவறான வழியில் "அரியும் சிவனும் ஒன்று; ஆதலால் யாரையும் வழிபடலாம்; இருவரையும் வழிபடலாம்" என்று கூறுவதும் ஒன்று.

சமரசம் என்பது தன்னுடையதுமீது பற்றும் இன்னொருவருடையமீது வெறுப்பில்லாதிருப்பதுதான். ஒரு நங்கை கொழுநன், கொழுந்தன் ஆகிய உறவுகளைப் பேணலாம். ஆனால், இருவரையும் கொழுநன் நிலையிலேயே சமரசமாக எண்ணிப் பார்க்க முடியுமா? கொழுநனும் கொழுந்தனும் ஆடவர்களே. ஆகையால், இவனும் கணவனாக இருக்கலாம் அவனும் கணவனாக இருக்கலாம். இரண்டு பேருங்கூட கணவன்மார்களாக இருக்கலாம் என்பது பைத்தியக்காரத்தனமானது.

"கொள்ளேன் புரந்தரன் மால்அயன் வாழ்வு
குடிகெடினும்
நள்ளேன் நினதடியா ரொடல்லால் நரகம் புகினும்
எள்ளேன் திருவருளாலே இருக்கப்பெறின் இறைவா!
உள்ளேன் பிறதெய்வம்; உன்னையல்லாது எங்கள்
உத்தமனே"

என்று மணிவாசகரும்,

"நயவேன் பிறபொருளை நள்ளேன் கீழாரோடு
உயவேன் உயர்ந்தவ ரோடல்லால் – வியவேன்
திருமாலை யல்லது தெய்வம்என்று ஏத்தேன்
வருமாறு நம்மேல் வினை"

என்று ஆழ்வாரும் பாடுவனவற்றை உற்று நோக்குங்கள். உலகிற்கு இறைவன் ஒன்று என்று காணும் பொதுமை நினைந்து இன்புறத்தக்கது. ஆயினும், உயிரானது குறிக் கொண்டு வழிபட்டு உய்தி பெறுதற்கு, சமயநெறிசார் கற்பு மிகமிகத் தேவை. எனவே, சமரசம் என்பதற்கும் பிறர் வணங்கும் கடவுளர் மீது வெறுப்புக் கொள்ளாமை என்பதையே குறிக்கோட் பொருளாகக் கொள்ள வேண்டும்.

## சைவம்

### முன்னுரை

இந்த நூற்றாண்டு விஞ்ஞான நூற்றாண்டு என்று பாராட்டப் பெறுவது. மனித உலகத்தில் அறிவியல் மிகவும் வேகமாக வளர்ந்து வருகிறது. இதன் பயனாக இயற்கைச் சக்திகளை அடக்கியாண்டு அனுபவிப்பதும் வெற்றி பெறு வதும் நிகழ்ந்து வருகின்றன. இவ்வழி மனிதர்களின் அனுபவ ஆற்றல் பெருகி வளர்ந்துள்ளது. அதன் காரணமாக நுகர் பொருள்களின் எண்ணிக்கையும் பெருகி வளர்ந்துள்ளன. எனினும் ஏதோ ஒருவகை அமைதியின்மை, வெறிப்புடன் கூடிய பகைமை உணர்ச்சி, போராட்டச் சூழல்கள் ஆகியவை எங்கணும் உலகத்தைச் சூழ்ந்து கொண்டிருக்கின்ற இரங்கத் தக்க நிலையைப் பார்க்கின்றோம்.

### சமயம்

ஏன்? எதனால் மாறுபட்ட இந்த நிலை? என்று ஆராய்தல் யாவர்க்கும் இன்றைய உடனயடியான கடமை. மனிதன் புறப்பொருள்களைத் திறமையாகக் கையாளுகிறான். தன்னுடைய நுகர்வுக்கேற்றவாறு பக்குவப்படுத்திப் பயன் படுத்த முயல்கிறான். ஆயினும், தன்னை, புலன்களை, உணர்வுகளைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று உணர மறக்கிறான்; மறுக்கிறான். பெரிய விபத்துக்கள்

நிகழ்கின்றன. சரக்குப் பேருந்து வண்டியும் (லாரி) மனிதச் சுற்றுலாச் சுற்றுந்து வண்டியும் (பிளசர்) மோதிக் கொள்கின்றன. அவை மோதிக் கொள்வதற்குக் காரணம் அவ்வண்டிகள் அல்ல; அவற்றைச் செலுத்தும் வலவர்களின் திறமையின்மை, அல்லது கவனக் குறைவு ஆகியவையேயாம். அது போலவே மனித உலகத்தில் ஏற்படும் பிணக்கு, பகை, போர் முதலியவைகட்கு 'மனிதர்களிடையே நிலவும் மக்கள் நிலைக்கு வேண்டிய தகுதியின்மையே காரணமாகும். மனிதர்களின் உள்ளுணர்வுகளைச் சமைத்துப் பக்குவப் படுத்தும் உயரிய வாழ்க்கை முறையே சமயம். பச்சையாகச் சுவைத்து நுகர்தற்கு உரியனவாக இல்லாத பொருள்களைச் சுவைத்தற்குரியனவாகப் பக்குவப்படுத்தும் வினையைச் சமைத்தல் என்று கூறுவது தமிழ் மரபு. இன்ப நுகர்வுக்குரிய கன்னிமைப் பருவத்தை ஒரு பெண் எய்தினாள் என்பதற்கும் "சமையல்" என்று கூறுதல் தொன்று தொட்டுள்ள தமிழ் வழக்கு. அதுபோலவே உயிரும் இன்ப அன்பினை நுகர்தற்குரிய நிலையினை எய்துதற்குப் பக்குவப்படுத்துவதே சமயம்.

இந்தச் சமயவாழ்க்கையில் இன்று மனித உலகம் போதிய அக்கறை காட்டவில்லை. ஒரோவழி காட்டப் பெறும் இடத்திலும்கூட வெற்று ஆரவாரச் சடங்குகள்மீது அக்கறை காட்டப் பெறுகிறதேயொழிய, உண்மையான சமய வாழ்க்கையில் அக்கறை காட்டப் பெறவில்லை. மனித உலகம் "வையத்துள் வாழ்வாங்கு வாழ்தல்" என்ற சமய நெறியின் வழி நின்று ஒழுகினால் மட்டுமே இன்பமும் அமைதியும் கலந்த சீரிய வாழ்க்கை மலரும்.

## சமய ஒருமை

இந்நிலவுலகம் அளவிடப் பெறாத அகற்சியை யுடையது. உலகின்கண் பல்வேறு மொழிகள் பேசப் பெறுகின்றன; அதுபோலவே பல்வேறு சமயங்களும்

வழக்கில் உள்ளன. வேறுபடு சமயங்கள் பலவாயினும் அவையனைத் திற்கும் குறிக்கோள் ஒன்றேயாம். ஆயினும் தத்துவக் கட்டுக் கோப்பால், வழிநடத்தும் நெறிமுறைகளால் அவை தம்முள் பள்ளி வகுப்புப் போன்ற வேறுபாடுகள் இருக்கின்றன. அங்ஙனமிருப்பது இயற்கையும் கூட. இந்த வேறுபாடுகள் செயற்கையாகக் கற்பிக்கப்பெற்றவையல்ல. திருவருளால் பெறப்பெறும் மெய்யுணர்வு முதிர்ச்சியினா லும், மெய்ப் பொருள் காணும் திறனாலும், அனுபூதியின் பயனாலும் தோன்றியவை ஆகும். இந்த வேறுபாடுகள் வேறுபடுத்தும் இயல்புடையனவல்ல. அப்பரடிகள் அருளிச் செய்தது போல "அறுவகைச் சமயத்து அவரவரைத் தேற்றுந்தகையன; தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே ஏற்றுந்தகையன" என்பதே இந்த வேறுபாட்டின் இயல்பு. இதனை மறந்து சமரசம் என்ற பேரால் கலப்படம் செய்வது தத்துவ அறிவின் வளர்ச்சியை யும், ஒன்றியிருந்து அனுபவிக்கும் திருவருள் அனுபவத்தையும் எய்தி இன்புற வொட்டாமல் தடை செய்யும். தன்னுடைய தத்துவச் சார்பில் தன்சமயத்தில் பற்றுக் கொள்ளுதலும். பிறிதொரு சமயத்தின்மீது வெறுப்புக் கொள்ளாது அந்நெறிக் கேற்ற உதவி புரிதலுமே சமரச ஒழுக்கமாகும்.

## சித்தாந்த சமயம்

சித்தாந்த-அதாவது, சிந்தனையின் முடிந்த முடிபு என்று பொருள். சித்தாந்தமே முடிந்த முடிபு. மற்றையது "பூர்வ பக்கம்" என்பது இரத்தினத் திரையம். தமிழ், காலத்தால் மூத்த மொழி; கருத்தாலும் மூத்த மொழி; தமிழினம் பல நூறு ஆண்டுகட்டு முன்பே நாகரிகத்தில் சிறந்து, பண்பாட்டில் மேம்பாடுற்று விளங்கியமை போன்று, விழுமிய சமய நெறியினும் சிறந்து விளங்கிது. "தமிழரது பேரறிவின் முதிர்ச்சியின் விழுமிய பயன் சித்தாந்த சமயம்" என்று மேனாட்டு அறிஞர்கள் எடுத்துக் கூறியுள்ளனர்.

சித்தாந்த சமயம் பரசிவத்தாலேயே அருளிச் செய்யப் பெற்றது. ஆதலால் அது தமிழரது பேரறிவின் பயன் என்று கூறுதல் பொருந்தாது என்பர் சிலர். பரசிவமே தமிழ்நாட்டானாக- தமிழனாக-சைவனாகத் தன்னைக் காட்டிக் கொண்டது என்பதை,

> "தண்ணார்தமிழ் அளிக்கும் தண்பாண்டி நாட்டான்"
> "தென்னாடுடைய சிவன்"
> "ஐயாறதனிற் சைவன்"

என்ற மணிமொழி மறைகளை நோக்கும்பொழுது, பர சிவத்தைத் தமிழனாக ஏற்றுக் கொள்வதில் என்ன குறை? இந்திய நாட்டில் வழங்கும் பல்வேறு சமயங்களுள்ளும் சைவ சித்தாந்தமே சிறப்புடையது. ஆயினும், இந்து சமயம் என்ற ஒரு பொதுப் பெயரும். ஒரு முடிச்சும் தோன்றிய பிறகு சித்தாந்த சமயத்தின் உண்மைச் சிறப்பினைப் பலரும் உணரமுடியாமல் போயிற்று. ஏன்? சித்தாந்த சமயத்தின் மெய்ம்மை விளக்கும் செந்தமிழ்ப் பண்ணைகளாக விளங்கிய திருக்கோயில்களிலும் திருமடங்களிலும்கூட அகப்புறச் சமயங்களின் செல்வாக்கும் சிறிதளவு புறச் சமயங்களின் செல்வாக்குங்கூடப் புகுந்து ஆட்சி செய்கின்றன. இச்செல்வாக்குப் புகுந்துள்ள நிலைமை, மரத்தில் புல்லுருவி போன்று இருப்பதால் தெற்றென விளங்கவில்லை. சித்தாந்த சைவம் மிகப் பழைய நெறி; தொன்மை நெறி என்று அருள் நூல்கள் பேசும். காலத்தால் பழமையாக இருந்தாலும் மிகப் புது நெறியாகவும் காட்சியளிக்கும் இயல்பு இச்சமயத்திற்கே உண்டு. "முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே" என்று மணி மொழி காட்டும் அவ்வியல்பு பெருமானுக்கு மட்டுமன்று; அப்பெருமான் திருவடியினை எளிதாகவும் இனிதாகவும் எய்துவிக்கும் இந்தப் பெருநெறிக் கும் பொருந்தும். இன்றைக்கும் அறிவியல் உணர்வுக்கு

இயைந்ததாக, அனுபவத்திற்கு உகந்ததாக, நம்பிக்கைக்கும் நல்வாழ்வுக்கும் ஏற்றதாக இருக்கும் சமயம் இது என்று கூறினால் நடுநிலையாளர் யாரும் மறுக்கமுடியாது.

முடிவுரை

உலகியல் துறையிலும்கூட மார்க்சு மாமுனிவர் தத்துவக் கோட்பாடுகளுக்கு ஏற்ற விளக்கம் தரக்கூடிய சமயமாக இது விளங்குகிறது. தெளிவாகச் சொல்வதென்றால் இனிமேல் கேள்வி கேட்க முடியாத சமயமாக இது விளங்கு கிறது. சிந்தனையின் உச்ச வரம்பில் நிற்கும் மெய்ந்நெறி இச்சிவநெறி. குமர குருபரசுவாமிகள்.

"ஓரும் வேதாந்தமென்னும் உச்சியிற் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி
சைவ சித்தாந்தத் தேனமுது"

என்று பாராட்டி உள்ளார்.

## தமிழினத்தின் சமயப் பண்பு

தமிழினம் காலத்தால் மூத்த இனம்; கருத்தால் மூத்தது அவர்தம் மொழி. தத்துவத்தில் சிறந்து விளங்கும் இனிய மொழி. தமிழினத்தின், சமய நெறிப் பண்பு வழி வழிச் சிறந்து விளங்குவது. தமிழர்தம் சமய நெறி அறிவுக் கியைந்த நெறி; நம்பிக்கைக்கும் நல்வாழ்க்கைக்கும் ஏற்ற நெறி. தமிழும், தமிழியலும், சமயத் தத்துவமும் இணைந்தே வளர்ந்து வந்துள்ளன.

தமிழர்தம் தூய சமய நெறி, சைவசித்தாந்த சமயம் என்பது. இந்தச் சைவ நெறி மூன்று பொருள்களை அடிப்படையாகக் கொண்டு தத்துவ விளக்கம் செய்கிறது. திருக்குறள் சமயமும் இந்த அடிப்படையைக் கொண்டது. அம்மூன்று பொருள்களாவன, இறை, உயிர், தளை ஆகியவன வாம். இறை முழுமுதற் பொருள். தனக்குவமையில்லாதான்

என்றும், எண்குணத்தான் என்றும் 'திருக்குறள் போற்றிப் பரவும் பொருள். நன்றுடையான் என்று திருமுறை போற்றும். கடவுளால் உயிர் படைக்கப்பெற்ற பொருள் அல்ல. அஃது என்றும் உள்பொருள்; சார்ந்ததன் வண்ணமாக விளங்கக் கூடிய பொருள். தளை, உயிரை ஒட்டிய அழுக்கு. தளையின் ஆற்றலை அடக்கி, திருவருளின்ப வாழ்க்கையைப் பெறுதல் உயிரின் இலட்சியம். அந்த இலட்சிய சாதனைக்காகவே பிறப்பும் இந்த உலகியல் வாழ்க்கையும் கிடைத்தன.

உயிர், தளையின் ஆற்றலிலிருந்து விடுதலை பெற்றுத் திருவருளைச் சார்ந்து, இன்ப அன்பினில் திளைத்து மகிழும் முயற்சிக்குத் துணை செய்வது வழிபாடு. சிவநெறி சிவபெருமானையே வழிபடும் பொருளாகக் கொண்டது. அவன் பெருமை முன்னர் விளக்கப் பெற்றுள்ளது.

உயிரின் அறிவு, சிற்றறிவு. கண்டு - பழகிய பொருள்களையே அது நினைவுகூர முடியும்; உறவு கொள்ள முடியும். ஆதலால் உணர்வினாலன்றி காணப்பெறாத கடவுள், நம்மனோர் உய்யக் கண்ணிற்குத் தெரியும் திருமேனி கொண்டருளியுள்ளான். அத்திருமேனிகள் சில. அவற் றுள்ளும் சிவலிங்கத் திருமேனி விழுமிய சிறப்புடையது.

இந்த உலகியல் மூலமே உயிர்களை உய்யும் வகையில் இறைவன் ஆட்கொண்டிருள்கின்றான். கடவுள், உலகத்தின்வழிச் செயல்படுதலால் அவனையே உலகம் என்று கூறுதல் பொருந்தும். “எல்லா உலகமும் ஆனாய் நீயே” என்பது தேவாரம். உலகம் உருண்டை வடிவம் என்பது பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பே தமிழர் கண்ட முடிவு. உலகின் சின்னமாக லிங்கத் திருமேனி அமைந்து விளங்குகிறது.

இந்த உலகம் இருமையால் ஆனது; இயங்குவது; விளங்குவது உயிர்களின் அறியாமை நீக்கத்திற்கும், ஞான விளக்கத்திற்கும் துணை நிற்பன பிறப்பின் வழி ஏற்கும் இன்ப துன்ப அனுபவங்களேயாம். ஆதலால் பிறப்பொடு தொடர்

புடைய காதலின்ப வாழ்க்கையைச் சைவம் வரவேற்கிறது. ஆனால் அதிலேயே அழுந்திக் கிடத்தலை மறுக்கிறது. சிவபெருமானைப் 'பெண்பால் உகந்தாடும் பித்தன்' என்று திருவாசகம் பேசுகிறது. சக்தி-சிவ விளக்கத் திருமேனியாக சிவலிங்கத் திருமேனி விளங்குகிறது.

சிவலிங்கத் திருமேனி ஞானத்தின் சின்னம். ஞானம் தீக்கொளுவி எரிகின்ற சுடர் போன்றது. சுடர், மேல், நோக்கியே எரியும். அதுபோல ஞானம் (தகுதி, பண்பாடு அறம்) மேல் நோக்கியே விரியும். அதனை விளக்குவது சிவலிங்கத் திருமேனி.

தமிழ் கருத்துக் கியைந்த மொழி. சைவம் வாழ்வுக் கியைந்த சமயம். சிவலிங்கத் திருமேனி வழிபாட்டுக்குச் சிறந்தது. அதிலும் சுந்தர மகாலிங்கம் கண்ணுக்கினியது. ஆரா இன்பம் அளிக்க வல்லது. வாழ்த்துமின்! வாழ்வித்து வாழுமின்!

# 9

# சிந்தனைச் சோலை

## அன்பழைப்பு

இருபத்தோராம் நூற்றாண்டு வரப்போகிறது. ஆனால் நாம் முன்னோக்கிப் பயணம் செய்து இருபத்தோராம் நூற்றாண்டை வரவேற்கப் போகிறோமா? அல்லது பின் னோக்கி வரலாற்றுக்கும் முந்திய-நாகரிக முதிர்ச்சியில்லாத பழைய யுகத்திற்குச் செல்லப் போகிறோமா? அன்புகூர்ந்து சிந்தனை செய்யுங்கள்!

இற்றைநாள் போல அற்றைநாளில் அறிவியல் உலகம் வளரவில்லை. அதன் காரணமாகக் காலமும் தூரமும் மக்களைப் பிரித்து வைத்திருந்தது. உடனுக்கு உடன், மானுடத்தின் அனுபவங்களைப் பகிர்ந்துகொண்டு, வளர இயலவில்லை. அதனாலேயே, மானுடம் பேசும் மொழிகள், பலவாயின; மானுடம் நின்றொழுகும் சமயங்கள், பலவாயின. பின், மொழி, சமயம் இவைகளுக்கு ஏற்ப நாடுகள் பல ஆயின. வளர்ந்துவரும் அறிவியல் இன்றைய பூத, பௌதீக உலகத்தை நெருக்கமாகக் கொண்டு வந்துவிட்டது; மானுடத்தின் இதயங்கள் இணைக்கப் பெறவில்லை; ஆன்மநேய ஒருமைப் பாடு கால் கொள்ளவில்லை. ஏன், இந்த அவலம்?

அறிவியலால், பூத, பௌதீக உலகம் இணைக்கப் படுவதற்கு முற்பட்ட மானுட நெறியாளர்கள்-சமயச் சிந்தனையாளர்கள் "ஒருலகம்" பற்றிச் சிந்தித்தனர். மனிதகுல ஒருமைப்பாட்டை ஒழுக்கமாக்கினர். வேறுபாடுகளுக் கிடையில், விழுமிய ஒருமைப்பாடு காணக் கற்றுத் தந்தனர். திருக்குறள் உலகந்தழீஇய ஒழுக்கத்துடன் வாழ்தலை வாழ்க்கையென்று ஆற்றுப்படுத்துகிறது.

மாணிக்கவாசகர்,

"எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி!" என்றார்.

"வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை; முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா"

என்றார் தாயுமானார்.

வள்ளலார்,

"எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய்"

என்று ஆன்மநேய ஒருமைப்பாட்டை எடுத்தோதினார்.

விவேகானந்தர், "இந்திய நாடு ஒற்றுமையாக இருக்க வேண்டும்; அதனுடைய இதயங்கள் ஒரே ஆன்மீக ராகத்தில் இசைக்கவேண்டும்" என்று கூறினார்.

அண்ணல் காந்தியடிகள், "உலகத்தில் உள்ள சிறந்த எல்லாச் சமயங்களும் உண்மையானவை என்பதில் நான் நம்பிக்கையுள்ளவன். நமது சொந்த சமயத்தைப்போல் மற்ற சமயங்களையும் மதித்து, கொள்ள நாம் கற்றுக்கொள்ள வேண்டும். அது மாத்திரமல்ல மற்ற சமயங்களுக்கும் மரியாதை காட்டவும் நாம் கற்றுக் கொள்ள வேண்டும்.

அவ்விதம் நாம் கற்றுக் கொண்டாலன்றி உலகில் நிரந்தரமான அமைதி ஏற்படுவது முடியாத காரியம். மானிட வர்க்கத்தின் வெவ்வேறு சமய போதகர்களின் உபதேசங்களைப் பக்தியுடன் நாம் அணுகி ஆராய்ச்சி செய்வதே, சமயங்களிடையே பரஸ்பரம் மதிப்பு ஏற்படுவதற்கான தகுந்த வழியாகும்." என்றார்.

(மகாத்மா காந்தி நூல்கள் 10 பக்: 473)

இங்ஙனம் நமது சமயம், பரந்த பண்பாட்டு நிலையில் வளர்ந்து வந்திருக்கிறது. "இந்து சமயம்" இந்தியத் தன்மையாக வளர்ந்து வந்திருக்கிறது. உலகில் பிறந்துள்ள அனைத்துச் சமயங்களையும் தழுவியதே இந்து சயம். இந்து சமயத்தில் "இவர் தேவர், அவர் தேவர்" என்ற இரண்டாட்டு இல்லை. எதையும் ஏற்பது, அணைப்பது என்பதே இந்து சமயத்தின் இலக்கணம். ஒரே கடவுள்! ஒரே ஜாதி! இதுவே இந்து சமயத்தின் உயரிய கோட்பாடு.

இந்த நெறிகளையே,

"உனக்குத் தீங்கு இழைப்பவனுக்கு, அதே அளவு தீமை வரும். பிறரை மன்னித்து, சண்டை போடுவோரிடையே சமாதானம் செய்து வைப்பவனுக்குத் தக்க வெகுமதி அளிப்பது அல்லாவின் பொறுப்பு."

என்று இஸ்லாமியம் எடுத்தியம்புகிறது.

('இஸ்லாம்' சர்வோதயப்பிரசுரம் பக். 29)

"நீ உன் மனம் மொழி மெய்களினால் பரமபிதாவை நேசிக்க வேண்டும்; பக்தி செய்யவேண்டும் என்பது அவரது கட்டளைகள் அனைத்திலும் முக்கியமானது. இதே போன்று, முக்கியத்துவம் வாய்ந்த இன்னொரு கட்டளை, நீ, உன் அயலானையும் தன்னைப் போலவே நேசிக்க வேண்டும் என்பதே."

(மத்தேயு. 22, 37—39)

என்று ஏசுமதமும் கூறுகிறது. இதனாலேயே பிரிந்த பாகிஸ்தான் இஸ்லாமிய நாடு என்று அறிவித்தது. நாம் நமது பாரம்பரியத்துக்கு ஏற்ப மதச் சார்பற்ற அரசை அமைத்துக் கொண்டோம். அனைத்துச் சமயங்களையும் ஏற்றுத் தழுவி நிற்கும் அரசு என்பது விழுமிய கருத்து.

மதச் சார்பற்ற வாழ்க்கை, மதமே இல்லாத வாழ்க்கையல்ல; சன்மார்க்க நெறியில் நிற்றலே மதச் சார்பற்ற வாழ்க்கை.

இன்று நமது நாட்டில் "இந்தியர்" என்ற உணர்வுக்கு மாறாகப் "பெரும்பான்மையினர்" என்ற அடிப்படையில் ஒருவித உணர்வுமாக முரண்பட்ட நிலையில் இயங்குவது விரும்பத்தக்கதன்று. இந்தப் போக்கு, இந்தியாவின் ஆன்மிக அனுபூதிச் செல்வத்தையே அழித்துவிடும். இந்தியா நாட்டின் முன்னேற்றத்தையும் பாதிக்கும்.

இந்தியாவைச் சமயச் சார்பற்ற நாடாகக் காப்பாற்ற, இந்தியா மக்களிடத்தில் ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்வை வளர்க்க வேண்டிய கட்டாயம் தோன்றியுள்ளது. இந்தக் கடமையை நிறைவேற்றும் வழிவகைகளை ஆராய அனைவரும் வருக! கடமைகளில் பங்கேற்றுப் பணி செய்ய-குறள்நெறிச் சமுதாயம் அமைய இருபத்தோராம் நூற்றாண்டை நோக்கி விடுக்கும், அன்பழைப்பு!

## இனி நாம், சமய—சமுதாயத் துறைகளில் என்ன செய்யவேண்டும்?

தமிழ் நாகரிக வரலாற்றில் வளர்ந்த காலப்பகுதி திருக்கோயில் கண்ட காலமேயாகும். நமது சமய, சமுதாய மரபில் திருக்கோயில் வழிபாடு முதன்மையான இடத்தைப் பெற்றிருந்தது. இன்று திருக்கோயில்கள் ஓரளவு சமய மரபுகளைக் காப்பாற்றிவந்தாலும் சமுதாய மரபுகளைப் புறக்கணித்துவிட்டன என்றே கூறவேண்டும். அப்பரடிகள்,

"திருக்கோயில் இல்லாத ஊர் திருவில் ஊர்" என்று சாடுவார். "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்பது பழைய வாக்கு, ஏன் கோயில் இல்லா ஊரில் குடியிருக்கக் கூடாது?

சைவத் தமிழ் மரபு, "சிவமலால் தெய்வமில்லை, சனமலாது அடிமையில்லை" என்று கூறும். திருக்கோயில்கள் கடவுளுக்காக—கடவுள் எழுந்தருள்வதற்காக மட்டும் எழுந்தவையல்ல. கடவுளுக்கும் மனிதனுக்கும், மனித சமுதாயத்திற்கும் உறவை ஏற்படுத்துதலே திருக்கோயில் அமைப்பின் நோக்கம். மனிதர்களை—மனித வாழ்வை மேம்படுத்துவது ஒன்று; பிறிதொன்று மனித சமூகத்தை ஒன்றுபடுத்துவது. இன்று இந்த நிலை இல்லாதது ஒரு பெரிய குறை. நகரத்தார் சமூகம் இந்த மரபைப் பேணிக்காத்து வருகிறது. ஆயினும் பழைய மரபு அப்படியே பின்பற்றப் படுகிறது என்று கூறமுடியாது.

திருக்கோயிலைத் தழுவிய சமுதாயத்தையும் சமுதாயத் தைத்தழுவி நிற்கும் திருக்கோயில்களையும் நாம் உருவாக்க வேண்டும். நமது முன்னோர் காலத்தில், திருக்கோயில்களைத் தழுவியே சிந்தித்தனர்; செயல்பட்டனர்; வாழ்ந்தனர். ஒவ்வொருவருக்கும் திருக்கோயிலில் கடமையும் இருந்தது; உரிமையும் இருந்தது. இன்று நமக்குத் திருக்கோயில், வழிபாட்டு நிலையமே தவிர மற்றபடி நமக்குத் திருக் கோயிலில் கடமையும் இல்லை; உரிமையுமில்லை. இந்த நிலையை மாற்றத் திருக்கோயிலில் உழவாரம், திருவலகு, திருமெழுக்கு, நந்தவனம், முதலிய பல்வேறு பணிகளில் நாம் ஈடுபடவேண்டும். தொண்டு செய்ய வேண்டும். ஆன்மாக்கள் சிவனிடத்தில் காட்டும் அயரா அன்பாலும் இயற்றும் கைத்திருத்தொண்டாலுமே வளரமுடியும்; வாழமுடியும்; உறுதியைப் பெற இயலும். இறைவனுக்கு "அன்பலால் பொருள் இல்லை" ஆன்மாக்களுக்குத் "தொண்டலால் ஊதியமில்லை" என்பது திருமுறை வாக்கு. திருக்கோயில்

பணிகள் அனைத்துமே தொண்டாகச் செய்யப்பெறுதல் வேண்டும். இன்றோ திருக்கோயில் பணிகள் பிழைப்பு நோக்கி இயற்றும் தொழில்களாகி விட்டன. இது மிகவும் வருந்தத்தக்கது.

திருக்கோயில் மானுடம் முழுவதையும் அங்கீகரிக்க வேண்டும். எந்த வேறுபாடுமின்றி அங்கீகரிக்க வேண்டும். ஒவ்வொர் ஊரிலுமுள்ள அனைவரும் அந்தந்த ஊர்க் கோயிலில் வழிபடுவாராக இருக்கவேண்டும். அவ்வழியாக கடமையும் உரிமையும் உடையவராக வேண்டும். வாழ்க்கையின் நிகழ்வுகள் அனைத்தும் திருக்கோயிலை மையமாகக் கொண்டு திருக்கோயிலில் நிகழவேண்டும். மக்கள் வாழ்வியல் நிகழ்வுகளின்பொழுது தரும் காணிக்கை மற்றும் ஆண்டுக் காணிக்கை இவைகளைக் கொண்டே திருக்கோயில்கள் நடைபெற வேண்டும். ஒவ்வொருவரும். தமது ஈட்டத்தில் குறைந்தது 10 விழுக்காட்டை ஆண்டு தோறும் திருக்கோயிலுக்குத் தரவேண்டும். இந்நிதியில் ஒரு பகுதி 3% திருக்கோயிலுக்குச் செலவழிக்கப் பெறுதல் வேண்டும். மீதத்தில் 5% சமுதாயத்தின் இன்றியமையாத் தேவைகளாகிய கல்வி, வேலை வாய்ப்பு, மருத்துவம் முதலிய வற்றிற்குச் செலவழிக்கப் பெறுதல் வேண்டும். இத்துறையே இலக்கியம், கலை, தத்துவ வளர்ச்சியையும் கவனித்துக் கொள்ளவேண்டும். மீதம் 2% திருக்கோயில் சார்ந்த குடிமக்களில் வாய்ப்பிழந்தவர்களுக்குத் திருமணம் மற்றும் சில உதவிகளுக்குமாகச் செலவழிக்கப்பெறுதல் வேண்டும். திருக்கோயில் நிர்வாகம் சமூகத்தால்-ஊராண்மை மக்களால் நடந்துப்பெறுதல் வேண்டும். திருக்கோயில் நிர்வாகக் குழுவில் ஊரின் பல்வேறு சமூகமும் சுழற்சி முறையில் அனைவரும் பங்கேற்கத் தக்கவாறு பார்த்துக் கொள்ள வேண்டும். திருக்கோயில் நிர்வாகத்தில் அரசுத் தொடர்பு இருத்தல் நன்றன்று.

இதுதான், நமது திருக்கோயில்களில் தழுவி நிகழ்ந்த நாகரிகம்; இந்த நாகரித்தைப் புதுப்பித்தால் சமயம் வளரும்.

சமுதாயம் வாழும். திருவருளும் துணை செய்யப் பிரார்த்தனை!

## மனிதவள மேம்பாட்டில் ஆன்மிகம்

இந்தப் பரந்த உலகத்தின் உயிர்ப்பு மாந்தரிடத்திலேயே இருக்கிறது. இந்த உலகத்தை, உலகத்தின் இயக்கத்தை, மாற்றத்தை, வளர்ச்சியை இயக்கும் உந்து சக்தி, மானுட சக்தியே! மானுடம் அளப்பரிய ஆற்றல் மிக்க தோற்றம். இன்றைய பிரதமர் கல்வி அமைச்சராக இருந்தபொழுது, கல்வி அமைச்சு என்பதை "மனிதவள அமைச்சு" என்று மாற்றினார். ஆம்! இன்றுள்ள கல்வி முறை மனிதனின் புலன்களில், பொறிகளில் ஆற்றலை வளர்த்து ஆன்மாவை வளர்ப்பதாக இல்லை. மாறாகப் 'பிழைப்புத் தேடி' அலையும் பிராணி ஆகிவிட்டது. அறிவைத் தேடல், கடின உழைப்பு, தியாகம் ஆகியனவற்றை வழங்கக்கூடியதாக இன்றைய கல்வி இல்லை. அதனால், சிறந்த அறிஞராகிய நமது பிரதமர் நாட்டின் நிலைமையறிந்து நாட்டிற்கு உடனடித் தேவையான மனிதவளத்தை வளர்க்க எண்ணினார்; முயன்றார்! என்ன நடந்திருக்கிறது என்பதை வரலாறு கூறவேண்டும்.

### மனிதவளம்

"வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி"-என்று போற்றியவகையில் இம்மானுடப் பிறப்பைப் போற்றி வளர்த்து, வெற்றிகளைப் பெறவேண்டும். குறித்த ஒரு குறிக்கோளை நோக்கி வாழ்க்கையை நடத்துவதுதான் சிறப்பு. தேவைகளை அடைவது குறிக்கோள் ஆகாது. தேவைகளைக் கடந்தது குறிகோள். மனிதவளங்கள் எவை? அவை இயற்கையில் அமைந்துள்ளனவா? அல்லது மனிதன் தேடவேண்டுமா? சிந்திக்கும் திறன், அறிவு, ஆற்றல், ஆன்மாவின் தரப்பாடு ஆகியன மனிதவளமாம்! இவற்றில் எவையும் இயற்கையாக அமைந்தவையல்ல. மனிதன்

சிந்தனைப் புலன் வாய்ந்தவன். ஆனால், அவன் சிந்திக்க வேண்டுமே! சிந்தனை இயங்க மனிதன் தன் வாழ்நிலையுடன் மன நிறைவு கொள்ளாமல் மேலும் மேலும் வாழ்நிலையை—வளர்த்துக் கொள்ள விரும்பவேண்டும். வாழ்தலில்—நன்றாக வாழ்தலில்-இன்புறு நுகர்வு நலன்கள் அனைத்தும் பெற்று வாழ்தலில் விருப்பம் வேண்டும். தாம் பெற்றின்புறுவது போலவே மற்ற எல்லோரும் பெற்று இன்புற வாழ்தல் வேண்டும் என்ற எண்ணமும் முயற்சியும் உடையராய் இருத்தல் வேண்டும். இந்த உலகம் இப்படித்தான் இருக்கும் என்று சமாதானம் செய்து கொள்ளும் மனப்பான்மை கூடாது; இந்த உலகம் இப்படித் தான் இருக்கவேண்டும் என்று எண்ணி, இந்த உலகை மாற்ற ஓயாது முயற்சி செய்ய வேண்டும். எதற்கும் காரணம், சாமாதானம் சொல்லி மூளைச் சோம்பலுக்கு இரையாகக் கூடாது! நான் ஆர்? என் உள்ளம் ஆர்? ஞானங்கள் ஆர்? என்ற ஆய்வு தேவை; தொடர் ஆய்வு தேவை. இந்தக் களத்தில்தான் சிந்தனை பிறக்கும்.

## கற்றல், கேட்டல், அறிவு

வாழ்க்கையின் நோக்கமே தேடல்! ஆம்! அறிவினைத் தேடல்! அறிவுக்கு வாயில்களாகிய கற்றல், கேட்டல், ஆய்வு செய்தல், சோதனை செய்தல் முதலியவற்றால் அறிவு கிடைக்கும். கற்றல், ஆன்மாவினிடத்தில் அறிவொளியைக் கனலச்செய்யும் முதல் முயற்சி! மனிதன் சிந்திக்கத் தொடங்கி வாழ்க்கையை நடத்த முயன்ற காலத்தினில் எண்ணற்ற சிந்தனையாளர்கள், வாழ்க்கையைப் பற்றியும், வாழ்க்கையைப் பயனுடையதாக்கும் வழி வகைகள் பற்றியும் எழுதியுள்ளார்கள். அவர்களுடைய அனுபவங்கள் நமக்கு அறிவாக அமைகின்றன. "திப்ஸ்" நகரில் ஒரு நூலகத்தின் வாயிலில் எழுதியுள்ள வாசகம் "ஆன்மாவுக்கு மருந்து" என்பதாகும். திருவள்ளுவரும்,

*"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்கு தக"*

என்றார். பிறப்பின் சார்பாலும் சுற்றுச் சூழ்நிலையாலும் மனிதனின் ஆன்மாவில் குற்றங்கள் இருக்கலாம்; இருக்கவும் கூடும்! அக் குற்றங்கள் நீங்குதற்குரிய நூல்களைத் தேர்ந்தெடுத்துக் கற்கவேண்டும் என்பதை உணர்த்த, "கசடறக் கற்பவை கற்க" என்றார். கற்பது என்பது வாழ்நாள் முழுவதும் நடைபெற வேண்டிய ஒரு பணி! மனிதர் ஒவ்வொருவரும் உலகில் உள்ள அனைத்து நூல்களையும் கற்றுத் தேர்தல் என்பது எளிதன்று; அது இயலாத ஒன்று. ஆதலால், கற்றார் வாய்க் கேட்டல் அறிவு பெறுதலுக்குரிய எளிய வழி! கற்றலிலும் கேட்டலிலும்கூட அவற்றை ஆய்வு செய்து பெறாது போனால் அறிவு தலைப்படாது. "சிந்தையும் தெளிவுமாகி, தெளிவினுள் சிவமுமாகி" என்று திருமுறை கூறும்! அறிவின் தெளிவுதான் உறுதிப்பாட்டினைத் தரும்.

## துன்பங்களின் வகை

அறிவு எது? அறிவு ஆற்றல் வாய்ந்த கருவி. காலந்தோறும் மாறி வளர்ந்து வரும் சிறந்த கருவி!

*"அறிவு அற்றம் காக்கும் கருவி"*

என்றது திருக்குறள். துன்பத்தினின்று மனிதனைப் பாது காப்பது அறிவு. ஆம்! எத்தனை எத்தனைத் துன்பங்கள். புதரிடை மலர் போலத் துன்பங்களுக்கிடையில்தானே இன்ப வைப்பு இருக்கிறது. துன்பம் உலகு சார்ந்த துன்பம், சமூகம் சார்ந்த துன்பம், உடல் சார்ந்த துன்பம் என்று பலபடக் கூறலாம்.

ஐம்பூதங்களாகிய நிலம், நீர், தீ, வளி, வான் ஆகிய வற்றால் ஏற்படும் துன்பம் உலகைச் சார்ந்த துன்பம். இன்று இந்த வகைத் துன்பம் பெரும்பாலும் குறைந்து விட்டது. இடி, மின்னல், மழை வெள்ளம் இவற்றினால் துன்பம் நிகழ்வதற்கு

முன்பே கண்டறிந்து அவற்றைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதில் மனிதன் வெற்றி பெற்றுவிட்டான். ஆதலால், உலகத்தினால் வரும் துன்பம் இன்று மிகுதியும் இல்லை.

அடுத்து, சமூகத்தால் வரும் துன்பம். சமூகம் என்பது மனிதக் கூட்டமைப்பு ஏற்பட்டதன் நோக்கம் மனிதனின் ஆற்றலைப் பெருக்கி, ஒருவருக்கொருவர் உதவியாக இருத்தலுக்குரிய நியதியினை மையமாகக் கொண்டது. ஆனால், காலப்போக்கில்—தனிச் சொத்துடைமைச் சமுதாயம் தோன்றிய காலத்திலிருந்து மானுடச்சாதி—மனிதம், மனித நேயம், மனிதகுல உறவு ஆகிய பண்பாடுகளை இழந்து, கொடிய விலங்குகளைவிட மோசமான இழி நிலைக்கு இறங்கி விட்டது. இன்றைய நிலையில் மனித ஜாதி ஒரு கூட்டம் தான்! அதுவும் தன்னிச்சைப்படி நடக்கும் வெறிபிடித்த கூட்டம்! நாளும் கொலைக் கருவிகளைச் செய்து குவிக்கும் மனிதக் கூட்டம்! அதுமட்டுமா? இன்றைய சமூகம் மனிதனைத் தாங்குவதற்குப் பதிலாக அவன் தோள்மீது ஏறி உட்கார்ந்துகொண்டு சவாரி செய்கிறது. அந்தோ! என்ன கொடுமை! இந்த உலகத்தில் உள்ள நுகர்வுப் பொருள்கள் இந்த உலகத்திற்கு மட்டுமல்ல, இன்னும் பல உலகத்திற்கு போதும்! ஆயினும், தனி மனிதனுடைய கொள்ளிவாய்ப் பிசாசுத் தன்மையுடைய பேராசையால் ஈடு செய்ய முடியாமல் போகிறது. இத்தகைய சமூக அமைப்பினைத் திருத்திப் பயனுடையதாக்குவதும் மனிதவள மேம்பாட்டினைக் காக்கும் பணியாகும்.

## துன்பத்தை மாற்றும் முயற்சி

வாழ்க்கையைப் பயனுடையதாக்கிட அறிவறிந்த ஆள்வினை தேவை. மானுடத்தினிடம் ஒப்படைப்புச் செய்யப்பெற்றுள்ள ஆற்றல்..... அம்மம்ம! அளப்பரிய ஆற்றல். மானுடத்தின் ஆற்றலை இந்தப் புவிக்கோள் பறைசாற்றுகிறது.

நாள்தோறும், புவிக் கோளத்தில் ஏற்படும் மாற்றங்கள், வளர்ச்சிகள், இயற்கை தன்னகத்தே வைத்துள்ள எண்ணரிய வளங்களைக் கண்டு அனுபவத்திற்குக் கொண்டு வருதல் - இயற்கையை ஆண்டு அனுபவித்தல் ஆகியன மனித ஆற்றலின்பாற்பட்ட முயற்சிகள். சிக்கிமுக்கிக் கற்களை உரசித் தீயைக் கண்ட மனிதன் — இன்று ஒரு பொத்தானை அழுத்தி இருண்ட உலகை ஒளிமயமாக்குகின்றான். காலமும் தூரமும் மனிதனை—மனித உறவுகளைப் பிரித்து வைத்திருந்தன. இன்று—மனிதன் காலத்தையும் தூரத்தையும் வென்று விளங்கும் தொலைபேசி மூலம் பேசிக் கருத்துப் பரிமாற்றம் நிகழ்த்தி உறவினை வளர்த்துக்கொள்கின்றான். அன்று காசிக்கும் இராமேஸ்வரத்திற்மே யாத்திரை செல்ல பல்லாண்டுகள் ஆயின. இன்று உலகையே சில மணி நேரங் களில் வலம்வர முடிகிறது. ஒலி, ஒளி, வளி இவற்றைக் கட்டுப்பாட்டுக்குக் கொண்டுவந்து இன்பமார்ந்த வாழ்க் கையை நடத்துகின்றான். இயற்கையை வெல்லும் பணியில் கணிசமான வெற்றிபெற்றிருக்கிறான். எத்தனை எத்தனை விதமான புத்தம் புதிய அனுபவங்கள், போகங்கள், இன்பங்கள்.

## ஆன்மிகம்

இங்ஙனம் வளர்ந்து வரும் மனிதவள ஆற்றல் எல்லையிகந்தது. இந்த மனித வளத்தை நிறைவாகப் பெற்று வாழ்வாங்கு வாழ்தல் ஆன்மிகம். 'ஆன்மிகம்' என்ற சொல் இன்று வழக்கில் கொச்சைப்பட்டுவிட்டது. இன்று ஆன்மிகம் என்றால் கடவுள் பெயரால் செய்யும் சடங்குகள் என்றாகி விட்டது. கடவுள் நம்பிக்கையும் வழிபாடும் ஆன்மிகத்தின் ஒரு பகுதி. ஆன்மிகம் என்பது ஆன்மாவின் உயிர்ப்பு, அறிவு, ஆற்றல், செயல்திறம் ஆகியனவும், அன்பு, சால்பு, பண்பாடு ஆகியனவும் ஆகும். ஆன்மா, அறிவறிந்த ஆள்வினையில் தழைத்து அன்பில் ஒத்துக் கலந்து அருளில் பழுத்து

விளங்குவதே ஆன்மிகம். ஆன்மா சுயநலமற்ற ஊழியம் புரியும் சத்திபெற்று விளங்க வேண்டும். இத்தகு ஆன்ம அனுபூதியைப் பெறக் கடவுள் நம்பிக்கையும் வழிபாடும் தேவை. கடவுள் என்பது பண்புகளின் முழு வடிவம்.

*"குறைவிலா நிறைவே! கோதிலா அமுதே!"*

*"நன்றுடையானைத் தீயதில் லானை"*

என்னும் அருள்வாக்குகளை எண்ணுக. கடவுள் வழிபாடு என்பது கடவுள் வழி நிற்றல். கடவுளை வழிப்படுதல் என்றே பொருள்படும்.

*"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
*நெறிநின்றார் நீடுவாழ் வார்"*

என்ற திருக்குறள் நினைவிற்குரியது.

இங்கு 'அவித்தல்' என்பதற்கு அழித்தல் என்று பொருள் கொள்ளக்கூடாது. அவித்தல் என்ற சொல்லுக்குப் பக்குவப்படுத்தல் என்பதே பொருள்.

கடவுளை எண்ணுவதன் மூலம் - சிந்தித்தல் மூலம் கடவுளின் நிறை நலமிக்க இயல்புகளை ஆன்மாக்கள் பெற்று அவை தம்முடைய பொறி புலன்களில் இறை நலத்தினைத் தேக்கி வாழ்தலே ஆன்மிகம். இங்ஙனம் ஆன்மிகத்தில் சிறந்து விளங்கிய அப்பரடிகளின்,

*"நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்"*

என்னும் பாடல் அவரது ஆன்ம வாழ்க்கையின் மேன்மையை விளக்குகிறது.

இன்று நமது நாடு வாழ்கிறவர்களை அவாவி நிற்கிறது. நம்முடைய மனிதவளம் அனைத்தும் வெளிக்கொணரப் பட்டு இயங்கினால், செயற்பட்டால் வறுமை ஏது? ஏழ்மை ஏது? சாதி ஏது? நரகம் ஏது? இந்த மண்ணிலேயே விண்ணக வாழ்க்கையைக் காணலாம்; காணமுடியும்! அத்தகு மனித

வளத்தைக் காண்பதில் அரசுகள் கவனம் செலுத்தவேண்டும், பல்கலைக் கழகங்களின் பணியமைய வேண்டும். திருமடங்களில் திருக்கோயில்களின் திருத்தொண்டு அமையவேண்டும்.

மனிதவள மேம்பாட்டுக் கருத்தரங்கு குன்றக்குடி, 28–8–91

## உண்மையான சமயம்!

இந்திய வரலாற்றில் தத்துவ விசாரணை என்பது மிகத் தொன்மைக் காலத்திலிருந்தே வரும் ஓர் அறிவியல் பயிற்சி! தத்துவ சோதனை, தத்துவமசி என்ற வழக்குகள் இந்திய நாட்டின் வரலாற்றொடு இணைந்தவை. 'தத்துவம்' என்றால் உள்பொருள் எனப்படும். உள்பொருள்களை, அவற்றின் உள்ளீட்டை, பரிணாமத்தை, பயன்பாட்டை உய்த்தறிந்து உணர்தல்தான் தத்துவ சோதனை. தமிழ்நாடு தத்துவத் துறையில் மெய்ப்பொருளறிவில் சிறந்திருந்தது. இந்திய மெய்ப்பொருள் நெறிகளிலெல்லாம் தமிழகத்தின் சித்தாந்த நெறி விழுமியது. ஐயங்களினின்று நீங்கியது; நம்பிக்கைக் குரியது; வாழ்க்கைக்கு இசைந்தது.

தமிழொடு பிறந்து வளர்ந்த நெறி சித்தாந்த நெறி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் மெய்கண்டார் இந்தச் சித்தாந்தச் சிவநெறி, மற்ற நெறிகளினும் எவ்வாறு விழுமியது என்று அளவைகளால் நிலை நிறுத்தினார். ஆதலால் மெய்கண்டார் சைவ சித்தாந்தச் செந்நெறியைக் கண்டவர் அல்லர். மெய்கண்டார் சைவ சித்தாந்தத்தைச் சிவஞான போதம் என்ற நூல் வழி கட்டமைப்புச் செய்தார்.

ஏனைய சமயங்களுக்கும் சைவத்திற்கும் உள்ள ஒரே வேறுபாடு சைவத்தில் எளிதில் ஊடுருவல் செய்ய இயலாது என்பதுதான். சிந்தையில் தெளிந்த ஞானிகளால் காணப் பெற்றது சித்தாந்த சைவம். மூன்று பொருள்கள், என்றும் உள்ளவை. இந்த மூன்றாவன: இறை, உயிர், தளை என்பன. இந்த மூன்றனுள், இறையை, இந்தியச் சமயங்கள் பலவும்

உலகச் சமயங்களும் ஏற்றுக் கொள்ளும். ஆனால் சித்தாந்தம் இறையின் இருப்பு, தொழில்—முதலியவற்றை ஐயத்திற்கிட மின்றி விளக்குகிறது. இறை—கடவுள் ஒன்றே ஒன்றுதான். கடவுள் ஒருவரே. அவருக்கு உருவமில்லை. உருவம் இல்லாமலும் இல்லை. அவருக்கு ஊர், பெயர் கிடையாது. அதே போழ்து ஊர், பெயர் இல்லாமலும் இல்லை. இயல் பாகக் கடவுளுக்கு உருவம் இல்லை. ஆட்கொண்டருள் செய்தலுக்காகக் கடவுள் அருவுருவ, உருவத் திருமேனிகளை எடுக்கின்றான். கடவுள் வரம்பிலா ஆற்றல் உடையவன். ஆதலால், அவனால் எந்த உருவத்தையும் தன்னுடைய இயல்பாகிய பூரணத்துவத்திற்கு யாதொரு குறையும் வராமல் எடுக்க இயலும். கடவுள் மனம், வாக்குகளைக் கடந்தவர். ஆயினும், ஆன்மாக்களின் நலம் கருதி ஆன்மாக்கள் நடத்தும் வாழ்க்கையில் வழிநடைத் துணையாகப் பருவங்களில் பருவங்களுக்கிசைந்த பாத்திரப் பண்பில் நின்றருள் செய்யும் தனித்துணையாம் தன்மையை,

> அப்பன்நீ அம்மைநீ அன்புடைய மாமனும் மாமியும்நீ
> ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ ஒருகுலமும்
> சுற்றமும் ஓருரும்நீ
> துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ துணையாய்
> என்நெஞ்சம் துறப்பிப்பாய் நீ
> இப்பொன்நீ இம்மணி நீ இம்முத்து நீ! இறைவன் நீ
> ஏறூர்ந்த செல்வன் நீயே"

என்று அப்பரடிகள் அருளிச் செய்துள்ளமையால் அறிக.

முப்பொருள்களுள் அடுத்து இருப்பது ஆன்மா-உயிர். இந்தியத் தத்துவ ஞானங்களில் எல்லாம் சித்தாந்தச் செந்நெறி யின் 'ஆன்மா'க் கொள்கை தெளிவானது. ஆன்மாக்கள் பல; பலப்பல ஆன்மாக்கள் படைக்கப்பட்டன அல்ல. ஆன்மாக் களுக்கு, உயிர்களுக்கு தோற்றமும் இல்லை; அறிவும் இல்லை. ஆன்மாக்கள் கடவுளைப் போலவே என்றும் உள்ளவை.

"என்று நீ அன்று நான்" என்பார் தாயுமானவர். ஆன்மாக்கள் என்றும் உள்ளவையென்றால் இறைவனுக்கு ஆன்மாவுக்கும் என்ன உறவு?

கடவுளுக்குப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐம்தொழில்கள் ஏன்? இந்த ஐந்து தொழில்கள் யாரை முன்னிட்டு நிகழ்த்தப் பெறுகின்றன? கடவுள் ஆன்மாவின் வாழ்க்கைப் பயணம் தோறும் தேவைக் கேற்ப உறவு வைத்து ஆட்கொண்டருள்கின்றான். ஆன்மாக்கள் அறிவும் செயலும் முடங்கி ஆணவத்தினுடன் அறியாமையில் கட்டுண்டு கிடக்கும் பொழுது தாயிற் சிறந்த தயாவுடன் உயிர்களுக்கு நுண்ணுடலையும், அறியாமை நீக்கத்தற்குரிய வாழ்நிலையில் — வாழ்ந்திட துய்ப்பன துய்த்து உய்யுமாறு உய்தி பெறுதலுக்குரிய உடம்பினையும் பொருத்தல் படைப்பு. அறியாமை நீங்கும் காலம்வரை, பொருந்திய நுண்ணுடலை உயிர் தாங்கிப் பயன் பெறச் செய்தல் — பாதுகாத்தல். அறியாமைக்கு அரண் செய்யும் துரிசுகளை அழித்தல். உயிர் அதன் பழைய நிலையை உணராது மறைத்து வைத்தல், வாழ்க்கையில் வாழ்க்கையின் போகத்தில் ஆன்மாக்களுக்கு விருப்பத்தை உண்டாக்குதல். மறைத்தல் ஆன்மாக்களுக்கு — உயிர்களை முற்றாக அறியாமையினின்றும் மீட்டு முழுமையுறச் செய்து இன்ப அளவில் நிலைபெறச் செய்தல் அருளுதல். ஆன்மாக்களுக்குக் கடவுள் வாழ்க்கையில் ஆண்டவன் அடிமையில்லை, உடையார் — இல்லார் இல்லை. பேதமில்லை, இதுவே, உண்மையான சமயம். சித்தாந்தச் சமயம்.

பிற்காலத்தில் சமயநெறிகள் தடம்புரண்டு உடைமை, பணம் ஆகியவற்றின் தடத்தில் நடந்து சுரண்டும் சமுதாயத் திற்கு அனுசரணையாக இருந்து வேற்றுமைகளை வளர்த்து, இந்தப் புவிக்கோளை இரத்தத்தால் கழுவி, நரகத்தைப் படைத்த கொடுமைகளையும் மறந்து விடுவதற்கில்லை.

ஆயினும், இன்னும் மனிதம் வளர, நம் நாட்டின் சமய ஞானம் துணை செய்யும். துணை செய்யவேண்டும் என்ற நம்பிக்கை இருக்கிறது. இந்த நம்பிக்கை வெற்றி பெற சிந்தனையாளர்கள், செயல் வல்லுநர்கள் துணை செய்ய வேண்டும்.

இந்த வாழ்க்கை, அழுவதற்காக அல்ல. சென்ற காலத்தில் அழுதது போதும். சென்ற காலத்திலிருந்து விடுதலை பெறவேண்டும். முன்னே தோன்றிய பழமையைப் பின்னர் புதுமையாக்கி வாழ்க்கையைப் பயனுடையதாக்கப் பயன்படுத்தப்படுதல் வேண்டும். உயிர்கள் குறைவிலாது வாழ்வதற்குரியனவாகச் செய்தாக வேண்டும். மாந்தரிடத்தில் தோழமைப் பண்பை வளர்க்கவேண்டும். இதனை இன்றைய சமயம் செய்தால் எதிர்காலம் உண்டு.

மெய்கண்டார் விழா, மாமன்னன் இராசராச சோழன் விழா 16–11–92

# 10

# முத்து மொழிகள்

## தாய்மொழியில் வழிபாடு

இந்த உலகிலே எதையும் இழக்கலாம்–மறக்கலாம். ஆனால் தாய்மொழியை இழக்க இயலாது; மறக்க முடியாது. தன் சொந்த மொழியை இழந்து மறந்து பிறமொழிப் பற்றுக் கொண்டு வாழ்தல் பொய்க்காலில் நடப்பதற்குச் சமமாகும். எந்த இனமும் தத்தம் மொழியைப் பேச–பேண முன்வருவது போலவே தமிழர்களாகிய நாமும் முன்வர வேண்டும். தமிழ் உணர்வு கொண்டு, தமிழ்ச் சிந்தனையால் தமிழ் நாகரிகம் காக்க வேண்டும். எல்லாத் துறைகளிலும், எல்லாக் கட்டத்திலும் தமிழ் வாழ்வு வாழ விருப்பங்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் தமிழ் வழி நல்லோர்களாய், தண்டமிழ்ச் சிறார்களாய்ச் சிறக்க முடியும்.

தமிழையே பேச்சாகவும் மூச்சாகவும் கொண்டு வாழ்ந்ததனாலேதான் அன்றையத் தமிழன் தகைமை சான்ற தன்னிகரில்லாத வாழ்வு வாழ முடிந்தது. தமிழ், வாழவும் வாழ வைக்கவும் போதிக்கும் ஒரு செம்மொழி. உறவாடி மகிழவே மொழி உதவுகிறது. உணர்ச்சிகளை வாயாலே காட்டுவதுடன் கண்ணாலும் முகத்தாலும் காட்டிவிடலாம்.

உணர்ச்சியைச் செம்மைப்படுத்தி உறவாட உதவும் கருவியாக நமது மொழி கருதப்பட்டது.

இன்றைய நிலையில் கலப்பு வந்துவிட்டது. சந்தேகமும் சலனமும் இக்கலப்பால் தலைகாட்டுகின்றன. இறைவனிடத்தில் உறவாடக் கூடக் குறிப்பிட்ட ஒரு மொழிதான் வேண்டுமென்று வலியுறுத்துபவர்களை இன்று காண்கிறோம். எல்லாம் வல்ல-எல்லாம் அறிந்த எம்பெருமான் குறித்த ஒரு மொழி மட்டுமே தெரிந்தவராக இருக்கமாட்டார். தேவ மொழியாக ஒரே மொழியை விரும்பி, அம்மொழி வழித் தொடர்புகளுக்குத்தான் செவிசாய்ப்பவராக இறைவன் இருப்பாரா? சுரண்டலும் சுயநலமும் ஆதிக்கம் செலுத்திய காலத்தில், கடவுளின் பெயரால் சிலர் செய்த கண்மூடித் தனமான பொய்ப் பிரசாரங்களில் இதுவும் ஒன்றாகிவிட்டது. கடவுளை எங்கோ ஓரிடத்தில் வைத்து, எவரோ ஒருவரைத் துணைக்குக் கூப்பிட்டு, வழிபாடு நடத்தாத காலத்தில் குறிப்பான சில சடங்குகளும், குறித்த ஒரு மொழியும்தான் கடவுள் நெறிகாண உதவும் என்ற கோட்பாடு வளரவில்லை. தமிழர், முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் முதல்வனை வழுத்தினார்கள்; வாழ்த்தினார்கள். அந்த வாழ்த்துதலுக்கு இறைவனின் இசைவும் இருந்தது. அத்தகைய இசைவினை இப்போதும் பெறலாம், பெறவும் முடியும்.

நல்லவர்களை உருவாக்கும் பண்ணைகளான தேவாலயங்களில் தாய்மொழியில் வழிபாடு இன்றியமையாத ஒன்றாகும். இதய தாபங்களை அடக்கி-அழித்து இனிய நிலையை உருவாக்க, தாய்மொழியால், எந்தையும் தாயுமான மங்கை பங்கனைப் போற்றிப் புகழ வேண்டும். "வடமொழியும் தென்தமிழும் ஆனான் கண்டாய்" என்ற தத்துவம் இப்பொழுது நடைமுறையில் அதிகமாக இல்லாதது வருத்தத்தைத் தருகிறது. இறைவன் தமிழ் மொழியில் எவ்வளவு பற்று வைத்திருந்தான் என்பது வரலாற்று மூலமாகவே கண்டு மகிழக்கூடியதாய் இருக்கிறது.

வேதம் ஓதி விழிநீர் பெருக்குவதைப் போலவே திருமுறைகளை ஓதியும் விழிநீர் பெருக்கலாம். திருமுறைச் செல்வர்களின் ஒருவரான மணிவாசகப் பெருமான் "நானே பொய், என் நெஞ்சும் பொய், என் அன்பும் பொய் ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே" என்று அரற்றி அழுது அருளார் அமுதம் பெற்றார். அழுவதற்கு உள்ளம் உருக வேண்டும்; உணர்ச்சி கசிய வேண்டும். அவைகளின் நெகிழ்ச்சிக்குத் தாய்மொழிதான் உதவும். எந்த மொழி வல்லுநனும் தன்னையொட்டிய சிந்தனையைத் தன் சொந்த மொழியிலேதான் சிந்திக்கிறான். அதைப்போல் நம்மைச் சார்ந்த வழிபாட்டுச் சிந்தனையும்-சிந்தனை வெளிப்பாடும் நமது தாய் மொழியிலிருந்தால் நலம் பயக்கும்.

தமிழருக்குச் சொந்தமான சில தகைமை இருப்பது போல, இறைவனிடத்தில் சொந்த மொழிவழித் தொடர்பும் இருக்க வேண்டும். இப்படிக் கூறுவதால் எம்மை வேற்று மொழி வெறுப்பாளர் என்று எண்ண வேண்டாம். மொழித் தொடர்பினால்-காலத்தால் மூத்த சமய குரவர்கள் சிறப்புற வாழ்ந்ததுபோல நாமும் வாழ வேண்டுமென்ற விருப்பு நமக்கு உண்டாக வேண்டும். வேற்று மொழியை ஆதரித்து நமது மொழியைப் போற்ற வேண்டும். வடமொழியில் வேதம் என்பதை, நாம் மறை என்று தமிழ் ஆக்குகிறோம். வேதம் என்பது வேய்தல். அதாவது மூடுதல் எனப்படும். ஆணவத்தை மூடி மறைக்க வேதங்கள் உதவுகின்றன. நமது தாய்மொழியில் முகிழ்ந்த வேதமாகத் திருக்குறளைக் கருதுகிறோம். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப் பொருள்களைத் தர எழுந்த வேதம் குறள். தமிழில் பெரும் பெரும் வேதங்கள் உருவாகி இருந்திருக்கலாம். ஆனால் கடல் கோள்களினாலும் பூகம்பங்களினாலும் அழிந்து மறைந்திருக் கலாம். இப்போது நமக்கு உதவுவன திருமுறைச் செல்வங் களே. இச்செல்வங்கள்கூட மூடி மறைக்கப்பட்டிருந்தன. சிலர் தம் ஆதிக்க வாழ்வு ஆட்டங்கண்டு விடுமென்றஞ்சித்

திருமுறைகளை மறைத்துப் பூட்டினர். சிதம்பரத்தில் மறைந் திருந்த திருமுறைகள் ஆண்டவனின் விண்ணொலியாற் பெறப்பட்டன. அவற்றை நம்பியாண்டார் நம்பி தெரிந்து தமிழுலகுக்கு அளித்தார். அத்திருமுறைகள் மறைக்கப்பட்ட தோடு மறைந்தொழிந்திருந்தால் இப்பொழுதிருக்கும் நமது நிலை என்னவாக இருக்கும்? தத்துவப் பெருக்கால் தம்மை உயர்ந்தவர்களாக எண்ணி இறும்பூதடையும் சிலர் தம்மை எப்படி இழித்துரைப்பார்கள்.

“கல்லைப் பிசைந்து மென் கனியாக்கி” என்பதுபோல- நம் நெஞ்சக் கனகல்லை நெகிழ வைக்கத் தாய்மொழி வழிபாடு உதவுகிறது. வழிபாட்டிற்குக் காதல், கனிவு, கசிவு தேவை. சிந்தனை வழியாகவே காதல், கசிவு, கனிவு போன்றவை பிறக்கும். காதலும் கசிவும் உண்டாகிவிட்டால் கோவிலிலே வக்கீல் வைத்து வணங்க வேண்டிய முறை தேவைப்படாது. யான் எனது என்ற செருக்கழித்துச் சமுதாயத்துக்கு நலம் பயக்கத் தெய்வ வணக்கம் பயன்பட வேண்டும். இமயத்திலே, பொதிகையிலே ஊற்றெடுக்கும் தண்ணீர் எங்கும் பரவி விரவி ஓடிப் பயனளிக்கிறது. ஆனால் மனிதனின் இதய மலையிலே ஊற்றெடுக்கும் ‘சிவமயம்’ கோவிலோடும் பூசை முறையோடும் நின்று விடுகிறது. வெளியில் வந்தவுடன் ‘என் மயம்’ ஆகிறது. எவ்வுயிர்க்கும் ஈசனுக்கும் தமக்கும் அன்புள்ளவர்களாக ஆக்கும் பெற்றி வழிபாட்டுக்கு உண்டு.

எனவே, இனத்தை ஒத்த மொழியிற் பிடிப்பும்- பாசமும் இருத்தல் வேண்டும். ஆண்டவனிடத்தில் சொந்த மொழி வழித்தொடர்பே அத்தகைய பலனைத் தருகிறது. இறைவன் பல வழிகளில் தமிழை அனுபவித்துச் சுவைத்திருக் கிறான். காசு கொடுத்தும், தூது நடந்தும் கன்னித் தமிழ் கேட்டதாக வரலாறு பேசுகிறது.

வடமொழியும் செந்தமிழும் வழக்கிழக்க வேண்டியவை யென்றால் வடமொழிக்குக் கொடுக்கப்பட்டது போல நம்

தமிழுக்கும் இடங்கொடுக்கப்பட்டதா? இல்லையே! தமிழுக்கு இடங்கொடுக்கப்படாவிடில் தமிழர்களாகிய நாம் இடந்தேடி இன்பமடைய வேண்டாமா?

சுரண்டல்களினாலும்-சுயநலத்தினாலும் தமிழன்பின் தங்கிய நிலை இப்பொழுது சமயத்துறையில் அருக ஆரம்பித்துவிட்டது. இந்நிலை நல்லதொரு மாற்றத்தினை உருவாக்கி உண்மைநெறி உலகெல்லாம் பரவ உதவும்.

## அகமும் புறமும்

ஆன்மாக்களுக்கு ஆசையதிகம். மனிதர்களுக்கிருக்கும் ஆசையை அளவிட்டு உரைக்கவியலாது. ஆசையை அழித்து விடுதல் என்பதில் நமக்கு நம்பிக்கையில்லை. எந்த மனிதனுக்கும் ஏதாவதொன்றிலே ஆசையிருக்கத்தான் செய்யும். எல்லாச் செல்வங்களையுமேற்று-உண்டு, உடுத்து உறங்கி வாழ விரும்புகின்றனர் சிலர்; செல்வாக்குப் பெருக்கால் சிறந்த பதவிகளைப் பெற்று வாழ ஆவல் கொள்கின்றனர் சிலர்; நாட்டை ஆளும் பேற்றினைப் பெற்று-நனிசிறந்து தலைவர்களாக வாழவிரும்புகின்றனர் பலர். இவ்வாறு ஒவ்வொரு வகையான ஆசைகளுடன் மனித இனம் அலைந்து கொண்டிருக்கிறது.

நாமுங்கூட நல்ல அருள்நெறி வாழ்வு வாழ்ந்து அறச் செல்வர்களாகத் திகழ்பவர்களைக் காண ஆசைப்படு கின்றோம். ஆசையைப் பொறுத்தமட்டில் நம் கைக்கொள்ள வேண்டியது ஒன்றேயொன்று-அதுதான் எல்லை. எதற்கும் ஒரு வேலி-எல்லை-வரையறை அவசியம் வேண்டும். மனித னின் ஆசையுணர்வு அளவுக்கு அதிகமாக-எல்லை கடந்து செல்கிறபோது ஆபத்து நேருகின்றது. ஒரு வரையறையுடன் எந்த உயிருக்கும் இன்னலற்ற முறையில்-நன்மை பயக்கும் வகையில் ஆசை உருவெடுத்தால் அது போற்றப்பட வேண்டியதே.

மனிதனைக் குரங்குக்கு ஒப்பிடுவார்கள். இப்போதைய மனிதர்களில் சிலரைக் குரங்கொடு ஒப்பிடவும் முடிவ தில்லை. இப்போதையச் சில மனிதர்களைவிட குரங்கு எவ்வளவோ உயர்ந்த இடத்தைப் பெற்றிருக்கிறதெனலாம். குரங்கினது இயல்பு வெள்ளிடைமலை. கொம்பு விட்டுக் கொம்பு தாவுவது அதன் இயல்பான செயல். அஃது ஒரு கொம்பைவிட்டு மறுகொம்புக்குத் தாவும்போது முன்பு பிடித்த கொம்பை விட்டுவிட்டுத்தான் தாவுகிறது. ஆனால், அளவு கடந்த ஆசை வழிப்பட்ட மனிதனோ ஒன்றை விட்டு ஒன்றைப் பற்ற முயல்வதில்லை. எல்லாவற்றையும் ஒரு சேரப் பற்றி நிற்க விரும்புகின்றான். இந்த எல்லை கடந்த-வரம்பு மீறிய ஆசைப்பெருக்கினாலேதான் அவன் பல அல்லல்களுக் குள்ளாக வேண்டியிருக்கிறது.

அருமையான ஓர் ஆங்கிலக் கதையுண்டு; பொன்னிலே ஆசை கொண்டவன், தான் தொட்டதெல்லாம் பொன்னாக விரும்பி இறைவனிடத்தில் வரம் வேண்டித் தவமிருந்தான். துன்பங்கள் பலவற்றைத் தாங்கித் தவமிருந்ததால் இறைவன் எழுந்தருளினார். "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டருளினார். "யான் தொட்டதெல்லாம் பொன்னாக அருள் பாலிக்க வேண்டும்" என்று பக்தியுடன் விண்ணப்பம் செய்தாள். இறைவன் அவனுடைய விருப்பத்தை நிறைவேற்றி மறைந்தருளினார்.

வரம்பெற்ற நேரம் தொடங்கி வகை வகையான பொருட்களைத் தொட்டுத் தொட்டு அவைகளைப் பொன்னாக்கினான். பொன் குவியல் நிறைய நிறைய அவனது பூரிப்பு அளவு கடந்து அவனது உடலையே பூரிக்க வைத்தது. மகிழ்ச்சிப் பெருக்கு அவனைப் புதுமனிதனாக் கியது. பசியெடுத்தது. உணவுக்குப் பக்கத்திலே போய் உணவைத் தொட்டான். அவ்வுணவும் பொன்னாகியது. பசி அவனை வாட்டி வதைக்கக் கவலை தலைகாட்டியது. சாப்பிட முடியாதநிலை வந்துவிட்டதை எண்ணி

ஏங்கினான். இந்த வருத்தத்தோடு வேறொரு பெருவருத்தமும் காத்திருந்தது. பக்கத்தில் நின்ற தன் பிள்ளையையும் தொட்டான். அதுவும் பொன்னாகியது. ஆசை வெறியால் ஆண்டவனிடம் கேட்டுப்பெற்ற வரம். வயிற்றுக்குள் சோற்றையே அனுப்ப முடியாமற் செய்து விட்டதை நினைத்து, "ஆண்டவனே! வயிற்றுக்குணவு கிடைத்தாலே போதுமானது" என அரற்றினான். ஆகவே ஆசைக்குக் கட்டுப்பாடு தேவை.

ஆசையை ஒழித்துவிடு என்பதைக் காட்டிலும் ஆசைக்கு எல்லை வகுத்துக் கொள் என்பது சாலச் சிறந்தது. ஏனெனில் ஆசை மனிதனைப் பொறுத்தமட்டில் ஒழிக்க முடியாதவொன்று. ஒரு சில நன்மைக்காக ஒருசிலர் ஆசையுணர்வுக்குத் தடைவிதிக்கலாம். பொதுப்படையாகச் சமுதாய வாழ்வில் ஆசையை அழிக்க முயல்வது முடியாத காரியம்-வரையறை செய்துகொண்டு வாழ்தலே இயலும்.

அன்பை-அறத்தைப் பேணி வாழ நாம் ஆசைப்பட வேண்டும். அறஞ்செய்வதற்காகவே வாழ்கிறோம் என்ற நினைப்போடு-அறமற்றவைகளை அறவே தள்ளி, இன்பத் தமிழ்நாட்டினுடைய இணையற்ற பண்பினைக் காக்க ஆசைகொள்ள வேண்டும்.

'அறத்தால் வருவதே இன்பம்' என்ற கோட்பாட்டுக்குத் தலைசாய்த்து வாழ்ந்ததனாலேதான் பழந்தமிழ் நம் பாரில் உயர்ந்து பண்புவழிச் சிறந்திருந்தது. அகத்திலே அன்பை வளர்க்கவும் அறத்தைப் பேணவும் சமயச் சார்புடைய வாழ்வு தேவை. மனித வாழ்வுக்கு ஒரு கொள்கை-ஓர் ஒழுங்கு வேண்டும். அத்தேவைகளைச் சமயவாழ்வினாலே பெற முடியும். ஒரு மனிதனுக்கு நல்ல கொள்கைப் பற்றும், ஒழுக்க மும் வாய்த்தவுடன் பிறர் நலம் பேணுகின்ற மனப்பண்பு உண்டாகும்; அந்த மனப்பண்பு பிறர்க்குத் துன்பம்

கு.XII.26.

கொடுக்காமல் வாழ்வதோடு-பிறர்தருந் துன்பத்தைப் பொறுக்கும் வெற்றியையும் நல்குகின்றது.

தமிழரின் சமயப்பண்பு தன் நிகரில்லாதது; தலையாயது. அது பாவம் செய்யாதே என்று போதிக்காமல் பாவம் செய்ய நினைக்காதே என்கிறது. அது போலவே கொலை செய்ய நினைக்காதே-திருட நினைக்காதே என்கிறது. கொலை செய்தால்-திருடினால் பாவம் என்று சொல்லாமல், அவற்றை மனத்தில் நினைத்தாலே பாவம் என்று கூறுகிறது. இதிலிருந்து தமிழருடைய சமய நெறி சமுதாயத்தில் அன்பையும் அறத்தையும் உருவாக்க உழைத் திருக்கிறதென்பது புலனாகிறது. ஆன்மீக ஈடேற்றத்துக்குத் தமிழர் சமயம் தலைசிறந்த வழிகளைக் காட்டியிருக்கிறது. வழிவகைகளைக் காட்டியதோடமையாது, அவ்வழிப்பட்டு வாழ்ந்த வளமான நிலையையும் பெற்றிருக்கிறது. புறவாழ்வின் சிறப்புக்கு அகவாழ்வின் துணை இன்றியமையாத தென்பதை உணர்ந்து உணர்த்திய சமயம் தமிழர் சமயம். அகப்புரட்சி யின் பயனாகவே புறவாழ்வைத் தூய்மையுடையதாக ஆக்க முடியுமென்று எண்ணிச் செயல்பட்ட பண்பு பாராட்டி மகிழ்தற்குரியது.

சில வீடுகளிலே வெளிச்சுவர்களுக்கு வெள்ளையடித்து உட்சுவர்களைப் புறக்கணிக்கிறார்கள். வெளிச்சுவர் பார்ப்ப வர்களின் பார்வையை ஈர்க்குமேயொழிய அவ்வீட்டில் வாழ்பவர்களுக்குப் பயன் தராது. உட்சுவர் தூய்மையற்று இருந்தால் வீட்டிலுள்ளவர்களின் நல்வாழ்வு பாழ்பட்டுப் போகும். ஆகவே உட்சுவரின் துய்மையைக் கவனித்தபின்பே வெளிச்சுவரைத் தூய்மையாக்க முனையவேண்டும். மனிதவாழ்விலும் கூட அகவாழ்வைப் பற்றிய சிந்தனைக்குப் பின்பே புறவாழ்வைப் பற்றிய எண்ணம் எழவேண்டும். அதுவே மனித மரபு-தமிழ்மரபு. புறப் புரட்சியின் வெற்றிக்கு அகப்புரட்சி துணைசெய்யும். மணிவாசகர் போன்ற

அனுபூதிமான்கள் அகத்துறைப் புரட்சியையே குறிக்கோளா கக் கொண்டு வாழ்ந்து உயர்ந்தார்கள்.

எனவே, ஆசைக்கு வரையறை வகுத்து, அன்பும், அறனும் கொண்ட வாழ்வு வாழ்ந்து, புறவாழ்வின் தூய்மைக்கு இன்றியமையாத அகவாழ்வை-ஆன்மீக வாழ்வைத் தூய்மையாக்கித் துன்பம் கண்டவிடத்துத் துடித்து-உடுக்கை இழந்தவன் கைபோல விரைந்து வேண்டியது செய்து-என்றும் எல்லா உயிர்களிடத்தும் பற்றுவைத்து வாழ வாழ்த்தி விடை பெறுகின்றோம்.

## சமயத் தொண்டு

இந்த நூற்றாண்டிலே நமது சமயத்தைப் பற்றிய சிந்தனை அருகி வருகிறது. வாழ்வுப் பிரச்னைகளாலும் வேறு சில சூழ்நிலைகளாலும் கடவுள் நெறி பற்றிய எண்ணம் குறைந்து வருகின்றது. சிவநெறித் தத்துவத்தின் வழி வாழ்தல் என்பதும், சைவசமயக் கொள்கை வழித் தொண்டு என்பதும் இப்போது மாறிக் குழம்பிக் கிடக்கின்றன. இது ஒரு விதக் கலப்பாலும்—கலப்பினாலுண்டான சபலத்தாலும் வெள்ளத் தால் அள்ளுண்டு போவதைப் போன்றநிலை எப்படியோ வந்து புகுந்துவிட்டது. நான் பிற மத எழுத்தாளனல்லன். ஆனால் நமக்கென ஒரு கால் தேவை—ஒரு நெறி தேவை என்பவன். கலப்பு என்பது சுயத்துவத்தை அழிக்கவல்லது. உலகியல் நாகரிகங்களின் வரலாற்றிலே ஒன்றையொன்று கௌவி விழுங்கிய செய்திகளைப் படிக்கிறோம். மற்றையக் கொள்கைகளை-நெறிகளைப் பாராட்டுவதோடு, நமது கொள்கைகளையும் கோட்பாடுகளையும் வலுப்படுத்த உழைக்க வேண்டும்.

சைவசமய வளர்ச்சி பற்றி “வரைபடம்” (Graph) போட்டுப் பார்த்தால் நிலைமை பளிச்செனப் புலப்படும். இந்நிலை மாற-மாற்றப்பட நாம் தீவிரமாக முனைய

வேண்டும். பன்னெடுங் காலமாகக் கழிபேருவகையுடன் நல்வாழ்வுச் சூழலை உருவாக்கி உதவிய சைவநெறி பற்றிய எண்ணமும் செயலும் நம்மிடையே தோன்றி வளரவேண்டும். மனிதனின் வாழ்வை மலரச் செய்யவும்-மணம் பரப்பச் செய்யவுந்தான் மதங்கள் உதவுகின்றன. வெறும் சடங்குகள், உபதேசங்கள், போதனைகள் போன்றவற்றோடு மதம் நின்று விடக் கூடாது. அச்சம், ஆத்திரம், புகைச்சல், பொறாமை போன்றவை இன்றைய மனிதனை ஆட்டிப் படைக்கின்றன. இத்தகு இழிந்த மனப்பான்மையை ஒழிக்க மதம் உதவ வேண்டும். உயிர்த்தொண்டுக்கு-உலகத் தொண்டுக்கு ஆன்மாவை ஆற்றுப்படுத்தும் பெரும் பொறுப்பு சமயத்துக்கு உண்டு.

அச்சமும் ஆத்திரமும் போன்றே ஐயமும் சஞ்சலமும் குழப்பமும் மனித மனங்களில் குடிகொண்டிருக்கின்றன. சந்தேகத்தை மாற்றச் சைவத்தை ஒட்டிய சில முடிவுகள் உதவுகின்றன. சைவ சித்தாந்தமென்பது ஒரு சிவநெறித் தத்துவம்; முடிந்த முடிவான கொள்கையைக் கொண்டது. சிவத்திரு ஆறுமுகநாவலர் அவர்கள் 'சைவ சித்தாந்தமே சித்தாந்தம்; மற்றவையெல்லாம் பூர்வபக்கங்கள்' என்றார். சிந்தை செல்லுமிடமெல்லாம் சென்று முடிந்த முடிபைக் காண்பது சித்தாந்தம்; 'சைவசித்தாந்தக்காரர்கள் மனிதகுலச் சஞ்சலங்களை அகற்றுவதோடு-நாத்திகத்தைத் தர்க்க முறையில் வெல்லலாம்; வெல்ல முடியும். குழப்பமே தெளிவுக்கு அடிப்படை. இப்போது சைவ சித்தாந்தக் கருத துக்கள் சில ஒரு குழப்பநிலையை உண்டாக்கியிருக்கின்றன. இனித் தெளிவு வரலாம்; கட்டாயம் வந்தே தீரும்.'

"சிந்தையுள் தெளிவுமாகித் தெளிவினுள் சிவமுமாகி" என்றார், அப்பரடிகள். 'தெளிவிலே சிவநெறி ஊறிச் செம்மை நலங்கள் காணும் நாள் அதிக தூரத்திலில்லை. என்றும் நம்மை அவன் ஆட்டுவிக்கிறான்; நாம் ஆடுகிறோம்-அடக்கு விக்க நாம் அடங்குகிறோம். அனாதி காலம் தொட்டே

அனாதியான ஆன்மா ஆண்டவனிடத்தில் அடிமைப்பட்டிருக்கிறதென்பதைத் தாயுமானவர் அழகுறச் சொல்கின்றார்.

**"இரும்புநேர் நெஞ்சகக் கள்வனானாலும் உனை**
**இடைவிட்டு நின்ற துண்டோ?**
**என்றுநீ அன்றுநான் உன்னடிமை யல்லவோ**
**யாதேனும் அறியா வெறுந்**
**துரும்பனேன்; என்னினும் கைவிடுதல் நீதியோ"**

என்கிறார். நமக்கு வரும் இன்ப துன்பங்களுக்கு அவனே பொறுப்பாளி. இந்த விடை மிகமிக ஆழமான குளத்து நீரில் ஒரு திவலை. கற்கண்டில் ஒரு துண்டு. நானே கடவுள்-நானே பிரமம் என்றால் பொருந்துமா? "குறைவிலா நிறைவே கோதிலா அமுதே" என்கிறது திருவாசகம். பரிபூரண நிறைக்குப் பெயர் கடவுள். அப்படியானால் அவனின் பிரதி பிம்பமான நாம் ஏன் நிறைவற்றுத் தொல்லைப்படுகிறோம்? இறைவனின் குழந்தைகளாக, இறைவனின் அடியார்களாக நம்மை நாம் எண்ணிக் கொள்ள வேண்டும். நமது சைவநெறி வாழ்வைத் தழுவியது; வாழ்வோடு இணைந்து பிணைந்தது. நிறைவான குடும்ப வாழ்வே சித்தாந்தச் சிவநெறி வாழ்வாகும்.

சேக்கிழார் பெருமான் சிவநெறித் தொண்டர்களைப் பற்றி நிறையச் சொல்லியுள்ளார். பூசலார் நாயனார் மனத்திலே கோவிலெடுத்து மகேசனைக் கண்டார். கோவிலுக்குப் போக வசதியில்லாதவர்கள்-வாய்ப்பில்லாதவர்கள் மானசீகமாக இறைவனை வழிபடலாம். திருக்கேதீஸ்வரம் செல்ல வசதியில்லாவிட்டால் திருக்கேதீஸ்வரப் பதிகம் பாடிப் பாலாவியின் கரைமேல் ஆண்டவனை அகத்திலே காணலாம். நாவுக்கரசர் உழவாரத் தொண்டால் கடவுளைக் கண்டார். திருக்குறிப்புத் தொண்டர் மெய்யடியார்க்குத் துணி துவைத்துக் கொடுத்துப் பரமன்பதம் அடைந்தார். நாமெல்லாம் நாயன்மார்களின் குருபூசைகளைக்

கொண்டாடுகிறோமே தவிர அக்கொண்டாட்ட நாளில் தேவையானவற்றைச் செய்வதில்லை.

கண்ணப்ப நாயனார் குருபூசையில், கண் பார்வை குறைந்தவர்களுக்குக் கண்ணாடி வாங்கி வழங்கும் வழக்கம் மேற்கொள்ளப்பட்டால் எவ்வளவு நன்மை பெருகும். நாம் கைக்கொள்ள வேண்டியது நால்வரின் நெறி. நால்வரின் இயக்கம் சமுதாய இயக்கம். நால்வரின் வழிச் சென்றால் நம்மிடையே ஒரு ஒழுங்கு உண்டாகும். நமது மதம் இப்போது ஒழுங்கில்லாமற் கிடக்கிறது. ஒழுங்குபடுத்தப்பட்ட மதமாக நமது மதம் மிளிர வேண்டும். வெள்ளையன் தனது மதமான கிறித்தவத்தைத் தவிர்ந்த ஏனைய மதங்களை ஒன்றாக்கி இந்துமதம் என அதற்குப் பெயரிட்டான். இதனால் சில தனித்தன்மைகள் கெட்டுவிட்டன. கலப்பு ஒரு போதும் தனித் தன்மைகளைக் காப்பாற்ற உதவாது. மற்றைய மதங்களிடையே உள்ள ஒழுங்கு நம்மிடையே இல்லை. பன்னிரண்டு இலட்சம் இந்துக்களும் ஒன்றானால் ஒரு நல்ல விழுமிய ஒழுங்கு உண்டகாலாம். அப்பொழுதுதான் மேன்மைகொள் சைவநீதி உலகமெல்லாம் விளங்க வழியுண்டாகும்.

நாம் மதம் மாறியதைப் போன்று வேறு யாராவது மாறியிருக்கிறார்களா? நம்மிடையே எண்ணத் தொலையாத எத்தனையோ பேர் மதம் மாறியிருக்கிறார்கள். நம்முடைய மதத்துக்கு வேறு மதத்தவர்கள் வந்ததுண்டா? நம்மைப் பொறுத்த அளவில் மதமாற்றம் சர்வசாதாரணமாகிவிட்டது. இந்நிலைமாற சைவத் தமிழகம் பாடுபடவேண்டும். சிவநெறி பரப்பும் மடங்கள் ஆன்மாவுக்குத் தலைவனான ஆன்ம நாயகனை வழுத்துவதோடு நின்று விடுவதற்கில்லை—திருமடங்கள் திருத்தொண்டால் சிவநேயச் செல்வர்களை உருவாக்கவே எழுந்தவை. எந்நாளும் சமயப் பிரச்சாரம் செய்து—சித்தாந்த சிவவழி நிற்கவே அவை உதவுகின்றன. மனிதகுலத்துக்கு மாண்புறு தத்துவங்களைப் போதிக்கவே

சைவமடங்களை நம் முன்னோர்கள் உண்டாக்கினார்கள். ஆனால் அவர்களது எண்ணம் சிலகாலம் சிதைவுற்றுப் பிறழ்ந்ததை மறுப்பதற்கில்லை. இப்பொழுது இந்நிலை மாறி வருகிறது. கைலாயத்து உச்சியுள்ள காளத்தியானைக் கண்ணிலே கண்டு மற்றவர்களுக்குக் காட்டச் சைவப் பெரியவர்கள் முன் வர வேண்டும். இதனாலேதான் சைவ சமயத்துக்கு முழு நேர ஊழியர்கள் தேவை என்கிறேன். இறைவனைக் கைலாசவாசியாகவே சிலர் கருதுகிறார்கள். வான் பழித்து மண்புகுந்து மனிதரை ஆட்கொள்பவன் நம்பெருமான். ஆண்டவனை எட்ட வைத்து எண்ணும் நிலை மாற வேண்டும். மண்ணிலே விண்ணைக் கண்டு விண்ணகத்து வித்தகனை நெஞ்சத்தில் அமர்த்த வேண்டும். தட்டினால்தான் திறக்கப்படும்— கேட்டால்தான் கொடுக்கப் படும் என்று நமது சைவநெறி சொல்லவில்லை. வேண்டப் படுவதை அறிந்து—வேண்டிய முழுதும் தருபவன் இறைவன்.

ஆகவே நால்வர் நடந்து நடந்து வளர்த்த நமது நெறி நாலா பக்கமும் பரவி விரவ வேண்டும். ஓர் ஒழுங்கு முறை யான கட்டுக் கோப்பு நமக்குத் தேவை. கலப்பு, ஒழுங்கினை உண்டாக்க இடையூறாயிருக்கும். மற்றைய மதங்களிலுள்ள ஒழுங்கினை நமது மதத்தில் காண விரும்ப வேண்டும். மதம் மாறும் நிலையை நம்மிடையேயிருந்து விலக்க வேண்டும்.

## இறை வழிபாடு

மனிதப் பிறப்பின் மாண்புறு நிலையை நயக்கத் தக்க நல்ல வழியில் அனுபவித்து உயரப் பழகிக் கொள்ள வேண்டும். மனிதன் வேகமாக உழலுகிறான்; சுழலுகிறான். ஆனால், ஏன்? எதற்காக உழலுகிறோம்? என்று அவன் சிந்திப்பதில்லை. குறிப்பாகத் தமிழர்களாகிய நமக்குக் கேள்வி கேட்பதென்பதே கசப்பாயிருக்கிறது. எதையும் துருவித் துருவி நுணுக்கமாகவும் ஆழமாகவும் ஆராய்ந்ததினாலேதான் தத்துவாசிரியர்களும் பெரும் பேராசிரியர்களும் தோன்றி

னார்கள். மனிதச் சுழற்சி ஒருவிதத் தூய்மையைத் தருகிறது. அனுபவ உண்மைகள் அகத்தினை அலசித் தூய்மையாக்கித் துலங்க வைக்கின்றன.

கடலிலே உள்ள தண்ணீர் சூரிய வெப்பத்தினால் வான் நோக்கிச் சென்று, மீண்டும் மழையாகி மலை வழியே வருகிறது. மனிதனின் உள்ளப்பாங்கில் உப்புத் தன்மை நிறைய உண்டு. உப்புத் தன்மை சுழற்சி அனுபவத்தால் அற்றுப் போகிறது.

தங்கத்திற்கு எவ்வளவோ மதிப்புண்டு, அதை யொட்டிய வரலாறோ பெரிது. நிலத்திலே தோன்றி வளர்ந்து நமது கைக்கு வந்து பலவழிகளிலும் பக்குவமாகிப் பயன் படுத்தப்படுகிறது. நம்முள்ளே உள்ள ஆன்மா தங்கத்துக்குச் சமமானது. ஆனால், அது நிறைந்த பல அழுக்குகளால் பின்னப்பட்டுக் கிடக்கிறது. அழுக்கை அகற்றி ஆன்மாவை நல்வழிப் படுத்த ஆன்மநேயத் தொண்டுகளிலும்—சிந்தனை களிலும் நாம் ஈடுபட வேண்டும். அழுக்கை அகற்றவே ஆண்டவன் நம்மை இங்கு அனுப்பினான். இன்னும் தெளிவாகச் சொல்ல வேண்டுமானால் நன்றாகக் குளித்து விட்டு வாருங்கள் என்று நல்ல நீர்த்தேக்கத்தைக் காட்டி விட்டிருக்கிறான். நாம் நீர்த்தேக்கத்தைப் பற்றி நினைத்துப் பாராமல் அதனருகே நாற்றம் எடுத்துக் கிடக்கும் சேற்றினை வாரிப் பூசிக்கொண்டிருக்கிறோம். உடலுக்கு நலம் தேவை என்பது மறக்க முடியாதது. உடல் நலத்தோடு—உள நலத்தையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

உடலைத் தூய்மையாக்கப் பலவகையான சோப்புக் களை உபயோகிக்கின்றோம். ஆனால், உள்ளத் தூய்மைக்கு எந்தச் சோப்பையும் நாம் தேடுவதில்லை. உள்ளத்தின் அழுக் கினைப் போக்க வல்ல சோப்பை ஆண்டவனிடத்திலேதான் நாம் சென்று பெற வேண்டும். தேவாரம் திருவாசகம் போன்றவற்றைப் பணமாகக் கொடுக்க எம்பெருமான் நம்

உள்ளங்களைத் தாமாகவே கழுவிச் சுத்தமாக்கி விடுவர். எல்லாருக்கும் எல்லாச் செல்வங்களையும் பெற்றுப் பெரு வாழ்வு வாழ விருப்பமுண்டு. ஆனால், முயற்சி செய்து முன்னேற முடியாத சோம்பல் உயரவிடாமல் தடுக்கிறது. முயற்சியின்றியே எல்லாம் வர வேண்டும். உழைப்பில் ஊக்கமும், சேமிப்பில் நாட்டமும், செயலில் சிக்கனமும் தேவை. உழைப்பைக் குறைத்துச் செலவைப் பெருக்குவது தான் இன்றைய நிலை. உழைப்பின் வழியால் வரும் வருவாய் சிறிதானாலும் செலவின் வழி விரிவாக இல்லாவிட்டால் தீங்கில்லை என்கிறார் வள்ளுவர்.

"ஆகாறு அளவிட்டி தாயினும் கேடில்லை
போகாறு அகலாக் கடை"

என்பது அவரது குறள். மலரும், செடிகொடிகளும் பார்ப்ப தற்கு அழகைத் தருவது போல, மனிதர்களும் அழகைத் தர வேண்டும். அத்தோடு நறுமணம் கமழுஞ் சூழலையும் உண்டாக்க வேண்டும். எல்லாருக்கும் பயன் படத்தக்க வாழ் வினை வாழவேண்டும். இடுக்கண் வரும்பொழுது சிரித்துப் பொறுத்தலும், துன்பங்கண்ட விடத்துத் துடித்துத் தோள் கொடுத்துத் துணை செய்வதும் மனித வாழ்வின் மாண்புறு தத்துவங்கள். நம்மைப் படைத்தவனிடத்திலே ஒரு வஞ்சனை யும் கிடையாது-அவன் பொதுவானவன். காற்றும் நிலவும் சூரியனும் எதுவும் கேட்காது-பலன் கருதாது பயன் தருவது போல இறைவனும் எதுவும் விரும்பாது அருள் சுரக்கிறான். ஆண்டவனின் அருள் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுவதை நாம் அறிந்து அதனைப் பெற்றுப் பலனை அனுபவிக்க வேண்டும்.

நன்னீர்ப் பெருக்கை அணைகட்டி நல்லமுறையில் வாய்க்கால் வழிச் செலுத்திப் பயிர்த் தொழிலுக்குப் பயன் படுத்திக் கொள்வதைப் போன்று அருள் நீர்ப்பெருக்கைப் பாய்ச்சி அப்பயிருக்கு ஆக்கமளிக்க வேண்டும். பயிர்த்தொழி

லில் மிக மிகக் கவனமாய் இருப்பது அவசியம். களைகளைக் களைந்து, யானை போன்ற மிருகங்களிடமிருந்து காத்து-நாற்று நட்டால் தான் நெற்பயிர் வளர்ந்து வீட்டுக்கு வந்து, பசியைப் போக்கும். அகப்பரப்பில் ஆன்மீகப் பயிரை அருள் நீரால் வளர்த்து, ஐம்புல வேடர்களின் முற்றுகைகளிலிருந்தும் காத்து, ஆன்ம நேயர்களாக வேண்டும்.

மூளை விரிவதைவிட இதயம் விரிய வேண்டும். இதய விரிவு "இன்பமே துன்பமில்லை" என எண்ணி ஆன்மீகப் பயிர் வளர்க்க உதவும். இன்பத்தைக் குறைவிலாது அள்ளித் தரும் இறைவன் நமது அழுக்குகளை வாங்குவதையே தொழிலாகக் கொண்டிருக்கிறான். ஆண்டவனது பிச்சாடன மூர்த்திக் கோலம் நிகரில்லா உண்மையை வெளிப்படுத்து கிறது. ஆன்மாக்களின் நன்மைக்கும், நல்வாழ்வுக்கும் இடை யூறாயிருக்கும் எல்லாவற்றையும் பிச்சை கேட்பதைப் போல் கெஞ்சிக் கேட்டுப் பெறுகிறான். அவனது கெஞ்சும் நிலையைப் பெற அவன் திருவடிகளில் ஆழக்குளிக்க வேண்டும். நீராடல் உடல் நலம் தருவது போலவே திருவடிக் குளிப்பு ஆன்மநலம் நல்கும். ஆன்ம நேயத்திற்கு அன்பே அடிப்படை. அன்பில்லாமல் ஆன்மீகப் பயிர் வளராது. என்னதான் படாத பாடுபட்டாலும் அகப்பரப்பிலே அன்பு விதையைத் தூவாவிடில் என்ன பயன்? கடவுள் நம்பிக்கை என்ற விதை அன்பை உருவாக்க உதவுகிறது. அன்பு விதை அருள் என்னும் குழந்தையை ஈன்று புரந்தருகிறது. அறம் இன்பத்தைத் தருகிறது.

பலனைப்பெற அதற்கு மூலகாரணமானது எதுவோ அது பயன்படுத்தப்பட வேண்டும். ஓர் ஊரிலே இரு சகோதரர்கள் இருந்தார்கள்; இருவரும் விவசாயிகள். ஒருவன் விவசாயத் துறையிலே பாடுபட்டுப் பயனடைந்தான். மற்றவனோ பாடுபட்டான்; ஆனால் பலனைப் பெறவில்லை. பயன் கிட்டாததால் ஒருவித வெறுப்பு அவனிடத்தே அரும்பியது. வாழ்வில் வெறுப்புக் கொண்டவன்போல்

நின்றான். அவனருகே ஒரு பெரியவர் அணுகி வேளாண்மை பற்றி விசாரித்தார். அப்பொழுதுதான் அவன் வேதனைக்கு வித்தான வேடிக்கை வெளியானது. "உழுதாயா? பரம்படித் தாயா? உரம் போட்டாயா?" என்றெல்லாம் பெரியவர் கேட்டார். "ஆம், ஆம்" என்றே அவன் பதில் சொன்னான். பெரியவருக்கும் ஐயம் எழுந்தது! உடனே "விதை போட்டாயா?" என்று கேட்டார். விவசாயி விழித்தான்.

இரத்தத்தை வியர்வையாக்கி காலைமுதல் மாலை வரை உடலை வருத்திப் பாடுபட்டவன் விதைபோட மறந்து விட்டான். வேளாண்மை பயன்படுமா? விதை இல்லாது எங்காவது விளைச்சல் இருக்குமா? அது போல, வாழ்வின் வளர்ச்சிக்கும், உயர்ச்சிக்கும் கடவுள் நம்பிக்கை என்ற விதை வேண்டும். கடள் நம்பிக்கை அற்றவாழ்வு விதைக்காத வேளாண்மைக்காரனின் நிலைக்குச் சமமானது.

நியாயத்தை, அன்பை, அருளைப் போதிக்கவே கடவுள் நம்பிக்கையும், சமயச் சார்பும் தேவைப்படுகின்றன. வாழ்க் கைக்குத் தேவையுள்ள பொருள்களான உணவு, உடை உறையுள் போன்றவற்றை முயற்சியால் பெறுவது போலவே, இம்மைக்கும் மறுமைக்கும் முக்கியமாக வேண்டப்படும் கடவுள் அருளை முயன்று பெற வேண்டும். அருள் வெள்ளத் தால் அகத்துய்மை உண்டாகும். சிலரது மனங்களிலே சிங்கம், புலி, கரடி, போன்றவைகள் வாழ்கின்றன. அவைகளை விரட்டி ஆண்டவனின் அருள் வெள்ளம் பெருக்க வேண்டும். அகத்தூய்மைக்கு அருள் இன்றியமையாதது. இதனை நாம் கருத்தில் கொண்டு கடவுளை வழிபடும் மனப் பழக்கத்தினை உண்டாக்க வேண்டும்.

கடவுளை எப்படி வணங்குவது? இது ஒரு பிரச்சனை. வழுபாட்டிற்குச் சிந்தனை தேவை. சிந்தனையை நிலைப் படுத்த ஒரு சாதனம் வேண்டும். அச்சாதனமே தெய்வ உருவங்கள். உருவ வழிபாட்டின் சிறப்பால் உள்ளூறு

சோதியைக் காணமுடியும். தெய்வ உருவங்கள் கற்களிலே செதுக்கப்படுகின்றன. கல்லைக் கலையாக்கிக் கலையில் கடவுளைக் கண்டு வணங்கியவர்கள் நாம். நான் பேசிக் கொண்டிருப்பதைப் பெரிதாக்கி உங்கள் காதுகளில் செலுத்து கிறதே இந்த ஒலிபெருக்கி, இதன் ஆரம்ப நிலை வெறும் இரும்புதான். வெறும் இரும்பு தட்டி நிமிர்த்திப் பயனுள்ள தாக்கப் பட்டிருக்கிறது. அதுபோல் வெறும் கல், சிற்பியின் சிந்தனைச் சிறப்பாலும் கற்பனை வளத்தாலும் கலைத் துடிப்பாலும் கடவுட்கோலம் எடுத்திருக்கிறது. கடவுள் உருவங்களைக் கடவுளாக எண்ணும் நிலை வளர வேண்டும்.

செவிடனுக்குக் காது கேட்பதில்லை. அதைப் போல் நெஞ்சம் செவிடாக இருப்பவனுக்கு இறைப்பற்று ஏற்படுவ தில்லை. நெஞ்சச் செவிடுநீங்க நெஞ்சத்தால் விரிந்தவர்கள் உதவ வேண்டும்.

இறைவனை வழிபடும் முறையிலே உயிர்ப்பலி மிகவும் கொடுமையானது. உயிர்ப்பலியை ஆண்டவன் விரும்புவதாக எண்ணக்கூடாது. தனது உயிர்களை வருத்தி அழிக்க ஆண்டவன் விரும்புவதில்லை. சிலர் இறைப்பற்று என்று கூறி, ஆடு, கோழிகளைப் பலியிடுகிறார்கள். அது தவறு. இத்தகைய பாதகச் செயல் பரமன் சந்நிதானத்தில் நடவாது தடுக்கப்பட வேண்டும். பாரம்பரியமாக இருந்து வந்த வழக்கம் என்பதால் உயிர்ப் பலியைத் தடுக்கச் சிலர் மறுக்கிறார்கள். அறிவு விரியாத அந்தக் காலத்து விவகாரகங்கள் அனைத்தும் அறிவு விரிந்த-நாகரிகம் வளர்ந்த இந்தக் காலத்தில் நடைபெறுவது நல்லதல்ல.

நமது காலிலே ஒரு ஆணி குத்தினால் "ஆ!" என்று அலறித் துடிக்கிறோம்! ஆட்டை வெட்டும் பொழுது அது என்ன பாடுபடும். ஆன்மாக்களுக்கு அருள் சுரக்கும் ஆண்டவன் அதைப் பொறுப்பானா?

என்னே, மனித வாழ்வின் குறிக்கோள்! உணர்ந்து ஆன்ம சுத்தியுடன் அருளியல் வாழ்வு வாழ்ந்து பயனடைய முன் வரவேண்டும். இந்தப் பிறவி என்னும் பெருங்கடலைக் கடக்க, கருணைக் கடலான, இறைவனின் 'தாள்' என்னும் தெப்பத்தில் ஏறிக்கொள்ள வேண்டும். 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்' என்கிறார் வள்ளுவர்.

உருவங்களைக் கடவுளாகவே கருதி வழிபடவேண்டும். இறைவனிடம் உள்ளம் ஒன்றி நிற்க, கடவுளைக் காட்டும் உருவம் உண்மையான கடவுளாகக் காணப்படும். கடவுட் கொள்கை உயிர்ப் பலியை வெறுக்கிறது. எல்லா உயிர்களுக்கும் தந்தையான மங்கைபங்கன் சில உயிர்களை வதைத்துப் பலியிடுதலைப் பொறுக்கமாட்டான். பலியிடும் பழக்கம் ஒழிந்து மறையச் சைவ உலகம் தீவிரமாக முனைதல் வேண்டும்.

# 11

# திருவருள்

## சமயச் சார்பற்ற தன்மை

நமது நாடு சமயச் சார்பற்ற நாடு. நமது நாட்டு வாழ்வியல் சமயச் சார்பற்றது. நமது நாட்டு இந்து மதமும் சமயச் சார்பற்ற தன்மையுடையதேயாம். சமயச் சார்பற்ற கொள்கை-கோட்பாடு. இந்தியாவின் தேசியக் கொள்கை, கோட்பாடு! வழிவழி வளர்ந்து வந்துள்ள கொள்கை-கோட்பாடு!

சமயச் சார்பற்ற தன்மை என்பது ஒரு விழுமிய கொள்கை. ஏன்? எந்த ஒன்றிலும் சார்பற்ற வாழ்நிலை உயர்ந்தது! மிகமிக உயர்ந்தது! சார்பு என்பது என்ன? சார்பற்ற நிலை என்றால் என்ன? சார்பு என்பது ஒற்றினைச் சார்ந்து வாழ்வது. சார்ந்ததன் வழியில் நெகிழ்ச்சியிலாத இறுக்கமான பிடிப்புக்களுடன் வாழ்வது. அவர்தம் சிந்தனை, செயல், தனிப்பட்ட வாழ்வு சமூக வாழ்வு அனைத்தும் சார்ந்துள்ள சார்பினையே மையமாகக் கொண்டு சுழலும். அந்தச் சார்புக்கு அறிவு, உணர்வு, நீதி எல்லாம் அனுசரணை யாக இருந்தால்தான் ஏற்பார். இல்லையானால் ஏற்க மாட்டார். அதுமட்டுமா? சார்ந்துள்ள சமயமே உயர்ந்தது.

விழுமியது என்றெல்லாம் எண்ணுவார்; எழுதுவார்; மற்றவை களைப் பொய் என்றும் பயனற்றவை என்றும் வெறுத்து ஒதுக்குவதுடன் அந்தச் சார்புகளைச் சார்ந்து வாழ்பவர் களிடமும் பகைமை உணர்ச்சியை வளர்ப்பர். இதுதான் சார்பின் இலக்கணம். சமயச் சார்பற்ற தன்மை என்பது ஒருவர் தாம் பிறந்து வளர்ந்த சமயத்தினைப் பின்பற்றல்; ஆர்வத்துடன் பேணல்; நின்றொழுகுதல். அதே போழ்து பிறசமய மறைகளை விருப்பத்துடன் கற்றல். பிற சமயங்களை மதித்தல். அந்தச் சமயங்களைச் சார்ந்த மக்களைச் சகோதரர் களாக ஏற்று அன்பு பாராட்டுதல். உறவுகளைச் செழுமைப் படுத்திக் கொள்ளுதல் முதலியன சமயச் சார்பற்றோரின் வாழ்க்கை முறை. ஓரோவழி மதங்களிடையே மாறுபாடுகள் தோன்றினால் மதங்களை-மதக் கோட்பாடுகளைப் பின் தள்ளிவிட்டு ஒரே கடவுள்-ஒரே குலம் ஆகியனவற்றை மையமாகக் கொண்ட கொள்கைக்கு முன்னுரிமை கொடுத்தல் சமயச் சார்பற்றோரின் தன்மை.

இந்து சமயம் இயல்பாகவே சமயச் சார்பற்ற தன்மை யுடையது. இந்து மதத்தில் எந்த ஒரு கொள்கையும் கோட்பாடும் கட்டாயமாக்கப் பெறவில்லை. அவரவர் விருப்பம் போல மேற்கொண்டொழுகலாம். ஒரே இஸ்லாமியர், இஸ்லாமியத்திலிருந்து மாறாமல் வாழ்ந்து கொண்டே நான் ஒரு இந்து என்றால் யாராலும் இதை மறுக்க முடியாது. கடவுள் ஒருவர்; அவர் அருவம்; உருவம். அவரை எந்தப் பெயர் கொண்டும் அழைக்கலாம். எப்படியும் வழிபடலாம். இந்த நெறிமுறைகள் சார்பற்ற தன்மையைச் சார்ந்தவையல்லவா? இந்தியாவில் முதன் முதலில் சமயச் சார்பற்ற தன்மையை மேற்கொண்டு அறிவித்தவர் மாணிக்கவாசகர்.

*“தென்னா டுடைய சிவனே போற்றி!*
*எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி”!*

என்ற திருவாசக அடிகள் சமயச் சார்பற்ற தன்மைக்கு எடுத்துக் காட்டு. இந்தச் சமயச் சார்பற்ற தன்மை இந்தியா முழுதும் இமயம் முதல் குமரி வரையில் ஒரே குரலில் தலைமுறை தோறும் ஞானிகள் எடுத்துக்கூறி வந்துள்ளனர்.

இப்படி வழிவழி வந்த சமயச் சார்பற்ற தன்மை இன்று நம்முடைய நாட்டுக்கு இன்றியமையாதது. சமயக் கணக்கர் மதிவழி செல்லக்கூடாது. "மதமெனும் பேய்" என்று வள்ளலார் மறுத்தது நமக்கு ஏன்? இந்திய நாட்டின் பல்வேறு சமயங்களும் செழித்து வளர வேண்டும். இந்திய மக்கள் பழகிய நட்பியல் சார்ந்த உணர்வுடன் உறவு கலந்து வாழ்தல் வேண்டும். அபபோதுதான் இந்தியா வலிமையும் வளமும் பொருந்திய நாடாக விளங்கும்.

சமயச் சார்பற்ற தன்மை ஒரு கொள்கையல்ல; ஒரு வாழ்க்கை முறை! இந்திய வாழ்க்கைமுறை! ஏற்போம்! நின்றொழுகுவோம்!

## சமாதானம் வாழ்க்கையின் ஒரு பகுதி

"சமாதானம் செய்து வைப்பவர்கள் பாக்கியவான்கள்" என்பது ஏசுவின் இனிய செய்தி. வாழ்க்கையின் பேறுகளை உண்மை, அறிவு, ஆனந்தம் என்று முறைப்படுத்துவார்கள் அருளாளர்கள். இன்றைய மானுடம் ஆனந்தம்-மகிழ்ச்சி, இன்பம், உடலுக்குரிய சுகம், களிப்புக்களை நிறைய பெற்று வளர்ந்துள்ளது. ஆயினும் ஆன்மாவில் அமைதி இல்லை; ஆனந்தம் இல்லை; ஏன்? நாம் முற்றிலும் ஆவேசமானதும் விரைவுணர்வு பொருந்தியதும் அற்புதமானதுமாகிய சூழலில் வாழ்ந்து கொண்டிருக்கின்றோம். நமது வாழ்க்கையில் ஏராளமான அடிப்படைப் பிரச்சினைகள் உள்ளன. இந்தப் பிரச்சினைகளைப் பற்றிய நமது கருத்து, இன்றுள்ள கருத் துடன் முற்றிலும் மாறுபட்டது. அதுமட்டுமல்ல, அன்றைய

கருத்து அறியாமையின் காரணமாக அப்படி இருந்தது என்று இன்று உணர்கின்றோம். அன்று பிரச்சினைகளை அணுகும் முறை நம்பிக்கை அடிப்படையிலான முறை; இன்று அப்படி யல்ல. இன்று அறிவறிந்த நிலையில் சிந்திக்கின்றோம். நமது யுகம், அறிவியில் யுகம்! நமது பூமியில் உயிரினங்கள் தோன்றி 400 கோடி ஆண்டுகள் ஆகின்றன. மனித இனம் தோன்றி 40 இலட்சம் ஆண்டுகள் ஆகின்றன. நீண்ட இந்தக் காலக் கட்டத்தில் மானுடம் மெள்ள மெள்ள பரிணாம வளர்ச்சி யில் மானுடமாயிற்று. மானுடம் தோன்றிய உடனேயே அறிவியல் விழிப்பும் மெள்ள மெள்ளவே வளர்ந்து வந்தது. இந்தத் தலைமுறையுகம், அறிவியலை முழுமையாக உணர்ந்த யுகம்! அறிவியலின் பலன்களை முழுமையாக அனுபவிக்கும் பேறு இந்தத் தலைமுறைக்குத்தான் கிடைத்துள்ளது. இந்தப் பேறு நீடிக்குமா? நீடித்து வளருமா? இருபத்தோராம் நூற்றாண்டின் நுழைவாயிலில் நிற்கும் நாம் நம்மையே அழித்துக் கொள்ளாவிட்டால் இந்தப் பேறு நிலைக்கும். ஆனால் நம்முடைய எதிர்பார்ப்பு. பிழையெனத் தெரிகிறது; வளைகுடாவில் போர் தொடங்கி விட்டது! இந்த மானுடத் தின் தலைவிதியை யார் நிர்ணயிப்பது. நல்லவண்ணம் அமைய வேண்டும் என்று பிரார்த்திப்போமாக!

சமாதானம் என்றால் என்ன? போர் இல்லாத நிலைமட்டுமல்ல. சமாதானம் என்பது போர் இல்லாத நிலை என்றால் "மயான அமைதி" என்று பொருள் கொள்ளல் கூடாது! சுரண்டும் அதிகார வர்க்கத்திற்குப் பணிந்து வாழ்தலுமல்ல. நாம் ஏதாவது நல்லது செய்தால் அதனால், மற்றவர்களுக்கு நோதல் ஏற்படும் என்று எண்ணி, யாதொன்றும் செய்யாதிருத்தலும் அல்ல. சமுதாயம் உயிர்ப் புடையது வாழ்வது. மானுடத்தின் வாழ்வுக்குத் தேவைகள் பலப்பல உள்ளன. வாழ்க்கைத் தேவைகள் பூர்த்தி செய்யப் பெறும் நிலையில்தான் அமைதி தோன்றும்; சமாதானம் தோன்றும்? மக்கள் தங்களுடைய தேவைகளைப் பூர்த்தி

கு-XII.27.

செய்து கொள்ளும் சுதந்திரம் தேவை. எந்தக் காரணத்தை முன்னிட்டும் மக்களிடத்தில் பயம் இருத்தல் கூடாது. பயமில்லாமல் சுதந்திரமாக உழைப்பைப் பயன்படுத்திப் பணியாற்ற வேண்டும். உழைப்பின் பயனை மக்கள் அடைய வேண்டும்; 'வாழ்க்கையின் தேவைகளை அடையத்தக்க சுதந்திரமான உழைப்போர் தேவையே" என்றார் போப் பால்.

மானுடத்தின் சென்ற கால வரலாறுகள் ஊக்க மளிப்பனவாயில்லை. போர்கள் நிறைந்த ஆண்டுகளே மிகுதி. மானுடத்தின் நீண்டகால வரலாற்றில் போர் இல்லாத காலம் 292 ஆண்டுகள்தான் என்று வரலாற்றாசிரியர்கள் கூறு கின்றனர். கடந்த காலத்தில் இந்த உலகம் பதினையாயிரத் துக்கும் அதிகமான போர்களைச் சந்தித்துள்ளது. 140 இலட்சம் உயிர்கள் கொல்லப்பட்டுள்ளன.

இன்றைய நிலை என்ன? இன்று வாழும் பலர் இன்றைய எதார்த்தத்தைப் புரிந்து கொள்ளாதவர்களாக, சென்று போன காலங்களின் கருத்துக்களிலேயே, பழைமை யின் பிடிப்புக்களிலேயே வாழ்கின்றனர். இவர்கள் பானையில் தலையை விட்டுக் கொண்டு தலையை எடுக்க முடியாமல் தவிப்பதைப் போல வாழ்கின்றனர். பைத்தியக் காரர்களே போரினை, விரும்புகிறவர்கள்! எந்த வகையான தருக்கவியலும் போரினை வரவேற்கவில்லை. மாறாக, போரை மறுதலித்தே வந்துள்ளன.

இந்த உலகில் பல மொழிகள் பேசும் மக்கள் வாழ்கின்றனர்; பல மதங்கள் நிலவுகின்றன! இந்தப் பரந்து பட்ட மக்களிடையே நட்புறவும் நல்லிணக்கமும் தேவை. மதங்கள் தனிப்பட்ட வாழ்க்கைக்கே உரியன. மதங்கள் அரசியல், பொருளாதார வாழ்க்கையில் ஊடுருவ அனு மதிப்பது விரும்பத் தக்கதுமல்ல; அனுமதிப்பதற்கும் இல்லை. மானுடத்தின் வரலாற்றில் நடந்த பல போர்கள் மதங்கள்

அரசியலில் ஊடுருவியதனாலேயே ஏற்பட்டவை என்பதைக் கவனத்தில் கொள்ளுதல் வேண்டும்.

மதம் மக்களின் நல்வாழ்க்கை அமைப்புக்கே! என்று, 'இவர் தேவர்-அவர் தேவர்' என்ற விவாதங்கள் தலையெடுக்கின்றனவோ அன்று மதச்சண்டைகள் தோன்றுவது இயல்பாகி விடும். ஆதலால், "கடவுள் ஒருவரே! அந்த ஒருவரையன்றிப் பிறிதொருவர் இல்லை! மானுட சாதி ஒன்றே! சமுதாய நீதியில் ஒரே நீதி!" என்ற கோட்பாட்டினை முன் வைத்து, சமாதான சகவாழ்வுக்குப் போராட வேண்டும்.

சமாதான வழியில் வாழும் சமுதாயம் அமைத்தாலே எல்லோருக்கும் எல்லாம் கிடைக்கக் கூடிய புதிய சமூக அமைப்பைக் காண முடியும். நாடுகள் இராணுவச் செலவுகளைத் தவிர்த்து மூல வளங்களை மக்களின் மேம்பாட்டுக்குப் பயன்படுத்தினால் அற்புதமான சமுதாயம் தோன்றும். மானுட சாதியின் போர்க்குணம், ஆக்க வழிகளில் மடை மாற்றம் செய்யப் பெற வேண்டும். மானுடத்தை அறியாமை, வறுமை, பிணி ஆகியவற்றிலிருந்து மீட்கும் ஆக்க வழியிலான போர் உடனடியாகத் தொடங்கப்படுதல் வேண்டும்.

எல்லாவிதத்திலும் சமாதானச் சூழ்நிலையில் வாழும் சமுதாயமே வளரும்; வாழும்; உத்தமானதும் கூட! சமாதானம் வாழ்க்கையின் ஒரு பகுதி என்பதை உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

இன்றுள்ள தேவை சமாதானம்! சமாதானம்! வேறொன்றும் இல்லை! சமாதானம் இன்றைய மானுட வாழ்வில் நிபந்தனையாகி விட்டது. சமாதானத்தைப் பேணுவோம்! பாதுகாப்போம்!

# காலத்தின் கட்டளை

இந்தியா ஒரு நாடு. இன்றல்ல பல்லாயிரம் ஆண்டு களாகவே இந்தியா ஒரு நாடாக விளங்கி வந்துள்ளமையை இந்திய இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன. இந்தியா பலமொழிகள் பேசும் நாடு; பல மதங்கள் உள்ள நாடு, பல சாதிகள் உள்ள நாடு என்பது, உண்மையே. ஆயினும் மொழி, மதம், சாதி காரணமாக மக்கள் அந்நியராகிக் கொண்டு சண்டை போட்டதில்லை. நெகிழ்ந்து கொடுக்கும் தன்மையில் சிறந்து விளங்கினார்கள். எந்தச் சூழ்நிலையிலும் பொறுத்தாளும் பண்பு ஓர் ஒழுக்கமாகவே ஏற்று ஒழுகப் பெற்றது.

அண்மைக் காலமாக இந்தியாவில் சாதி மதங்களைப் பின்பற்றுகிறவர்கள் அவற்றை மையப்படுத்திச் சிறு சிறு எல்லைகளை உண்டாக்கிக் கொண்டு இறுக்கமான உணர்வைப் பெற்றுவரும் தீமை பரவலாக வளர்கிறது. இந்தத் தீயமனப் போக்கை, அரசுகளின் அணுகுமுறைகள் வலுப் படுத்துவனவாகவே அமைந்துள்ளன. இந்தச் சூழ்நிலையில் இந்தியாவில், இந்திய மக்களிடத்தில் பரஸ்பர நல்லெண்ணத் தையும் நட்புறவையும் வளர்ப்பது நமது கடமை. நமது எதிர்காலத் தலைமுறையினருக்கு நாம் உத்தரவாதத் தன்மையுடைய நல்வாழ்க்கையையும் பாதுகாப்பான சூழ்நிலையையும் உருவாக்கி வைப்பது என்பது நமது தலைமுறையினருக்குக் காலம் தந்துள்ள கடமை. இந்தத் தலைமுறையினருக்கு வாய்த்துள்ள அறிவியல் சார்ந்த கடமை. இந்திய மக்களிடத்தில் சமயச் சார்பற்ற தன்மையை யும் இந்திய ஒருமைப்பாட்டையும் காப்பதுமேயாகும்.

காலம் தந்த இந்தக் கடமையை ஏற்க முன் வந்துள்ளது தமிழ் நாடு திருவருட் பேரவை. தமிழகம் தழுவிய திருவருட் பேரவை உறுப்பினர்கள் தஞ்சையில் சென்ற மாதம் 26, 27ஆம் தேதிகளில் கூடினர். இந்திய ஒருமைப்பாட்டுக்கு இந்தக்

காலத்தில் வாய்த்துள்ள அறைகூவலை ஏற்றுப் பணிசெய்ய உறுதி கொண்டனர். இதற்கு மனித நேயமிக்க பணியினை மேற்கொண்டு புனிதப்பயணம் தொடங்கியுள்ள திருவருட் பேரவை அணியினருக்குத் தலைமை ஏற்று அழைத்துச் செல்ல மக்கள் பேராயர் மதுரை ஆர்ச்பிஷப் மேதகு டாக்டர். எம். ஆரோக்கியசாமி தலைமை ஏற்றுள்ளார். இன்றைய வரலாறு தந்துள்ள பணியினைச் செய்து முடிப்பார் என்று நம்புகிறோம்; வாழ்த்துகின்றோம்.

## அமைதி! அமைதி!

விஞ்ஞானம் வளர்கிறது இல்லை, வளர்க்கப்படுகிறது! காலம், எல்லைகளைக் கடந்து மனிதகுலம் உறவு கொண்டு இந்தப் பூமியில் ஒரு சேர உண்டு களித்து மகிழ்வதற்காகத் தானே வாழ்கிறது! ஆனால் என்ன நடக்கிறது? அருள் நெறியா வளர்கிறது? சன்மார்க்கமா ஆட்சி செய்கிறது? சைத்தான் மருள் நெறியில் அழைத்துச் செல்கின்றானே! போர்க் கருவிகள் செய்தல் தொழிலாக அல்லவா அமைந்து விட்டது. இரும்பைப் பிடித்த துருவும் சும்மா இருக்காது. ஆயுதம் தொட்டவனும் சும்மா இருக்க மாட்டான். நாளுக்கு நாள் கொலைக் கருவிகள் உற்பத்தி-அதுவும் அணு இராசாயன ஆயுதங்கள் செய்யப்படுகின்றன. இந்த ஆயுதங்களைப் பயன்படுத்துவதன் மூலம் இந்தப் பூமியின் காற்று மண்டலம், தண்ணீர் மாசுபடுகின்றன. இந்த மாசு பல தலைமுறைகளுக்குப் பாதிப்புச் செய்யும் என்று அறிவியல் உலகம் எச்சரித்திருக்கிறது: எச்சரித்துக் கொண்டிருக்கிறது! பணப்பேயும் அதிகாரப் பிசாசும். பிடித்தாட்டுப்பவர் களுடைய காதில் இந்த அபயக் குரல் விழவில்லையா? அல்லது விழுந்தும் விழாதது போல நடிக்கிறார்களா?

இதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க உலக மெங்கிலு முள்ள அனைத்துச் சமய நெறிகளைச் சார்ந்தவர்களும்

ஒருமித்த குரல் கொடுக்க வேண்டும். உலக நாடுகள் பேரவை-ஐக்கிய நாடுகள் சபை ஆற்றல் மிக்குடையதாக அமைய வேண்டும். அது போலவே உலக சமயங்களின் மையம்-சபை ஒன்று தொடங்கப் பெறுதல் வேண்டும். இந்த உலக சமய சபை உலகத்தில் சகோதரத்துவத்தையும் சமத்துவத்தையும் சமாதானத்தையும் வளர்க்கப் பாடுபட வேண்டும்; உழைக்க வேண்டும். மானுடம் வென்று விளங்க வேண்டும். கணியன் பூங்குன்றன் அருளிய "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" என்ற வாக்கு மெய்யாகவே உருப் பெறுதல் வேண்டும். இதுவே அமைதிக்கு வழி!'

யாதொரு நிபந்தனையும் இன்றி மானுடம் வளர, வாழ உத்தரவாதம் அளிப்பதே அறிவியலின் நோக்கம்! அருளியலின் கடமை! இந்த நோக்கம் நிறைவேற இப்புவியிலுள்ளோர் அனைவரும் ஒத்துழைக்க வேண்டும். வியாபார லாப நோக்கமின்றி நுகர்வுப் பொருள்கள் மட்டுமே உற்பத்தி செய்ய வேண்டும். உலகத்தின் எந்த ஒரு மூலையிலும் தனி ஒருவன் கூடப் பட்டினியால் சாக அனுமதித்தல் கூடாது. அறியாமை, முற்றாக அகற்றப்படுதல் வேண்டும். விரைவில் உலகம் தனக்கு ஒரு மொழியை உருவாக்கிக் கொள்ள வேண்டும். இந்த உலக மொழியை உலக மாந்தர் அனைவரும் 'கற்றுப் பேச வேண்டும். விரைவில் கடவுள்-மானுடம் தழுவிய உலகப் பொதுச் சமயமும் ஒன்று கண்டாக வேண்டும். இதற்கு வழி வகுப்பதற்கு வாய்ப்பாகப் போற்றுதலுக்குரிய போப்பாண்டவர், திருச்சபைகளுக்குப் பல சமயங்களுடன் விவாதித்தல், கலந்துரையாடல், தெளிவுகாணல் நெறியை அறிமுகப்படுத்தியுள்ளார். இது வரலாற்றின் திருப்பு மையம்! போதும். போதும் பிரசாரங்கள்! மாந்தர்களிடையே அடிக்கடி கூடுதல். கலந்துரையாடல் முதலியன நிகழட்டும்! அமைதி கனிய வழி இதுவே! அமைதியை வளர்ப்போம்! காப்போம்!

# ஞானச் செல்வர் குருநானக்

இன்றைக்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் பாஞ்சாலத்தில் ஒரு சமயப் புரட்சி தோன்றியது. ஞானப் பெருந்தகை குருநானக் தோன்றிய காலம். வட இந்தியாவில் இந்து, முஸ்லீம் புகைச்சல்கள் இருந்த காலம். இந்து சமயத்தில் சாதிவெறியும் புரோகிதர்களின் ஆதீக்கமும் பொருளற்ற சடங்குகளும் ஆதிக்கம் செய்த காலம். இந்தக் காலக் கட்டத்தில் இந்திய சமூகத்தைப் பிடித்திருந்த நோயை அகற்றத் தக்க மருத்துவராக ஞானப் பெருந்தகை குருநானக் தோன்றினார். ஞானக்கதிரவன் குருநானக் பிறப்பில் இந்து. அவர் பிறந்த குலம் க்ஷத்திரியகுலம். அவர் இந்து-முஸ்லீம் சமயங்களை இணைத்து ஒரு புதிய மதத்தையே உருவாக்கினார். குருநானக் அவர்கள் உபதேசம் ஒருவன் இந்துவுமல்லன்; முஸ்லீமும் அல்லன் என்பது. மக்களைச் சமய அடிப்படையில் இந்து என்றும் முஸ்லீம் என்றும் பிரிப்பது தவறு; மக்கள் தாமே என்பது உபதேசத்தின் விழுமிய பொருள்.

குருநானக்கின் சீக்கிய சமயம் மக்களை மக்களுக்குத் தொண்டு செய்வதை மையமாகக் கொண்டது. சீக்கியசமயம் சகோதரத்துவத்தையும் வற்புறுத்தியது; வற்புறுத்துகிறது. சீக்கிய சமயக் குருத்துவாரங்கள் சமத்துவம், அன்பு, தோழமை என்பனவற்றை நடைமுறைப்படுத்தும் அறப்பணி மனைகளாக இன்றும் விளங்குகின்றன.

ஞானப் பெருந்தகை குருநானக் இந்து. இஸ்லாமிய மதங்களை ஆராய்ந்து இவ்விரண்டு மதங்களிலிருந்த நலன் தரும் கொள்கைகளை, கோட்பாடுகளை இணைத்தார். சீக்கிய சமயத்திற்கு மறுபிறப்புண்மை. மாயைக் கொள்கை உண்டு. இவை இந்துமதக் கொள்கை. ஒரே கடவுள். உருவம் அற்றவர் என்பது முக்கிய மதக் கொள்கை. இந்தக் கொள்கைகள் இஸ்லாமிய மதத்திலிருந்து எடுத்துக் கொண்டவை

யாகும். "ஹிந்து சமயமும் இஸ்லாம் மதமும் மணந்தன" என்று சீக்கிய எழுத்தாளர்கள் இதனைப் புகழ்ந்தனர். எந்த ஒரு சூழ்நிலையிலும் குருநானக் அறிவுக்கு ஒவ்வாத கொள்கைகளை, கோட்பாடுகளை எடுத்துக் கொள்வதில்லை. சீக்கிய மத சித்தாந்தப்படி இறைவன் எங்கும் நிறைந்தவன். இஸ்லாம் மதத்தின் சமத்துவக் கொள்கைகளை அப்படியே குருநானக் ஏற்றுப் போற்றினார். குருத்துவாராவில் வழிபாடு செய்யும் பொழுதும் சரி குருத்துவாராவில் உண்ணும் பொழுது சரி, பணம், பதவி என்ற ஏற்றத்தாழ்வின்றிச் சமநிலையில் அவரவர் வந்த வரிசைப்படிதான் வழிபாட்டில் கலந்து கொள்ள வேண்டும்; உணவருந்த வேண்டும் என்ற நடைமுறையை குருத்துவார் நடையாக்கினார். 'சத்சங்' என்ற இந்த நடைமுறை இஸ்லாத்தைச் சார்ந்தது.

மதங்கள் காலத்திற்குக் காலம் பல்வேறு மதங்களின் ஏற்புடைய கொள்கைகளை ஏற்று வலிமையும் புதுமையும் பொறுமையும் பெற்று வளர்த்தால் பல மதங்கள் தோன்று வதைத் தவிர்த்து விடலாம். மதங்களுக்கிடையில் சண்டைகள் தோன்றுவதையும் தவிர்க்க இயலும். தொன்மைக் காலத்தில் மதங்கள் நெகிழ்ந்து கொடுத்தன. காலப்போக்கில்தான் பழக்கங்களால் கெட்டி தட்டிப் போன மதபீடங்கள் நெகிழ்ந்து கொடுக்க மறுத்தன.

குருநானக் புதிய மதத்தை உருவாக்க விரும்பினார். ஏன்? இரண்டை ஒன்றாக்க நினைத்தார். இந்து மதத்தையும் இஸ்லாம் மதத்தையும் இணைத்து ஒரே மதமாக்க முயன்றார். இணைப்பிற்கு உரிய இரண்டு மதங்களிலும் அற்புதமான வாழ்வியற் கொள்கைகள் இருந்தன. குருநானக் வெற்றியும் பெற்றார்! இந்து-இஸ்லாமிய இணைப்பாகச் சீக்கியமதம் தோன்றியது. அனுபூதிச் செல்வர் குருநானக் வெற்றி பெற்றார். இந்து, முஸ்லீம் மக்கள் இணைந்தனர். சக்கரவர்த்தி அக்பர் ஏற்றார். ஏன், இன்றும் ஞானச் செல்வர் குருநானக் வழியில் இந்திய மக்கள் நடைபயிலக் கூடாது?

12

# வானொலியில்

## அகப் பகையை வெல்க!

மனித உலகம் இன்பத்தையே விழைகிறது. அதற்காகவே உழைக்கிறது. ஆயினும், இன்பத்தின் சாயல் கூட இன்னும் மனித உலகத்தை அணுகவில்லை. இன்பத்தின் நிழல்களைத்தான் இன்பமென்று கருதி உலகம் அனுபவித்துக் கொண்டிருக்கிறது. என்ன இருந்தாலும் நிழல் நிழல்தானே! இன்று மனித உலகம், இன்பத்தை ஆரத் துய்க்க முடியாமல் தடையாக இருப்பது புறப்பகையன்று. ஒரு காலத்தில் புறப்பகையும் மனிதனை வருந்தியது. "நறுக்"கென்று தைக்கும் புறப்பகைகளைக் கடிதில் உணர்ந்த மனிதன் புறப்பகைகளை வெற்றி காண்பதில் படிப்படியாக முன்னேறிவிட்டான்.

ஆதலால், இன்று அவனை வெள்ளம் வருத்துவ தில்லை; தீ சுடுவதில்லை: கொடிய விலங்குகளும் கூட வருத்துவதில்லை; அவற்றையெல்லாம் முறைப்படுத்தித் தன் ஆற்றல் எல்லைக்குள் உட்படுத்தி, அனுபவத்திற்குக் கொண்டு வந்து விட்டான். அஃதோர் அற்புதமான சாதனை. அந்தச் சாதனையின் அருமையைக் குறைத்து மதிப்பிடுவதில் பொருளில்லை. ஆயினும் பலவற்றைப் பழக்கிய அவன்,

பழகத் தவறிவிட்டான். நாயினை, மிக நல்ல விதமாகப் பழக்கினான்.

ஆனாலும், அவன் பழகத் தவறிவிட்டான். அவனை இன்று வருத்துவது புறப்பகையல்ல. அகப் பகையேயாகும். அனல் அவனைச் சுடுவதில்லை. ஆனாலும் அழுக்காற்றுத் தீ அவனைச் சுடுகிறது. அலைகடல் அவனை வருத்துவ தில்லை. அதனை அடக்கிக் கலம் செலுத்துகிறான். ஆனாலும், அவா வெள்ளம் அவனை அலைக்கழிக்கிறது.

இந்த அகப்பகையை வென்று, வெற்றி பெற்றாலே மனிதன் பகைப்புலத்துக்கு ஆளாக மாட்டான். மனிதனின் வாழ்வில் படைக் கலங்கள் மட்டும் அஞ்சாமைக்கு அடையாளமல்ல. படைக்கலம் தாங்கியவர்களிலும், பஞ்சை மனிதர் உண்டு. படைக்கலம் தாங்காமலே கூடச் செருக்களத்தில் நின்ற வீரர்களும் உண்டு. அப்பரடிகள் படைக்கலம் தாங்கிய வீரரா? வில்லைத் தாங்கினாரா? வாளைத் தாங்கினாரா? ஒன்றையும் இல்லை! அவருடைய நெஞ்சத்தைப் பழுதிலாத் துறவு என்ற அரணில் சேர்த்தார். அங்கே நிலைநிறுத்தினார்.

ஓடும், செம்பொன்னும் ஒக்கவே நோக்கினார். ஒண்திறல் பிறந்தது. இறைவன் திருநாமமாகிய ஐந்தெழுத் தையே நாவினில் படைக்கலமாகக் கொண்டார். கோட்டை கொத்தளங்கள் பெற்று-கொடி கட்டி ஆண்ட பல்லவப் பேரரசை வெற்றி கண்டார். அஞ்சுவது யாதொன்றுமில்லை. அஞ்ச வருவதுமில்லை என்று, அடலேறு என முழங்கினார். இந்தத் தறுகண்மை-பேராண்மை சமய நெறிக்கே உரியது. அருளியலுக்கே உரியது.

ஆனால் ஐயகோ! இன்றையச் சமய வாழ்க்கை அச்சத்தின் கொள்கலனாக மாறியிருக்கிறது. கோட்டைக் குரிய பல்லவப் பேரரசனையே கலங்கவைத்த நெறியினைச் சார்ந்தவர்கள் கோட்டையின் காவல்காரர்களைக் கண்டே

கலங்குகிறார்கள். இன்று, சமயம் வாழ்க்கைக்காக இல்லாமல் வயிற்றுப் பிழைப்புக்காக என்று ஆகிவிட்டது. பயனுக்காக அன்றி, படாடோபத்துக்காக என்றாகிவிட்டது. இன்றைய சமய உலகில் ஈர நெஞ்சினைக் காணோம். ஆதலால் கனிந்த அன்பினையும் காணோம். அஞ்சாமை யின்மையால் சைத்தானும் கைவரிசை காட்டுகின்றான்.

ஆதலால், எங்கு நோக்கினும் துன்பம், பகை! இந்த இருண்ட சூழ்நிலையிலிருந்து நம்மை வழிகாட்டிக் காப்பாற்ற வல்ல ஆசிரியன் அப்பரடிகளேயாம். அப்பரடிகள் மனித உலகத்தின் துன்பம் துடைக்க வந்த மாமணி! இருள் கடிந்து எழுந்த ஞாயிறு! வாழ்க்கைக்கொரு வழித் துணை! அப்பரடிகள் உபதேசங்களால் மட்டுமல்ல, அவர்தம் வாழ்க்கையாலும் நமக்கு வழிகாட்டினார். மனம் ஒரு தன்மைத்தாயிருக்கக் கூடியதல்ல. நெஞ்சமும் கூட அப்படித்தான். இறைவனை விட்டு ஒரு நொடி பிரிந்திருந் தாலும் அது கெட்டுவிடும். புறத்தே மண்டித் திணிந்து கிடக்கும் தீமைக்கு உடனே பற்றிக்கொள்ளும் ஆற்றலுண்டு. அதனாலன்றோ "நினையாது ஒருபோதும் இருந்தறியேன்" என்று கூறுகின்றார். மாணிக்கவாசகரும் "இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!" என்று குறிப்பிடு கின்றார். நெஞ்சத்தை இறைவனை நினைந்து கொண்டிருப் பதிலேயே பழக்க வேண்டும். அஃது ஒருபொழுது மறந்தாலும் உடன் பாசி மூடிக்கொள்ளும்.

ஆதலால், அப்பரடிகளுடைய நெஞ்சு எப்பொழுதும் இடையீடில்லாமல் இறைவனுடைய திருவடிகளைத் தடவிக் கொண்டிருந்ததாம். இன்றோ நம்முடைய கைகள்தாம் இறைவனின் திருமேனிகளைத் தீண்டித் தடவுகின்றனவே தவிர, நம்முடைய நெஞ்சு அவனைத் தடவித் தீண்டுவ தில்லை.

உடலுக்கு உயிர்ப்பு உயிர். உயிர்க்கு உயிர்ப்பு இறை. உடல் உயிர் உறவுக்கு, இணைப்பு மூச்சுக் காற்று. உயிர்க்கு

உயிர்ப்பு இறை. இந்த இணைப்புக்கு அன்பே காரணம். இங்ஙனம் நெஞ்சத்தை இறைவன் தாளிணைகளுக்குத் தந்து வாழும் வாழ்க்கையே வாழ்க்கையென்றார் அப்பரடிகள். இறைவனை நமக்குப் பெற்றுத் தர வல்லது-நம்மிடத்தில் இருத்தி வைக்க வல்லது-அன்பேயாகும். மாணிக்கவாசகர் இந்த அன்பினை ஆற்றல் மிக்க அன்பு என்று கூறுவார்.

அப்பரடிகள் “ஐயன் ஐயாறனார்க்கு அன்பலால் பொருளில்லை” என்றார். அது போலவே, தொண்டு செய்தலே உயிர்க்கு ஊதியம் என்றார். அப்பரடிகள் காட்டிய இறைவனை விட்டுப் பிரியாத நெஞ்சும் அவர் காட்டிய அன்பும், அவர் காட்டிய தொண்டும், நம்மைச் சேருமாயின் அவலம் வந்து அடையாது. ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்ப அன்பு கிடைக்கும். இம்மையோடன்றி, மறுமையும் ஏமாப்புடன் வாழலாம்.

## குறையும் நிறையும்

இறைவன் எங்குள்ளான்! இஃது ஒரு பழைய வினா. மறைகள், இறைவனை இன்னமும் தேடிக்கொண்டிருக் கின்றன. கடவுளை நாடும் நெறியில் பத்திமை பூண்டொழுகு கின்றவர்கள் இறைவனை ஓயாது தேடிக்கொண்டிருக் கின்றனர். தீர்த்தங்களில் மூழ்கித் தேடுகின்றனர். பூசனையில் புகுந்து தேடுகின்றனர். பக்தர்கள்தான் இப்படித் தேடுகின் றார்கள் என்றால் நாத்திகர்களும் தேடிக்கொண்டிருக் கின்றனர். ஆனால் இறைவன் அகப்படவில்லை. இருக்கின்ற இடத்தில் தேடினால்தானே அகப்படுவான். அப்படியானால் எங்கு இறைவனை எளிதிற் காணலாம்?

மனிதன், குறையுடையவன். ஆனால், நிறையை அடைய வேண்டியவன். குறை, அவனது மாற்ற முடியாத இயல்பன்று. குறை, நிறையாக மாறி வளரத்தான் வாழ்க்கை. நிறை என்பது அற்புதமான சொல். நிறை உணர்த்தும் பண்பு

அல்லது தன்மை இறையியற் சார்புடையது. இல்லை! இறையியலிலேதான் நிறையெனப் பெயர் பெறுகிறது. நிறை, நிலையில் நிற்றல்; மனித நிலையில் நிற்றல், பிறிதின் துயர் பொறாத தன்மையான மனம் என்பார், "மென்சிஸ்" என்ற சீன நாட்டு அறிஞர். வள்ளுவம், "பிறதின் நோய் தந் நோய்போல் போற்றுதல்" என்று வகுத்துக் காட்டும் நிறை, ஒழுக்கத்தின் நிறைவு என்பார் வள்ளுவர். "நிறைகாக்கும் காப்பே தலை'' என்பார். இது மனித குலத்திற்குப் பொதுவென வகுத்த நெறியே! பொறிகள் வாயிலாகப் புறத்தே சென்று அலையாமல் உயர் அறிவின் வழி! உயிர் நிலை நிற்றல் நிறையெனப்படும். நிறையுடையார் ஆவலற்றோர்; அவா அற்றோர்; வெகுளுதல் இல்லாதவர். இத்தகு நிறையுடையார் நெஞ்சினுள்ளே இறைவன் இருக்கின்றான். அவர்களின் தூய அன்புத் தவத்தில் வெளிப்படுகின்றான். அவர்களின் கருணை நிறைந்த சீலத்தில் உறைகின்றான். நிறையுடையார் நெஞ்சம் இறைவன் வாழும் இடம்! நிறையுடையாரைக் கண்டால் தொழுது போற்றுமின்!

உலகியலின் உயிர்நாடி நீரினுள் அமைந்து கிடக்கிறது. 'நீரின் றமையாது உலகு" என்பார் வள்ளுவர். தண்ணீர் உலகத்தின் இன்றியமையாத் தேவை. வெப்பம் தணிதற்கும் தூய்மை பெறுதற்கும், வளர்ந்து வாழ்தற்கும் நீரே பயன் படுகிறது. அதனாலன்றோ நீரின் சின்னமாகிய கங்கையைக் கடவுள் தன் தலைமீது தாங்கினான். அஃதொரு புராண மல்ல; வரலாறல்ல; வாழ்வியல் முறை. "தண்ணீரின் அருமை தெரிந்து தலைமேற்கொள்க!" என்பதே தத்துவம். தீர்த்தங்கள் ஆடுவதனால் மட்டும் பயனன்று. தீர்த்தங்களின் உயிர்ப்பு, நிலையான தூய்மைப் பெருக்கம்; வெப்பம் தணிதல்; உயிர்க்குறு உதவி செய்தல் ஆகிய செய்தவம் மேற்கொள்வார் நிறைவுடைய நெஞ்சினராவர். நீரின் பெருமையறிந்து ஏற்றுப் போற்றுதல்-நீரைத் தொழுதல் நன்று. நீரினுள் நிமலன் நிலவுகின்றான். அப்பரடிகளும் இறைவனைத் "தீர்த்தங்கள் ஆனான்" என்பார்.

இயற்கை! இஃது இறைவனின் மறுபெயர். இயற்கையின் விரிவு பசிய சோலைகள்! மலர்க்காடுகள்! அம்மம்ம! மலரின் எழிலும் வண்ணமும் கைபுனைந்தி யற்றாக் கவின்பெறு வனப்பாகும். மலரினூடே மண்டிக் கிடக்கும் தண்ணளியும் மணமும், மலரினுள் தேனும் இறைவனைக் கைதேர்ந்த சிற்பி என்று பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன. சிற்பி, சிற்பத்தினுள் உறைகின்றான்! இறைவன் மலராக இருக்கின்றான். "வாசமலரெலாம் ஆனாய் நீயே!" என்பார் அப்பரடிகள். "பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தி, பனிமலர் எடுக்கவும் நண்ணுகிலேன்" என்பார் தாயுமனார். ஆம்! மலராக-மலரினுள்ளே மணமாக மலரினால் விளையும் மகிழ்வாக இறைவன் இருக்கின்றான். இவ்வண்ணம் கண்டு ஏத்திடுக!

ஓசையும் ஒலியும் இயல்பில் இன்பமூட்டுவன. முறை தவறினால் இன்பம் தருவதுகூட ஏதம் விளைவிக்கக்கூடும். ஒலியை முறையாக நிரல்படுத்தி ஒலித்தால் அவ்வொலி இன்பம் தரும். அதுவும் பறையில் ஒலியெழுப்பினால் பறந்து திரியும் நெஞ்சம் உள்ளொடுக்கி ஒன்றி நினைக்கும். அதனாலன்றோ, "ஓசை ஒலியெலாம் ஆனாய்" என்றார் அப்பரடிகள். பறை தரு முறை ஒலியில், இதயம் தழுவும் இசையொலியில் இறைவனுள்ளான் என எண்ணித்தொழுக!

இறைவன் மீதுள்ள தணியாக் காதலால் அவனுக்குப் பொருள்களைப் படைக்கின்றோம். அப்பொருள் ஏது? அவனாற்றலால், அவனருளால் விளைந்தவை! அவை களாகவே அவனிருக்கிறான். திருவிளக்கை ஏற்றி வழிபடு கின்றோம். ஆனால் அவனையே சூழொளி விளக்காக கருதுகின்றார் மாணிக்கவாசகர். பழங்களைப் படைக் கின்றோம். அப்பழத்திடையில் சுவையாகக் காண்கிறார் அப்பரடிகள். எனவே, அந்தப் பொருள்கள் வேறல்ல, அவன் வேறல்ல. அறிந்து ஏத்துக!

இதயம், உணர்வில் பொங்கி வழியும்பொழுது கவிதை பிறக்கிறது. அருவி, உயர்ந்தது. அருவியிழிந்து வரும் மலை அதனினும் உயர்ந்தது. செஞ்சொற் கவிதை உயர்ந்தது; கவிதை பொழிந்திடும் கவிஞனின் நெஞ்சம் அதனினும் உயர்ந்தது. அவன் தரும் பாட்டினுள் கடவுள் தங்குகின்றான். அதனாலன்றோ அவனே, "அருச்சனை பாட்டேயாகும்" என்று கூறினான் சுந்தரரிடம்! "அருச்சனை செயல்! காகிதப்பூ பாட்டு. இயற்கை அப்பாட்டினுள் அவன் தங்கியிருக்கின்றான். பாட்டினைப் பாடுக! பாட்டுடைப் பொருளை உணர்க! மாணிக்கவாசகர் உணர்த்தியதைப் போல அவன் பாட்டுடைப் பொருளாக நிலவுவதை நினைந்து தொழுமின்!

## அருள் நெறி வாழ்க்கை!

நமது தாய்மொழியில் நிறைய இலக்கியங்கள் உண்டு. புறத்திணை இலக்கியங்களும் உண்டு. அகத்திணை இலக்கியங்களும் உண்டு. இந்த இரண்டினையும் கடந்து வளர்ந்த அருள்திணை இலக்கியங்களாகிய பக்தி இலக்கியங்களும் உண்டு. கடவுள் நம்பிக்கையுடையவராயிருப்பதும், அருள்நெறி வாழ்க்கை வாழ்வதும் எளியதொன்றல்ல.

விஞ்ஞானிக்குத் தேவையான அனைத்து ஆற்றல்களும்-அவ்வாற்றல்களோடு, மேலும் சிறந்த சீலமாகிய தவமும் தேவை. விஞ்ஞானத்தின் படைப்புக்கள் உலகியலை வளப்படுத்த மாறாது பயன்படுவன போலவே மனித இயலில் உள்ளங்களை மாறாது வளப்படுத்தப் பயன்பட வல்லவை மெய்ஞ்ஞானம். அதாவது பத்திமை வாழ்வு. ஆயினும் இன்று பத்திமை வாழ்வு அங்ஙனம் பயன்படாமையின் காரணமாக அதன் மீது ஐயங்கள் எழுந்துள்ளன. ஏன்? எதிர்க்களம் ஒன்றே தோன்றி வளர்ந்து வருகிறது.

அருளியல் வாழ்க்கை ஆற்றல் நிறைந்த வாழ்க்கை. அறிவறிந்த ஆள்வினையுடைய வாழ்க்கை. அன்பில் தழைத்த

வாழ்க்கை. அச்சத்தை உதறிய வாழ்க்கை. தனியுணர்வு செத்த வாழ்க்கை. பொதுவில் பூத்த வாழ்க்கை. இந்த இலக்கணத் தோடு நமது அருளியல் வாழ்க்கை அமையுமானால் மறுப்பார் யார்? கதிரவன் உலாப் போதலை மறுப்பாரும் உண்டோ? வீசு தென்றலை மறுப்பாருண்டோ? இறைவனிடத்தை உலகத்திற்கு அப்பரடிகள் அறிமுகப்படுத்து கின்றார். கோட்டையென விளங்கும் கோயிலைக் காட்டியா? அழியாப்பசிக்குப் பயன்படும் அப்பத்தைக் காட்டியா? இல்லை! இல்லை! மாசில் வீணையைக் காட்டுகின்றார். இசைக்குரிய இசைவிக்கும் ஆற்றல் வேறு எதற்கு உண்டு! கடக் களிற்றையும் அடக்க வல்லது இசை.

மாலையில், மஞ்சள் வானத்தில் திங்கள்! வீசுதென்றல்! அடைந்துகிடக்க வீடுகட்டிய ஒருவன் அதனைக் கடந்து வெளியே வருகிறான். காவலோடு வெளியே உலாப் போகிறான். ஏன்? வீசுதென்றலை அனுபவிக்க! இன்பத்திற்கு எல்லையேயான இளவெயிலை வஞ்சனையிற்றிக் காழ்ப்புக் கலப்பின்றிக் கலகப் புகைச்சலின்றி அனுபவிக்க! ஆகா! என்ன இனிமை! வண்டுகள் பாடுகின்றன! தண்ணீர் தங்கிய பொய்கை! அதன் எல்லையில் இனிய காற்று! தண்ணளி தழுவிய காற்று! இத்தகு இன்பமயமானதாக இறையின் திருவடிகளைக் காட்டுகின்றார்.

*“மாசில் வீணையும் மாலை மதியமும்*
*வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்*
*மூசு வண்டறை பொய்கையும் போன்றதே*
*ஈசன் எந்தை இணையடி நீழலே!”*

என்பது, அப்பர் திருப்பாட்டு.

இன்றைய சமுதாயத்தில் அருளியல் வாழ்க்கை இத்தகைய இன்பம் தழுவியதாக இருக்கிறதா? இன்று சமய வடிவம் தெரிகிறது. ஆனால் வாழ்க்கையைக் காணோம். ஆரவாரம் கேட்கிறது. ஆனால் அமைதியைக் காணோம்.

தண்ணளியைக் காணோம். தருக்குகளைக் காண்கின்றோம். ஒருமையினைக் காணோம். வேற்றுமையினைக் காண்கிறோம். இந்த அவல நிலைமை எங்கிருக்கிறது! எங்கில்லை! என்று சொல்ல முடியாது. எங்கும் பரவிக் கிடக்கிறது. சமயம் ஒரு தத்துவம் மட்டுமல்ல. அஃது ஒரு வாழ்க்கை முறை.

கடவுள் வாழ்த்துப் பொருளல்ல; வாழ்வுப் பொருள். சமயம் உருவங்களோடு நிற்பதல்ல. உருவங்களைக் கடந்த உணர்வால் உணர்வையும் கடந்த இன்ப அன்பால் மனித மனங்கள் மலரினும் சிறந்து மணம் பரப்ப வேண்டும். கனியிலும் சிறந்த கனிவு பெற வேண்டும். தீங்கரும்பினும் சிறந்த சுவை பெற வேண்டும். அப்பொழுதே சமய வாழ்வு முழுமை பெறுகிறது.

இறைவன் தீதற்றோர் திருவுளங்களில் எழுந்தருளவே விரும்புகின்றான். காஞ்சி மன்னன் கட்டிய பெருங்கோயிலை வறிதே விட்டு விட்டு உள்ளத்தால் தூயதாகிய பூசலார் நாயனார் மனத்தைத் திருக்கோயிலாகக் கொண்டு எழுந்தருளினான்.

ஆதலால் உள்ளத்தைக் கோயிலாக்குங்கள்! அதனை அன்பினால் மெழுக்கிடுங்கள்! இறைவனை எழுந்தருளச் செய்யுங்கள்! பண்டு கண்ணப்பன் வழங்கிய அன்பினைப் போன்று இறைவனுக்கு வழங்குங்கள்! அவனுடைய தண்ணருள் சுரக்கும்! புன்புலால் யாக்கை புனிதமாகும்! உங்கள் புலன்களில் இறைவன் தங்கித் திளைப்பான்! திருவருள் சுரப்பான்! இன்பதே சூழும். எல்லோரும் வாழ்க! காட்டக் குறையாது; மாறாக அது வளரும் இயல்புடையது. இன்று உலகை அச்சுறுத்திக் கொண்டிருக்கும் போர்க் கொடுமையினின்றும் மனித உலகைக் காப்பாற்றும் சாதனம் அன்புடைமையேயாகும். இம்மைக்கும் மறுமைக்கும் எழுமைக்கும் இன்பம் தருவது அன்புடைமையே யாகும்.

௬- XII. ௭௨.

இத்தகு உயர்ந்த அருள் நலம் கொழித்திடும் அன்பினை அன்றாட வாழ்வில் அகத்திலும், புறத்திலும் கண்டு வாழ் வித்து வாழ்வோமாக.

"அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு."

"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற."

## சமயங்களின் பொது நீதி

நிலத்தின் கடினத் தன்மையை இளக்கி, நெகிழச் செய்து பயன்படு பொருள்களின் விளைவுக்குத் தகுதியாக்குவது உழவு. சுவையுடையனவாக, ஆனால் சுவைக்க முடியாதன வாக ஒன்றோடொன்று மாறுபட்ட சுவையுடையனவாகிய பொருள்களைச் சுவைத்தற்குரிய சுவையுடையனவாக ஆக்கு வது சமைத்தல். அவன் ஐந்திணை இன்பத் துய்ப்பிற்கு எழிலுறு பருவம் எய்துதலைச் சமைதல் என்று கூறுவது தமிழ் வழக்கு. அதுபோல மதனித உள்ளங்களை இன்ப அன்பின் வினைநிலமாகத் தகுதிப்படுத்திப் பக்குவப்படுத்தும் தத்துவத் திற்கு-வாழ்க்கை முறைக்குச் சமயம் என்பது பெயர். மனித வாழ்க்கையைச் சமைத்துப் பக்குவப்படுத்துவதே சமயத்தின் நோக்கம்.

இந்த விழுமிய நோக்கத்தோடு, பரந்த நிலவுலகத்தின் கண், தோன்றியுள்ள சமயங்கள் பலப்பல. சமயங்கள் பலப்பல வாயினும் அவையனைத்திற்கும் நோக்கம் ஒன்றேயாம். ஓர் இசையரங்கில் பலர் பல வாத்தியங்களை இயக்கி இசை யெழுப்புகின்றனர். அங்ஙனம் எழுப்பும் இசையொலி வேறு வேறு ஒலியமைப்புடையனவேயாம். ஆயினும், சுருதி, பண், தாளம் மாறுபடாது என்பதை நினைவில் கொள்ளல் வேண்டும். அது போலவே, சமயங்கள் மொழியால் மாறு படலாம். காட்டும் கடவுளின் பெயர், வடிவம் மாறுபடலாம்.

ஆயினும், "மனித குலம் ஒன்றே" என்ற சுருதியில் மாறு பாடுகள் இல்லை. "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்பது சமய நியதி; நீதி.

உலகத்தில் வாழும் மனிதர்கள் அனைவரும்-ஏன்? மற்றைய உயிரினங்களும் கூட இறைவனுடைய அன்பிற் குரியவை. இந்த உயிரினங்களைப் பேணிப் பாதுகாப்பதையே இறைவன் தன்னுடைய குறிக்கோளாகக் கொண்டுள்ளான். உயிரினங்கள் துன்பத்தினின்று நீங்கி, ஆரா இன்ப அன்பினில் திளைத்து மகிழ வேண்டும் என்பதே இறைவனின் திருவுள்ளம். ஆனால், உயிர்கள் நிலைத்த இன்பத்தில் மகிழ வேண்டுமாயின் இன்பம் வழங்குதலைவிட, துன்ப நீக்கம் செய்வதே முதற்கடன்.

துன்பத்தையும் கூட மேலெழுந்தவாரியாக நீக்குவது நிறைவான பயனைத் தராது. துன்பத்திற்குக் காரணமாய அறியாமையை-உயிர்ப் பகையை அடியோடு அகற்ற வேண்டும். கிழங்குகளை வெட்டியவிடத்தில் மேலும் தளிர்ப் பதைப் போல, அறியாமையும் பகையும் மேலும் மேலும் வாய்ப்புக் கிடைத்துழியெல்லாம் தவழ்ந்து வளரும். அத்னா லன்றோ சேக்கிழார், 'பாசப் பழிமுதல் பறிப்பார் போல' என்றார். நிலம் கடினமாக இருந்தால் முளைத்த கீரையைப் பிடுங்கும்போது கீரை ஒடிந்தே கைக்கு வரும். மீண்டும் கட்டை தளிர்க்கும். நிலம் தண்ணீரால் நனைந்து மண் இளகியிருக்குமானால் கீரை பிடுங்கும்பொழுது வேரோடு வரும். அதுபோல நெஞ்சம் கல்லாக இருக்குமானால், துனபங்கள் மாற்றப்பட்டாலும் துன்பத்துக்குரிய காரணம் நீங்குவதில்லை. நெஞ்சு திருவருட்புனலால் நனைந்து, அன்பினால் நெகிழ்ந்து கொடுக்குமாயின் அப்பொழுது துன்பம் மட்டும் நீங்குவதில்லை; துன்பத்துக்குரிய காரணங் களும் நீங்குகின்றன. இன்பப் புதுமது வெள்ளமும் பாய்கின்றது. இவை அனைத்தும் உடன் நிகழும் நிகழ்ச்சிகள்

ஆகும். இதுவே, வாழ்க்கையில் ஏற்பட வேண்டிய மாறுதல் என்று சமயங்கள் ஒரு குரலில் ஓதுகின்றன.

உயிர்க்கு உறுதியினைத் தந்து, ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பத்தினைத் தந்து வாழவைக்கும் குணங்கள் பலப்பல. அவையனைத்துள்ளும் அன்பு என்ற குணம் மிகமிகச் சிறந்தது. அன்பு, துன்ப நோய்க்கு மருந் தாகவும் இருக்கிறது. இன்ப விளைவுக்கு ஊற்றுக் கண்ணாக வும் இருக்கிறது. அன்பு தன்னைக் கொண்டவனையும் மகிழ்விக்கிறது. சார்ந்தோனையும் மகிழ்விக்கிறது. ஏன்? எல்லாம் எல்ல இறைவனையும் கூட அன்பே மகிழ்விக்கிறது; இல்லை, அன்பு அவனைப் பைத்தியமாக்கி விடுகிறது. ஆண்டவனாகிய அவன் அன்பிற்கு அடிமையாகின்றான்; இரப்பாரைக் காப்பவன். இரப்பவனாக மாறுகின்றான். என்னே, அதிசயம்! இந்த அன்பினை உலகத்தின் சமயங்கள் பலவும் வாழ்த்துகின்றன. அன்பினைப் பெற்று வாழ்வாங்கு வாழ வையத்திலுள்ளோரை வழி நடத்தும் புதுமையை-பொதுமையை என்னென்போம்.

உலகினரின் பாவத்தைத் தமது செந்நீரால் கழுவிய ஏசுபெருமான் அன்பின் திருவுருவம். அவரருளிய மலைச் சொற்பொழிவு அன்புப் பொழிவு. "ஒருவரையொருவர் அன்புகொண்டு ஒழுகுங்கள்; பகைமை பாராட்டாதீர்கள்; மன்னிக்கும் குணத்தினைப் பெறுங்கள்; எல்லோருக்கும் எப்பொழுதும் அன்பு காட்டுங்கள்" என்று வையகத்தை வழிநடத்தினார். 'கருணை உள்ளவர்கள் பாக்கியவான்கள்: அவர்கள் மீது கருணை பொழியப்படும்' என்ற விவிலிய அறவுரை எண்ணத்தக்கது. அர்ச் ஃபிரான்ஸஸ் என்ற பெரியார் 'இறைவா, நான் அன்பு விதையை விதைப் பேனாக,' என்றும் 'மக்கள் என்னிடம் அன்பு செலுத்துவதற்கு முன், நான் அவர்களிடம் அன்பு காட்டுவேனாக' என்றும் கூறியுள்ள உரை உணரத்தக்கது.

*முகமது சாகேபின் அருள் வாக்குகளில் அன்பின் நலம் சிறந்து விளங்குகிறது. பிறரிடம் அன்பு பாராட்டா மலும் பிறர் அன்புக்குப் பாத்திரமாகாமலும் இருப்பவனிடம் நற்குணங்களே இரா" என்பது முகமது சாகேபின் அருள் வாக்கு. "கடவுள் படைப்பிலுள்ள மக்கள் அனைவரையும் தம் பிள்ளைகளைப்போற் கருதி அனைவர் இன்ப துன்பங் களையும் ஒருவன் எப்பொழுது தனதாகக் கருதுகிறானோ அப்பொழுதே அவன் ஸூபி ஆவான்" என்பதும் அருள் வாக்கு. மாந்தர் குலம் ஒன்றே என்பதும் அவர்கள் அனைவரும் ஒரு குலமாக வாழக் கடமைப்பட்டிருக் கின்றனர், என்பதும் புனித குர்-ஆனின் உபதேசம். "அல்லா மிகுந்த தயை உள்ளவர், கருணைக் கடல், கிருபா சமுத்திரம், பரமதயாளு" என்பதே புனித குர்-ஆனின் வாசகம். ஆதலால்* **உலகத்து உயிர்களுக்கு யாரால் அதிக இன்பம் கிடைக்கிறதோ அவர்களையே அவர் அதிகமாக நேசிக்கிறார் என்பது இஸ்லாமிய மதத்தின் இணையற்ற கொள்கை.**

*ஆசியாவில் பாரதத்திற்கு இணையான ஆன்மீக வளமிக்க ஞானிகள் பிறந்த நிலம் சீனநாடு. சீன தேசத்தில் கன்பூஷியஸ் என்ற ஞானி தோன்றினார். அவர் ஒரு சமயத்தைத் தோற்றுவிக்காது போனாலும் அவர் சீன நாட்டில் பல நூற்றாண்டுகள் ஒரு சமய ஞானியாகவே பாராட்டப் பெற்றார். அவர் வாழ்க்கையின் மூல தத்துவமே அன்புதான் என்று குறிப்பிடுகிறார். அவர் 'எல்லா மனிதர் களையும் விரும்புவதும் ஒவ்வொரு மனிதரிடமும் நேசமாய் இருப்பதுந்தான் அன்பு' என்றும், நாம் "அன்பு காட்டுவதும் அன்பிற்காகவே காட்ட வேண்டுமேயொழிய பிறிதொரு நன்மைக்காகக் காட்டக் கூடாது" என்றும் கூறுகிறார். கன்பூஷியஸ் இந்த அன்பு நெறி மக்கள் மன்றத்தில் நிலவ ஒரு மூல மந்திரத்தைக் கற்றுக் கொடுக்கிறார்.*

**"உனக்குப் பிடிக்காத ஒன்றை, நீ பிறருக்குப் பிடிக்குமென்று நினைந்து செய்யாதே!"**

இவர் வற்புறுத்திய ஐந்து நற்குணங்களுள் கன்ஜு¬ என்பது இரண்டாவது. அதாவது, "நாம் பிறருடன் சரியாகப் பழக வேண்டும்; எவருடனும் முறை தவறி நடக்கக்கூடாது; நம் உள்ளத்தில் தயையும் கருணையும் அன்பும் இருக்க வேண்டும்" என்பதாகும்.

இந்திய மண்ணில் தோன்றிய சமயங்கள் சில. அவற்றுள் புத்த மதமும் ஒன்று. சித்தார்த்தரைப் புத்தராக்கியதே அன்புதான். புத்தரின் அன்புநெறி கிறித்துப் பிறப்புக்கும் முன்பே போரில்லாத அமைதி நெறியை வையகத்துக்குத் தந்தது. புத்தர் அன்பின் வடிவமாகவே வாழ்ந்தார். அவர் மனித குலத்துக்கு உய்யும் நெறியாகக் காட்டியது அன்பு நெறியேயாம். 'தாய் தன் உயிருக்கு ஆபத்து வருவதையும் கருதாது. தன் ஓரே பிள்ளையைப் பாதுகாப்பது போல மனிதன் எல்லா உயிர்களிடமும் எல்லையற்ற அன்பு கொண்டிருக்க வேண்டும்' என்றும் 'தங்கு தடையின்றி பகையோ விரோதமோ இல்லாமல் மனிதர் தமக்க மேலும் கீழும், அங்கும் இங்கும் அகில உலகினிடமும் எல்லையற்ற அன்பு கொண்டு வாழ வேண்டும்' என்றும் புத்த சமய வேதமாகிய பிடகம் பெருமையுடன் கூறுகிறது.,

இந்தியச் சமயங்களுள் சமண சமயமும் ஒன்று. சமண சமயத்தின் புராணங்கள் தயையே தர்மத்தின் வேர் என்று வற்புறுத்துகின்றன. ஜினேந்திர தேவன் 'தர்மத்தின் இறுதி எல்லையிருப்பது கருணையில்' என்று கூறியிருக்கிறார். கருணையில்லாத மனிதரிடம் தர்மம் இம்மியளவும் இராது என்றும் கூறுகின்றது. மகாவீரர் 'பகைவனோ நண்பனோ விரோதியோ வேண்டியவனோ எல்லா உயிர்களையும் எல்லா மனிதர்களையும் ஒன்றுபோல் மதித்து எல்லோரையும் தாமாகக் கருதுதலே அகிம்சை' என்று அருளிச் செய்துள்ளார்.

இந்து சமயத்தில் வேதங்கள் அன்பினையே மையமாகக் கொண்டு வாழ்க்கை நெறியை விளக்குகின்றன. இந்து வேதங்களுள் மிகவும் பழைமையாகிய ரிக் வேதம் 'எல்லா மாந்தரும் இணக்கமாய் வாழ்ந்து வருவார்களாக. எல்லோரும் அன்புடன் உரையாடட்டும்; அனைவர் உள்ளங்களிலும் ஒற்றுமை உணர்வு நிலவட்டும். நீங்கள் எல்லோரும், ஒருவர் மற்றவருக்கு உதவிக் கொண்டு வாழ்வீர்களாக,' என்று வழி நடத்துகிறது.

தமிழகம் தந்த ஒரு நெறியாகிய சிவநெறி அன்பினையே எல்லாமாக எடுத்துக்காட்டும் நெறியாகும். தமிழ் மறை தந்த திருமூலர் பரம்பொருளாகிய சிவத்தை அன்பு என்றே குறிப் பிடுகிறார். பரம்பொருளை, "அன்பே! அன்பே!" யென்று அழுது அரற்றினால், அடையலாம் என்று கூப்பிடுகிறார். அன்போடு உருகி அகம் குழைந்தால் இறைவனை எளிதிற் பெற்று அனுபவிக்கலாம் என்று குறிப்பிடுகின்றார்.

*"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாய தாரும் அறிகிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே."*

"அன்பும் சிவமும்-பொருளும் பொருளின் பயனும் போல" என்று தெளிவாகக் குறிப்பிடுகிறார். மேலும், இறையின்பத்தை ஈரமுடையவர்களே அனுபவிக்க முடியும் என்றும் குறிப்பிடுகிறார். சமய வாழ்க்கை நியதிகள், ஒழுக்கங் களனெத் திருமந்திரம் வகுத்து உரைக்கும் செய்திகளாவன.

*"யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை*
*யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை*
*யாவர்க்கு மாம்உண் ணும் போதொரு கைப்பிடி*
*யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே."*

திருமூலர் எடுத்துக்காட்டும் சமய வழிப்பட்ட கடமைகள் நான்கு. அவற்றுள் ஒன்று கடவுளுக்குச் செய்யும் வழி பாடாகும். மற்ற மூன்றும் உயிரினங்கள் மாட்டு அன்பு செய்வதேயாகும். பசுவிற்குப் புல் கொடுப்பதும், பசித்த வர்க்குச் சோறு வழங்குவதும் கேட்பவர் இன்ப நலம் பெறும் இனிய சொற்களை வழங்குதலும் சமய வழிப்பட்ட கடமை களேயாம். **திருமூலர் தெளிவாக—உறுதியாக எவ்வுயிர்க்கும் அன்பாக இருப்பதே ஈசனுக்கு அன்பாகும் என்று கூறியுள்ளார்.** சைவ உலகத்தின் செஞ்ஞாயிறு எனத் திகழும் அப்பரடிகள் எங்கும் ஈசன் இருக்கிறான் என்று கருதி. எல்லார் மாட்டும் அன்பு செய்யாதவர்கள் சமயச் சடங்குகளாகிய கங்கை, காவிரி முதலிய புண்ணிய ஆறுகளில் மூழ்கினாலும் உரிய பயனைப் பெறமுடியாதென்கிறார். **நெஞ்சில் ஓடும் வஞ்சனை ஆறு, வற்றினாலேயே திருவருட் புனல் பொங்கி வழியும் என்பது அப்பரடிகளின் விழுமிய கருத்து.**

இங்ஙனம் உலகிடை நிலவும் எல்லாச் சமயங்களும் மனித குலத்தை இன்ப அன்பு கலந்த அணைப்பில் ஒரு குலமாக்க முயற்சிக்கின்றன. மனித குலம், ஒன்று என்பதே பொது நீதி. இடையில் நிலவும் வேறுபாடுகள் வேடிக்கை மனிதரின் விளையாட்டு அமைப்புகளே ஆகும். சமயங்களின் ஒருமித்த குரல், "அன்பு காட்டு; உதவி செய்; பகையை மற; பண்பு பாராட்டு; அன்புப் புனலால் தனது மனம் மற்றோர் மனம் ஆகியவைகளைக் குளிப்பாட்டு; உயிர் வர்க்கத்தின் மகிழ்ச்சிப் புனலால் எல்லாம் வல்ல இறைவனின் திருப்பாதங்களைக் குளிப்பாட்டுங்கள்" என்பதேயாகும்.

# 13

# சிந்தனைச் செல்வம்

## சமயங்களும் மன வளர்ச்சியும்

**ம**னித மனம் சிந்திக்கும் இயல்புடையது. சிந்தனைக் குரியது. ஆனால் வெற்றுச் சூன்யத்தைப் பற்றிச் சிந்திப்பது அரிது; இயலாது. சிந்தனைக்குப் பற்றுக்கோடு தேவை. அப்பற்றுக்கோடு பருப்பொருளாகவும் அமையலாம். நுண் பொருளாகவும் அமையலாம்: சில பொழுது நிகழ்வுகளாக வும் அமையலாம். இங்ஙனம் தோன்றி வளர்ந்த சிந்தனை களின் வடிவங்களே சமயங்கள். அவை தம்முள் மாறுபடு கின்றன என்பது உண்மை. அங்ஙனம் மாறுபடுவதுதான், சமய நெறிகள் சிந்தனையின் அடிப்படையில் வளர்ந்து மாறி வருகின்றன என்பதற்கு அளவுகோல். ஆதலால், சமயம் சிந்தனைக்கு மாறுபட்டதன்று.

சமயம் பெரிதும் முகிழ்த்துத் தோன்றிய களம் சமுதாய உறவு நிலைகளேயாம். சமயம், மனித சமுதாயத்தைக் குறிப்பிட்ட நன்னெறியில் நிறுத்த அச்சத்தையும் கருவியாகக் கொண்டது. ஒரு செயலை அல்லது ஒழுக்கத்தை ஊக்குவிக்க, தண்டனை வரும் என்ற அச்சத்தையும் பரிசுகள் கிடைக்கும் என்ற உவப்பு வழி வரும் ஊக்கத்தையும் தருதல் என்ற நெறிப்படுத்தும் வகையிலேயே மோட்சம்-நரகம் என்ற

கொள்கைகள் தோன்றின. இவைகளில் உள்ள உயர்வு நவிற்சிகளைப் பெரிதுபடுத்திக் கொள்ள வேண்டியதில்லை.

சமய நெறியின் தோற்றத்திற்கு அடிப்படை, பயம் என்பது மேற்றிசை நாட்டுக் கொள்கை. தமிழ்க் கொள்கை அஃதன்று. தன்னினும் மிஞ்சிய அறிவை, ஆற்றலை அவாவும் நெறியிலேயே சமய நெறி தோன்றிற்று என்பது தமிழ்க் கொள்கை.

மேலை நாட்டில் விஞ்ஞானம் வளர்கிறது. நமது நாட்டில் விஞ்ஞானம் வளரவில்லையே என்றும் இங்கு விஞ்ஞானம் வளராததற்குக் காரணம் சமய நம்பிக்கைதான் என்றும் சிலர் கூறுகின்றனர். இது வரலாற்று உண்மைக்கு மாறானது. கடவுள் நம்பிக்கையில்லாத உலகாயதம் நெடிய நாட்களாகவே இந்நாட்டில் இருந்து வந்துள்ளது. உலகாயதம் என்ற ஒரு கொள்கையையே 'மதம்' என்ற பட்டியலில் சேர்த்தவர்கள் நம்மவர்கள்தாம்.

கடந்த அரை நூற்றாண்டாக மத நம்பிக்கையில்லாத —மத நம்பிக்கையை எதிர்த்து இயக்கங்கள் மேலோங்கி வளர்ந்தன நமது நாட்டில்; ஆனால், இந்த இயக்கங்களைச் சேர்ந்தவர்களும்கூட சமய எதிர்ப்பு இயக்கம் நடத்தியவர்களே தவிர, விஞ்ஞான வளர்ச்சியில் ஈடுபடவில்லை. விஞ்ஞான வளர்ச்சியில் ஈடுபடக்கூடிய அளவுக்கு, அவர்களுக்கு நாட்டமும் இல்லை. ஒன்றை எதிர்ப்பதனாலேயே இன்னொன்று வளர்ந்து விடாது என்ற உலக நியதியின் உண்மை அறிய தக்கது. அறிவியல், அருளியல் என்பன இரட்டைக் குழந்தைகள், ஒன்றோடொன்று முரண்பட்டது என்று கூறுவது எந்த ஒன்றும் ஆராய்ந்து அறியாதவர்கள்.

"பித்தா! பிறைசூடி!" என்ற பாடலைச் சிலர் கேலி செய்கின்றனர். கேலி செய்வதற்குப் பதில் அதிலுள்ள விஞ்ஞான உண்மைகளை விரிவாக்க நினைத்திருந்தால் நாமும் விஞ்ஞானிகளாகியிருக்கலாம். "பிறைசூடி" என்பதனாலேயே பிறை-நிலா கடவுள் அல்ல என்பதும் அதனை அடைந்து அனுபவிக்கலாம் என்பதும் பெறப்படவில்லையா? இக்கருத்து வழி அடுத்த தலைமுறையின்

செயலாக்கம் நடந்திருக்குமானால் நிலாவுலகத்திற்கு முதலில் தமிழன்தான் சென்றிருப்பான். பாரதியும்தான் பாடினான், "சந்திரன் இயல் கண்டு தெளிவோம்" என்று. நாம் என்ன, அந்த முயற்சியிலா ஈடுபட்டிருக்கிறோம்? கதாகாலட்சேபத்தை யார் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்? இன்றோ? நாளையோ? என்று நாளை எண்ணுபவர்க்கும் சிரிப்பதன் மூலம் சிறு குடலுக்குப் பயிற்சி கொடுக்கும் "துர்ப்பாக்கிய"த் துக்கு ஆளானவர்களும் கதாகாலட்சேபம் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். மக்கள் தொகையில் அவர்கள் ஒரு சிறு பகுதியினர் என்பதை நாம் அறிய வேண்டும்.

கிரேக்கச் சிந்தனையாளன் சாக்ரட்டீஸ் பல கடவுள்கள் வழிபாட்டை எதிர்த்து, ஒரு கடவுள் வழி பாட்டை வற்புறுத்தியதாகவும், அதைச் சமய வாதிகள் எதிர்த்ததாகவும் சிலர் கூறுகின்றனர். இச் செய்தியில் உதிர்ந்துள்ள உண்மையை ஆராய வேண்டும். சாக்ரட்டீசும் ஒரு கடவுளை நம்மச் சொன்னார்; வழிபடச் சொன்னார். ஆதலால் அவரும் ஒரு சமயவாதியே என்பதில் மறுப்பு இருக்க முடியாது.

சாக்ரட்டீசை மறுத்தவர்களும் சமயவாதிகளே! ஆம்! உண்மைதான்! சாக்ரட்டீஸ் சமய நெறியாளர்; சமயத்தை வாழ்க்கையோடு இசைவித்தவர். அவர் கருத்தை மறுத்த வர்கள் சமயப் புரோகிதர்களும், சமயத்தைப் பிழைப்பாகக் கொண்டவர்களுமேயாவர். இந்த இடைவெளி வேறு பாட்டை அறிய வேண்டாமா? சமயமும், கடவுள் வழிபாடும் என்றைக்குப் புரோகிதர்களிடையே சிக்கியனவோ அன்றே புரோகிதர்களிடையே ஏற்பட்ட தொழிற் போட்டியின் விளைவாகப் பல கடவுள்கள் தோன்றின. பின் அப்படிப் படைக்கப்பட்ட கடவுள்களிடையே போட்டிகள் ஏற்படுத்த பட்டன. இவை சிறுபிள்ளைத் தனமான விளையாட்டு என்பதை ஆழ்ந்த சமய இயலாளர்கள் உணர்கின்றனர்; உணர்ந்ததோடன்றி எடுத்துக் கூறியும் இருக்கின்றனர்.

பௌராணிகர் சமயம் மிகப் பிற்காலத்தது. சமய நெறியாளர்களின் நெறி தவறுதல் பூர்த்தியடைந்த பிறகு, அந்த

நெறி தவறிய நிகழ்ச்சிகளை நியாயப்படுத்துவதற்குத் தோன்றிய புராணங்களும் உண்டு. அவற்றைச் சான்றுகளாகக் கொண்டு ஆராயக் கூடாதென்பது ஓர் ஆராய்ச்சி முறை. பௌராணிக வழக்குகளுக்கும், முன்னே கூறியதை இழக்க முடியாமையின் காரணமாகத் தத்துவச் சாயங் கொடுத்த அறிஞர்களும் உண்டு. அந்தத் தத்துவச் சாயங்களின் வாயிலாக இந்தச் செய்திகளைப் பார்க்கும்பொழுது அவை அவ்வளவுக்கு மோசமானவை அல்ல என்பதையும் அறியக் கூடும். இப்படிக் கூறுவதால் நாம் அவற்றை அப்படியே நம்பும்படி கூறுவதாகக் கருத வேண்டாம். கதைகளைவிடக் கதைகளின் கருப்பொருளே நம்புதற்குரியன என்பது திறனாய்வுக்குரிய அடிப்படை.

பாவமன்னிப்பை எல்லாச் சமயங்களும் ஏற்றுக் கொள் வதாகவும், கழுவாய்களைக் காட்டிப் பாவங்களைச் செய்யத் தூண்டுவதாகவும் சிலர் குற்றம் காட்டுகின்றனர். நமக்குத் தெரிந்தவரையில் மெய்ப் பொருளியல் வழிப்பட்ட எந்தச் சமயமும் பாவங்களுக்குரிய கழுவாய்ச் சடங்குகளை ஏற்றுக் கொள்ளவில்லை.

பாவங்களை நினைந்து வருந்தி அழுது, பாவங்களுக் குரிய காரணங்களிலிருந்து விடுதலை பெற்றாலே பாவத்தினின்றும் விடுதலை பெறமுடியும் என்பது சமயநெறிகளில் முடிவு. நல்லொழுக்கத்திற்குச் சமயம் ஓர் ஊன்றுகோல், ஆனால், நல்லொழுக்கத்திற்கு வித்து உயர்வுற உயர் நலம் உடையவனாகவும் எல்லா உலகமுமாகவும் இருக்கின்ற கடவுள் சார்பேயாம். அப்போதுதான் ஒழுக்கம் வளமுடையதாகவும் உறுதியானதாகவும் இருக்க முடியும். சமய அடிப்படையில் அமையாத ஒழுக்க நெறிகள் இசைக் கலையைக் கற்றுக் கொடுக்கும் ஆசிரியர் முன் அமர்ந்து இசை பயிலும் மாணாக்கன் கையை அசைக்கிறானே, அந்த அசைவு போன்றதே யாரும்.

சமயச் சண்டைகள் பற்றியும் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை. ஆம்; உண்மைதான்! மனித குலத்தில் நடந்த போர்களில் சரிபாதி விழுக்காடு சமயங்களின் பெயரால்

நடந்த போர்கள்தாம். இந்த வரலாற்று உண்மையை யார் தான் மறுக்கமுடியும்? ஆனால், அவை சமயச் சண்டைகளா என்பதை அன்புகூர்ந்து உள்ளவாறு ஆராய வேண்டும். சமயம் அனுபவத்தின் வழிபட்டது; அரவணைக்கத் தக்கது. அஃது அன்பின் கடல், அஃது எங்ஙனம் போரைத் தூண்ட முடியும்? சமயம் தத்துவமாக, வாழ்வியலாக இல்லாமல் நிறுவனங்களாக மாறி, புரோகிதர்களிடமும், சமயத் தலைவர்களிடமும் சிக்கிய பிறகு, யாருக்கு ஆதிக்கம் என்ற அடிப்படையில்தான் போர்கள் நிகழ்ந்தன. தெளிவாகச் சொன்னால் ஆதிக்க வெறியர்கள், மக்களிடத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த சமயத்தை, பசுத்தோல் போர்த்திய புலியென ஆதிக்க வெறியாட்டம் ஆடினர்.

ஒருவரின் சமய நெறி அனுபவத்தில் இன்னொரு அனுபவமுடையவர் வலிந்து ஆதிக்கத்தைப் பயன்படுத்தித் தன் சமயத்தைத் திணிப்பது நியாயமுன்று; நீதியுமன்று. இயல்பில் மனிதர்களுக்கு அமைந்த-வாய்ந்த சமய அனுபவ உரிமைகளைப் பாதுகாக்க அப்பரடிகள் அரசையே எதிர்த்துப் போராடினார். சமயச் சண்டைகள் என்று கூறப்படுபவை சமயச் சண்டைகள் அல்ல. சமயத்தின் பெயரால் நடந்த ஆதிக்கச் சண்டைகளே! எந்தவொரு தத்துவமும் ஆதிக்கத்தை மையப்படுத்திய நிறுவனமாக மாறி விட்டால் இத்தகைய விபத்துக்கு ஆளாவதைத் தவிர வேறு வழியில்லை. ஆதலால்தான் சமயங்களில் மிகப் பிற்காலத்தில் தோன்றிய இசுலாமிய சமயம் மதத்தலைவர்களை, புரோகிதர் களை மேலதிகாரமுடையவர்களாக ஏற்றுக் கொள்ளாமல் இருக்கிறது என்பதை .எண்ணிப் பார்க்க.

மனித மன வளர்ச்சிக்குச் சமயங்கள் உதவியுள்ளன. சமயத்தின் பெயரால் சில நிறுவனங்கள், சில நாடுகள், சில இனங்கள் தவறுகள் இழைத்திருக்கக் கூடும். வரலாற்று நிகழ்வுகளில் உண்மையை ஓர்ந்து தெளியும் மனப்பாங்கு இல்லாது போனால் காலப்போக்கில் உண்மையே இராது.

சமயநெறி சாதி, இன வேறுபாடுகளைக் கடந்தது. ஆற்று வெள்ளம் வையகத்தை வாழ்கிக்கும், பயன்படுத்து

மாறு பயன்படுத்தினால்! அதில் வீழ்ந்து தற்கொலை செய்து கொண்டால் என்ன செய்வது?

மதம் அல்லது சமயம் உலகத்தில் மனிதனுடைய இடத்தை நிர்ணயிக்கிறது; உறவுகளின் விளைவை உணர்த்திக் காட்டுகிறது வாழ்க்கையில் அனைத்து இன்பங்களையும் பெற்று இன்புற்று வாழ வழி நடத்துகிறது. உலகம் கடவுள் விருப்பின் வழியது. கடவுள் விரும்புவது உலகத்தின் இன்ப விருப்பின் வழியது. கடவுள் விரும்புவது உலகத்தின் இன்ப வைப்பு. நீ அந்த உலகத்தின் உறுப்பினன். ஆதலால், உலகம் உயரப் பணியாற்று! கடவுள் விரும்பும் அனைத்துயிர் இன்பத் திற்கும் தொண்டு செய்! என்றெல்லாம் சமயம் கற்பித்து வழி நடத்துகிறது.

சைவத்தின் உயிரியற் கொள்கையும், பௌத்தத்தின் இரக்க உணர்ச்சியும், சமணத்தின் புலனடக்கமும், கிறித்த வத்தின் தொண்டும், இசுலாமியத்தின் கடவுள் நம்பிக்கையும் ஒருங்கிணையுமானால், புதிய விதி செய்ய முடியாதா? செய்ய முடியும். ஆதலால், வரலாறுகளில் நிகழ்ந்த தவறுகளை மறப்போம்! சமய அனுபவங்களின் வழி வளர்ந்துள்ள விரிவார்த்த அனுபவங்களை ஏற்போம்! மதிப்போம்! முழு உலகத்திற்கு எதிரிகளாக இருக்கிற முனைப்புகளை மழுக்கி ஒருமையுணர்வை வளர்த்து இந்த உலகம் இன்புற்று வாழ, வளரப் பொதுமையான-வள்ளளார் வழியில் சமயங் கடந்த பொது நெறி கொண்டோ, புதியவிதி சமைப்போம்!

புதிய தளிர்களைப் பெற்றுக் குலுங்கும் மரத்தின் அடிவேர் பழமையானதுதான்! புதிய தளிர்களைப் பெறாத மரம் பழமையல்ல; பட்டுப்போனது. சமய நெறிகள் பட்டுப்போனவை அல்ல; உயிர்ப்புள்ளவை; புதிய தளிர் களைத் தாங்கும் இயல்பின! ‘முள்ளைப் பழமைக்கும் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியதாய்’ என்ற மாணிக்க வாசகரின் பாடல்வழி பொதுவிதி சமைத்து மனித மனவளர்ச்சிக்கு சமயத்தை உரியதாக்குவோம்.

# 14

# மண்ணும் விண்ணும்

## அருள்நெறியும் பெண்களும்

'பெண்ணிற் பெருந்தக்க யாவுள?' என்று திருவள்ளுவர் வினா எழுப்பவில்லை. விடையையே வினாப் போல எழுப்புகிறார். பெண்ணினம் பாராட்டுதலுக்கும் பெருமைக்கும் உரிய இனம். பெண்கள் எதையும் அதிகமாக விவாதிக்காமல் ஏற்றுக் கொள்வார்கள்-நம்புவார்கள்-வாழ்ந்தும் காட்டுவார்கள். அதனாலன்றோ, சேக்கிழார் பெருமான் பரவையாரைப் பாராட்டுவது போலப் பெண் இனத்தையே பாராட்டுகிறார். சேக்கிழார் பெருமான் சுந்தரர் வாயிலாகப் பரவையாரைப் பாராட்டும் பொழுது, 'கற்பகத்தின் பூங்கொம்போ?' என்று வருணிக்கிறார். கற்பகத் தரு கருதியவை அனைத்தையும் தரும் என்பது மரபு. அதுபோல பெண் தன் கணவன் கருதிய அனைத்தையும் தரவல்ல ஆற்றல் உடையவனாக இருப்பாள் என்பது பெறப்படுகிறது.

ஏழாம் நூற்றாண்டில் சமய வாயிலாகச் சமுதாயப் புரட்சியை நிகழ்த்திய நமது அப்பரடிகளும், திருஞான சம்பந்தரும் பெண்ணினத்தின் பெருமையை, மனையறத்தின்

மாட்சியை விளக்கப் பெரிதும் தொண்டாற்றியுள்ளனர். அவர்கள் கருத்தில் வடபுலத்திலிருந்து வந்த பௌத்தமும் சமணமும், தமக்கென நாடும் மொழியும் இறையும் இல்லாத-சுழன்று திரிந்த மாயா வாதமும் பெண்ணினத்தை இழிவுபடுத்தின. மனையறத்தைச் சிற்றின்பம் என்றும், விலங்கென்றும் இழித்தும் பழித்தும் கூறியுள்ளன. இயற்கை நெறிக்கு மாறாகத் துறவு நெறியை வலியுறுத்தின. இக் கொள்கையைக் கடிந்து நாளும் இனிய தமிழால் அகனைந்திணை ஒழுக்கத்தின் பெருமையை முழக்கினர் நாயன்மார்கள். ஈருருவும் ஓருருவமாய அம்மையப்பன் வழிபாடு கூட ஏழாம் நூற்றாண்டிலேயே முதன்மைப்படுத்தப் பெற்றிருக்க வேண்டும் என்று தெரிகிறது.

வாழ்க்கை இனியது-இலட்சிய நோக்குடையது; வாழ்க்கையை மகிழ்ந்து நோக்கி இனிமைப் பண்புடைய தாக்கி இலட்சிய நிறைவுடையதாக்கிக் கொள்ளும் முயற்சி வேண்டும். இங்ஙனம் வாழும் துறையையே திருவள்ளுவர் 'வாழ்வாங்கு வாழ்தல்' என்று குறிப்பிடுகின்றார். அவ்வாறு வாழ்வாங்கு வாழும் நெறியே அருள் நெறியாகும்.

திருஞானசம்பந்தர் அருளிய தமிழ் அருள் நெறித் தமிழ். அப்பரடிகள் வளர்ந்த நெறி நன்மை பெருகு அருள் நெறி. அண்ணல் காந்தியடிகள் நின்று வாழ்ந்த நெறி அருள் நெறி.

அருள் நெறியின் முதல் ஒழுக்கம் அன்பு செய்வது. வாழ்க்கையின் முன்னும் பின்னுமாய முழு இலட்சியம் அன்பு செய்தலே யாகும். இவ்வுடம்பின் அகத்துறுப்புக் களையும் புறத்துறுப்புக்களையும் கூர்ந்து நோக்குவோமாயின் அன்பு செய்தற்கென்றே அவை அமைந்திருத்தலைக் காண லாம். 'அன்பின் வழியது உயிர் நிலை' என்பது குறள். பண்பாளர்க்குக் காட்டும் அன்பு பண்பை வளர்க்கும். பகைவனுக்குக் காட்டும் அன்பு பகையை குறைக்கும். அன்பு செய்யும் ஒழுக்கத்தை ஆண்மகன் முயன்று பெறுகின்றான்.

பெண்ணோ இயல்பிலேயே பெற்றிருக்கிறாள். அதனாற்றான் அன்பிற்குவமையாகத் தாயே பேசப்படுகிறாள். இலக்கியங்களில் பெண் பருவந்தோறும் அன்பு காட்டுவதில் முதிர்ச்சியடைகிறாள். பருவத்திற்குரிய அன்பையும் தியாகத்தையும் அள்ளிச் சொரிகிறாள். சுருக்கமாகக் கூறப்போனால், அன்புப் பாடம் கற்றுக் கொடுக்கும் தலையாய ஆசிரியர் குலமே பெண்குலம்தான்.

அருள் நெறியின் இரண்டாவது ஒழுக்கம் அறநெறி நிற்றல். அறத்தின் பாற்பட்ட ஒழுக்கக் கூறுகள் பற்பல. எனினும் பிறருக்கு உதவி செய்தலும், அங்ஙனம் உதவி செய்யும் ஆற்றல் கைகூடாதபோது துன்பம்-கெடுதல் செய்யா திருத்தலுமே சிறந்த அறப் பண்பு. மனித குலத்தில் வளர்த்தால் சட்டங்களும் திட்டங்களும் இல்லாமலே சோஷலிசச் சமுதாய அமைப்பை நாம் கண்டுவிட முடியும். இத்தகு அரிய பண்பைப் பெண்குலம் இயல்பாகவே பெற்றிருத்தல் பாராட்டுதலுக்குரியது. ஒரு பெண் தாய்மையை அடைகின்றபோது அவள் செய்யும் தியாகத்திற்கு ஒப்பான ஒரு தியாகத்தைக் காட்டமுடியுமா? அவள் தன் செங்குருதியையே பாலாக மாற்றிக் குழந்தைக்கு ஊட்டி வளர்ப்பது எவ்வளவு கருணை!

இதனாலன்றோ நமது மாணிக்கவாசகர் இறைவனைப் பாராட்டும்போது, 'தாயாய் முலையைத் தருவானை' என்று குறிப்பிடுகின்றார். அது மட்டுமா? குழந்தையின் நோய்க்குத் தான் மருந்துண்டு பத்தியங் காக்கும் பண்பும் தாய்மையி லிடத்திலேயே உண்டு. இத்தகு சிறந்த இயல்புகளை மற்றவர்களுக்கும் அவர்கள் கற்றுக் கொடுப்பார்களானால் வையகம் முழுவதும் வெய்துயர் நீங்கி வானுற ஓங்கும்.

அருள் நெறியின் மூன்றாவது ஒழுக்கம் இறைவழி பாட்டு நெறி. நமது உடலுக்குத் தேவை இறைவழிபாடு.

கு.XII.29.

இரைப்பைக்குத் தேவை சோறு-அகப்பைக்குத் தேவை அருளியல் சிந்தனை.

பெண்களிடத்தில் இயல்பாகவே, கடவுள் வழிபாட்டு ணர்ச்சி மிகுந்திருக்கிறது. அதன் காரணமாகவே, அவர்களி டத்து நில்லியல்புகள் பெருகிக் காணப்பெறுகின்றன. சமய வரலாறுகளைப் பார்த்தாலும் ஆண்மக்கள் தடம்புரண்ட பல்வேறு செய்திகளைக் காண்கிறோம். ஆனால் பெண்களோ தாம் தடம் புரளாததோடு தடம் புரண்டவர்களையும் தகுதிப் படுத்தித் தரமுடையவர்களாக்கி அருள் நெறிக்கு ஆற்றுப் படுத்தியிருக்கிறார்கள். இந்தச் சிறப்பியல்புகளுக்குத் திலகவதியார், மங்கையார்க்கரசியார் வரலாறுகளை நாம் எடுத்துக் காட்டலாம். இத்தகு பெருமைக்குரிய பண்பியல்பு களைப் பண்புக் கூறுகளை இயல்பிலேயே பெற்றிருக்கிற பெண்மைக் குலம், தாய்க் குலம், சுழன்றடித்துவரும் புதுமைக் காற்றின் பேரால் தடம்புரளாமல் நிலைபெற்றிருப்பார்க ளானால் அருள் நெறி வளரும்! அவர்கள் மனித குலத்தை நேசிக்க-அன்பு செலுத்த நமக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். ஒருவருக்காக ஒருவர் தியாகம் செய்யும் நல்வாழ்க்கையை நமக்குக் காட்ட வேண்டும். குறைவிலா நிறைவாகக் கோதிலா அமுதாக விளங்கும் திருவருளை வாழ்த்த-இன்ப அன்பு கலந்த நல்வாழ்வு வாழ வழி நடத்திச் செல்ல வேண்டும்.

# 15

# வாழ்க்கை நலம்

## அறிவியலும் அருளியலும்

அறிக அறிவியலை! விஞ்ஞானத்தின் விளக்கங்கள் பெறுக! "அறிவு" என்றாலே ஒன்றை அணுகும் முறையையே குறிக்கும். அறிவியலும் அருளியலும் நம்முள் முரண் பட்டனவும் அல்ல; எதிரெதிர் செல்வனவும் அல்ல.

ஒன்றிலிருந்து பிறிதொன்று காரண காரியத் தொடர்ச்சியுடன் இயங்குத்தன்மையது. இந்த உலகம் எப்படி இயங்குகிறது! என்று சுற்றுப்புறச் சூழ்நிலையை ஆராய்ந்து அறிவது அறிவியல். நான் யார்? என் உள்ளம் யார்? ஞானங்கள் யார்? என்று அகநிலைகளை ஆராய்ந்தறிவது அருளியல்.

இன்பம் எது? துன்பம் எது? என்று ஆராய்வது அருளியல். நன்மை எது? தீமை எது? என்று ஆராய்ந்தறிவது அறிவியல். அகமும் புறமும் சேர்ந்ததே வாழ்க்கை. உடலும் ஆன்மாவும் சேர்ந்ததே வாழ்க்கை!

"ஆன்மிகம்" என்றொரு வழக்கு சமயத்திற்கு உண்டு. ஆன்மிகம். ஆன்மாவின் வாழ்க்கை என்று பொருள்படும்.

உலகியத்தின் பல்வேறு துறைகளுக்கும் தனித்தனியே இன்று அறிவியல் வளர்ந்து வந்துள்ளது; வளர்ந்து கொண்டே இருக்கிறது. அதுபோலவே ஆன்மாவைப் பற்றிய அறிவும் வளர வேண்டும். ஆன்மாவைப் பற்றிய அறிவியல் 19ம் நூற்றாண்டுக்குப் பிறகு வளராமல் தேக்கம் கண்டுவிட்டது. ஆன்மாவைப் பற்றி அறிவியலைக் கடவுளுடன் சம்பந்தப் படுத்தி "மதம்" என்ற அமைப்புக்குள் சிறைப்படுத்திய பிறகு ஆன்மாவைப் பற்றிய அறிவியல் வளர்ச்சி நின்றுவிட்டது. கடைசியாக ஆன்மாவைப் பற்றி ஆன்மாவின் வாழ்க்கையைப் பற்றி ஆய்வு செய்தவர் காரல் மார்க்ஸ். "ஆன்மா", "ஜீவன்" என்ற சொல் வழக்கை ஏற்றுக் கொண்டுள்ளார் என்பது உண்மையானாலும் "ஆன்மா"வை ஏற்றுக் கொண்டதாகக் கூற முடியாது.

ஆன்மாவைப் பற்றி அறிவியல் பார்வையில் ஆய்வு செய்ய வேண்டும். ஆன்மா என்பது என்ன? ஆன்மா இயற்கையிலிருந்து முகிழ்த்ததா? அல்லது பிறிதொரு பொருளால் படைக்கப்பட்டதா? ஆன்மா தோற்றமும் அழிவும் உடையதா? அல்லது நிலைத்தன்மை உடையதா? ஆன்மா, அறிவுப் பொருளா? அறிவிக்க அறியும் அறிவுப் பொருளா? ஆன்மாவின் இலட்சியம்தான் என்ன?

ஆன்மாவின் வாழ்க்கையில் நன்றும் தீதும் - இன்பமும் - துன்பமும் குறுக்கிடுவது எப்படி? எதனால்? ஆன்மாவிற்கும் கடவுளுக்கும் என்ன தொடர்பு? இன்னோரன்ன வினாக்களுக்கு விடை காணும் ஒரு வகையான அறிவியலே ஆன்மவியல். அறிவே வாழ்க்கைக்கு ஆக்கம் தரும். ஆதலால், அறிவியலும் அருளியலும் ஒரு சேர ஆராயத்தக்கன! அறியத் தக்கன! அருளியலின் முடிவுகளே அறிவியலுக்கு வாயில்கள்! அறிவியலின் முடிவுகள் அருளியலுக்கு ஆக்கமாக ஆவன.

16

# பொங்கல் பரிசு

## சமய ஒழுக்கம்

மனிதன் என்றாலே பொதுவாகத் துன்பத்தை மாற்றுகிறவன்-இன்பத்தை உண்டாக்குகிறவன் என்றுதான் நான் கருதுகிறேன். இந்த ஆற்றல் இல்லாதவன் மனிதனல்ல-மனித உருவில் உலவுகிற விலங்கு.

"கடவுள் மனிதனுக்கு அறிவையும், ஆற்றலையும் கொடுத்திருக்கிறார். அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்தாமல் விட்டுவிடுவது கறந்த பாலைக் கற்பாறையிலே கொட்டிக் கவிழ்ப்பது போன்றது. இச்செயல், கடவுளுக்கே பெரும் துரோகம் செய்வது போலாகும். எனவே இறைவனால் நமக்கு வழங்கப் பெற்ற அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்தி, முறையாக வாழ்வதில்தான் நமக்கும் பெருமை இருக்கிறது. நமக்கு ஆற்றலையும் அறிவையும் தந்த கடவுளுக்கும் பெருமை இருக்கிறது.

நமது சமயமும், இலக்கியங்களும், கலைகளும் ஆன்மாவை-உயிரை ஒத்துக்கொள்ளுகின்றன. ஆன்ம நலம் இல்லாத வாழ்க்கை முகப்பு இல்லாத வீடு போன்றது. இதனை நன்குணர்ந்தே திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர்

போன்ற நமது சமயக் குரவர்கள் ஆன்ம நலத்தை வளர்க்கப் பாடுபட்டார்கள். சமயம் நமது சமுதாய நலனை-வாழ் வியலை விட்டு விலகியதில்லை.

வெறும் சம்பிரதாயங்களும், சடங்குகளுமே சமயமன்று. முறையாக-நாணயமாக வாழ்வதில்தான் சமயம் இருக்கிறது. இதனை நமது சேக்கிழார் பெருமான். தாம் அருளிய பெரிய புராணத்தில் மிக அழகாகக் காட்டியிருக்கிறார்.

பாத்திரத்தை வெளிப்புறத்தே மட்டும் தேய்த்துத் தூய்மைப்படுத்தினால் போதாது. உட்புறத் தூய்மையும் இருந்தால்தான் அதில் பெய்யப்பெறும் பாலின் தூய்மை கெடாமல் இருக்கும். மனிதனுக்குப் புறத் தூய்மை இன்றி யமையாததுதான். எனினும், அகத் தூய்மை அதனினும் இன்றி யமையாததாகும். அத்தகைய அகத்தூய்மையை உருவாக்கத் தான் பிரார்த்தனை-சமயம் எல்லாம் இருக்கின்றன.

இன்று இறைவனிடம் சென்று எதைக் கேட்பது என்பது கூடப் பலருக்குத் தெரிவதில்லை. மளிகைக் கடைக்குப் போய்க் காய்கறியும், காய்கறிக் கடைக்குப் போய் மளிகைச் சாமானும் கேட்பது போலப் பலர் இருக்கின்றனர். இறைவனிடம் நாம் நமது குணப்பெருக்கத்தைக் கேட்க வேண்டும்-குறையுடைய என்னை நிறைவுடையவனாக்கு என்று கேட்க வேண்டும். ஆன்ம வளர்ச்சியைக் கேட்க வேண்டும். 'இந்த மாநிலம் பயனுற வாழ்வதற்கு வல்லமை தா' என்றுதான் பாரதிகூடக் கேட்டார்.

நம்மை அறிந்தோ அறியாமலோ புறத்தே சில வளர்ச்சிகள் தோன்றிக் கொண்டிருக்கின்றன. அவற்றைப் பயன்படுத்திக் கொண்டு காலூன்ற முயற்சிக்க வேண்டும்.

தொடக்கத்தில், விலங்குகளை எதிர்த்துப் போராடவே கையில் ஆயுதந் தாங்கிய மனிதன் இன்று, அன்பு செலுத்திச் சிரித்து மகிழ வேண்டிய இன்னொரு மனிதனை எதிர்க்கவே

ஆயுதந் தாங்கும் இழி நிலையைக் காண்கிறோம். சிறந்த சமய வாதி மறந்தும் கூட மற்றவர்களிடம் காழ்ப்போ, பகையோ கொள்ள மாட்டான்; எவரிடத்தும் அன்பு செலுத்துவதுதான் சிறந்த சமய ஒழுக்கம். வான்மழை பெய்தால் மண்ணில் மரம் செடிகொடிகள் தழைக்கும் என்பது போல, அன்பு மழை பொழிந்தால் மனித சமுதாயம் செழிக்கும்.

# 17

# இராமநவமிச் சிந்தனைகள்

## மதுரை வானொலி ஒலிபரப்பு: 1–4–93

*இன்று இராமனைப் பற்றிப் பரவலாகப் பேசப்பெறு கிறது. இராமன், நடையில் உயர்ந்த நாயகன். கடவுளுக்கும் சரி, அவதார புருஷர்களுக்கும் சரி, நமது நாடு வழிவழியாக வழிபாடு செய்து வந்திருக்கிறது. வழிபாடு என்றால் என்ன? நிவேதனங்களைப்படைத்துக் கும்பிட்டால் போதுமா? அவதார புருஷர்கள் ஏன் அவதாரம் செய்தனர்? என்ன செய்தனர்? எதற்காகச் செய்தனர்? என்று அறிந்து அந்தப் பணிகளை நாமும் தொடர்ந்து செய்வதே சிறந்த வழிபாடு! வழிப்படுதல் என்ற சொல்லே வழிபாடு என்றாயிற்று:*

*இராமன், அரசபதவியைத் துறந்தான். ஒரு நாட்டின் அரச பதவியைக் கொஞ்சம்கூட முணுமுணுப்பு இல்லாமல் "அன்றலர்ந்த செந்தாமரையினை ஒத்த" முகத்துடன் வேண்டாம் என்றான். அதுமட்டுமா? காட்டிற்கும் செல்ல ஒத்துக்கொண்டான்: இது, இராமனின் நெறி. இன்றைக்கு இந்த நாட்டில் அதிகார பதவியைத் துறப்பார் யார்? இன்று நாட்டில் நடப்பது நாற்காலிச் சண்டைதானே: நாற்காலியில் அமர்ந்திருப்பவர்கள் நாற்காலியை விடுவதற்கு விரும்பாமல்,*

இறுகப் பிடித்துக்கொள்கின்றனர். அந்த நாற்காலியைப் பிடுங்கவே மற்றவர்கள் முயற்சி செய்கின்றனர். ஆக, நாற்காலிப் போராட்டத்திலேயே மனிதநேரமும், ஆற்றலும் செலவாகிறது. இதைத் தவிர்க்க அதிகாரப்பசி இல்லாமல் நாட்டுப்பணியில் நாட்டம் செலுத்துவதே இராமனுக்குச் செய்யும் வழிபாடாகும்.

அடுத்து, இராமன் சென்ற இடங்களில் தோழமைகள் கிடைக்கின்றன. கங்கைத் தலைவன் குகனின் தோழமை! கிட்கிந்தைத் தலைவன் சுக்கிரீவனின் தோழமை! அடுத்து இலங்கைத் தலைவன் விபீஷணனின் தோழமை! இவர்கள் அனைவரையும் இராமன் நாட்டெல்லை, சாதி, வர்ணம் கடந்து தோழமை கொள்கிறான். இல்லை, இல்லை! தோழமை மட்டுமா கொள்கிறான்? உடன்பிறவாச் சகோதரர்களாக ஏற்றுக்கொள்கிறான்.

> "குகனொடு ஐவர் ஆனேம் முன்பு;பின் குன்று
> சூழ்வான்
> மகனொடும் அறுவர் ஆனேம்; எம்முழை
> அன்பின் வந்த
> அகன்அமர் காதல் ஐய, நின்னொடு எழுவர் ஆனேம்!
> புகல்அருங் கானம் தந்து, புதல்வரால் பொலிந்தான்
> நுந்தை!"

என்று இராமன் கூறுவதாகக் கம்பன் பாடுவான். இந்த விரிந்த சகோதரத்துவம் இந்த நாட்டில் எங்கிருக்கிறது? தீண்டாமை! எண்ணத் தொலையாத சாதிப் பிரிவினைகள்! மதப்பிரிவினைகள்! இவ்வளவும் கடவுள் பெயராலேயே நடக்கின்றன.

இந்திய மண்ணிலேயே பிறந்து வளர்ந்து வாழும் மனிதர்களைக் கூட, சகோதரர்களாக அங்கீகரிக்க மறுக்கிறோம்! இல்லை, மனிதர்களாகக்கூட அங்கீகரிக்க மறுக்கிறோம்! அசல் – நகல் என்றெல்லாம் பேசுகிறோம்! இராமன்

மானிடசமுதாயத்தில் சகோதரத்துவத்தை வளர்க்க உறுதி பூண்டிருந்தான்! நாமும் இராமநவமியின் சிந்தனையில் சகோதரத்துவத்தைப் பேறுவோமாக!

இராமன், யாரோடும் பகை கொண்டதில்லை. இராவணனுடன் கூட இராமனுக்குப் பகை இல்லை. இன்று நமது சமுதாயம் இந்த நெறியைப் பின்பற்றுகிறதா? இல்லையே! சின்னச்சின்னச் செய்திகள், கருத்து வேற்றுமை களுக்காகக் கூட இன்று பகை கொள்கின்றனர்; குண்டுகளை வைத்து அழிவு செய்கின்றனர். இராமநாமம் உச்சரிக்கும் நாம், நம் இதயத்தில் பகைமையையும் கையில் வன்முறை ஆயுதங்களையும் வைத்திருக்கிறோம்! இராமநவமிச் சிந்தனையில் இவற்றைத் தவிர்த்திடுவோம்! நாடு, மொழி, இனம், மதம் கடந்த ஒருகுலம் காணப் போராடுவோம்! கூடி உழைப் போம்! கூடி வாழ்வோம்!

இராம காதையின் நோக்கம் சிறையிருந்த செல்வியின் ஏற்றம் பேசுவது என்பர். இராவணனுடைய நாட்டில் தன்னந் தனியாகக் கற்புத்தவம் செய்தாள் சீதை! இராவணனுடன் விவாதப்போர் நடத்தினாள்! அந்தத் துணிவு அன்று சீதைக்கு இருந்தது. இன்றோ நமது மகளிர் தற்கொலைகளை நாடு கின்றனர். ஏன், நமது நாட்டு மகளிர் கோழைகளானார்கள்? வாழப் பிறந்தவர்கள் ஏன் சாகிறார்கள்? இராமநவமியின் போது இதுபற்றிச் சிந்தனை செய்வோம்! மகளிரை வாழவிடுவோம்! மகளிர் குலமே! வாழத் தலைப்படுங்கள்! நடையில் உயர்ந்த நாயகன் இராமன் நினைவில் பதவியை நாடாது பணியை நாடுவோம்! அனைவரும் ஒரு குலத்தவராக வாழ்வோம்! யாரோடும் பகை வேண்டாம்! மகளிரை வாழவைப்போம்! இதுவே இராமனுக்குச் செய்யும் வழிபாடு!

# 18

## ஆன்மிகமும் அறிவியலும்

### மதுரை வானொலி ஒலிபரப்பு: 18–1–93

*அறிவியல் துறைகள் பலப்பல. அறிவியல் துறைகளில் ஆன்மிக அருளியல் அடங்கும். “ஆன்மிகம், சமயம் என்பவை அறிவியல் தொடர்பு இல்லாதவை, வெறும் நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றி நிற்பவை; சமயம், மூடப்பழக்க வழக்கங்களை மையமாகக் கொண்டு அமைந்தது” - என்று கூறுவது தவறு. சமய நெறிகளுக்கும் அறிவியலே அடிப்படை. “நான் யார்? என் உள்ளம் ஆர்? ஞானங்கள் ஆர்?” என்ற ஆராய்ச்சியிலே பிறந்து வளர்ந்து விளக்கம் பெறுவதே சமயநெறி.*

*கடவுள் நம்பிக்கை அறிவியலை அடிப்படையாகக் கொண்டது. “இந்த உலகத்தில் ஓர் ஒழுங்கும், முறைபிறழா நிகழ்ச்சியும் இருப்பது உண்மை. இதற்கு எது காரணம்? நிச்சயம் அது மனிதனை விட மேம்பட்டதாக இருத்தல் வேண்டும். அது எது, கடவுளைத் தவிர?” என்று உரோமானிய அரசியல் ஞானி சிசரோ சொன்னதை அறிக. அது போலவே “இயற்கை கடவுளின் மறுபெயர்” என்று கிரேக்கத் தத்துவஞானி கூறுவார். இதனால் மணம், சுவை,*

உயிர்ப்பு தர, மனிதனால் இயலவில்லை. இவற்றைத் தருவது கடவுள் என்று உணர்கிறோம்.

கடவுள்நம்பிக்கை என்பது நம்பிக்கையின் பாற்பட்டதல்ல. அறிவுசார்ந்த ஒரு கருத்தேயாம். ஆன்மாவிற்குப் புலனாதல் என்பதற்குப் பலவாயில்கள் உள்ளன. கண்களுக்குக் காட்டி வழிப்புலனாதல்; உணர்வுவழிப் புலனாதல். கடவுள் உயிர்க்கு உயிரதாக உணர்வு வாயிலாகப் புலனாதலே தத்துவக் கொள்கை.

சிந்தனையில் உணர்வில் அனுபவித்த கடவுட் காட்சியைப் பொறிகளாலும் அனுபவிக்கத்தான் திருவுருவ வழிபாடு தோன்றியது. சிந்தனையால் வழிபடுதல் ஞானிகளுக்கே உரியது. ஆன்மா, உள்ளம் ஏதாவது ஒன்றைச் சிந்திக்கப் பற்றுக்கோடாக ஒருருவம் தேவைப்படுகிறது. சூன்யத்தைச் சிந்திப்பது சராசரி மனிதர்களால் இயலாது. இந்த அடிப்படையில் தான் திருவுருவ வழிபாடு கால் கொண்டது. உருவவழிபாட்டில் உளவியல், அறிவியல் அடிப்படை அமைந்துள்ளது. நமது சமயம் உருவவழிபாட்டை ஏற்றுக்கொண்டாலும் அருவநிலையில், உருவமற்றநிலையில் வழிபாடு செய்வதை மறுத்துவிடவில்லை. 'திருவுருவம்' – கடவுள் அல்ல. அருள்பாலிக்கும் கடவுள், திருவுருவத்தை இடமாகக் கொண்டு அருள்கின்றான்.

> "இது அவன் திருவுரு இவன் அவன் எனவே
> எங்களை ஆண்டுகொண்டு இங்கெழுந்தருளும்"

என்ற திருவாசக அடிகளைச் சிந்தனை செய்க. திருக்கோயில் உள்ளிருக்கும் சிவன்தன்னைச் சிவன் எனவே காண வேண்டும்.

இந்த உலகில் ஒன்று பிறிதொன்றாக மாறுகிறது. மாறும் பொழுதெல்லாம் மூலப் பெயர் மறைந்து போகிறது. மாறிய நிலையின் பெயரே நிலைபெறுகிறது. தொழில்நுட்பம தெரிந்தவன் இரும்பை எடுத்து ஒலியைப் பெருக்கித்தரும் கருவியாக அமைத்து "ஒலிபெருக்கி" என்று பெயர் சூட்டு

கிறான். அது ஒருபெருக்கி என்றே சொல்லப் பெறுகிறது. அதுபோல் கல், செம்பு முதலியவற்றை எடுத்துத் திருவுருவங்கள் செய்து, இறைவனை எழுந்தருளச் செய்து கடவுட்பெயர் சூட்டுகின்றனர். நாம் அனைவரும் கடவுள் என்று கூறுவதே மரபு; முறையும்கூட! ஒலிபெருக்கி மூலம் கேட்க முடிகிறதே என்பர். ஒலிபெருக்கியாலும் காதுகேளாதவர்களைக் கேட்பிக்க முடியாது. கடவுட்காட்சியும் அனுபவ இதயம் உள்ளவர்களுக்கே கிடைக்கும். மனிதனுடைய இருதயம் பேச இயலாததாக இருந்தால் கடவுள் காதுகேளாதவர் ஆகியன போலத்தானே!

திருக்குறள் முழுவதிலும் அகரமுதல எழுத்துக்கள் உள்ளன. அதனால் திருக்குறளை அரிச்சுவடி என்று யார்தான் கூறுவர்? குழந்தைகளின் பார்வையில் திருக்குறளில் 'அகரமுதல' எழுத்துக்கள்தான் தெரியும். மாணவர்கள் பார்வையில் 'அகர முதல' என்ற வாசகம் தெரியும். பேராசிரியர்களுக்குத் திருக்குறள் இலக்கியம். சமய அறிஞர்களுக்குத் திருக்குறள் அறநூல். ஒரே திருக்குறள் வயது, அனுபவங்களுக்கு ஏற்ப, அனுவிக்கப் பெறுவதைப் போலத்தான் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள கடவுள் திருமேனிகளையும் முறையே கல், உருவம், சிற்பம், கடவுள் என்றெல்லாம் அனுவ முதிர்ச்சிக்கு ஏற்ப, அனுபவிக்கிறார்கள்.

திருவுருவங்களைக் கருங்கல், செம்பு இவைகளால் மட்டுமே அமைந்தனர். கல், ஒரு ஆற்றலை வாங்கிக் கொள்ளும். எளிதில் விடாது என்பதால் கருங்கல்லில் இறைவனை எழுந்தருளச் செய்தனர். ஆற்றல் கடத்திகளில் செம்பு முக்கியமானது. விரைந்தும் செய்யக்கூடியது. கடவுளின் ஆற்றலை வாங்கிவைத்துக் கொண்டு நமக்குத் தரும் ஆற்றல் செம்பு உலோகத்திற்கு உண்டு என்பதால் செப்புத் திருமேனிகள் அமைந்தனர். திருவுருவ அமைப்பில் அறிவியல் அணுகுமுறை அமைந்திருப்பதை எண்ணி மகிழ்க!

கடவுளை எங்கும் தொழலாம். எதிலும் தொழலாம்! எப்படியும் தொழலாம்! அப்படியாயின் ஏன் திருக்கோயில்?

சமூகவியல் விஞ்ஞானம் (Sociology) "மனிதன் ஒரு சமூகப் பிராணி" என்று கூறுகிறது. தனிமனிதன், மற்ற மனிதர் களுடன் சார்ந்த வாழத்தலைப்பட்டு, சமூக அமைப்பு உருவம் பெறுகிறது. சமூக அமைப்பு இயங்கத் திருக்கோயில் தேவைப்படுகிறது. இல்லை, அவசியமும் கூட! திருக்கோயில் சமூகத்தின் சின்னம். பழங்காலத்தில் திருக்கோயிலை மையமாகக் கொண்டே சமுதாயம் இயங்கியது. வளர்ந்தது! பழங்காலத்தில் திருக்கோயில்கள் குடிகளைத் தழுவி வளர்ந்தன. குடிகளும் கோயிலைத் தழுவி வளர்ந்தன. அதனால்தான் "கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்றனர்.

விண்ணளந்து காட்டி வினைமறைக்கும் கோபுரங் களைக் கொண்ட திருக்கோயில்கள் நிறைந்து புகழுடன் விளங்கும் நாடு, தமிழ்நாடு. திருக்கோயில் கோபுரம் உயர மானது. ஆம்! வாழ்க்கையின் இலட்சியமும் கோபுரம் போல் உயர்ந்ததாக இருக்கவேண்டும். சந்திரனைக் குறியிலக்காகக் கொண்டால் ஒரு விண்மீனையாவது அடித்து வீழ்த்தலாம். கவனத்தில் கொள்க. கோயிலின் மதிற்சுவர்கள் ஓங்கி உயர்ந்து நிற்கின்றன. ஏன்? களவிலிருந்து காக்க அல்ல! தூசி, புழுதி இல்லாத காற்று கிடைப்பதற்காகத்தான்! புறத்தே உள்ள ஒலி அலைகளும் தாக்காமல் இருப்பதற்காகத்தான்! நாள்தோறும் ஒரு மணிநேரம் நல்ல காற்றைச் சுவாசிக்க ஒரு ஏற்பாடு! நாள்தோறும் ஒலி இரைச்சலிலிருந்து மீள ஒரு ஏற்பாடு!

உடல், உழைப்புக்காக உருவாகியது. உழைப்பு இல்லாத உடல், நோய்க்கு இரையாகும். திருக்கோயிலுக்குச் செல்லும் பழக்கத்தை மேற்கொண்டால் உடலுக்கு உழைப்புக்கிடைத்து விடும். பழங்காலத் திருக்கோயில்கள் நீண்டும் அகன்றும் உள்ள பிரகாரங்கள் உடையவை. மூன்று பிரகாரங்களையும் மூன்று தடவை வலம் வந்து கருவறையில் எழுந்தருளியுள்ள கடவுளை வழிபடச் செல்லவேண்டும். இங்ஙனம், மூன்று பிரகாரங்களையும் மூன்று தடவை வலம் வருவதால் சற்றேறக் குறைய மூன்று கிலோ மீட்டர் நடந்த பயன்

கிடைக்கிறது. ஒருமுறை சுற்றினாலும் ஒரு கிலோ மீட்டர் நடந்த பயன் கிடைக்கும் இது மட்டுமா?

மனிதனுக்குச் சிந்தனை மாற்றங்கள் எளிதில் வாரா என்பது உளஇயல் அடிப்படை உலகியலில் கிடந்துழலும் மனிதர்களின் மனம் மடைமாற்றம் பெறத் திருவருட்சிந்தனை பெரிதும் உதவும். மூன்று பிரகாரங்கள் வலம் வரும் பொழுது மெள்ள மெள்ள உள்ளம் மடை மாற்றம் பெற்று, கடவுள் எழுந்தருளியுள்ள கருவறைஅண்மையில் செல்லும் பொழுது ஆன்மா - ஆன்மாவின் உள்ளம் உணர்வு எல்லாம் திருவருட் சிந்தனையில் தோயும். இதனால், உளம்தோய்ந்த பக்தியில் ஆன்மா ஈடுபட முடியும்; ஞானமும் பெறும்!

இறைவன் சந்நிதியில் வழிபாடு செய்து கொள்ளுதல் நல்ல உள்ளப் பயிற்சி; சிந்தனைப்பயிற்சி; ஓர் ஆன்மா, எண்ணவும் சிந்திக்கவும் திறன் பெற்று விட்டால் வாழ்க்கையில் முன்னேறுவது உறுதி!

வழிபாடு முடிந்தவுடன் கடவுள் சந்நிதியில் நிலமிசை வீழ்ந்து வணங்குதல் வேண்டும். இங்ஙனம் நிலமிசை வீழ்ந்து வணங்குதல் தாண்டால் எடுப்பது போன்ற முயற்சி. நிலமிசை வீழ்ந்து வணங்கிய பிறகு, கைகளைத் தலைமீது உயர்த்தித் தொழுதல் வேண்டும். இதுவும் கைகளுக்குப் பயிற்சி. அடங்குதல், தாழ்தல் போன்ற நல்லியல்புகள் ஆன்மாவிற்குச் சித்திக்கும்.

கருவறையில் எழுந்தருளியுள்ள கடவுளுக்கு வழிபாடு. கருவறை அகலம் குறைவானது; குறுகிய வாயிற்படி உடையது. வேண்டிய அளவே ஒளி இருக்கும். அதாவது, கூர்ந்துகாண வேண்டிய அளவே ஒளி இருக்கும். இத்தகு கருவறையில் எழுந்தருளியுள்ள கடவுளை வழிபாடு செய்தால் கூர்ந்து கவனித்தல் பயிற்சி, கண்களுக்குக் கிடைக்கிறது. குறுகிய வாயில்வழி காட்சி நிகழ்வதால் ஒருமைப் படுதல், ஒன்றுதல் முதலிய நல்லியல்புகள் ஆன்மாவுக்குக் கிடைக்கின்றன.

திருக்கோயில் வழிபாடு முடிந்தவுடன் மூன்றாவது சுற்றில் உள்ள மண்டபத்தில் சமூகத்தினருடன் உட்கார்ந்து கலந்து பேச வேண்டும். இங்ஙனம் கலந்து பேசுவதால் மனக் கவலைகள் பறக்கின்றன; உறவுகள் வளர்கின்றன. சும்மாவா உட்கார்ந்து பேசுகின்றோம்? திருக்கோயில் பிரசாதங்களைச் சாப்பிட்டுக் கொண்டே பேசுகின்றோம். உறவுகலந்து உண்ணும் இனிய வாய்ப்புக் கிடைக்கிறது. திருக்கோயில் பிரசாதங்கள் நல்லசத்துள்ளவை; புரதச்சத்துள்ளவை. இதனால் உடல் உரம் பெறுகிறது.

இவ்வளவுக்கும் பிறகும் ஆன்மா பக்குவப்படக் களிப்பும் மகிழ்ச்சியும் தேவை. களிப்பும் மகிழ்ச்சியும் கிடைக்கும்படி பண்டையத் திருக்கோயில் கலைகள் உள்ளன. சிற்பம், ஓவியம், இசை முதலியவை உள்ளன. நல்ல இசை கேட்பதால் ஆன்மாக்கள் நைந்துருகிப் பக்குவப்பட முடிகிறது.

நம்முடைய திருக்கோயில்கள் சமுதாய நலன்களை மையமாகக் கொண்டே தோன்றின; வளர்ந்தன. சுற்றுப்புறச் சூழல் அடிப்படையிலேயே திருக்கோயில் அமைந்துள்ளது. திருக்கோயில் தோறும் திருக்குளம் வெட்டப்பட வேண்டும். நீரின்றி அமையாது உலகு! அடுத்துத் திருக்கோயில், மரங்கள் அடர்ந்த சூழலில் அமைந்த நிலை பழைய ஏற்பாடு. அரசவனம், கடம்பவனம் முதலிய வழக்குகளை நோக்குக! தலங்கள் தோறும் மரங்கள் வைத்து வளர்க்கப் பெறுதல் வேண்டும். மரங்கள் வளர்வதால் சுற்றுப்புறச் சூழ்நிலை பாதுகாக்கப்படுகிறது.

திருக்கோயில் வழிபாடு, அறிவியலில் தோன்றியது. திருக்கோயில் வழிபாடு அறிவால் வளர்ந்தது. திருக் கோயில்கள் அறிவியல் துறைகள் பலவற்றையும் வளர்த்து வந்துள்ளன; வளர்த்துக்கொண்டிருக்கின்றன. திருக்கோயில் வழிபாடு அறிவியல் சார்ந்த தொழில் நுட்பத்திற்கு எடுத்துக் காட்டு! வாழ்க, திருக்கோயில்கள்! வளர்க, திருக்கோயில் வழிபாடு!

**19**

# புராணங்களைப் புதுப்பிப்போம்

**(மார்ச்சு – 93)**

---

புராணம் என்ற சொல்லுக்குப் பொருள் பழைய வரலாறு என்பதாகும். தமிழ் மக்களுடைய வாழ்க்கை, நாகரிகத் தடத்தில் நடைபோடத் தொடங்கிப் பல்லாயிரம் ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. பல நல்ல கருத்துக்கள் — நீதி சமுதாய நீதி ஆகியவையும் சமயத் தத்துவங்களும் தமிழ் மக்கள் வாழ்வியலின் ஆக்கமேயாம். பல திருமேனி வழிபாடு முதலினவும் கூட வாழ்வியலைக்களமாகக் கொண்டே தோன்றின. காலப்போக்கில் இந்த உண்மைகளுக்குப் புனிதத் தன்மைகொடுக்கவேண்டும் என்ற நோக்கத்தில் நீதிகளும் தத்துவங்களாக்கப்பட்டன.

வாழ்வியல் உண்மைகள் தத்துவ வடிவம் பெற்ற நிலையில் பொது மக்களிடமிருந்து விலகிவிட்டன. இந்தச் சூழ்நிலையில் உயர்ந்த தத்துவங்களைப் பொது மக்களுக் கொண்டு செல்லவேண்டும் என்ற கருத்துத் தோன்றியது. அதனால் மக்களின் கல்வித் தரத்திற்கு ஏற்பத் தத்துவங் களுக்கு, புராண வடிவங்கள் தரப்பெற்றன. புராண வடிவம் பெற்ற காலம் பொது மக்களிடம் வாழ்வாங்கு வாழும்

விருப்பமும் தத்துவச் சிந்தனையும் அருகி வந்த காலம். புராணங்களிலிருந்து உண்மைகளை அறிந்துகொள்வதற்குப் பதிலாக அதிகமான பாத்திரங்களையும் பாத்திரங்களின் நிகழ்வுகளையுமே புரிந்து கொண்டார்கள். இதனால் புனைவுகளிடத்தில் மக்களின் புலன்கள் நின்றன. புனைவுகளைக் கடந்த தத்துவத்தைத் தொட இயலவில்லை. அவ்வழி சடங்குகளும் தோன்றின. காலப்போக்கில் வாழ்க்கையில் சின்ன சின்னச் செயல்களையே செய்து பழகிப்போனதால் செயற்கரிய செய்தலுக்குரிய எண்ணமும் உறுதியும் இல்லாமல் போய் விட்டது. நாயன்மார்கள் செய்த காரியங்கள் அற்புதங்களாகியதோடன்றி நம்மனோர்க்கு எட்டாதவை என்ற கருத்தும் தோன்றிவிட்டது.

பல புராணங்களின் கரு, வாழ்வியல் உண்மைகளை விளக்கும் தத்துவச் சிந்தனைகளைப் பாத்திரங்கள் வழி எளிதாக்குவதேயாம். ஆயினும் புராணங்கள் அனைத்துக்கும் இத்தகுதி உண்டெனக் கூற இயலாது. சேக்கிழார் அருளிச் செய்த பெரியபுராணம் மிகச் சிறப்புடையது. பெரியபுராணம் அற்புதமான ஒரு காப்பியம். சமுதாய மாற்றத்திற்குரிய வழியைக் காட்டிய காப்பியம். கடவுள், வாழ்த்துப் பொருள் மட்டுமல்ல; வாழ்வுப் பொருள் என்று காட்டிய இலக்கியம். பக்தி செய்தல், பாடுதல் ஆகியவற்றினும் கைத்திருத்தொண்டு செய்தல் சிறப்பு என்று உணர்த்திய காப்பியம். சாதி வேற்றுமைகளைக் கடந்த ஒருமை நலத்தை உணர்த்திய காப்பியம். சாதிகளை மறந்து சமய அடிப்படையில் ஒருமையை நிலைநாட்டிய காப்பியம். கடவுள், மனைகள் தோறும் நடமாடிய வரலாற்றை உருக்கமாகக் கூறும் காப்பியம். பெரிய புராணத்தில் வரும் அடியார்கள் இந்த வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தவர்கள். குறிக்கோளுக் காகப் போராடியவர்கள்; புகழ் பெற்றவர்கள்; நம்மனோர்க்கு சிறந்த வழிகாட்டிகள். மக்கள் சமுதாயத்தை மிகவும் அருமையுடையதாகிய குறிக்கோள் சார்ந்த வாழ்க்கை

நடத்தத் தூண்டி வழி நடத்துவதில் பெரியபுராணம் சிறந்து விளங்குகிறது.

பெரிய புராணத்தில் பாத்திரங்களாக வரும் அடியார்கள் அனைவரும் இந்த மண்ணில் பிறந்து வளர்ந்து வாழ்ந்தவர்களே! நிகழ்ச்சிகளை, படிப்போர் உளம் கொளக் கூறுவதில், சில பல புனைந்துரைகள் இருக்கலாம். ஆயினும் நாயன்மார்கள் வாழ்க்கை, வரலாறு என்பதை மறுக்கவும் இயலாது; மறக்கவும் கூடாது. பெரியபுராண அடியார் களிடம் குறிக்கோள் இருந்தது. அக்குறிகோளுக்காக உழைத் தார்கள். உறுதியுடன் உழைத்தார்கள்; ஓயாது உழைத்தார்கள். அதனால் வெற்றியும் பெற்றார்கள். கடவுட் காட்சியும் அவர் களுக்குக் கிடைத்தது.

இன்று நம்மனோரிடம் அவர்கள்பால் இருந்த குறிக் கோள் சார்ந்த வாழ்க்கையும் இல்லை; உறுதியும் இல்லை; உழைப்பும் கிடையாது. அதனால், அந்த அடியார்களுடைய வாழ்க்கை நமக்கு அருமையானதாக – எட்டாக் கனியாகத் தெரிகிறது. நாம் அந்த வரலாறுகளைப் படிப்பதோடு சரி! அந்த அடியார்களுடைய வாழ்க்கையின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வாழ்ந்திட – பணி செய்திட விரும்பி முயன்றால் நம்முடைய வாழ்க்கையில் பல அரிய பணிகள் செய்யலாம். அப்படி யாரும் முயற்சி செய்யாமையினால் புாரணங்கள் – கதை, கற்பனை, பொய், அவசியமில்லாதவை என்று சொல்லும் அளவுக்குச் சிலர் வந்துவிட்டனர். நாம் மீண்டும் புராணங்களைப் புதுப்பிக்க வேண்டும். அடியார்கள் செய்த பணிகளை அவர்களுடைய அடிச்சுவட்டில் செய்ய வேண்டும். அடியார்கள் இந்த மண்ணகம் சிறப்புறச் செய்து காட்டிய பணிகளைச் செய்யவேண்டும்.

சேக்கிழார் பெரியபுராணத்தில் வரும் பணிகளைச் செய்தால் நல்ல வீடுகள் விளங்கித் தோன்றும்; பலரும் ஒத்திசைந்து வாழும் சமுதாய அமைப்புத் தோன்றும்;

வேற்றுமைகள் குறையும். அன்பின்வழி உறவுமலரும்; ஒப்புரவு நெறி கால்கொள்ளும்; இந்த மண்ணகம் விண்ணகமாகும்.

நமது முன்னோர் சிறந்த முறையில் சமுதாய அமைப்பைக் கண்டு வளர்த்தனர்: பாதுகாத்தனர். ஊர் என்ற அமைப்பு அழகுற அமைந்தது. நடுவூரில் திருக்கோயில்! திருக்கோயில்கள் எடுப்பதற்கு முன்பு திருக்குளங்கள் அமைந் தார்கள். திருக்குளங்கள் திருக்கோயிலுக்குச்செல்வோர் தூய்மை செய்து கொள்ளப் பயன்பட்டன. அந்த ஊரில் நிலத்தடி நீரைப் பராமரித்துக் கொள்ளவும் துணைபுரிந்தன. இயற்கை வளத்தையும் சூழ்நிலையையும் திருக்குளங்கள் பராமரித்தன. திருக்குளம் அமைத்த பிறகு தல விருட்சங்கள் நட்டனர். தல விருட்சங்கள் ஒன்றல்ல; இரண்டல்ல. காடு களைப்போல வைத்து வளர்ந்தனர். அரசவனம், கடம்பவனம் என்ற வழக்குகளை உற்று நோக்குக. திருக்குளம் அமைத்துத் தல விருட்சங்கள் வைத்த பிறகுதான் திருக்கோயில் எடுத்தனர். திருக்கோயில் பலரும் வழிபடும் திருத்தலம். திருக்கோயில்கள் கடவுளை எழுந்தருளச் செய்வதற்காக மட்டும் தோன்றியவையல்ல திருக்கோயில் கடவுள் தலைமையில் சமுதாயம் கூடி வழிபாடு நிகழ்த்துவதுடன் நட்பில் கலந்து பேசி மகிழ்ந்து உறவாட வேண்டும் என்பதும் குறிக்கோள்.

தமிழ்நாட்டில் திருவாரூர் ஒரு பெரிய திருத்தலம். இத்திருத்தலத்தின் பழைமை குறித்து அப்பரடிகள் “முன்னோ? பின்னோ?” என்று ஒரு பதிகம் அருளிச் செய் துள்ளார். அப்பதிகத்தில் கடையூழிக் காலத்தில் ஒருவனாக நின்றது முன்னோ அல்லது பின்னோ? திருவாரூரைத் திருக்கோயிலாகக் கொண்டு எழுந்தருளியது முன்னோ அல்லது பின்னோ? மாதொருபாகன் ஆனது முன்னோ அல்லது பின்னோ? என்று வினா - விடையாகப் பாடியுள்ளார். சுந்தரமூர்த்தி நாயனாருடைய வாழ்க்கை வரலாறு திருவாரூரை மையமாகக் கொண்டே இயங்கியது.

திருவாரூர் வீதிகள் பரவை நாச்சியாரிடம் தூது சென்ற சிவபெருமானின் திருவடிப் போதுகள் தோய்ந்த பெருமை யுடையவை. திருவாரூர் திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரால் பாடப்பெற்ற திருத்தலம். அறுபத்து மூவரில் திருவாரூரை இடமாகக் கொண்டவர்கள் பலர்.

திருவாரூர் பசுவின் கன்றுக்காகத் தன் மகன் மீது தேரூரச் செய்து நீதி வழங்கிய மனுநீதிச் சோழன் ஆண்ட ஊர். திருவாரூர் தண்டியடிகள், நமிநந்தியடிகள், விறன் மிண்டநாயனார், செருத்துணைநாயனார், கழற்சிங்க நாயனார் இருந்து இன்ப அன்பு நிலை பொருந்தி இருந்த ஊர். நமிநந்தியடிகள் வரலாற்றினால்தான் இறைவன் "திருவாரூப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்" என்று சுந்தரரைச் சொல்ல வைத்தார். உயர் சைவ நெறியுடன் "தாழ்வெனும் தன்மையை" உலகிற்கு — நம்பியாரூரர் மூலம் உணர்த்திய பெருமை திருவாரூருக்கே உண்டு. சேக்கிழார் இயற்றியருளிய பெரிரயபுராணத்திற்கு முதல் நூலாகிய திருத்தொண்டத் தொகையை நம்பியாரூரர் திருவாரூரில் தான் பாடியருளினார். திருவாரூரின் பங்குனித் திருவிழா, திருமுறைகளின் சிறப்பாக இடம் பெற்ற திருவிழா! இங்ஙனம் பல்வேறு சிறப்புக்களையுடையது திருவாரூர்.

திருவாரூரிடையே திரு ஆரூர் அறநெறி என்று ஒரு சந்நிதி. திரு ஆரூர் மூலத்தானத் திருக்கோயில் இரண்டாம் பிரகாரத்திலேயே திரு ஆரூர் அறநெறி இருக்கிறது. இந்தச் சந்நிதியில்தான் புகழ்மிக்க நமிநந்தி அடிகள் நீரினால் திருவிளக்கேற்றினார். மேலும் பரவையுண் மண்டளி என்ற திருக்கோயிலும் இங்கு இருக்கிறது.

திருவாரூர்த் தேர் அழகானது. திருவாரூர்த் தேரோட்டம் புகழ்பெற்றது. திருவாரூர்த் திருக்குளம் **18 ஏக்கர் – 22367** ச.அடி பரப்பளவுடைய மிகப் பெரிய திருக்குளம்.

திருக் குளத்தின் பெயர் கமலாலயம். இத் திருக்குளம் வற்றியதே இல்லை என்பர்.

கி.பி. 6-ம் நூற்றாண்டுக்கு முன்பு திருவாரூரில் தண்டியடிகள் என்று ஒரு நாயனார் வாழ்ந்தார். இவர் பிறவியிலேயே கண்களை இழந்தவர். இவர் காலத்தில் திருவாரூர்த் திருக்கோயில் திருக்குளமாகிய கமலாலயம், சமூக நாகரிகம் தெரியாதவர்களால், திருக்குளத்தின் பயன்பாடு அறியாதவர்களால் குப்பைகள் கொட்டப்பட்டுத் தூர்ந்து போயிற்று என்ற செய்தி தண்டியடிகள் கவனத்திற்கு வந்தது. உடனே தண்டியடிகள் கவலைக்குரியவராகித் திருக்குளத் தூர் எடுக்க ஒரு மனப்பட்டார். கமலாலயத்திற்கு வந்தார். தூர் எடுக்க வேண்டிய இடத்தில் ஒரு கம்பை நட்டார். கரையில் ஒரு கம்பை நட்டார்; அந்த இரண்டு கம்புகளுக்கிடையே ஒரு கயிற்றைக் கட்டினார். பின் அந்தக் கயிற்றின் துணை கொண்டு கமலாலயத்திருக்குளத்துத் தூர்வையை அள்ளிக் கரையின் கொட்டினார். தண்டியடிகளின் உறுதிப்பாடான ஓயா உழைப்பை இறைவன் கண்டு உவந்து சோழ அரசினிடம் தண்டியடிகள் கருத்தையறிந்து முடித்துவைக்கும்படி அருளிச் செய்தார். கமலாலயம் தூர்வை யெடுத்துத்தூய்மை செய்யப்பெற்றது.

இன்று தமிழ்நாட்டில் பல திருக்குளங்கள் தூர்ந்து போய் உள்ளன; அல்லது தூய்மைக் கேடு அடைந்துள்ளன. திருக்குளங்களுக்குத் தண்ணீர் வரும் வரத்துக்கால்கள் தூர்ந்து போய் உள்ளன. பலஇடங்களில் வரத்துக் கால்கள் - போக்கு வாய்க்கால்கள் தூர்ந்து போய் உள்ளன; ஆக்கிரமிப்புக்குள்ளாகியுள்ளன. பொது நலத்தைக் கெடுத்து வாழும் மனோநிலை தமிழரைப் பற்றியது அண்மைக்காலத்திலேயேயாம். இதனால் சாலைகள் ஆக்கிரமிக்கப்படுகின்றன; திருக்குளங்கள் ஆக்கிரமிக்கப்படுகின்றன. இது வருந்தத் தக்கது.

*மயிலை, கபாலீசுவரர் திருக்கோயில் திருக்குளத்தில் தண்ணீரே இல்லை. இத்தனைக்கும் இந்த ஆண்டு நல்ல மழை பெய்தது. மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் தண்ணீர் கொண்டுவந்து நிரப்ப முயற்சி செய்தார். அதற்கும் எதிர்ப்பு வந்தது. தமிழ்நாட்டின் பல திருக்கோயில் திருக்குளங் களுக்கும் இதே நிலைதான். குறிப்பாக மதுரை மீனாட்சி யம்மன் திருக்கோயில் பொற்றாமரைக் குளம் வறண்டு கிடக்கின்றது. கமலாலயத்திற்கு வரும் தண்ணீருடன் வீடுகளின் கழிவு நீர் கலக்கிறது. கமலாலயமே தூய்மையாகப் பேணப்பெறவில்லை. பொதுச் சுகாதார உணர்வு நமது மக்களுக்கு என்று வருமோ?*

*இந்த அவலநிலையை நீக்க ஏன் தண்டியடிகள் நாயனார் அடிச்சுவட்டில் திருக்குளப் பணி செய்யக்கூடாது? இந்த அடிப்படையில் புராண வரலாற்றுக்குப் புத்துயிர்ப்புத் தரலாம் என்பது எண்ணம். எதிர்வரும் 21-3-93ல் தண்டிய டிகள் நாயனார் திருநாள் வருகிறது. ஆயத்தமாகுங்கள்! அவரவர் ஊரில் உள்ள திருக்கோயில் திருக்குளங்களைத் தூய்மை செய்வோம்! திருக்குளங்களுக்குத் தண்ணீர்வரும் வரத்துக்கால்களை ஆழப்படுத்துவோம்! கரை எடுத்துக் கட்டுவோம்! தூய்மை செய்வோம்! திருக்குளங்களைத் தூய்மை செய்வோம்!*

*இந்தப் பணியைச் செய்வதன் மூலம் திருக்கோயில் உள்ள ஊரில் சுற்றுப்புறச்சூழல் காப்பாற்றப்பெறும். குறிப்பாகக் காற்றில் ஈரத்தன்மை இருக்கும்; நிலத்தடி நீர் பரமாரிக்கப்பெறும். நல்ல பணி! தவறாமல் செய்யவேண்டிய பணி!*

*அனைவரும் பங்கேற்க வேண்டும்!*

# 20

# மரபுகளைக் காப்பது நமது கடமை

## "தினமணி" மதுரைப்பதிப்பு 18.11.94

இந்த நூற்றாண்டு, இயக்கங்கள், சங்கங்களின் நூற்றாண்டு என்று கூறலாம். இந்தப் போக்கின் விளைவு என்ன? எதிர் விளைவுகள் என்ன? என்பதை ஆராய்ந்தறிவது சமய, சமூகச் சிந்தனையாளர்கள் பொறுப்பும் கடமையு மாகும்; சங்கங்கள் - அமைப்பதும் எளிதான ஒன்று. அதனை நெறிமுறைப் படுத்துவதில் மிகுந்த இன்னல்கள் ஏற்படும். நமது சமூகம் உணர்ச்சி வசப்படும் இயல்பினது. நமது சமூகத்திற்குக் கோபமூட்டி விடுவது எளிது. ஆனால் அமைதி வழியில் அழைத்துச் செல்வது எளிதன்று. இன்றுள்ள சூழ்நிலையில் நாட்டின் அமைதியையும் ஒருமைப்பாட்டை யும் காப்பதே தலையாய கடமை.

நமது இந்து சமயம் ஒரு சமயமாகவோ மதமாகவோ தோன்றி வளர்ந்ததல்ல. நமது இந்து சமயம் ஒரு வாழ்க்கை முறை. சொல்லப்போனால் சைவம், வைணவம் என்று பல்வேறு பெயர்கள், காலப் பரிணாமத்தில் பெற்று விளங்கிய சமய நெறிகளே ஒருங்கிணைந்து இந்தியா என்று அடிப்படை யில், இந்து சமயம் என்று ஒன்றாக்கினர். இந்து சமயம் ஒரு

வாழ்க்கைமுறை. இந்து சமயம் ஒரு பிரசார சமயமாக இருந்ததல்ல; இருக்கவும் இயலாது. பௌத்த, சமண மதங்கள் தோன்றிய பிறகுதான் நமக்கு மத நிறுவனங்கள் தோன்றுகின்றன. வேதங்களும் கூட வழிவழியாக வந்தவையேயாம். எழுதி, மலிவுப் பதிப்பு என்று விளம்பரப்படுத்தி விற்றவையல்ல. இந்து சமயம் கடவுள் வழிபாட்டை உயிர்ப்பாகக் கொண்டது. இந்த அடிப்படையில் எழுந்த திருக்கோயில்கள் பலப்பல. திருக்கோயில்களே நமது சமய நாகரிகத்தின் அடித்தளம். திருக்கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்ற எல்லை அளவுக்கு நமது சமூக வாழ்க்கையில் திருக்கோயில்கள் இடம்பெற்றன.

திருக்கோயில்களில் ஆகமங்கள் - தந்திரங்கள் வழி நாள்தோறும் வழிபாடுகள் நடந்து வருகின்றன. ஆண்டில் சில சிறப்பு வழிபாடுகளும் திருவிழாக்களும் நடந்துவருகின்றன. இவைகளுக்கு என்று நெறிமுறைகள் மரபுகள் உள்ளன. பல நூற்றாண்டுகளாக இந்த நெறிமுறைகள், மரபுகள் முறை பிறழாமல் பின்பற்றப்பட்டு வருகின்றன. நாயன்மார்கள், ஆழ்வார்கள் இந்த மரபுகளை மீறாமல் பேணிக் காத்து நமக்கு அளித்துச் சென்றுள்ளார்கள். ஆனால் நாம் நமது விருப்பம் போல மரபு மாற்றவோ நீக்கவோ, முயன்றால், பலரும் பலவிதமாக எண்ணவும் மாற்றவும் முற்படுவர். முடிவாக ஒன்றுமே இல்லாமல் போய்விடும். அதனால், மரபுகளைப் பேணுதல் என்பது தவிர்க்க இயலாதது மட்டுமல்ல; அவசியமும்கூட.

சமயமும் சமய வழிப்பட்ட சமூகமும் ஒருங்கிணைந்து வலிவும் பொலிவும் பெற வேண்டுமாயின் மரபுகள் பின்பற்றப்பட வேண்டும். இங்கு நாம் மரபுகள் என்று குறிப்பிடுவது பழக்கங்களை - வழக்கங்களை மையமாக வைத்து மட்டும் அல்ல. சமய நெறியை பாதுகாத்து அரண் செய்யும் நூல்கள், வழிவழியாக அங்கீகாரம் பெற்ற நூல்கள், பல உள்ளன. கடைசியாக நமக்குக் கிடைத்தவை பன்னிருதிரு

முறைகளும், நாலாயிர திவ்வியப்பிரபந்தமுமாகும். இங்ஙனம் வரையறை செய்யப்பெற்றுப் பல நூற்றாண்டுகள் ஆகி விட்டன. அதற்குப் பிறகு அற்புதமான பல நூல்கள் தோன்றியுள்ளன. ஆயினும் பதின்மூன்றாவது திருமுறை என்று வரிசைப்படுத்தவும், ஐயாயிர திவ்வியப் பிரபந்தம் என்று வரிசைப்படுத்தவும் எவருக்கும் துணிவில்லை. காரணம் மரபில் இருந்த பிடிப்பேயாகும். "முன்னோர் சொல்லைப் பொன்னேபோல் காத்தல்" என்பது பொருள் சார்ந்த ஒழுக்கமாகும். ஆதலால், நமது திருக்கோயில்கள் காலத்தால் பழைமையானவே. காலந்தோறும் நமது சமூக முன்னேற்றத்திற்கும் ஒருமைப்பாட்டு நலத்திற்கும் துணை நின்றவை; துணை நிற்பவை. நமது சமூக நாகரிகம், நமது திருக்கோயில்களைச் சார்ந்தே வளர்ந்தன; வளர்ந்து கொண்டிருந்தன. இந்த மரபு வழி நிற்றல் என்ற நெறி நமது சமூகத்திற்குத் தேவை.

அலைகள் வேகமாக அடிக்கும்பொழுது கப்பலுக்கு நங்கூரம் அவசியம் தேவை. நாளும் நமது நாட்டில் பல்வேறு இயக்கங்கள், சிந்தனை அலைகள், இயக்க அலைகள் மோதுகின்றன. இந்தச் சூழ்நிலையில் நமது சமய வழிப்பட்ட சமூகத்திற்கு 'மரபு' என்ற நங்கூரம் அவசியமானது. இந்த நங்கூரத்தில் நமது சமூகம் நின்று - திருக்கோயில்களைச் சார்ந்து, குடிகளும், குடிகளைச் சார்ந்து கோயில்களும் வாழ்ந்து நமது நாகரிகத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். நமது வழிபடும் தெய்வமாகிய கடவுள் கூட மரபுகளை அரண் செய்தே தமது திருவிளையாடல்களை நிகழ்த்தியுள்ளார். நம்பியாரூரக்கும் சிவபெருமானுக்கும் இடையில் ஏற்பட்ட வழக்கைத் திருவெண்ணெய்நல்லூர்த் திருக்கோயிலில் இருந்த சபையே, கேட்டுத் தீர்ப்பளித்தது. நமது சமூகத்தின் மையம் திருக்கோயில். நமது சமூகத்தின் மேலாண்மை திருக்கோயில். திருக்கோயில் மரபுகள் வழிவழி யாகப் பின்பற்றக்கூடியவை. இந்த மரபுகளை மீறி நடப்பது

வரவேற்க இயலாத ஒன்று. அப்படியே மீற அனுமதித்தால் பலரும் மீறுவர் கடைசியில் நமக்கு என்று ஒன்றும் இருக்காது. நமது திருக்கோயில் மரபுகளும் சமூதாயம் நிலைகுலைந்து விடும்.

மிகப்பெரிய நிலையில் அடிவைக்கக்கூசிய இடத்தில் இன்றைய தலைமுறை புகுந்து விளையாடுகிறது. விமர்சன உலகம் எல்லைகளைக் கடந்து செல்கிறது. விளக்கங்கள், விளக்கையே கெடுத்துவிடும் போலத் தெரிகிறது. இந்தச் சூழ்நிலையில் நமது சமய நெறியிலும், நெறிவழிப்பட்ட மரபுகளிலும் நம்பிக்கை உடையவர்கள் சான்றோர்கள் மரபுகளைக் காப்பாவர்களாகவும், ஒருமை நலச் சிந்தனை யாளர்களாகவும் இருத்தல் அவசியம். சமய ஆர்வம், சமய வளர்ச்சியில் ஈடுபாடு, வரவேற்கத்தக்கதே! ஆயினும், இந்த ஆர்வம் மரபுகளைச் சார்ந்தே வளரவேண்டும். அதுவும் திருக்கோயில், திருக்கோயில் மரபுகளைக் காத்தல் என்பது விழுமிய கடமை. இந்த மரபு என்ற கற்களின் வரிசையில் ஒரு கல்லை இடையில் உருவினாலும் சுவர் முழுதும் மடமட என்று சரிந்துவிடும் இந்தத் தவற்றை நாம் ஊக்கமிகுதியால் செய்துவிடக்கூடாது.

திருக்கார்த்திகை ஒளி விளக்கு, திருவண்ணாமலையில் ஏற்றுவது என்ற மரபு தொடங்கியது. சிவன் ஒளி வடி வானவன். ஓங்கி உயர்ந்து அகன்று உள்ள சோதியினன் என்பது தத்துவம். நமது சமய நெறியில் ஒளி, உலகப் பொது! ஒளி நுழையாத இடம் இல்லை; ஒளியைப்பயன்படுத்தாத உயிர்க்குலம் ஒன்றுகூட இல்லை! அதுபோலவே, நமது சமயநெறியில்தான் தீ வேட்டல் (யாகம்) உள்ளது. ஐம்பெரும் பூதங்களில் தீ மட்டுமே தூய்மையானது; எந்தச் சூழ்நிலை யிலும் தூய்மையைக் காப்பாற்றிக் கொள்வது. நிலம், அழுக் கொடு சேர்ந்தால் அழுக்காகும். காற்று, துர்நாற்றத்துடன் சேர்ந்தால் துர்நாற்றம் வீசும். ஆனால் தீ - நெருப்பு அழுக்கொடு சேர்ந்தால் தன்னைச் சேர்ந்த பொருளையும் தூய்மை செய்யும். தன்னையும் தூய்மை கெடாமல்

பாதுகாத்துக் கொள்ளும். இந்தத் தத்துவத்தின் விளக்கமாக, கார்த்திகை மாதக் கார்த்திகையில் ஒளி விளக்கேற்றுவது, சொக்கப்பனை கொளுத்துவது என்ற மரபுகள் தோன்றின.

தமிழ்நாட்டில் எல்லாத் திருக்கோயில்களிலும் ஒளி விளக்கேற்றுகின்றனர். வீடுகள் தோறும் விளக்கேற்றுகின்றனர். மலைக்கோயில் உள்ள ஊர்களில் மலைத்திருக்கோயிலும் விளக்கு ஏற்றுகின்றனர். திருவிளக்கு ஏற்றும் இடம், ஏற்றுவோர், ஏற்றும் நேரம் ஆகியன எல்லாம் நியதி செய்யப் பெற்றுள்ளன; நமது முன்னோர்களால் திருக்கோயில்களில் இன்று வரை பல்வேறு மாற்றங்கள் நாட்டில் ஏற் பட்டபோதிலும் மரபு மாறாமல் நடந்து வருகின்றன. அந்த மரபுகளை அப்படியே காப்பாதுதான் நமது கடமை!

திருப்பரங்குன்றத் திருத்தலம், சங்ககாலத்திலிருந்து புகழ்பெற்று வளர்ந்து வந்துள்ள திருக்கோயில்; தமிழ்நாட்டு மக்களின் ஆர்வம் நிறைந்த பத்திமைக்குரிய திருக்கோயில். இத்திருக்கோயில் வழிவழி வரும் மரபுகள் வழி இன்றுவரை நடந்து வந்துள்ளது. இனிமேலும் நடக்கவேண்டும். திருக் கோயில் மரபுப்படி திருக்கோயிலில் விளக்கேற்றுவது என்பது தான் முறை. 'இந்த மாதிரி நிகழ்வுகளில் நாம் தனிப்பட்ட முறையிலோ கூட்டாகவோ தலையிடுதல் என்பது விரும்பத் தக்கதல்ல. காலப்போக்கில் திருக்கோயில் மரபுகளை – சமூக நியதிகளை எளிதில் கடக்கலாம் என்ற உணர்வு பலருக்கும் தோன்ற வாய்ப்பளித்துவிடும். இது வரவேற்கத்தக்கதல்ல. திருப்பரங்குன்றம் திருக்கோயிலின் மரபு வழி மலை விளக்கு ஏற்றுவர் என்று நம்புகின்றோம். தமிழ் மக்கள் திருக்கோயில் களையும், திருக்கோயில் மரபுகளையும் காக்கத் துணை நிற்பர் என்ற நம்முன்னணியினரின் ஆர்வத்தை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால், வரவேற்க இயலவில்லை வரலாற்றுப் பிழையாகி விடுமோ என்ற அச்சம்.

"நன்றாற்ற லுள்ளும் தவறுண்டு அவரவர்
பண்பறிந்து ஆற்றாக் கடை".

# 21

# மனித குலத்திற்குத் தொண்டு செய்வோம்:

மனிதகுலம் தோன்றிப் பலநூறாயிரம் ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. மனித குலத்தின் சென்ற கால வரலாற்றில் சாதனைகள் பலப்பல உண்டு. அச்சாதனைகள் புவிக்கோளத்தை வளர்ந்தன; பேணிக்காத்தன; புவியை நடத்தி வந்துள்ளன. எத்தனை எத்தனையோ கொடிய போர்கள் நடந்த பின்னும் புவியில் பல்லுயிர்கள் - குறிப்பாக மனிதர்கள் வாழ்ந்து கொண்டிருப்பது வியப்புமட்டுமல்ல; அபூர்வமான செயல்திறன்.

மனிதர்கள் இந்த உலகைக் கூர்ந்து நோக்கவும் சிந்திக்கவும் தொடங்கிய நாளிலேயே சமயங்கள் தோன்றி விட்டன. இந்த உலக வரலாற்றில் எண்ணற்ற மதங்கள் தோன்றியிருந்திருக்கின்றன. அவற்றுள் சில மதங்கள் வழக்கத்தில் இல்லை. மிகவும் தொன்மையான கிரேக்க மதக் கலாசாரங்கள் இப்போது வழக்கில் இல்லை. ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மனித நாகரிகமும் சமயமும் சிறந்த முறையில் இடம் பெற்றிருந்தன.

மதங்கள் மக்களை இணைத்து வைக்கும் சாதனமாக ஒரு காலத்தில் விளங்கின. மதங்கள்தான் முதன்முதலில்

மனித நேயத்தைக் கொள்கையாக — கோட்பாடாக ஏற்றுக் கொண்டு உலகந்தழீஇ வாழும் இலட்சியத்தை அறிமுகப் படுத்தின. மதங்களின் குறிக்கோள் உயிர்க்குல ஒருமைப் பாடே! அண்ணல் காந்தியடிகள் "ஒரு மனிதனை இன்னொருவரிடமிருந்து பிரிப்பதற்காக மதங்கள் ஏற்பட வில்லை. மனிதர்களைச் சேர்த்து வைப்பதுதான் அவற்றின் நோக்கம்" என்று கூறினார். அருட்பிரகாச வள்ளலார்,

"எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணி யுள்ளே
ஒத்துரிமை யுடையவராய் உகக்கின்றார்
யாவர்அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடம்என நான் தேர்ந்தேன்"

என்று கூறியருளினார்.

இந்தப் பரந்த உலகின் ஜனசமுதாயத்துடன் ஒத்து வாழ நெறிமுறைகளை வகுத்து ஓதும் மதங்களே உண்மையில் சிறந்த மதங்கள். நீண்டநெடிய வரலாற்றுப் போக்கில் சமூகத்தில் தோன்றும் உளைச்சல்கள், இயலாமை, தேக்கம் ஆகிய காரணங்களால் இந்த மண்ணுலகத்திற்கு ஏற்படும் இழப்பை ஈடுசெய்து நாள்தோறும் உலகத்தைப் புதுப்பித்து இயக்குவது மதத்தின் வேலை. இந்த உலகின் வளர்ச்சியில் மாற்றங்களில் ஆர்வம் காட்டாதுபோனால் உலகம் தேங்கிப் போகும். நமது உலகம் முன்னேறி வருகிறது; அறிவு விசாலமாகிறது. 5000 வருடங்களுக்கு முன் தோன்றிய மதங்கள்கூட இன்றும் நின்று நிலவுகின்றன. உலகின் பல்வேறு மதங்களைக் கண்ட தீர்க்கதரிசிகள் என்றும் ஏற்றொழுகக் கூடிய அறிவுரைகளை வழங்கியுள்ளனர். இந்தியாவிலும், உலகிலும் நின்று நிலவும் மதங்களைப் போற்றி ஏற்று ஒழுகுவோமாக; இந்த உலகம், போர்கலகங்களால் அழிந்து போகாமல் நிலை பெறச் செய்ய உத்தம தீர்க்கதரிசிகளை — மதங்களைக் கண்ட மாமனிதர்களை நினைந்து போற்று வோமாக!

இன்று இந்தியாவிலும் சரி, உலகிலும் சரி பலநூறு மதங்கள் நிலவுகின்றன. வரலாற்றுக்கு முந்திய ஷிண்டோ ஹூப்ரு மதங்களைப் பின்பற்றுவோரும் உள்ளனர். ஆயினும் உலகில் இந்து மதம், பௌத்த மதம், சமண மதம், கிறிஸ்துவ மதம், இசுலாம் மதம் ஆகியன புகழ்பெற்ற மதங்கள். பலகோடி மக்களால் பின்பற்றப்படுபவை. இந்த மதங்கள் அனைத்தும் ஒருகுரலாக "மனிதநேயம்! மனிதகுல ஒருமைப்பாடு" என்றே பேசுகின்றன.

இந்த உலகின் தொன்மையான மதங்களுள் மிகவும் பழமை வாய்ந்தது இந்து மதமே. இன்றைக்கு 5000 ஆண்டுகளுக்கு முந்தையது; சற்றேறக்குறைய 50 கோடி மக்கள் பின்பற்றி வரும் மதம். உண்மையைச் சொன்னால் இந்து மதம் ஒரு மதமே அல்ல. இந்து மதம் ஒரு வாழ்க்கைமுறை. இந்த மதக் கோட்பாடுகள் கெட்டிதட்டிப் போனவையல்ல; நெகிழ்ந்து கொடுப்பவை. மற்ற மதநெறிகளையும் ஏற்று ஒழுகுவதற்கு அங்கீகரித்தது இந்து மதம் மட்டும்தான்; இந்த மதம் உலகின் எந்த ஒரு சிந்தனையையும் ஏற்கும். அது போல வழிபாட்டு முறைகளையும்கூட ஏற்றுக்கொள்ளும். இந்த சமயம் காலந்தோறும் மாறிமாறி வளர்ந்து வந்திருக்கிறது என்பது மாபெரும் உண்மை. அதனாலேயே இந்தியா பல்வேறு மதங்கள் தோன்றவும் பலமதங்கள் சங்கமமாகவும் இடமளித்து வந்துள்ளது. இனியும் இடம் கொடுக்கும். பாரதி வாக்கில் இந்த மதத்தின் கொள்கை.

> "ஒன்று பரம்பொருள் நாம் அதன் மக்கள்
> உலகின்பக் கேணி"

என்று ஒலிக்கிறது.

இந்தியாவில் தோன்றிய மதங்களில் இன்று தென்கிழக்காசிய நாடுகள் முழுவதும் பரவலாகப் பரவுயுள்ள மதம் பௌத்தமேயாகும். பௌத்த மதத்தைக் கண்டவர் புத்தர் பிரான். பௌத்தமதம் தோன்றிய காலம் சற்றேறக்குறைய 2500 ஆண்டுகளுக்கு முன்போகும். ஒரு

பேரரசராகிய புத்தர் துக்கத்தில் துயரத்தில் கிடந்துழலும் மக்களைக் கண்டு வருந்தி முடியைத் துறந்து போதி மரத்தடியில் அமர்ந்து ஞானத்தை உணர்ந்தார்.

இன்று உலகில் நிலவும் மிகப்பெரிய மதம் பௌத்தமதம். தூயதுறவில் முகிழ்த்த மதம். சற்றேறக்குறை 75 கோடி மக்கள் பின்பற்றுகிறார்கள். உலக வரலாற்றில் போரற்ற உலகம், துறவு ஆகிய சிந்தனைகளைத் தோற்றுவித்து வளர்த்த பெருமை பௌத்தத்திற்கு உண்டு. "பகைமையினால் பகை போகாது. தன் வேரைத் தானே கல்லாதே!" என்று உபதேசிக்கிற பௌத்தம் இந்த உலகிற்கு அணியாகும்.

உயிர்கொண்டு உலாவும் எந்த ஒன்றுக்கும் தீங்கு செய்யாதே என்று அறிவுரை வழங்கியது சமண சமயம். சமண மதத்தைக் கண்டவர் மகாவீரர். சமண மதம் தோன்றி 2600 ஆண்டுகளாயின. சமண மதத்தின் பேரறம் கொல்லாமையேயாகும். "ஒன்றாக நல்லது கொல்லாமை" என்று திருக்குறள் கூறுகிறது. "விரோதி என்பதாக ஒருவரைப் படைத்தில்லாதவனே வீரன்" என்ற சமணம் மனிதகுலத் திற்குக் கிடைத்த பெரிய அரண்.

அடுத்து நம்முடைய கவனத்திற்கு வருவது கிறிஸ்தவ மதம். 1950 ஆண்டுகளுக்கு முன்பு கிறிஸ்தவ மதம் இயேசு பெருமானால் நிறுவப்பெற்றது. இன்று கிறிஸ்தவ சமயம் பெரும்பான்மையான உலக மக்களால் பின்பற்றப்படுகிறது. இன்றைய உலகில் கிறிஸ்தவமதம் சேவை மதமாகப் புகழ் பெற்று விளங்குகிறது. ஏசுநாதர்,

"தீமைக்குத் தீமை செய்யவேண்டாம். ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தைத் திருப்பிக் காட்டு! பகைவர்பாலும் மெய்யன்பு கொள்ளுங்கள். உங்களைப் பகைப்பவருக்கும் நன்மை செய்யுங்கள்" என்று போதித்தார். சமாதானம் செய்து வைப்பவர்கள் பாக்கியவான்கள்' என்று ஏசு அருளிச்செய்துள்ளார். இன்றைய சூழ்நிலைக்கு ஏசுபிரான் அருளிச் செய்துள்ள அறிவுரைகள் மருந்தென விளங்குகின்றன. துன்புறுவோருக்கு உதவுவதைக் கடமை

என்று ஏசு அறிவுறுத்தியுள்ளார். இன்றைய சூழ்நிலைக்கு ஏசு மதம் மிகவும் ஏற்புடைய ஒன்றாக விளங்குகிறது.

இன்று உலக நாடுகளில் கவனத்தை ஈர்க்கும் மதம் இஸ்லாம். 1300 ஆண்டுகளுக்கு முன் நபிகள் நாயகம் பெருமானால் காணப்பெற்றது இஸ்லாம் சமயம். அராபிய சமுதாயத்தில் ஒளி விளக்கேற்றிய பெருமை நபிகள் நாயகத்திற்கே உண்டு. "ஒரே கடவுள்" என்ற கொள்கை வழி அராபிய சமுதாயத்தை ஒன்றுபடுத்தினார். வாழ்க்கையைத் தழுவி நிற்கும் மதம். செல்வம் புறக்கணிக்கப்படக்கூடியதல்ல என்று துணிந்து சொன்ன மதம் இஸ்லாம் மதமாகும். நபிகள் நாயகம் அவர்கள் அளவற்ற அருளாளனாகிய இறைவன் உணர்த்த அருளியது திருமறை குர்.ஆன்.

"மனிதர்களிடம் இரக்கமில்லாதவர்களிடம் அல்லாவுக்கு இரக்கம் கிடையாது" என்ற நபிகள் நாயகத்தின் திருமறைவாக்கு நினைந்து நினைந்து உணரத்தக்கது.

உலகச் சமயங்கள் என்று நிற்கும் ஐந்து பெரிய சமயங்களைக் கண்டோம்! சமயங்கள் அனைத்தும் ஒரே ஆதார சுருதியில் பேதமின்றிப் பேசுகின்றன. கடவுள் ஒருவரே! "ஒருவனே தேவன்" என்றார் திருமூலர். "கடவுளைத் தவிர வேறு கடவுள் இல்லை" என்ற முகம்மது நபியின் வாக்கும் உணர்க. மனிதகுல வாழ்க்கையில் நட்பும் உதவியும் முக்கியம். சமுதாய உறவில் நட்பே முதன்மையானது. இதனை உணர்த்தவே நம்பியாரூரருக்குச் சிவபெருமான் நண்பரானார்; தோழரானார். மீண்டும் புத்தரின் அருள்வாக்கு நினைவிற்கு வருகிறது. தீமை செய்யாமை; நன்மை மிகுதியாகச் செய்தல்; அன்பும் அருளும் கொள்ளுதல். ஆகிய பௌத்தநெறிகள் ஒவ்வொரு மனிதருக்கும் ஒழுக்கக் கோட்பாடுகளாகும். இஸ்லாம் என்ற சொல்லுக்குப் பொருள் சமாதானம். சகோதரத்துவம் என்பதேயாகும். இன்றைய உலகத்திற்கு அமைதி தேவை. மக்களுடைய வாழ்க்கை மேம்பாட்டிற்காகத் தோன்றிய மதங்கள் ஏன் இன்று அதைச் செய்வதில் வெற்றியடைய வில்லை. மதங்கள் நிறுவனங்களாகி விட்டதால் 'கெட்டி'

தட்டிப் போய்விட்டனரா? இன்று மனித வாழ்க்கை முற்றிலும் மாறுபட்டுவிட்டது. உலகம் விரைந்து மாறி முன்னேறிவருகிறது. மதங்கள் தோன்றிய காலத்திலிருந்த பிரச்சனைகள் வேறு; இன்றைய பிரச்சனைகள் வேறு. புரிந்து கொள்ள மதங்கள் முன்வரவில்லையா? அல்லது முடிய வில்லையா? மனித உலகம் புதிய காற்றைச் சுவாசிப்பதில் மதம் தடையாக இருக்க விரும்புகின்றதா? இந்த உலகத்தின் நடப்பியல்புகளைப் புரிந்து கொண்டு உலகம் அழியாமல் — மனிதப்பூண்டு அழிந்து ஒழியாமல் நிலைநிறுத்தக்கூடிய மதமே இன்று வேண்டும்.

இன்று என்ன தேவை? இலட்சிய சமுதாயம் தேவை. மாந்தருக்கு இலட்சியத்தை எடுத்துக் கொடுத்து வழிநடத்திச் செல்லுகின்ற மதமே இன்று தேவை. இன்று மதம் தத்துவங்கள் பற்றி விவாதிக்காதீர்கள். மதங்கள் விவாதங் களைக் கடந்தவை. மதங்கள் அனுபவத்திற்கும் செயலுக்கு மட்டுமே உரியவை. இவர் தேவர்! அவர் தேவர் என்று வழக்காடுவதும் மதங்களுக்கிடையில் உயர்வு—தாழ்வு கற்பிப் பதும் ஒன்றுக்கும் உதவாத வேலை. பயனற்றது மட்டுமல்ல. அசோகர் ஸ்தூபியில் செதுக்கிவைத்த வாக்கியத்தை நினைவு கூர்க. "மற்றவர் மதங்களைக் கண்டிக்காதே" என்பதே அந்த மகாவாக்கியம்.

மனித உலகத்திற்கு அன்பையே போதிக்கும் மதமே நமக்குத் தேவை! உலகம் ஒரு குடும்பம் என்று அணைக்கும் மதமே இன்று தேவை. கடவுளை நம்புவோம்! மனிதகுலத் திற்குத் தொழும்பாய்த் தொண்டு செய்வோம்! எந்த விலை கொடுத்தும் சமாதானத்தையும் சகோதரத்துவத்தையும் காப்போம்!

இந்த உயரிய நோக்கங்களுடன் திருவருள் பேரவை இயங்குகிறது. திருவருள் பேரவையின் பணி இன்றைய இந்தியாவிற்குத் தேவை! அனைவரும் சேர்ந்து ஆக்கம் தரும்படி கேட்டுக் கொள்கின்றோம்.

**எல்லா உலகமும் ஆனாய் நீயே.**

## 22

# ஆன்மிகம்

### சமயம் 4–2–95

ஆன்மிகம்! இந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்தில் மக்களிடத்தில் பரவலாகப் பேசப்பெறும் ஒரு செய்தி! நமது மாண்புமிகு முதலமைச்சர், தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் ஆன்மிகக் கல்வி தரப்போவதாக அறிவித்திருக்கிறார்கள். அந்த ஆன்மிகக் கல்வியில் பிரபந்தங்கள், புராணங்கள் கற்பிக் கப்பெறும் என்றும் அறிவித்திருக்கிறார்கள். முதலமைச்சர் அவர்களின் நல்லெண்ணத்தை, ஆன்மிகத்தில் உள்ள ஈடுபாட்டைப் புரிந்து கொள்ள முடிகிறது. நன்றி! பாராட்டு! வாழ்த்துக்கள்!

ஆனால், இன்று ஆன்மிகம் எப்படி இருக்கிறது? ஆன்மிகம் என்றால் என்ன? இவை எல்லாவற்றையும் ஆராய வேண்டும். தேவாரம், திவ்வியப் பிரபந்தங்கள், புராணங்கள் கல்வி எல்லையைக் கடந்தவை. அவை பழுத்த மனத்தடியார் அனுபவிக்கத்தக்கவை. இவைகளைக் கற்கும் கல்வித் தரத் திற்குக் கொண்டுவருவது கடினம்.

மானிட சமுதாயத்தை இரண்டு கத்திகள் உந்திச் செலுத்தி வந்திருக்கின்றன. அவற்றுள் ஒன்று பலவந்தம்.

மற்றொன்று மதம். ஆனால், இப்போது இரண்டுமே பலவீன மடைந்துவிட்டன. மதம், அனுட்டிப்போராலும் முறையாக அனுட்டிக்கப்படுவதில்லை. தனக்கு மக்களிடத்தில் உள்ள பிடிப்பை — சக்தியை இழந்துகொண்டு வருகின்றது. இந்த இழப்பு உள்ளீட்டழிவாகும். வெளிப் பார்வையில் மதம் செழித்து வளர்வது போலத்தான் தெரிகிறது. பல ஆலயங் களில் குடமுழுக்கு விழாக்கள் நடைபெறுகின்றன. நாளும் புதிய புதிய கோயில்கள் தோன்றுகின்றன. ஏன்? நாளும் புதுப்புது சாமியார்களும் தோன்றுகின்றனர். கிரிமினல் வழக்குகளும் வளர்கின்றன. மதத்தை எதிர்ப்போர் மதத்தின் உள்ளடக்கத்தைக் காணத் தவறுகின்றனர். அதனால் எதிர்த்து அழிக்க முற்படுகின்றனர்.

ஆயினும் மதத்தின் குறிக்கோள்கள் வளராது போனாலும் எப்படியோ மதம் வளர்கிறது. ஆண்டு தோறும் பல்லாயிரம் கணக்கானவர்கள் ஐயப்பன் மலைக்குப் போகின்றனர்; பழநிக்குப் பாதயாத்திரை போகின்றனர். மதம் சடங்காக உடலோடு கூடிய பழக்கமாக வளர்ந்து நிற்கும் நிலையில் பொய்மையானவை அழிக்கப்படவும் இல்லை; திருத்தப்படவும் இல்லை. உண்மையை — மத நெறியைக் காணும் முயற்சியும் காணப்படவில்லை. உண்மையான மதத்திற்கு நேர் எதிராக வெகுதூரம் விலகிப்போன நிலையில் சான்றோர்கள் 'ஆன்மிகம்' என்ற சொல்லைக் கண்டனர்.

ஆன்மிகம் என்ற சொல் காரல்மார்க்ஸ், லெனின் சித்தாந்தங்களிலும் கூடப் பயன்படும் ஒரு சொல். ஆன்மிகம் என்பது ஆன்மாவின் — உயிரின் தரத்தை வளர்த்துக் கொள்ளுதல். 'நான்', 'உள்ளம்', 'ஞானம்' என்ற மூன்றும் இணைந்து வளர்ந்த ஒன்றே ஆன்மிகம்.

உயிர் இயங்கவேண்டும். இயங்கிக்கொண்டேயிருக்க வேண்டும். ஓர் உயிர் இயங்கினால்தான் பெரும் பேறடைய "ுடியும். மனித உடலுக்குள் உள்ள உயிர் அல்லது ஆத்மா

பூரண வளர்ச்சி பெறவேண்டும் என்பதே ஆன்மிகத்தின் குறிக்கோள். இன்று இந்த ஆன்ம வளர்ச்சியை — பூரண வளர்ச்சியைச் சிந்தனை செய்கின்றவர்களே அருகிவிட்டனர். எங்கும் பிரார்த்தனைகள் கூடத் தன்னலத் தொடர்புடையதாகவே நடத்தப்படுகின்றன. இலாபம் பார்த்தல், இவறிக்கூட்டுதல் ஆகியன இன்றைய மனித உலகத்தின் இலட்சியங்களாகவிட்டன. இதன் காரணமாகப் பலர், பல ஆன்மாக்கள் அழகு உணர்ச்சி, அன்பு செய்தல், ஈதல் ஆகிய நற்பண்புகளை இழந்துவிட்டு வெறும் 'அகந்தை' யுடையவர்களாகவே காட்சியளிக்கின்றனர். சூரபதுமன் வரலாறு முடிந்ததாகத் தெரியவில்லை; தொடர்கிறது.

இன்று எங்கும் நிலவி வரும் உணர்வு, ஒருமைநிலை உணர்வு அல்ல. "நாம் வேறு; பிறர் வேறு" என்ற உணர்ச்சியே வளர்ந்து வருகிறது. சாதி, மதம், இனம், அரசியற் கட்சிகள் இவற்றுக்கு இடையில் வளரும் வேற்றுமை உணர்வுகளையும் அவைகள் மனிதத்தை, மனிதப் பண்பாட்டை அரிமானம் செய்து வேற்றுமைப் படுத்தி வரும் அநாகரிகத்தையும் காண, கேட்க நெஞ்சு பொறுக்கவில்லையே! ஆத்திரம்தான் வருகிறது. மனிதன் இன்றுள்ளதுபோல என்றுமே வேற்றுமைப் பட்டதில்லை; அந்நியப்பட்டதில்லை. ஒரோவழி, மனத்தாலும் உடலாலும் துன்புறுத்தி இணைப்பை ஏற்படுத்தினாலும் அஃதொரு வழிப்பட்ட அடிமைத்தனமாகவே இருக்கிறது; விளங்குகிறது;

இன்றைய மனிதன் விருப்பப்படி நடப்பதுதான் சுதந்திரம் என்று அறிந்து வைத்துள்ளான். பாவேந்தன் கூறியதைப்போலத் தன் பெண்டு, தன் பிள்ளை என்ற கடுகுப் புத்தியுடையவர்கள் எண்ணிக்கை மிக மிக உயர் நிலையிலிருந்து அடிமட்டவரையில் பெருகி வளர்ந்து வருகிறது. இதைக் காட்டுமிராண்டித்தனம் என்று கூடக் கூறலாம்.

தாங்களே முக்கியம். தாங்களே வாழவேண்டும். தங்களுக்குச் சமூகத்தில் எந்தவிதப் பொறுப்பும் இல்லை என்று வாழ்பவர்களின் எண்ணிக்கை பெருகி வளர்கிறது. இவர்கள் மக்கள் அல்லர்; மாக்கள்! மனித உருவில் நடமாடும் விலங்குகள். இத்தகைய மனிதர்கள் மனம் மாறி மனித சமுத்திரத்திற்குள் குதித்து ஒருவரையொருவர் புரிந்து கொண்டு இருவரும் அல்லது பலரும் கைகோத்துக் கரையேறுவதே வாழ்க்கையின் சுதந்திரம்; இலட்சியம். ஆன்மா — உயிர் இத்தகைய பரிபக்குவத்தை அடைதலே ஆன்மிகம். சுதந்திரம் என்பது தூய்மையானது. அதாவது நம் ஒவ்வொருவருடைய சுதந்திரமும் ஆன்ம சுதந்திரமும் சமுதாயத்தையே சார்ந்து நிற்கிறது; வளர்கிறது. உலக வரலாற்றைக் கூர்ந்து நோக்கின் ஒவ்வொரு சுதந்திர வரலாறும் இந்த உண்மையைக் கூறுகிறது. மனித சமூகத்தையே பரம்பொருளாக விசுவ புருஷனாகக் கண்ட பெரியவர்கள் உண்டு. மக்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்பது முக்கியமல்ல. மக்களுக்கு நன்மை செய்வதே உண்மையான இலட்சியமாக இருக்கவேண்டும். மனிதன் மக்களுக்கு நன்மை செய்வதன் மூலமாவே தான் மிருகமல்ல; மனிதன் என்பதை உணர்த்துகின்றான்.

மனிதன், தனிமனிதனாக வாழும் வரை முன்னேற்றம் இல்லை. அவனுடைய ஆன்மாவும் முன்னேறாது. மனிதன் சமூகத்தில் கலக்கவேண்டும். மானிட சமுத்திரத்தில் சங்கமமாக வேண்டும். நீர்த் திவலைகள் கடலுடன் கலந்து ஒன்றாகியிருக்கும்போதே கடல் என்ற மதிப்புக் கிடைக்கிறது. அதுபோலத்தான் மனிதனும் சமூகத்திற்குள் கலந்து சமூகத்தில் ஓர் உறுப்பினனானால் அவனது ஆன்மா முழுமை பெறுகிறது.

ஆன்மாவின் அறிகருவிகள் நான்கு. அவை மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியன. இவற்றுள் மிகவும் சக்தி வாய்ந்தது மனம். மனம், தண்ணீரைப்போல எப்போதும்

சலனமாக அசைந்துகொண்டேயிருக்கும். உடல் தயவில்லா மல் கூட பயணம் செய்து கொண்டேயிருக்கும். "சென்ற விடத்தால் செலவிடாது", "மனத்துக்கண் மாசிலன் ஆதல்", "மனமே உனக்கென்ன வாய்?" என்ற ஆன்றோர் வாக்குகளை எண்ணுக. நெருப்பை எண்ணெய் விட்டு அணைக்க முடியுமா? அதுபோலத்தான் ஆசைகளிலும் கெட்ட எண்ணங்களிலும் உழலும் மனத்தை அடக்கமுடியாது. ஏன்? மனித வாழ்க்கையில் எந்தப் புலனையும் பொறியையும் சராசரி மனிதனால் அடக்கவே இயலாது. அறிவார்ந்த நிலையிலும் பூரண ஞானத்துடன் பொருந்தாத கட்டுப்பாடு, உண்மையான கட்டுப்பாடு ஆகாது. பாசி படர்ந்த தண்ணீரில் விழுந்த கல், சற்றே பாசியை விலக்கியதை ஒத்ததுதான்! பூரண கட்டுப்பாடுகள் வராமையின் காரண மாகத்தான் நமது மதப் பழக்க வழக்கங்களில் மடமைத்தனம் அதிகமாயுள்ளன. வேதங்களையும் உபநிடங்களையும் தேவாரங்களையும் திவ்வியப் பிரபந்தங்களையும் படிக் கின்றோம். ஆனால் அவைகள் காட்டும் திசையில் நமது வாழ்க்கையை நாம் நடத்துவதில்லை. எப்படியோ மீண்டும் மீண்டும் பழக்கம் வழக்கம் என்ற அடிப்படையில் மடமைத் தனங்கள் ஆட்கொண்டு வருகின்றன.

ஆத்மா "அகத்தை"ச் சுழல வைத்துக்கொண்டிருக் கிறது. அகத்தையுடைய மனிதன், மற்றவர்களையும் வாழ்விட மாட்டான். அகத்தைப் பரிபூரணமாக நீங்கிய வாழ்க்கையே ஆன்மிக வாழ்க்கை. அகந்தைக்கு மாற்று அன்புதான்! தாழ் வெனும் தன்மையோடு தொண்டு செய்து எல்லா உயிர் களிடத்திலும் அன்பு செலுத்தினால்தான் வாழ்வு நிறை வாகும். அன்பு, ஒன்று தான் துன்பங்களையும் துயரங் களையும் எல்லைகளையும் கடந்து நிற்கும். தியாகங்கள் செய்ய அன்பு தேவை. இந்த அன்புக்காக ஏங்கிய கடவுளர் கூட வைகுந்தத்தையும் சொர்க்கத்தையும் துறந்துவிட்டு மண்ணுக்கு வந்தனர். நாம் தொழும் கடவுள்கள் கூட

மனிதர்களாக நடமாடினர். மனிதனின் ஆன்மா, ஆண்டவனின் தீப ஒளியாய் விளங்க வேண்டும். இத்தகைய ஆன்மிகக் கல்வியை, ஆன்மிக ஞானத்தை அல்லது ஆன்மிகத்தில் சிறந்தாரைத் தேடித்தான் காணவேண்டும்.

ஆதலால், ஆன்மிகக் கல்வி என்ற பெயரில் தேவார, திவ்வியப் பிரபந்தங்களையும் புராணங்களையும் முதல் நிலையில் மாணவர்களுக்கு அறிமுகப்படுத்த இயலாது. இவை உயர்ந்த ஞான அனுபவத்தின் பொழிவுகள். இவற்றை அனுபவிக்க தனி ஞானம் வேண்டும்.

இப்போதே பள்ளியில் உள்ள பாடப் புத்தங்களில் தமிழ், ஆங்கிலப் பாடங்களில் ஆன்மிக வளர்ச்சிக்குரிய பாடங்கள் உள்ளன. அவற்றை முறையாகக் கற்றுக் கொடுத்தலே ஒரு நல்ல பணி. பள்ளிகளில் நீதிபோதனைக்கு என்று ஒரு வகுப்பு ஒதுக்கப்பெற்றுள்ளது. அந்த வகுப்பு இப்போது நடப்பதே இல்லை. அந்த நீதி போதனை வகுப்பை முதலில் ஆன்மிகக் கல்விக்குப் பயன்படுத்தலாம். திருக்குறள், ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலிய நூல்களும் மார்க்கஸ் அரோலியஸ், ஜேம்ஸ் ஆலன், சோக்ரதர், விவிலியம், குர்—ஆன், கீதை முதலியனவும் முதலில் ஆன்மாவைப் புரிந்து கொள்ள உதவி செய்யும்; ஆன்மாவை மெள்ளத் தன்னிலை யில் உய்த்துச் செலுத்திப் பழக்கும். அதோடு பள்ளியாக இருப்பதால் ஆன்மிகக் கல்வியை ஒழுக்கமாக்கிக் கொள்ள நிறைய வாய்ப்புக்கள் உண்டு. ஆன்மிகம் என்பது ஆன்மா வின் தரத்தை உயர்த்தவதேயாகும். இந்த முயற்சியை, ஆன்மிகப் பண்ணைகளாக விளங்கும் திருக்கோயில்களில் தொடங்குவதைவிடப் பள்ளிகளிலேயே தொடங்குவது நல்லது. அதற்குத் தேவையான நிதி உதவிகளைத் திருக் கோயில்கள் செய்யலாம். இதனை மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் சிந்தனையில் கொள்ளவேண்டும் என்பது நமது விருப்பம்.

23

# அவாவை நீத்தல் எப்படி?

## முன்னுரை

வாழ்க்கை வாழ்வதற்கே! வாழ்க்கையின் தேவைகள் நிறைவேறினாலே வாழமுடியும். தேவைகள் ஆசைகள் இல்லாமல் நிறைவேறுமா? ஆசைகளை நீக்கி வாழ எல்லாரும் என்ன துறவிகளா? துறவிகளில்கூட ஆசையை விட்டவர்கள் இன்று யார்? இன்றைய துறவிகள் விளம்பரம், பெருமை, இவற்றில் சராசரி அரசியல் வாதிகளை விடக் கூடுதலாகவே ஆசைப்பட்டு அலைகிறார்கள்; திரிகிறார்கள். இந்தச் சூழ்நிலையில் ஆசையை அகற்றுவது எப்படி? இப்படி ஓர் உரத்த சிந்தனை!

வாய்த்துவிட்டது வாழ்க்கை! வாழ்ந்தேயாக வேண்டும்! தப்பித்து ஓடுதல் இயலாது. இயன்று ஓடினாலும் கோழைத் தன்மையாகும். தற்கொலை செய்து கொள்ள மனம் இல்லை. ஒரோவழி மனம் வந்தாலும் அறநெறி ஏற்காது; ஆட்சியின் காவலும் ஏற்காது. ஆதலால் வாழத் துணிதலே புத்திசாலித்தனம்; நன்றும் கூட!

வாழ்வதற்குப் பொருள்கள் தேவை. "பொரு ளில்லார்க்கு இவ்வுலகமில்லை!" என்பது திருக்குறள். வாழ்

வாங்கு வாழ எண்ணற்ற நுகர்பொருள்கள் தேவை. பொருள்களை விரும்பி அடைந்து அனுபவித்து வாழ்வதுதானே வாழ்க்கை. பொருள்களை விரும்புவது அவாவா? ஆசையா? பொருள் இல்லையாயின் வாழ்க்கையே இல்லையே! அப்படியானால் அவற்றை விரும்புவது தவறா? இல்லை! இல்லை! தேவைக்கு விரும்புவது ஆசையல்ல. எந்தப் பொருளையும் தேவைக்கு விரும்புவது ஆசையல்ல. தேவைக்காக அல்லாது சொத்தாக ஆக்க விரும்புவது ஆசை.

பொருள், வாழ்க்கையை நடத்த ஒரு தேவை. தேவைக்காக விரும்புவது — தேடுவது அறம். வாழும் நெறியும் கூட! அங்ஙனம் இன்றி — துய்ப்பனவும் உய்ப்பனவும் இன்றிச் சேமித்தலுக்காகப் பொருள்களைத் தேடுதல் ஆசை; குற்றம். இத்தகு ஆசை அறவே தீது. பொருள் ஒரு கருவியேயன்றி வேறு தகுதி அதற்கு இல்லை.

இந்த உலகம் பரந்தது. பலரிடம் பல பொருள்கள் இருக்கலாம். அவை, அவர்களின் தேவையாக இருக்கலாம். அல்லது ஆரவாரத் தோற்றத்திற்காகவும் வைத்திருக்கலாம். நமக்கு அப்பொருள்கள் தேவையில்லை. நமக்கு ஏன் அப்பொருளின் மீது ஆசை? அப்படியே ஆசைப்பட்டாலும் அப்பொருளை அடைவதற்குரிய தகுதியும் நம்மிடம் இல்லை. ஏன் ஆசை?

பொருள்கள் நுகர்வுக்காக, நுகர்வுக்காக மட்டுமே! அங்ஙனமின்றி மற்றவர்கள் மதிக்க வேண்டும் என்று சிலர் பொருள்களின்மீது ஆசைப்படுவானேன்? ஆளுமை இல்லாத பொருள் சார்ந்த பெருமை எதற்குப் பயன்படும்? ஒன்றுக்கும் ஆகாது.

ஆசை, எரியும் நெருப்புப் போன்றது. குடி, பிறப்பு, மானம் எல்லாவற்றையும் அழிக்கும். ஆசைக்கு வெட்கம் இல்லை! நாணம் இல்லை. ஆசை எப்போதும் தற்சார்பானது.

பிறர் நலம் நாடும் பாங்கு ஆசைக்கு இல்லை. எவருடைய நலனையும் பலியிட்டு ஆசை அடைய முயலும்.

ஆசை — பேராசை. இவ்விரண்டக்கும் இடையே அப்படியொன்றும் பெரிய வேறுபாடு இல்லை. ஆசையே எரியும் தீ நாக்குப் போன்றதுதான். உலக வழக்கில் மனம் நிறைவு பெறாத ஆசையைப் பேராசை என்று கூறுகின்றோம். ஆசையின் இயல்பு. ஆசைப்பட்டதை எப்படியும் அடைய வேண்டும் என்பதேயாம். ஆசை நன்மை — தீமை, நீதி — அநீதி, நியாயம் — அநியாயம், இன்பம் — துன்பம் ஆகிய எவற்றைப் பற்றியும் நோக்காது. ஆசைப்பட்டதை அடைந்தே தீர்வது என்று வாழ்வதே ஆசையில் இயல்பு.

ஆசைப்படாமல் வாழ முடியமா? முடியாது. ஆனால், விரும்பி ஏற்கத்தக்க ஆசை எது? விரும்பி ஏற்க இயலாத — வெறுக்கத் தக்கது எது? வாழ்க்கையை இயக்குவது ஆசையே! ஆயினும் தேவையை விரும்பி அடைய முயற்சி செய்தல் நியாயமான ஆசை! அதேபோழ்து தேவைகள் கட்டுப் படுத்தப்பட்டிருக்க வேண்டும். பிறருக்குப் பயன்படுவன வற்றை அவர்ளுக்குப் பயன்படாமல் தன்னிடம் முடக்கும் ஆசை தவறு! தவறு!

ஆசை, அலைகடலின் அலைகளைப் போல வளரும். எண்ணெய் வசப்பட எரி நெருப்புப் போலப் பற்றி எரியும். "ஆரா இயற்கை" என்றது திருக்குறள். நலத்துடன் வாழ்வதற் குரியன தவிர விரும்பாமை வேண்டும். வாழ்வின் தேவைகள் கூட வேண்டாமையே! வாழ்தல் வேறு; சுகம் வேறு.

எந்த ஒன்றின்மீது ஆசை வருகிறதோ, அந்தப் பொருளின்றி, வாழமுடியாதா என்று எண்ணினால் ஆசைப் படுபவை வேண்டாம் என்றே அடிமனம் கூறும். எவ்வளவுக் கெவ்வளவு பொருள்களிலிருந்து விலகுகிறோமோ அவ்வள வுக்கவ்வளவு துன்பம் குறையும்.

*"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்*
*அதனின் அதனின் இலன்" — குறள்.*

அடுத்து, அவாவை நீக்குதலுக்குரிய வழி! பொருள்கள் வாழ்க்கையில் தேவை என்ற அளவில் மட்டுமே கருதுதல். அதற்குமேல் அந்தப் பொருள்கள் மேல் அளவு கடந்த மதிப்பைக் கூட்டி அப்பொருள்களுக்காக வாழ்தல் இல்லை அல்லது அப்பொருள்கள் இன்றேல் வாழ்க்கை இல்லை என்று கருதாமல் வாழ்வதும் அவாவை நீக்குதற்குரிய வழி.

அடுத்து, மனிதர்களிடத்தில் ஆசை வைப்பது. மனிதர்களிடத்தில் ஆசை வைக்கவேண்டும். ஏன்? நாம் ஆசை வைக்கும் மனிதர்கள் மீது நமக்கு ஏன் ஆசை? நமக்கு வேண்டுவன செய்வார்கள் என்று எண்ணி ஆசைப்படுவது தவறு! மற்றவர்களை அவர்களுடைய நன்மைக்காக ஆசைப்படுவது தவறல்ல. இன்று பலர், நண்பனை நேசிக்கிறார்கள். நண்பனுக்காக அல்ல. தனக்காகவே மனைவியை நேசிக்கிறார்கள். மனைவிக்காக அல்ல. தனக்காகவே நேசிக்கிறார்கள்; ஆசை காட்டுகிறார்கள். இது தவறு. பிறரிடம் பிறர் நலங் கருதி ஆசை காட்டத் தொடங்கினால் ஆசை அகலும். ஏன் திருமூலர்.

*"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்"*

என்றருளிச் செய்த பாங்கு அறிக. எத்தை ஈசனிடம் ஆசை காட்டுவோர் இன்று யாருளர்? அவரவர் விருப்பங்களை நிறைவேற்றுபவர்களிடம் ஆசை காட்டிச் சென்று பேரம் பேசுவோர் பலர். அன்புநிறைந்த கண்ணப்பரைப் போல, ஈசனிடமே ஆசை காட்டுவோர் சிலரே! பிறர் நலம் எண்ணுந் தொறும் ஆசை அகலும்" அவா அகலும்!

# 24

# மெய்கண்டார் விழா முதன்மையுரை

இந்திய வரலாற்றில் தத்துவ விசாரனை என்பது மிகத் தொன்மைக் காலத்திலிருந்தே வரும் ஓர் அறிவியல் பயிற்சி. தத்துவ சோதனை, தத்துவமசி என்ற வழக்குகள் இந்திய நாட்டின் வரலாற்றொடு இணைந்தவை. 'தத்துவம்' என்றால் உள்பொருள் எனப்படும். உள்பொருள்களை, அவற்றின் உள்ளீட்டை, பரிணாமத்தை, பயன்பாட்டை உய்த்தறிந்து உணர்தல்தான் தத்துவ சோதனை. தமிழ்நாடு தத்துவத் துறையில் மெய்ப்பொருளறிவில் சிறந்திருந்தது. இந்திய மெய்ப் பொருள் நெறிகளில் எல்லாம் தமிழகத்தின் சித்தாந்தநெறி விழுமியது. ஐயங்களின்று நீங்கியது; நம்பிக்கைக்குரியது; வாழ்க்கைக்கிசைந்தது.

தமிழொடு பிறந்து வளர்ந்த நெறி சித்தாந்த நெறி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் மெய்கண்டார் இந்தச் சித்தாந்தச் சிவநெறி, மற்ற நெறிகளிலும் எவ்வாறு விழுமியது என்று அளவைகளால் நிலைநிறுத்தினார். ஆதலால், மெய்கண்டார் சைவ சித்தாந்தச் செந்நெறியைக் கண்டவர் அல்லர். மெய்கண்டார் சைவ சிந்ததாந்தத்தை சிவஞான போதம் என்ற ஞான நூல்வழி கட்டமைப்புச் 'செய்தார்.

ஏனைய சமயங்களுக்கும் சைவத்திற்கும் உள்ள ஒரே வேறுபாடு சைவத்தில் எளிதில் ஊடுருவல் செய்ய இயலாது என்பதுதான். சிந்தையில் தெளிந்த ஞானிகளால் காணப் பெற்றது சிந்தாந்த சைவம். மூன்று பொருள்கள் என்றும் உள்ளவை. இந்த மூன்றாவன: இறை, உயிர், தளை என்பன. இந்த மூன்றனுள் இறையை இந்தியச் சமயங்கள் பலவும் உலகச் சமயங்களும் ஏற்றுக் கொள்ளும். ஆனால் சிந்தாந்தம் இறையின் இருப்பு, தொழில் முதலியவற்றை ஐயத்திற்கிட மின்றி விளக்குகிறது. இறை – கடவுள் ஒன்றே ஒன்றுதான். கடவுள் ஒருவரே. அவருக்கு உருவமில்லை. உருவம் இல்லாமலும் இல்லை. அவருக்கு ஊர் பெயர் கிடையாது. அதேபோழ்து ஊர், பெயர் இல்லாமலும் இல்லை, இயல்பாகக் கடவுளுக்கு உருவம் இல்லை. ஆட்கொண்டருள் செய்தலுக்காகக் கடவுள் அருவுருவ, உருவத்திருமேனிகளை எடுக்கின்றான். கடவுள் வரம்பிலாற்றல் உடையவன். ஆதலால், அவனால் எந்த உருவத்தையும் தன்னுடைய இயல்பாகிய பூரணத்துவத்திற்கு யாதொரு குறையும் வராமல் எடுக்க இயலும். கடவுள் மனம், வாக்குகளைக் கடந்தவர். ஆயினும் ஆன்மாக்களின் நலன் கருதி ஆன்மாக்கள் நடத்தும் வாழ்க்கையில் வழிநடைத் துணையாகப் பருவங்களில் பருவங்களுக்கிசைந்த பாத்திரப் பண்பில் நின்றருளிச் செய்யும் தனித்துணையாம் தன்மையை,

அப்பன்நீ அம்மைநீ அன்புடைய மாமனு மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ ஒருகுலமும்
சுற்றமும் ஓருரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ துணையாய்
என்நெஞ்சம் துறப்பிப்பாய் நீ
இப்பொன்நீ இம்மணி நீ இம்முத்து நீ! இறைவன்நீ
ஏறூர்ந்த செல்வன் நீயே!

என்று அப்பரடிகள் அருளிச் செய்துள்ளமையால் அறிக.

முப்பொருள்களுள் அடுத்து இருப்பது ஆன்மா — உயிர். இந்தியத் தத்துவ ஞானங்களில் எல்லாம் சித்தாந்தச் செந்நெறியின் 'ஆன்மா'க் கொள்கை தெளிவானது. ஆன்மாக்கள் பல; பலப்பல; ஆன்மாக்கள் படைக்கப்பட்டன அல்ல. ஆன்மாக்களுக்கு — உயிர்களுக்குத் தோற்றமும் இல்லை; அழிவும் இல்லை; ஆன்மாக்கள் கடவுளைப் போலவே என்றும் உள்ளவை. "என்று நீ அன்று நான்" என்பார் தாயுமானவர். ஆன்மாக்கள் என்றும் உள்ளவை யென்றால் இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் என்ன உறவு? கடவுளுக்குப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில்கள் ஏன்? இந்த ஐந்து தொழில்கள் யாரை முன்னிட்டு நிகழ்த்தப் பெறுகின்றன? கடவுள் ஆன்மாவின் வாழ்க்கைப் பயணம் தோறும் தேவைக்கேற்ப உறவுவைத்து ஆட்கொண்டருள்கின்றான். ஆன்மாக்கள் அறிவும் செயலும் முடங்கி ஆணவத்தினுடன் அறியாமையில் கட்டுண்டு கிடக்கும்போது தாயிற்சிறந்த தயாவுடன் உயிர்களுக்கு நுண்ணுடலையும், அறியாமை நீக்கத்திற்குரிய வாழ்நிலையில் — வாழ்ந்திட, துய்ப்பன துய்த்து உய்யுமாறு உய்தி பெறுதலுக்குரிய உடம்பினையும் பொருத்தல் **படைப்பு.** அறியாமை நீங்கும் காலம்வரை, பொருத்திய நுண்ணுடலை உயிர் தாங்கிப் பயன்பெறச் செய்தல் — **பாதுகாத்தல்.** அறியாமைக்கு அரண் செய்யும் துரிசுகளை அழித்தல், உயிர் அதன் பழைய நிலையை உணராது **மறைத்து வைத்தல்,** வாழ்க்யில் வாழ்க்கையின் போகத்தில் ஆன்மாக்களுக்கு விருப்பத்தை உண்டாக்குதலும் **மறைத்தல்.** ஆன்மாக்களை — உயிர்களை முற்றாக அறியாமையினின்றும் மீட்டு முழுமையுறச் செய்து இன்ப அன்பில் நிலைபெறச் செய்தல் **அருளுதல்.** ஆன்மாக்களுக்கு கடவுள் வாழ்க்கையில் ஆண்டவன் அடிமையில்லை. உடையார் — இல்லார் இல்லை. பேதமில்லை. இதுவே உண்மையான சமயம். சித்தாந்தச் சமயம்.

பிற்காலத்தில் சமயநெறிகள் தடம்புரண்டு உடைமை, பணம் ஆகியவற்றின் தடத்தில் நடந்து சுரண்டும் சமுதாயத் திற்கு அனுசரணையாக இருந்து வேற்றுமைகளை வளர்த்து இந்தப் புவிக்கோளை இரத்தத்தால் கழுவி நகரத்தைப் படைத்த கொடுமைகளையும் மறந்து விடுவதற்கில்லை.

ஆயினும் இன்னமும் மனிதம் வளர, நம் நாட்டின் சமய ஞானம் துணை செய்யும், துணை செய்யவேண்டும் என்ற நம்பிக்கை இருக்கிறது. இந்த நம்பிக்கை வெற்றிபெற சிந்தனையாளர்கள், செயல் வல்லுநர்கள் துணை செய்யவேண்டும்.

இந்த வாழ்க்கை அழுவதற்காக அல்ல. சென்ற காலத்தில் அழுதது போதும். சென்ற காலத்திலிருந்து விடுதலை பெறவேண்டும். முன்னே தோன்றிய பழைமை யைப் பின்னர்ப் புதுமையாக்கி வாழ்க்கையைப் பயனுடைய தாக்கப் பயன்படுத்துதல் வேண்டும். உயிர்கள் குறைவிலாது வாழ்வதற்குரியனவாகச் செய்தாக வேண்டும். மாந்தரிடத்தில் தோழமைப் பண்பை வளர்க்க வேண்டும். இதனை இன்றைய சமயம் செய்தால் எதிர்காலம் உண்டு.

# 25

# தமிழ் நெறியும்—லெனினியமும்

லெனினியம், எதையும் அறிவின் அடிப்படையில் எதார்த்த உணர்வோடு ஆராய்ந்து முடிவெடுப்பதாகும். இரண்டும் இரண்டும் நாலு என்று விடை வருவதைப் போல் எந்த ஒன்றையும் அறிவில் ஆராய்ந்து அனுபவரீதியாக முடிவெடுக்க வேண்டுமென்பது லெனினியத்தின் அடிப் படை விதி. லெனினியம், "விரிந்தும் பரந்தும் கிடக்கின்ற இந்த உலகம் இயற்கயையானது" என்கிறது. இந்த உலகத்தைப் படைத்த—இந்த உலகத்திற்கு அப்பாற்பட்ட இன்னொரு சக்தி உண்டென்பதை நம்புவதில்லை. இல்லை. நம்ப மறுக்கிறது! அதோடு. "இந்த உலகம் ஒரு மாதிரியாக இல்லை; வேறுபட்டுக் கிடக்கிறது; முற்றிலும் முழுமைபெற்றுப் பக்குவமாக இல்லை; அது வளர்கிறது; மாறி வருகிறது; முற்றிலும் இன்பமாக இல்லை: துன்பக் கலப்பு இருக்கிறது. இந்தக் காரணங்களால் உலகம் இயற்கையோம்." என்பது லெனினியத்தின் தத்துவங்களுள் ஒன்று.

தமிழிலக்கிய மரபுகளைப் பொறுத்தவரையில் இந்த உலகம் பற்றிய கருத்து ஒரு மாதிரியாக இல்லை. காலத்திற்குக் காலம் மாறுபாடுகிறது. ஒரு நூலுக்குள்ளேயே கூட இரண்டு விதக் கருத்துக்கள் பேசப்படுகின்றன. உலகம் இறைவனால்

கு·XII.32.

படைக்கப்பெற்றது என்ற கருத்தும் உதவுகிறது; உலகம் இறைவனுடைய திருவருள் நோக்கால் மாயையில் தோன்றியது என்பாருமுளர். இறைவனே உலகம் என்றும் உலகமே இறைவன் என்றும், பேசப்பட்டு இருக்கிறது. எது எப்படியிருப்பினும் உயிர் வர்க்கங்கள் கடவுளால் படைக்கப் பட்டவையல்ல என்று தமிழ்ச் சமய மரபு அறுதியிட்டுக் கூறுகிறது. இங்ஙனம், தமிழிலக்கிய மரபில் பல குரல் உலகத்தைப் பற்றிய கருத்தில் ஒருமைப்பாடில்லாது போனாலும் உலகம் கடவுளால் படைக்கப்பட்டதன்று. உலகம் தானே தோன்றியது. இந்த உலகத்தின் இயக்க ஆற்றலைக் கடவுளாகவே கருதினார்கள் என்ற கருத்து லெனினியத்துக்குச் சார்பாக அமைந்திருக்கிறது. பொதுவாக இந்தக் கருத்தே வலிமை பெற்றும் வளர்ந்து வந்திருக்கிறது.

சங்கத் தமிழ் நூல் ஐங்குறுநூறு ஒரு சிறந்த இலக்கியம். ஐங்குறுநூற்றின் கடவுள் வாழ்த்து ஓர் இனிய பாடல். அந்தப் பாடல்,

"நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே!

என்பது உலக உயிர்கள் பரிணாம வளர்ச்சிக்கு ஆணும் பெண்ணும் இயைந்த கூட்டு வாழ்க்கை இன்றியமையாதது. அவ்வழித் தோன்றும் உயிர்த் தோற்றமே இயற்கை. அஃதில்லாத பௌராணிகத் தோற்றங்கள் அறிவியலுக்கும் ஒத்தன அல்ல; இயற்கையோடும் இயைத்தனவாகா. அத்த கைய அநாகரிகப் படைப்புகள் பேதைமைத் தன்மையின் படைப்புகளேயாம். அதனால், உலகிற்குக் கடவுளைத் தந்தையாகக் கருதிய தமிழ், அவனை மங்கை மணாளனாகக் கண்டது. ஆனால், அந்தப் படைப்பு தத்துவப் படைப்பே யாம். பருவுடல் வழிப்பட்ட பால்படைப்புமன்று கூட்டு மன்று.

இதனை மேற்கூறிய "நீலமேனி" என்ற பாடலில் "தாள்நிழற்கீழ்" என்பதால் அவன் தாளாண்மையில் தோன்றிற்று உலகம் என்றும் கூறலாம். ஆயினும், ஆசிரியர் 'முகிழ்ந்தன' என்று கூறுவதால் அவனுடைய தாளாண்மையால் தோன்றிற்று என்று பொருள்கொள்ள முடியவில்லை. காரணம், 'முகிழ்த்தன' என்ற சொல் தன்வினைச் சொல்லே பிறவினை அன்று. ஆதலால், உலகம் இறைவனுடைய தண்ணளியின் நிழலில் தானே தோன்றிற்று என்று கொள்ளுதலே சிறப்புடைய பொருளாகும். உலகம், தானே தோற்றிற்று என்ற லெனினியத்தோடு இந்தக் கருத்து இசைந்திருக்கிறது. தமிழ் இலக்கண நூலுள் ஒன்றாகிய புறப்பொருள் வெண்பா மாலையும் இந்த அடிப்படையிலேயே உலகத் தோற்றத்தைப் பற்றிப் பேசுகிறது. அதாவது.

"வையகம் போர்த்த வயங்கொலிநீர்—கையகலக்
கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்த குடி"

என்பது பாடல். இந்தப் பாடல் மூலம். உலகம் நீர்ப்பரப்பாக முதலில் இருந்தது. பின்பு பரிணாம வளர்ச்சியில் கல் தோன்றிற்று. கல் கரைந்தும் உடைந்தும் மண்தோன்றுதற்கு முன்பு தமிழினம் தோன்றிற்று என்று விளங்குகிறது. 'கல்தோன்றி மண் தோன்றி' என்ற சொற்களில் மூலம் நானே தோன்றிற்று எனபதே பெறப்படுகிறது. 'தோன்றுதல்' என்ற சொல்லும் தன்வினைச் சொல்லேயாம்.

அப்பரடிகள் "இறைவன் உலகத்தைப் படைத்தான்" என்று ஒரேவழி கூறியிருந்தாலும், மிகுதியாக 'இறைவனே உலகம்' என்ற கருத்தும், உலகமே இறைவன் என்ற கருத்தும் தான் அப்பரடிகள் திருமுறையில் அதிகம் பயிலுகிறது. இறைவன் படைக்கப்பட்டவன் அல்லன். ஆதலால், உலகமே இறைவன் என்ற கருத்தால் உலகம் படைக்கப்பட்ட தில்லை என்பதும் பெறப்படுகிறது. **"எல்லா உலகமும் ஆனான்"** என்றும்.

"அனைத்துலகும் ஆனானை" என்றும், "உலகமெல்லாம் ஆயவனை" என்றும், "உலகானானை" என்றும் அப்பரடிகள் அருளிச் செய்துள்ளார்கள். சிவநெறியில் சிவலிங்க வழிபாடே தொன்மை வழிபாடு. சிவலிங்க வழிபாட்டின் பரிணாம வளர்ச்சி. இறைவன் உலகமாக இருக்கிறான் என்ற அடிப்படையிலேயே தோன்றி வளர்ந்து வந்திருக்கிறது. சிவலிங்கத் திருமேனியின் 'பாணம்' உலகத்தின் சின்னமே யாகும். இறைவன் உலகமாக இருக்கிறான் என்பதைவிட அப்பரடிகள் 'எல்லா உலகமும் இறைவனானான்' என்றே குறிப்பிடுகிறார். ஆனால், உலகத்தை இறைவனாகக் கருதி வழிபாடு தோன்றிற்றென்றும் பொருள் கொள்ள வழியிருக் கிறது. இங்ஙனம் ஆராய்ந்து பார்க்கும்பொழுது உலகம் பற்றிய கருத்தில் லெனினியத்திற்கும், தமிழிலக்கிய மரபிற்கும் மிகுதி யும் முரண்பாடில்லை.

உலகம் படைக்கப் பட்டதன்று; இயற்கையானது என்ற செய்தியை முன்னால் ஆராய்ந்தோம். அந்த வகையில் லெனினியத்துக்கும் தமிழ் மரபுக்கும் முரண்பாடின்மையை யும் கண்டோம். ஆயினும், இந்த உலகத்தின் இயக்கம்—மாறுதல்—வளர்ச்சி ஆகிய தொழிற்பாடுகளைப் பற்றி நாம் ஆராய வேண்டியதிருக்கிறது. இந்த உலகத்தின் தொழிற் பாட்டில் ஓர் ஒழுங்கும் முறை பிறழாத நிகழ்ச்சியும் இருப்பதைக் காண்கிறோம். இந்த ஒழுங்குமுறை உலகத்திற்கு எப்படி கிடைத்தது? அஃதும் இயற்கையா? உலகம் சடப் பொருளா? அல்லது உயிர்ப் பொருளா? அல்லது இரண்டும் கலந்த பொருளா? சடப் பொருளுக்கு மாறுதலும் வளர்ச்சி யும் உண்டா? என்ற ஏராளமான வினாக்களுக்கு விடை காண்பதில் உலகிடை நிலவும் தத்துவங்கள் அனைத்தும் முரண்படுகின்றன. சிசரோ என்ற பேரறிஞன், இந்த உலகத்தின் நிகழ்வு முறைகளில் மனிதனுடைய சக்திக்கு அப்பாற்பட்ட செயல் முறைகளைப் பார்க்கிறோம். உலகத்தின் நிகழ்வுகளில் ஒரு மாறா முறைவழிப்பட்ட

நிகழ்ச்சியையும் (order), ஒழுங்கு பெறாத நிகழ்ச்சியையும் (In Consistent) பார்க்கிறோம். நிச்சயமாக இவைகளுக்கு மனிதன் காரணமாக இருக்க முடியாது. மனிதனை விட மேம்பட்ட தொன்றாகத்தான் இருக்க வேண்டும். அது கடவுளையன்றி வேறு யாதாக இருத்தல் கூடும்? என்று கூறுகிறார்.

பகுத்தறிவு படைத்த மனிதனை விட இயற்கை ஒரு வகையில் ஒழுங்காகவே இயங்குகிறது. அதிதமாகச் சில சந்தர்ப்பங்களில் இயற்கையின் சீற்றத்தால் துன்பங்கள் விளையினும், பொதுவாக, இயற்கை அழகாக இருக்கிறது. ஆக்கப்பாடுடையதாக இருக்கிறது. உயிரினங்கள் பலவற்றிற் கும் வாழ்வளிக்கிறது. இயற்கையின் எழில் தோற்றத்திலும் அதன் விளைவுகளை நுகர்தலிலும் உயிரினம் வாழ்ந்து கொண்டிருக்கிறது. நாட்காட்டிகள் கடிகாரங்கள் முதலியன வைத்தறியாத இயற்கையுலகம் காலத் தவறாது செயற்படுகிறது! கதிரொளி தெரிகிறது! மரங்கள் பூக்கின்றன; காய்க்கின்றன; கனி தருகின்றன! இவை நிகழ்வதில் ஒரு குறிப்பிட்ட காலவமைப்பு முறையிருக்கிறது. இந்த முறைகளும் மாறுபடவில்லை. காலந் தாழ்த்தி அலுவல்கள் செய்யும். அதுவும் கடிகாரம் கட்டிய மனிதனைப் பார்க்கிறோம் ஆனால் ஞாலத்து நிகழ்வுகளில் காலத் தாழ்ச்சியில்லை. இத்தகைய வியத்தகு முறைகளுக்கு எது அடிப்படை? இயற்கையின் இயல்பா? உலகத்தின் உள்ளிடமா? அல்லது உலகத்திற்கு உயிர்ப்புத்தன்மை யுண்டா? அல்லது மனிதன் இயக்குகின்றானா? அல்லது கடவுள் இயக்குகின்றானா என்பதைத் தொடர்ந்து ஆராய்வோம்.

நம்முடைய ஆய்வில் மிகவும் சிக்கல் நிறைந்த பொருள் ஆன்மா. அதாவது உயிரைப் பற்றியதாகும். லெனினியம் உயிர் சம்பந்தப்பட்ட செய்தியில் நம்முடைய தமிழ் மரபோடு முரணி நிற்கிறது. உடலுக்கு அப்பாற்பட்ட உயிர் ஒன்று

இல்லையென்பது லெனினியத்தின் கோட்பாடு. ஆனால் தமிழ்மரபு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக உயிர் என்ற தனிப்பொருளை ஒத்துக் கொண்டே வந்திருக்கின்றது. இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய திருவள்ளுவர் உடம்பும் உயிரும் வெவ்வேறானவை என்றே குறிப்பிடுகிறார். காதலன் - காதலி இடையே இருக்கும் உறவுக்கு உவமை கூறவந்த திருவள்ளுவர் உடம்பொடு உயிரிடை நட்பை உவமை காட்டினார்.

"உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையோ டெம்மிடை நட்பு"

என்பது குறள். காதலன் - காதலி இவ்விருவரிடையே ஏற்படுகிற உறவுக்கு, உடம்புக்கும் உயிருக்கும் இருக்கும் நட்பை உவமையாகக் காட்டினார். இதிலிருந்து உடலும், உயிரும் வெவ்வேறு என்பது தெளிவாகிறது. அது போலவே,

"குடம்பை தனித்தொழியப் புட்பறத் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு"

என்ற திருக்குறளும் உடம்பையும் உயிரையும் வேறு வேறாகக் காட்டுகிறது. ஆதலால் உடம்பே உயிரல்ல; உடம்பின் இயங்கு சக்தியும் உயிரல்ல. உடம்பில் தங்கியிருந்து பணிகளைச் செய்வது உயிர்.

உயிர்கள் நிலை பெற்றவை. உயிர்களுக்குப் பிறப்பும் இறப்பும் இல்லை. உயிர்களைக் கடவுள் படைக்கவும் இல்லை. உயிர்கள் என்றும் நிலைபேறான தன்மையுடையன என்பது தெளிவாகிறது. புறநானூற்றுக் கவிஞர்,

"மன்னா வுலகத்து மன்னுயிர்"

என்று பாராட்டுகிறார். திருவள்ளுவரும்,

"மன்னுயி ரோம்பி அருளாள்வார்க் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை".

*"தம்மில் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து*
*மன்னுயிர்க் கெல்லாம் இனிது"*

என்று கூறியுள்ள குறள்களில் மன்னுயிர் என்றே குறிப்பிடு கிறார் மன்னுயிர் என்றால், நிலைபேறான தன்மையுடைய உயிர் என்றே பொருள்படும். ஆதலால், உயிர்கள் உடம்பைக் கருவியாகக் கொண்டே வாழ்ந்து கடமைகளைச் செய் கின்றன என்பது பெறப்படுகிறது. உடம்பு என்ற சொல்லினும் "உடு" என்ற முதனிலைச் சொல் உயிர் எடுத்துக் கொண்ட உடையே உடம்பு என்பதைத் தெளிவாக விளக்குகிறது. உயிர் உடம்பினைக் கொண்டு தன்னுடைய மேம்பாட்டுக்குரிய கடமைகளைச் செய்கின்றது என்பதே தமிழ்க் கருத்து. உயிர் என்றும் உள்பொருள் என்றே தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் ஒரு முகமாகக் கூறுகின்றன. தாயுமானவரும்.

*"என்று நீ அன்று நான்"*

என்றார் அதாவது தோற்றத்தால் உயிரும் கடவுளும் ஒன்றற் கொன்று பிந்தியது மல்ல; காலத்தால் ஒத்த இயல்புள்ளவை என்று கூறுகிறார்.

ஆதலால் உயிர். என்றும் உள்பொருள். அதற்குப் பிறப்புமில்லை; மறைவுமில்லை என்பது தெளிவாகிறது. அந்த உயிர், கடவுளைப் போல கால எல்லைகளைக் கடந்தது. அந்த உயிர் உடலைக் கருவியாகக் கொண்டு இயங்குகிறதே தவிர உடலுக்கு உயிர்த் தன்மை இல்லை. உடலுக்கு உயிர்த்தன்மை உண்டெனக்கூறும் நெறி தமிழ் நெறியல்ல. உயிர் பிரிந்த வழி உடல் உயிர்ப்பின்றி-பேச்சின்றிப் பிணமாகக் கிடப்பதைப் பார்க்கிறோம். உடலே உயிராக இருக்குமாயின் இந்த அவல நிலை ஏன்? ஆதலால், உயிரை உள்பொருள் என்று ஒத்துக் கொண்டு அந்த அடிப்படையில் மேலும் லெனினியத்தை ஆராய்வோம். உயிரைப் பற்றிய தெளிவான முடிவு ஏற்பட்டாலே லெனினியத்தின் முழு வடிவத்தை நாம் தெரிந்து கொள்ள முடியும்.

உயிர் பற்றிய கொள்கையில் பௌத்த நெறி சற்று வளர்ந்த கொள்கையைக் கண்டது. அதாவது, இவ்வுடம்பின் வேறாய் எல்லாவற்றையும் அறிவதாகிய அறிவு உண்டு எனக்கொண்டு, அறிவை ஒத்துக் கொண்டது. ஆனால் உயிர் உண்டென்ற கொள்கை பௌத்தத்திற்கு இல்லை. அறிவு என்பது ஐம்பொறிகளுக்கும் புலப்படுவதில்லை. அறிவு, ஓர் அனுபவத்தின் மையம். "யான் இதனைக் கண்டறிந்தேன்" என்றும், "கேட்டறிந்தேன்" என்றும், "சுவைத்தறிந்தேன்" என்றும், "நுகர்த்தறிந்தேன்" என்றும், "தொட்டறிந்தேன்" என்றும் கூறுவதனால், அறிவதை அனுபவமாகவும், அந்த அனுபவத்தைக் கொண்ட உயிர் ஒன்று தனியே உளது என்பது பெறப்படுகிறது. "யான்" என்றும், "எனது" என்றும் உரிமை கொண்டாடுவதே உயிர்தானே! "யாம் அறிவதில்லை. அறிவறிந்த மக்கட்பேறு அல்ல பிற" என்று திருக்குறளில் "யாம்" என்று சுட்டிக்கொண்ட ஓர் உயிர்க்கு அறிவு என்ற அறிதற் கருவி துணை நின்று தொழிற்படுவதே பெறப் படுகிறது.

திருவள்ளுவர் நமது திருக்குறளில் அறிவை உடைமையாகப் பேசுகிறார். "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்பது குறள். உடைமை என்றதனாலேயே உடையவன் ஒருவன் உண்டென்பது வெளிப்படையான உண்மை. உயிர்க்குரிய பண்பாகும். "நான் அறிந்தேன்" "என்னறிவு" என்னும் வழக்கில் "நான்" என்பதொரு பொருளும். அதனோடு ஒற்றுமைப்பட்ட அறிதற் பண்பும், உணரத்தக்கன. அறிவு ஒரு பண்பேயன்றிப் பொருளாகாது. உடம்புடன் பொறிகளும், வளமுமே உயிர். "உயிரெனத் தனியே வேறொரு பொருளில்லை" என்பது பௌத்தம். உடல் உறக்கத்தில் கிடக்கும்பொழுது அறிவு விளங்குவதில்லை. உறக்கத்தின்போது அறிவு செயற்படுதலுமில்லை. ஏன்? பல சமயங்களில் அறியாமையோ என்று கருதக்கூடிய சில செயல்களும் திகழ்கின்றன. உடலும் பொறிகளும் அவை

தம்முள் முரண்பட்டு, ஒன்று அறிந்ததைப் பிறிதொன்று அறியாது குழப்பத்தை விளைவிக்கின்றன. கண், ஒளியை அனுபவிக்கிறது.

ஆனால், அதே ஒளியைச் செவி அனுபவிப்பதில்லை. செவி, இசை ஒலியைக் கேட்டு அனுபவிக்கிறது. கண், அந்த ஒலியைக் கேட்டு அனுபவிப்பதில்லை. இந்தப் பொறிகள் நுகர்தலிலும் சரி, தமக்கு ஒதுக்கப்பட்ட களங்களிலும் சரி, ஒரு வழிபட்ட குறையுடைய அறிவையே பெற்று விளங்கு கின்றன; பூரணத்துவம் இல்லை. உயிர், மனத்தினும் மாறு பட்டது. உயிர் ஒன்றே, இந்த ஐம்பொறிகளாலும் பெறும் இன்பத்தை முற்றிலும் முழுவதுமாக ஈடுபட்டு அனுபவிக் கிறது. ஒரு விளக்கு, தன்னைச் சூழ்ந்திருக்கின்ற பொருள் களைக் காட்டித் தன்னையும் காட்டிக் கொள்வது போலச் சித்தத்தையும், பிறிது உண்டாயவற்றையும் அறிவித்துத் தன்னை யும் அறிவித்து நிற்கும் என்று கூறின், உருவங்கள் முதலிய பொருள்களையும் அவற்றைக் காட்டி நிற்கும் விளக்கையும் கண்டு நிற்கும் கண்போல சித்தத்தையும் விடயத்தால் அறியும் இந்திரியங்களையும் உணர்வான் ஒருவன் தனியே உண்டென்று அறிதல் வேண்டும்.

இன்னும் ஒருயிர் நெறியினர் (ஏகான்ம வாதிகள்) உயிரைப் பற்றி விசித்திரமாக விளக்கம் கூறுவர். 'அறிவுடைய உயிர் ஒன்றே, உடம்புகள் தோறும் வேறு வேறாய்க் காணப்படுகின்றது' என்பது அவர்தம் கொள்கை. குடங்கள் தோறும் வேறு வேறாய்த் தோன்றும் திங்களின் வடிவு, அக்குடங்கள் உடைந்த வழி குடங்கள் தோறும் இருந்த திங்கள்கள் இல்லையாகித் திங்கள் ஒன்றுமே நிலைபெறுகிறது. அது போல, இவ்வுடம்புகளெல்லாம் போய விடத்து, உயிர் ஒன்றேயாக இருக்கும் என்பதும் ஒரு கொள்கை. இந்தக் கருத்தும் உவமையும் நேரியதன்று. திங்களினிடத்துக் காணப்படும் ஒளி வடிவும், வட்ட வடிவும் அதன் நிழல்கள் எல்லாவற்றிலும் காணப்படுதல் போல, ஒருயிரினிடத்துக்

காணப்படும் அறிவும் செயலும் ஏனைய உயிர்களிடத்தும் காணப்படுதல் வேண்டும். இங்ஙனமின்றி அவை. ஒவ்வோ ரிடத்திலும் ஒவ்வொன்றாகப் பல தரப்பட்டு நிகழக் காண்டலால், "உயிர் ஒன்றே" என்னும் முறை சிறிதும் பொருந்தாது. தண்ணீரின் அசைவால், தண்ணீரில் தெரியும் திங்களின் நிழலும் அசைவது போல் தோன்றிலும் திங்களுக்கு அந்த அசைவில்லை. அதுபோல உடம்பின் வினைகளால் உயிருடம்பின் உள்ளிருக்கும் உயிர், துன்புறுதல் தோன்றினும் ஒன்றே யாய அவ்வுயிர்க்கும் இயற்கையில் அவ்வினைத் தொடக்கு இல்லை. ஆயின், இந்த உவமை பொருந்தாது. உயிரின் சேர்க்கையின்றி உடம்பு ஒரு வினை செய்ய இயலாது.

உயிரைப் பொருத்தவரையில் நமது நாட்டு உலகாயுத வாதம் கூறுகின்ற கொள்கைகளும், லெனினியத்தின் கொள்கைகளும் உடன்பாடுடையன. அதாவது, உடலின் வேறாய் உயிர் என்ற ஒன்று இல்லை யென்பதாகும். இங்ஙனம் அவர்கள் கூறுவதற்கு அடிப்படைக் காரணம் அல்லது அடிப்படையானது. "கண்ணால் காணக் கூடியன-மட்டுமே உண்மை. மற்றைய எல்லாம்-பொய்" என்ற கோட்பாடாகும். ஆய்வுக்கு அடிப்படையான இந்த அடிப் படைக் கோட்பாட்டிலேயே தவறு இருக்கிறது. உலகம் பரந்து பட்டது. அனைத்துலகத்தையும் அல்லது அனைத்துலக இயல்புகளையும், ஒரு பொறியால் கண்டு அனுபவித்தல் அல்லது உணர்தல் என்பது அருமை. அது எளியதல்ல என்பது மட்டுமன்று, இயலாததுமாகும்.

அதோடு, உலகிடை நிலவும் பல்வேறு பொருள் களுக்கும் ஓரியல்புமட்டும் உரிமையன்று; பல்வேறு இயல்பு களுண்டு. அப்பல்வேறு இயல்புகளையும் ஒரே நேரத்தில்-ஒரு பொறியால் அனுபவித்தல் இயலாது. அப்பொருளின் பல்வேறு இயல்புகளில், பல்வேறு பொறிகளும் தனித்தனியே தன்னியல்புக்கேற்றவாறு கலந்து, ஒரே பொருளில் ஒன்றிக்

கலந்து அனுபவிக்கும் பொழுதே, அனுபவம் தோன்றுகிறது. வாழ்க்கை சிறக்கிறது. இருவகைப்பட்ட இன்பத்திற்கும் இந்த இயல்பு உண்டு என்று, பெருமக்கள் கூறியுள்ளனர்.

> "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே உள."

என்பது திருக்குறள்.

பெண் ஒரு பொருள்தான். ஆனால், வேறு வேறு இயல்பு பெண்ணுக்கு உண்டு. ஐம்பொறிகளும், தனித்தனியே அந்தப் பெண்ணின் ஓரியல்பைத்தான் அனுபவிக்க முடிகிறது. ஒரு பொறிக்கு ஓரியல்பு அனுபவத்திற்கு வராமையின் அந்த இயல்பு இல்லையென்றோ. பொருளில்லை என்றோ கூறமுடியாது. ஏன்? அறிவையே கூட நேரடியாகக் காண முடியாது. அறிவை, செயற்பாடுகளிலேயே காணமுடியும். மணம், கண்ணால், பார்க்கக் கூடிய ஒன்றன்று. மூக்கால் நுகர்ந்து அனுபவிக்கக் கூடியதே மணம். கண்ணால் பார்க்கக் கூடிய தின்மையின் காரணமாக இல்லையென்று கூற முடியாது. ஏன்? உயிரியலில் இன்றியமையாத் தேவையாகிய காற்றே கண்ணின் காட்சிக்கு வருவதன்று. ஒரு பொருள் உள்பொருளா? இல்பொருளா? என்பதை ஒரு பொறியினைக் கொண்டு அளந்து கூறுதல் கூடாது.

ஐம்பொறிகளாலும் கண்டு ஆராய்ந்து, ஐம்புலன்களாலும் கண்டுணர்ந்து, அவைகளுக்கும் மேலாய அறிவாலும் ஆராய்ந்து முடிவெடுத்தலே ஏற்புடையதாகும். கட்புலனுக்கும் பகுப்பொருள்கள் மட்டுமே காட்சிக்கு வரும். அடுத்து, வண்ணமும் ஒளியும் காட்சிக்கு வரும். சில மெய்ப்பாடுகளும் கட்புலனுக்கு வருதல் கூடும். நுண்பொருள்களும் பெரும்பாலான தன்மைகளும் அல்லது குணங்களும், உணர்வுகளும் கட்புலனுக்கு வாரா. ஆதலால், கண்ணால் காண்பன மட்டுமே, உண்மையென்ற அடிப்படையே குறைவுடையதாகும்.

உலகாயத அடிப்படையில் உடலுக்கு வேறாக உயிரை நம்புவதில்லை. இந்த உடலுக்கு முந்தியதாகவோ, அல்லது பிந்தியதாகவோ யாதொன்றும் இல்லை. அதாவது உயிர் இல்லை என்பதே அவர்கள் கோட்பாடு. உயிரும், உடலும் ஒன்றே என்பது இக்கொள்கை. "ஐம்பூதக் கூட்டினாலாகிய (நிலம், நீர், தீ, வளி, ஆகாயம்) இந்த உடம்பு தோன்றும் பொழுதே, அந்தக் கூட்டின் விளைவாக, உடலுக்கு உணரும் சக்தியும், சிந்திக்கும் சக்தியும் கிடைக்கிறது. அந்த இயக்கத்திற்கு அறிவு உண்டு: உணர்வு உண்டு" என்பதே இக்கொள்கை. "இந்தப் பொருட் சார்பு வலிமை குறையும் பொழுது, அந்த ஆற்றலும் குறைந்து போகின்றது. பின் மரணம் வருகிறது" என்பதும் அக்கொள்கை. அதற்கு அவர்கள் எடுத்துக் காட்டும் உதாரணம் வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு ஆகியவற்றின் கூட்டு ஏற்படும் பொழுது ஏற்படும் சிவப்பு வண்ணம் போல இந்தப் பூதங்களின் கூட்டால் உணர்வு ஏற்படுகிறது என்பதே. வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு இவற்றின் கூட்டால் ஏற்படும் வண்ணம் நிலத்திற்கு நிலம், இனத்திற்கு இனம், மொழிக்கு மொழி வேறுபாடுடையதாக இருப்பதில்லை என்பதை உணராதது ஏனோ? வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு குப்பன் கூட்டினாலும், குப்புசாமி சாஸ்திரி கூட்டினாலும் குயின் கூட்டினாலும் குயின்டாங் கூட்டினாலும் வண்ணம் ஒரு தன்மைத்தே; வேறுபாடுகள் இல்லை. அது போலவா, மனிதனின் சிந்தனை இருக்கிறது? உணர்வு இருக்கிறது? ஓரிடத்தில் பத்துப்பேர் இருந்து வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு போட்டால், வண்ணம் ஒன்றேயாம். ஆனால், அந்தப் பத்துப்பேரின் உணர்வு ஒன்றல்ல; அது மட்டுமன்றிக் காலத்திற்குக் காலம் இந்த வண்ணம் வேறுபட்டதாகவும் வரலாறு இல்லை. வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பைக் கூட்டக் கற்றுக் கொண்ட காலம் முதல், இன்று வரையில்

வண்ணத்தில் வளர்ச்சியுமில்லை மாறுதலுமில்லை. மனித வுயிர்கள் அப்படியா வாழ்ந்து கொண்டிருக்கின்றன? என்ற வினாவுக்கு இதுவரையில் விடை கிடைக்கவில்லை.

மேலும், உயிர்த் தொகுதிகளுக்கிடையில் எண்ணத் தொலையாத வேறுபாடுகள் இருக்கின்றன. நாம் இங்கு வேறுபாடுகள் என்று சொல்லும் பொழுது, இயற்கையில் உள்ள வேறுபாடுகளையே குறிக்கின்றோம். செயற்கை வேறுபாடுகளை யல்ல. ஆண் பெண் என்ற பால் வேற்றுமை இயற்கை; புழு-பூச்சி என்ற வேறுபாடு இயற்கை. பறவை-விலங்கு என்ற வேறுபாடு இயற்கை. மாடு-மரம் என்ற வேறுபாடு இயற்கை. இத்தகைய வேறுபாடுகளுக்கு அடிப்படை என்ன? மேலும் அறிவு, ஆற்றல் இவைகளில் வேறுபாடுகள் இருப்பதைக் காண்கிறோம். இந்த வேறுபாடு களுக்குக் காரணம் என்ன? பிறந்த நாள் தொட்டுப் பெருநெறி பற்றி ஒழுகியவர்கள் துன்புறவும்' சிறுமையே செய்தவர்கள் மகிழவும் காண்கின்றோம். இதற்குக் காரணம் என்ன?

இந்த வினாக்களுக்குச் சமயநெறியைச் சார்ந்தோர்கள் முற்பிறப்பின் புண்ணிய பாவத்தைக் காரணமாகக் காட்டு வார்கள். உலகாயத நெறியைச் சார்ந்தவர்கள் முற்பிறப்பு-பிற்பிறப்பு இவைகளை நம்புவது இல்லை. அங்ஙனம் கூறுவது சமயநெறியாளர்களின் மயக்கம் நிறைந்த செயல் என்றே கூறுகின்றனர். சமயிகளுடைய இந்தக் வற்று, "முயற்கொம்பி லேறி ஆகாயப் பூவைப் பறித்தால்" என்ற கூற்றில் எவ்வளவு பைத்தியக்காரத் தனம் இருக்கிறதோ அவ்வளவு பைத்தியக் காரத் தனம் இதிலும் இருக்கிறது என்று குற்றம் காட்டு கின்றனர். அவர்கள் திரும்பவும் கேட்கிறார்கள். "நமது கையில் ஐந்து விரல்கள் இருக்கின்றன. இந்து ஐந்து விரல் களும் ஒரு மாதிரியாக இல்லை; ஒன்று நீண்டும் பிறிதொன்று குட்டையாகவும் தம்முள் வேறுபட்டிருக்கின்றன. இதற்குக் காரணம் என்ன? என்ற இந்த வினாவுக்கு விடை சொல்வது

மிகவும் சுலபம். ஐந்து விரல்களும் சடப்பொருள்கள் விரல் களுக்கு உயிர்ப்பில்லை. இயக்கினால் இயங்கும் தன்மையன. ஆனால் உயிரோ, உயிர்ப்பாற்றல் உடைய ஒரு பொருளாக இருக்கிறது. நாம் நீளம், அகலம், எடை போன்ற அளவு களாலாய வேறுபாடுகளைப் பற்றி அவ்வளவாகக் கவலைப் படவில்லை. இந்த வேற்றுமைகள், அவர்கள் கூறுவது போல இயற்கையாகவே யானாலும் ஆகட்டும். இங்கு நாம் உயிர்த் தொகுதிகளுக்கிடையே உள்ள வேற்றுமையென்று எடுத்துக் கொண்டது உயிர்ப்பாற்றல். உணர்வில் அறிவில் துய்ப்பாற்றில் உள்ள வேறுபாடுகளேயாம உயிர், தன்னிகரற்ற உயிர்ப்பாற்றல் உடையது. அதற்கொரு சான்று இதோ!

ஒன்றரை, ஒன்றரை, ஒன்றரை அடிப்பரப்பளவுள்ளதும் இருபத்தைந்து பவுண்டுக்குக் குறையாத எடையுள்ளதுமான ஒரு பாராங்கல்லை, ஒரு கட்டைவிரல் பரிணாமமேயுள்ள ஒரு வேர் கல்லித் தூக்கித் தள்ளுகிறது; நிச்சயம் உருவக் காட்சியில் பாராங்கல்லே பெரியது. வேரோ சிறியது. ஆனால், இந்த வேர் எப்படிக் கல்லைக்கெல்லித் தூக்குகிறது? இந்த உயிர்பாற்றலும் கூட உயிர்வர்க்கத்தினிடையில் அளவில் கூடியும் குறைந்தும் இருப்பதைக் காண்கிறோம்.

புலிக்கும்-புழுவுக்கு மிடையில் உள்ள உயிராற்றல் தன்மை ஒரு மாதிரியானதல்ல; வேறுபட்டுக் கிடக்கிறது. அது போலவே, ஆணின் ஆற்றல்களும் நுகர்வுப் புலன்களும், உணர்வுகளும் பெண்ணின் இயல்புக்கு முரண்பட்டன. இம் முரண்பாடு இல்லையாயின் கவர்ச்சியுமில்லை; வாழ்க்கையு மில்லை. இந்த வேறுபாடுகளையும் வெறும் சுபாவம் என்று மட்டும் கூறமுடியுமா? என்பது ஆய்வுக்குரியது.

## மணிவாசகர் பதிப்பகத்தின் திருக்குறள் வரிசை

| | |
|---|---|
| **தவத்திரு குன்றக்குடி அடிகளார்** | |
| திருக்குறள் கட்டுரைகள் தொகுதி I | 75.00 |
| திருக்குறள் கட்டுரைகள் தொகுதி II | 65.00 |
| திருக்குறள் கட்டுரைகள் தொகுதி III | 100.00 |
| திருக்குறள் கட்டுரைகள் தொகுதி IV | 75.00 |
| **மூதறிஞர் வ.சுப. மாணிக்கம்** | |
| வள்ளுவம் | 40.00 |
| திருக்குறள் தெளிவுரை | 15.00 |
| **முனைவர் இரா. சாரங்கபாணி** | |
| திருக்குறள் பரிமேலழகர் உரை பாடநுண் பதிப்பு | |
| அறத்துப்பால் | 60.00 |
| பொருட்பால் தொகுதி I | 60.00 |
| பொருட்பால் தொகுதி II | 60.00 |
| காமத்துப்பால் | 50.00 |
| திருக்குறள் தெளிவுரை | 23.00 |
| **முனைவர் தமிழண்ணல்** | |
| வாழ்க்கை வெற்றிக்கு வள்ளுவம் (4 நூல்கள்) | 25.00 |
| **முனைவர் ச.வே. சுப்பிரமணியன்** | |
| திருக்குறள் நயவுரை | 50.00 |
| **ஆ. சிவலிங்கனார்** | |
| திருக்குறட் சிந்தனைகள் | 30.00 |
| **காசிப் பாண்டியன்** | |
| திருவள்ளுவர் எழுதியது முப்பாலா | 25.00 |
| **க. வச்சிரவேல்** | |
| திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே | 30.00 |
| **சுத்தானந்த பாரதியார்** | |
| திருக்குறள் இன்பம் | 45.00 |
| **வ. உ. சிதம்பரனார்** | |
| திருக்குறள் அறத்துப்பால் | 60.00 |
| **ச. தண்டபாணி தேசிகர்** | |
| திருக்குறள் அமைப்பும் அழகும் | 45.00 |
| திருக்குறள் மூலம் | 5.00 |
| திருக்குறள் மூலம் | 7.50 |
| திருக்குறள் மூலம் | 10.00 |
| திருக்குறள் தெளிவுரை | 15.00 |
| திருக்குறள் தெளிவுரை (நாமக்கல் கவிஞர்) | 20.00 |
| திருக்குறள் தெளிவுரை (அர. சிங்காரவடிவேலன்) | 14.00 |
| திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு (லாசரஸ்) | 40.00 |




# மணிவாசகர் பதிப்பகம்

31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600 108.

தொலைபேசி - 5361039

| | | |
|---|---|---|
| நிறுவனர் | : | தமிழவேள் ச. மெய்யப்பன் |
| நிறுவிய ஆண்டு | : | 1961 |
| வெளியீடுகள் | : | 1000 |
| பல்கலைக்கழகப் பாடநூல்கள் | : | 60 |
| பரிசுபெற்ற நூல்கள் | : | 55 |

- ❖ தமிழ்நாட்டின் தலைசிறந்த பதிப்பகங்களில் ஒன்று.
- ❖ தரமான நூல்களின் தாயகம்.
- ❖ செம்பதிப்புக்களின் கருவூலம்.
- ❖ நாட்டுடைமையாக்கப்பட்ட நூல்களின் பதிவகம்.
- ❖ தமிழ் இலக்கியங்களுக்குக் காப்பகம்.
- ❖ ஆராய்ச்சி நூல்களின் அமுதசுரபி.

தமிழ்மாமுனிவர்
தவத்திரு
# குன்றக்குடி அடிகளார்
# நூல்வரிசை

திருக்குறள்
இலக்கியம்
சமய இலக்கியம்
சமயம்
பொது